# கொழும்பு ஜிந்துப்பிட்டி
## அருள்மிகு
## வள்ளி தெய்வயானை சமேத
## சிவசுப்பிரமணிய சுவாமி
## கோவில் வெளியீடு



உ

# முருகன் பாடல்

# முதலாம் பகுதி

தெட்சணத்தார் வேளாளர் மகமை
பரிபாலன சொசைட்டி லிமிட்டெட்
98, ஜிந்துப்பிட்டி தெரு
கொழும்பு-11, இலங்கை.

ஆங்கீரச ஆவணி
திருவள்ளுவராண்டு 2023
1992 ஆவணி

**ஆறு பகுதிகள் கொண்ட ஒரு தொகுதியின் விலை.**

இலங்கையில் : ரூபா 2100|-
இந்தியாவில் : ரூபா 900|-
பிறநாடுகளில் அமெரிக்க டாலர் 50|-

**முதலாம் பகுதி உருவாக அணி செய்தவர்:**
விடிவி பவுண்டேசன் லிமிட்டெட்
267, செட்டியார் தெரு
கொழும்பு - 11

**ஒளிஅச்சுக்கோப்பு, அச்சிடல்:**

*காந்தளகம்,* 4, முதல்மாடி, 834, அண்ணாசாலை,
சென்னை-600 002. தொலைபேசி: 834505, 8250050.

பாட்டு முதற் குறிப்பு அகராதி
பாட்டுடைக் கோவில் அகராதி
பாட்டுத் தலைப்பு அகராதி
ஆசிரியர் அகராதி
என்பன
ஆறாம் பகுதியில்
இறுதிப் பக்கங்களாக உள.
தொகுப்பின் பொருளடக்கம்
முழுமையும் எல்லாப் பகுதிகளிலும்
முன் பக்கங்களில் உள.

**பதிப்பாசிரியர்**

சித்தாந்தச் செம்மல், சைவசித்தாந்த மாமணி
வித்துவான் இரா. அம்பை சங்கரனார்
ஆசிரியர், ''சித்தாந்தம்'' சென்னை.

**நூல் தொகுப்பு சேகரிப்பில் உதவி, ஆலோசனை:**

க. முத்துக்குமாரசுவாமி, சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்.
புலவர் வெ.சா. ஏகாம்பரம், புலியூர், சென்னை.
சி. என். சிங்காரவேல், சி.ஐ.டி. நகர், சென்னை.
ந. ஜெயராமன், மேற்கு மாம்பலம், சென்னை.
க. சோமசுந்தரம் பிள்ளை, இந்திரா நகர், சென்னை.
புலவர் அ. இரா. திருவேங்கடவன், சைதாப்பேட்டை, சென்னை.
சாது தங்கவேல் சுவாமிகள், பாம்பன் சுவாமிகள் திருமடம்.
புலவர் அ. வைத்தியநாதன், விழுப்புரம்.
புலவர் கோ. கதிர்வேல் முதலியார், ஆரணி.
புலவர் ந. தண்டபாணி, புதுவண்டிப்பாளையம்.
சுப. ஆவுடையப்ப தேசிகர், அம்பாசமுத்திரம்.
மு. சு. சங்கர், திருநெல்வேலி.
பீக்கே குமாரசாமிக்கவுண்டர், வெள்ளக்கோவில்.
புலவர் வி. அண்ணாமலை முதலியார், பங்களூர்.
மயிலங்கூடலூர் க. நடராசன், யாழ்ப்பாணம்.
க. சொக்கலிங்கம், நாயன்மார் கட்டு, யாழ்ப்பாணம்.
க. சண்முகலிங்கம், சைவபரிபாலன சபை, யாழ்ப்பாணம்.
முனைவர் நா. சுப்பிரமணியன், யாழ்ப்பாணம்.
புலவர் த. கனகரத்தினம், வெள்ளவத்தை, கொழும்பு.
க. கந்தசாமி, கொழும்புத் தமிழ்ச் சங்கம், கொழும்பு.
மு. கணபதிப்பிள்ளை, மறவன்புலவு, சாவகச்சேரி.
வீரகேசரி, கொழும்பு.
ஐ. குலவீரசிங்கம், கோலாலம்பூர், மலேசியா.
க. ஆறுமுகம், கோலாலம்பூர், மலேசியா.
ஈ.வி. சிங்கன் சிரங்கூன் தெரு, சிங்கப்பூர்.
ப. படையாட்சி, ரோஸ்கில், மொரிசியசு.
பீக்கே நாயுடு, தென் இந்திய சன்மார்க்க ஐக்கிய சங்கம், நந்தி, பிஜி.
ஐ. தி. சம்பந்தன், இலண்டன்.
கே. எஸ். நடராசா, கனடா.
முனைவர் ஆ. கந்தையா, சிட்னி, ஆஸ்திரேலியா.

**நூலாக்கம், அகராதி, சுட்டி, குறிப்பு:**

முனைவர் நா. சுப்பிரமணியன் முதுநிலை விரிவுரையாளர்,
யாழ்ப்பாணப் பல்கலைக் கழகம், யாழ்ப்பாணம்.

**நூலாக்கம், மெய்ப்பு, மேற்பார்வை:**

புலவர் வெற்றியழகன், சென்னை.

**ஒளிஅச்சுக்கோப்பு, கணிப்பொறிப்பணி:**

க. இரவி, கோ. பார்த்தசாரதி, க. சாந்தி,
ம. இராசப்பா, மூவை. ந. சுந்தரராசன்,
அ. ஜெயராஜசிங்கம், சென்னை.

**பக்கமாக்கல்:**

ஓவியர்கள் சந்திரஹாசன், பூவரசு, சென்னை.

**படச்சுருள் எதிர்மறை:**

சக்தி வண்ண ஆய்வகம்

**அச்சிடல், கட்டுவேலை:**

ஸ்ரீ பாலாஜி கிளாசிக்ஸ், சென்னை.
தங்க அச்சு, விநாயகா டைஸ்டாம்பு, சென்னை.

**அலுவலக உதவி:**

செ. மணிமேகலை, அ. ஜெயராஜசிங்கம்,
செ.ரா. ஷோபனா, அ. ஸ்ரீனிவாசன், பெ. ஜெகநாதன்,
சென்னை.

**நிதிக்கட்டுப்பாடு:**

தெ. அருணாசலம், சென்னை.

**பொதுத்தொடர்பு: இணைப்பு, மேற்பார்வை**

தெ. ஈஸ்வரன், கொழும்பு.

**தயாரிப்பு:**

க. சச்சிதானந்தன், மறவன்புலவு, சாவகச்சேரி.

## பதிப்புரை

கொழும்பு, ஜிந்துப்பிட்டி அருள்மிகு வள்ளி தெய்வ யானை சமேத சிவசுப்பிரமணிய சுவாமிகள், பல்வேறு அடியார்களால் பல்வேறு காலங்களில் பாடப்பட்ட முருகன் பாமாலைகளைத் தம் பன்னிருகாதுகளாலும் குளிரக்கேட்கும் விருப்பு உகந்தவராய், சங்ககாலம் தொட்டு இன்றுவரை முருகன் மீது பாடப்பட்ட பாடல்கள் அனைத்தையும் தொகுத்து வெளியிடத் தன் அடியார்கட்கு அருளாணை செய்தார்.

இந்த அருளாணையை ஏற்று, எம்மை உய்விக்க இத் திருத் தொண்டைச் செய்யுமாறு பாலித்த அப்பெருமானின் திருவடிகளைத் தொழுது, இத்தொகுப்பை வெளியிட்டு அப்பெருமானுக்கே இத்தொகுப்பைக் காணிக்கையாக்குகிறோம்.

முருகன் பாடல்கள் உள்ளத்தை உருக்கும்; சிந்தையை நெகிழ்விக்கும்; பாடப் பாடப் பரவசமாக்கும்; கேட்கக் கேட்க மகழ்ச்சி வெள்ளம் பெருக்கும்.

இசைத் தமிழாய் இனிமை பயக்கும் முருகன் பாடல்களைக் காலந்தோறும் பலர் யாத்துத் தந்துள்ளனர். காலத்தைக் கடந்து வாழும் இப்பாடல்கள் தனித்தனி நூல்களாகக் கிடைக்கின்றனவே அன்றி ஒரே தொகுப்பில் கிடைப்பதில்லை.

அன்று தொடக்கம் இன்று வரை நீங்கள் கேட்ட, பயின்ற, படித்த முருகன் பாடல்களிற் குறிப்பிடத்தக்க தொகையின இத்தொகுப்பில் அடக்கப்பட்டுள்ளன.

இஃது ஓர் அருள் முயற்சி; ஆன்மிக முயற்சி; புதிய முயற்சி; வரலாற்றில் முதல் முயற்சி; 2400 பக்கங்களில் பல்லாயிரக்கணக்கான முருகன் பாடல்களை ஒன்று சேர்க்கும் முயற்சி.

இந்தத் தொகுப்பு ஒவ்வொருவர் வீட்டிலும் இருக்க வேண்டிய தொகுப்பு; ஒவ்வொரு நூலகத்திலும் இருக்க வேண்டிய தொகுப்பு; ஒவ்வொரு கல்வி நிறுவனத்திலும் இருக்க வேண்டிய தொகுப்பு; ஒவ்வொரு பூசை அறையிலும் இருக்க வேண்டிய தொகுப்பு; இந்தத் தொகுப்பு இன்றி எந்தப் புத்தகத் தட்டும் நிறைவு பெறாது.

தொகுப்பாசிரியரும் பதிப்பாசிரியருமான சித்தாந்தச் செம்மல் வித்துவான் சைவசித்தாந்தமாமணி அம்பை இரா. சங்கரனார், தஞ்சாவூரில் உள்ள தமிழ்ப் பல்கலைக்கழகத்தில் பணிபுரிந்தவர்; சைவசித்தாந்தப் பெருமன்ற வெளியீடான சித்தாந்தம் இதழின் ஆசிரியர்; தமிழிலும் சைவத்திலும் ஆழ்ந்த புலமை உடையவர்; கற்றோரும் மற்றோரும் பாராட்டுந் தமிழறிஞர்.

இப்பதிப்பை நூலாக்கம் செய்வதில், யாழ்ப்பாணப் பல்கலைக் கழகத் தமிழ் விரிவுரையாளர் முனைவர் நா. சுப்பிரமணியன் ஈடுபட்டு, வரிசைப்படுத்தி சுட்டிகள் தயாரித்துள்ளார்கள்.

புலவர் வெற்றியழகன் மெய்ப்பு நோக்கியும் அச்சாக்கத்தின் பல்நிலைப் பணிகளிலும் தமது புலமைத் திறனை மிகுந்து நல்கியுள்ளார்கள்.

சென்னை காந்தளகம் நிறுவனப் பணியாளர்கள் பல்வேறு நிலைகளில் இந்நூல் செம்மையாக அச்சிட ஒத்துழைத்துள்ளார்கள்.

ஐக்கிய நாடுகள், உணவு வேளாண்மை நிறுவன ஆலோசகர் க. சச்சிதானந்தன், இத்தொகுப்பைச் சிறப்பாகத் தயாரித்துத் தந்துள்ளார்கள்.

ஒவ்வொரு பகுதியும் தடித்த அட்டையில் சிறப்பு உறையுடன் கட்டப்பட்டுள்ளன, ஆறு பகுதிகள் கொண்ட இத்தொகுப்பு ஒரே பேழைக்குள் வைத்து வழங்கப்படுகின்றது.

நூலாசிரியர்கள், பதிப்பாசிரியர், வெளிவருவதில் துணைநின்றோர், தயாரிப்பாளர், வாங்கிப் படிப்போர் யாவருக்கும் எம்பெருமான், ஜிந்துப்பிட்டி வள்ளி தெய்வயானை சமேத சுப்பிரமணிய சுவாமிகள் திருவருள் கிட்டுவதாக.

**— தெட்சணத்தார் வேளாளர் மகமை பரிபாலன சொசைட்டி லிமிட்டெட்,**
**ஜிந்துப்பிட்டி,**
**கொழும்பு-11.**
**ஆங்கீரச வைகாசி**

## பதிப்பாசிரியர் உரை

இயற்கையே முருகன்; முருகனே இயற்கை; இயற்கை வழிபாடு முருக வழிபாடே. தமிழர் இயற்கையை வழி பட்டனர்; முருகனை வழிபட்டனர். தமிழ் கூறும் நல்லுல கெங்கும் முருகன் கோவில்களை யாண்டும் பரக்கக் காணலாம்.

முருகன் குறிஞ்சிக் கடவுள். குன்று தோறாடும் குமர னின் ஆறுபடை வீடுகளுள் ஐந்து மலைமேல் அமைந்துள் ளன. ஈழத்தில் கதிர்காமம், தில்லியில் மலை மந்திர் எனப் படும் உத்தரசுவாமிமலை, மலேசியாவில் பத்துமலை யாவும் மலைக் கோயில்களே.

மலைகளிலன்றிச் சமவெளிகளிலும் முருகன் கோயில் கள் உள. திருச்சீரலைவாய் என்ற திருச்செந்தூர், வயலூர், ஈழத்து நல்லூர், செல்வச் சந்நிதி, கொழும்பு ஜிந்துப்பிட்டி ஆகியவற்றில் அமைந்த முருகன் கோயில்கள் சமவெளிக் கோயில்களே.

இவற்றுள் ஜிந்துப்பிட்டி முருகப் பெருமானின் அருளாணையின்படி மேற்கொள்ளப்பட்ட நூல்தொகுப்பு முயற்சி இது. அப்பெருமான் தன் புகழைத் தன் பன்னிரு செவிகளாலும் குளிரக் கேட்க விருப்புற்றவனாய்த் தமிழில் உள்ள முருகன் பாடல்கள் அனைத்தையும் ஒரு சேரத் தொகுக்க அருளாணை தந்தான். அவ்வாணையின்படி மேற்கொள்ளப்படும் 'முருகன் பாடல்' தொகுப்பு முயற்சி யின் ஒரு பகுதியாக இந்த நூல் தொகுப்பு (ஆறு பகுதி களாக) வெளிவருகின்றது.

முருகன் பெருமை கூறும் முக்கிய நூலான கந்த புராணம், முருகனுக்குரிய தலபுராணங்கள் முதலியன இத் தொகுப்பில் சேர்க்கப்படவில்லை. அவை பின்னர் தனித் தொகுப்பாக வெளிவருவதற்குரியன. அவை தவிர, தமிழில் உள்ள முருகன் புகழ்பாடும் சிற்றிலக்கிய வகைகள் பலவற்றையும் கவனத்திற் கொண்டு இத் தொகுப்பு அமைக்கப்பட்டுள்ளது.

அகவல், அந்தாதி, அநுபூதி, அலங்காரம், ஆற்றுப் படை, ஆனந்தக்களிப்பு, உலா, எழுகூற்றிருக்கை, கண்ணி, கலம்பகம், கலித்துறை, கவசம், கீர்த்தனம், குறவஞ்சி, கோவை, சதகம், சந்நிதி முறை, சிந்து, திருப்புகழ், துதி யமுது, தூது, நாடகம், பஞ்சரத்தினம், பதிகம், பள்ளு, பாமாலை, பிள்ளைத்தமிழ், புஜங்கம், வகுப்பு, விருத்தம், வெண்பா ஆகிய சிற்றிலக்கிய வகைகளில் முருகப் பெரு மானைப் பாடுபொருளாகக் கொண்டமைந்தவற்றுள் ஒரு பெரும்பகுதி இத்தொகுப்பில் இடம்பெற்றுளது. அருண கிரிநாதரின் பாடல்கள் முழுவதும் இத்தொகுப்பில் இடம் பெற்றுள்ளன. முருகனைப் பாடும் பிள்ளைத் தமிழ் நூல்க ளாக அறியப்பட்டவை 75க்கும் மேல் உள. அவற்றுள் கிடைப்பன 35. இவற்றுள் 14 நூல்கள் இத்தொகுப்பில் இடம்பெற்றுள்ளன. ஏனைய சிற்றிலக்கிய வகைகளுள் எடுத்துக்காட்டாக அமையத்தக்க ஒன்றோ, இரண்டோ, மூன்றோ இத்தொகுப்பில் சேர்க்கப்பட்டுள்ளன. சேர்க்கப் படாது விடுபட்ட சிற்றிலக்கிய வகைகளும் அவற்றின் நூற் பரப்பும் பிறிதொரு தொகுதியாக வெளிவரத்தக்கன.

மேற்சுட்டியவாறு சிற்றிலக்கிய வகை சார்ந்த ஆக்கங்க ளுடன் சங்க நூல்கள், திருமுறைகள் என்பவற்றில் இடம் பெற்றுள்ள முருகனைப் பாடு பொருளாகக் கொண்டன வும் முருகன் பெயரைச் சுட்டி நிற்பனவுமான பாடற்பகுதி களும் இத்தொகுப்பில் சேர்க்கப்பட்டுள்ளன.

இத் தொகுப்பு முயற்சி நூல்கள் தோன்றிய கால வரி சையைக் கருத்திற் கொண்டு அமைந்ததன்று; இலக்கிய வகைகளின் பெயர் அகர வரிசைப்படி அமைந்ததாகும். அகவல் முதல் வெண்பாவரை 31 இலக்கிய வகைகள் அகரவரிசைப்படி அமைந்துள்ளன. இவற்றுக்கு இடையே சங்கப்பாடல்களில் முருகன், திருமுறைகளில் முருகன் என்பன இணைக்கப்பட்டுள்ளன. சங்கப்பாடல்கள் என்ற தலைப்பில் சங்க நூல்களான பரிபாடல், புறநானூறு என்பன மட்டுமன்றிச் சங்க மருவிய கால நூல்களான சிலப்பதிகாரம், இன்னா நாற்பது, ஐந்திணை ஐம்பது என்பனவும் உள்ளடக்கப்பட்டுள்ளன. இலக்கிய வகைகள் சார்ந்தனவாக 70 ஆக்கங்களுடன் சங்கப் பாடல்களில் முருகன், திருமுறைகளில் முருகன் என்பனவும் சேர

எல்லாமாக 72 தலைப்புகளில் இத்தொகுப்பு அமைந் துள்ளது.

முழுத்தொகுதிக்கும் பக்க வரிசை ஒரு சீராக அமைந் துளது. பக்க எண்ணுக்குப் பக்கத்தில் நூலின் பெயர் ஆசிரியர் பெயர் என்பன இடம்பெற்றுள்ளன. ஆசிரியர் பெயர் கிட்டாத ஆக்கங்களில் நூற்பெயர் மட்டுமே இடம் பெற்றுள்ளது.

ஒவ்வொரு பகுதியையும் குறிப்பிட்ட பக்க அளவு கட்குள் அடக்கவேண்டியிருந்ததால் திருப்புகழ் என்ற பாடற்பரப்பைக் குறித்த ஒரு பகுதிக்குள் அடக்க முடியாது போய்விட்டது. அப்பாடற்பரப்பு 2,3,4ஆம் பகுதிகளில் இடம் பெற வேண்டியதாயிற்று.

எல்லாப் பகுதிகளிலும் தொடக்கத்திற் பொருளடக்கம் முழுவதும் தரப்படுவதால் எந்த இலக்கியம் எந்தப் பகுதி யில் இடம் பெற்றுள்ளது என்பதை வாசகர்கள் எளிதில் கண்டுகொள்ளலாம்.

இத் தொகுப்பில் அமைந்த பாடல்கள் அவற்றுக்கான மூல அச்சுப்படிகளில் அமைந்தவாறே உட்பிரிவுகள், யாப்பு, இசை தொடர்பான குறிப்புகள் முதலியவற்றில் எவ்வித மாற்றமுமின்றி எடுத்தாளப்பட்டுள்ளன. (உதார ணம் பிள்ளைத்தமிழ்களில் அமைந்த பருவம் தொடர்பான குறிப்புகள், பரிபாடலில் இசையமைத்தோர் பற்றிய குறிப்புகள்)

பெரும்பாலான நூல்களுக்கு ஆசிரியர் பெயர் அறியக் கூடியதாயுளது. சிலவற்றுக்கு அறியப்படவில்லை. பெயர் களுடன் முன் அல்லது பின் அமைந்த பட்டங்கள் தரப் படவில்லை. பெயர்களுடன் பட்டங்களும் ஊர்ப் பெயர் களும் இணைந்தமைந்த நிலையில் அறியப்பட்ட சிலரின் பெயர்கள் மட்டுமே உள்ளபடி (நூற்பகுதியில்) இடம் பெற்றுள்ளன. (உதாரணம்: 'வண்ணச்சரபம்' தண்டபாணி சுவாமிகள், துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள்)

நூலாசிரியர்களின் பெயர்கள் அகரவரிசைப்படி தனியே தொகுக்கப்பட்டுள்ளன. அவ்வந் நூலாசிரியர் களின் பாடல்கள் தொடங்கும் பக்க எண்கள் அதில் தரப்

பட்டுள்ளன. நூலாசிரியரின் சொந்தப்பெயர் முதலிலும் அதனை அடுத்து ஊர்ப்பெயர், பட்டம் (இருப்பின்) என்பன அமையத்தக்கவாறும் இந்த அகரவரிசை அமைந்துள்ளது. (உதாரணம்: இளையபெருமாள், வித்துவான் கோ. 353)

பாட்டுடைக்கோயில்களின் அகரவரிசையொன்று தனி யாகத் தயாரித்துத் தரப்பட்டுள்ளது. திருப்புகழ், க்ஷேத் திரக்கோவைப் பிள்ளைத்தமிழ் என்பன பெருந் தொகை யான முருகன் கோயில்களைச் சுட்டி அமைந்துள்ளன. திரு முருகாற்றுப்படையில் படைவீடுகள் ஆகிய கோயில்கள் 5 குறிப்பிடப்பட்டுள்ளன. ஏனைய நூல்களிற் பெரும் பாலன குறித்த ஏதோவொரு முருகன் கோயிலைச் சார்ந்து எழுந்தவை. இவ்வாறாகக் கோயில்களுடன் தொடர்புடைய பாடற்பகுதிகள் எவ்வெப் பக்கங்களில் இடம்பெற்றுள்ளன என்பதைக் கண்டறிய ஏற்றவாறு கோயில் அகரவரிசையில் பக்க எண்கள் தரப்பட்டுள்ளன. (உதாரணம்: கதிர்காமம்-121, 301, 768, 1608, 2180, 2340
திருச்செந்தூர்-1, 28, 100, 185, 278, 433, 458, 512, 1359, 1384, 1686, 2175, 2225, 2231, 2236, 2317)

இந்த அகரவரிசையில் சில கோயில்களுக்கு இரண்டு பெயர்கள் அமைந்திருப்பின் இரண்டாவது பெயர் அடைப் புக்குறிக்குள் தரப்பட்டுள்ளது. (உதாரணம்: திருச்செந்தூர் (திருச்சீரலைவாய்), திருவாவினன்குடி (பழநி), சென்னி மலை (சிரகிரி))

இத்தொகுப்பில் இடம்பெற்றுள்ள பாடல்கள் அனைத் துக்குமான பாட்டு முதற்குறிப்பு அகரவரிசை தயாரிக்கப் பட்டு, ஆறாவது பகுதியின் பின்னிணைப்பாகத் தரப்பட் டுள்ளது. இதன் துணை கொண்டு பாடல்கள் இடம் பெற்ற பக்கங்களை எளிதில் கண்டு கொள்ளலாம்.

ஆறு பகுதிகளும் ஒரே இடத்தில் அமையக்கூடிய விதத் தில் ஒரு பேழைக்குள் வைக்கப்பட்டிருப்பதால் இந்தத் தொகுப்பு ஒரு தனி நூல் போன்ற காட்சியைத்தரும்.

இத்தொகுப்புக்கான நூல்களைச் சேர்க்கும் பணியில் நான் ஈடுபட்டபொழுது முதலில் எனக்கு உதவியாக அமைந்தது எனது சொந்த நூலகமே. ஆண்டுகள் பலவாக நான் சேர்த்து வைத்த பல பழைய பதிப்புகள் இந்நூற் தொகுப்புக்கு உதவின.

மேலும், தமிழ்நாடு, பாண்டிச்சேரி, இலங்கை, மலேசியா, சிங்கப்பூர், மொரிசியசு, பிஜி, இங்கிலாந்து, கனடா, ஆஸ்திரேலியா ஆகிய இடங்களில் வாழும் முருகனடியார்கள் பலர் இத்தொகுப்பில் உள்ள நூல்கள் பலவற்றைத் தந்து உதவினார்கள். பிறிதொரு பக்கத்தில் இவர்களின் பெயர்களைக் காண்க. நூல்களைத் தந்தது மட்டுமல்லாமல் நூலாக்கத்திலும் ஆலோசனை வழங்கினார்கள்.

கொழும்பு ஜிந்துப்பிட்டி அருள்மிகு சிவசுப்பிரமணிய சுவாமி கோவில் அறங்காவலர்கள் இப்பணியில் எனக்கு முழுமையான ஆதரவையும் ஒத்துழைப்பையும் நல்கினர்.

நூல் சேகரிப்பு, நூலாக்கம், என்பனவற்றில் எனக்கு உதவியவர்கட்கும் ஆலோசனைகள் வழங்கியவர்க்கும் என் உளம் நிறைந்த நன்றி. அவ்வாறே ஜிந்துப்பிட்டி கோவில் அறங்காவலர்கட்கும் நான் நன்றி உடையேன். இத்தொகுப்பின் தயாரிப்பாளர் என் உளப் பாங்கையும் என் முதுமையையும் கருத்தில்கொண்டு ஒத்துழைப்பு நல்கினார். அவர்களுக்கு நெஞ்சார்ந்த நன்றி கூறுகிறேன்.

புன்னெறி அதனிற் செல்லும் போக்கினை விலக்கி, மேலாம் நன்னெறி ஒழுகச் செய்து, இந்தத் திருப்பாடல் தொகுப்புப் பணியில் ஈடுபடுத்தி என்னையும் தன் அடியனாக்கிய பன்னிருகரத்தோன் பாத பங்கயங்களைத் தலைமேல் வைத்து வழுத்துகிறேன். என் வாழ்நாளில் இத்தகைய திருப்பணியைச் செய்ய எம்பெருமான் அருள் புரிந்து ஆட்கொண்டான். எல்லாம் அவன் செயல்.

அம்பாசமுத்திரம்-627 401
தமிழ்நாடு

**அம்பை இரா. சங்கரன்**

ஆங்கிரச சித்திரை

# பொருளடக்கம்

| வரிசை எண் | நூல் | பக்க எண் |
|---|---|---|

## இரண்டாம் பகுதி



## மூன்றாம் பகுதி



## நான்காம் பகுதி

## ஐந்தாம் பகுதி



## ஆறாம் பகுதி

# திருச்செந்தூர் அகவல்

## சிற்றம்பல நாடிகள்

ஓம்எனும் தாரக ஒண்பொருள், சிவனுக்(கு)
ஆம்என மொழிந்தே அருள்குரு ஆனோன்;
பொற்புறு பொதிய வெற்புறு முனிக்கு,
நற்பொருள் விளக்கும் ஞான தேசிகன்;
பொய்வழிச் சமணப் புலையிருள் நீக்கிச் 5
சைவம் வளர்க்கும் சம்பந்த மூர்த்தி;
முருகன், குமரன், மூவிரு முகன்,மால்
மருகன், சிவனருள் மைந்தன், கந்தன்,
மலைமகள் பாலன், வயம்கிளர் வேலன்,
கலைபயில் புலவன், கார்த்தி கேயன், 10
வளைஒரு மருப்பு வாரண முகவற்(கு)
இளையவன், குகன், மயில்ஏறும் பெருமாள்,
சூரசங் காரன், சுப்பிர மணியன்,
வீரருள் வீரன், விரைகமழ் கடம்பன்,
சேந்தன், வள்ளி தெய்வ யானை 15
காந்தன், செவ்வேள், காங்கேயன், சிலம்பன்,
ஆயிர நாமத்(து) ஐயன், துய்யன்,
சேய்,அருள் கோமான், சேவல் துவசன்,
வரம்கிளர் கருணைப் பரங்கிரி உறைவோன்;
மாஇனம் விளங்கும் ஆவினன் குடியோன்; 20
நந்(து)ஊர் அலைவாய்ச் செந்தூர்க் கடவுள்;
பாரகம் விளக்கும் ஏரகத்(து) அமர்வோன்;
மால்அயன் இறைஞ்சும் சோலைமா மலையோன்;
குன்றுதோ றாடல் நன்றென மகிழ்ந்தோன்;
பாசக் கங்குல் பசையறப்பருகி, 25
நேசர்க்(கு) இன்ப நிறையொளி பரப்பித்,

திருவளர் செழும்பொன் செந்தா மரைக்கு
மருவும்ஓர் சான்றாய் மலர்ந்தபொற் பதமும்;
நினைப்பொடு மறப்பு நீங்கிடும் அதீதம்
அனைப்பர நாத மறையொலி அலம்பும் 30
பாந்தள்அம் சுடிகைப் பன்மணி இழைத்த
காந்துசெஞ் சுடர்க்கால் கழல்பரி புரமும்;
கண்குளிர் கனகக் கவின்கிடந்(து) இலங்கும்
கிண்கிணி இசைக்கும் கிளர்திரு அரையும்;
வட்டுடை வரிந்து தொட்டகூர் வாளும்; 35
கட்டுறு யோகப் பட்டிகைச் சிறப்பும்
இந்திரவில் இரண்(டு) எதிர்பொருத் துவபோல்
சுந்தர ஆழி சூட்டும் அங்குலியும்
மன்இரு முகிலால் மணிதரு நிதிசேர்
பன்னிரு கமல பாணியும்; அவற்றிற் 40
சூலமும், வேலும், துரோணமும், சரமும்,
பாலமும் குலிசமும், பரிசையும், வாளும்,
ஆழியும், மழுவும், அபயமும், வரதமும்,
சூழு(ம்)முன் கைகள் துலங்குபொன் கடகமும்
மந்தரம் தழுவும் வாசுகி அன்ன 45
சந்ததம் மொய்ம்பு தழைத்தகே யூரமும்
பரிதிமண் டலம்போல் பதக்க(ம்)முத் தாரம்,
தருசரப் பணிகள் தயங்குபூண் மார்பும்;
அட்டிகை பணி,நல் அக்(கு)இரும் குவளை
விட்டொளி விரிக்கும் வியன்கந் தரமும்; 50
மூவிரு திங்கள் முதிர்ந்தபூ ரணம்போல்,
மேவுசண் முகங்கள் விளங்குநல் பொலிவும்;
முளரிமுந் நான்கு மூவிரு குமுதம்
வளர்மதி உதயத்(து) இடைவளர்ந் தனபோல்,
முகந்தொறும் கருணை உகந்தகண் களும்;சீர் 55
உகந்தபொன் குதலை ஒழுகுவாய் வனப்பும்;
தொட்டபொன் குழைகள் தூக்குகுண் டலமும்;
சுட்டியும், நுதலில் இட்டவெண் ணீறும்,
மன்இரு மகளிர் மாட்(டு)அலால், வணங்காச்
சென்னிசேர்ந்(து) ஒளிரும் சேகரச் சிறப்பும்; 60
மகபதி மகளும் வள்ளிஅம் திருவும்,
சுகமணம் சூட்டும் தொங்கலும் கடம்பும்;
கோதைசூழ் அன்னோர் கொங்கையால் பூசும்

ஏதமில் சுகந்த லேபனப் பூச்சும்;
மரகதப் பொருப்பும் வயிரவான் பொருப்பும் 65
நிரல்வலம் இடமார் நெடியபொன் கிரிபோல்,
அகிலமும் ஈன்ற அன்னையர் இருவர்
மகிழ்வுற இருபால் மன்னிவாழ்ந்(து) இருப்பப்:
பன்னிறம் தளிர்க்கும் பச்சைவான் கிரிமேல்
துன்இரு கோடி சூரியர் உதித்தாங்(கு) 70
அவரவர் அச்சம் அடுதிறல் மயூரக்
குரகதம் ஏறிக் குலவு காட்சியும்;
கரந்(து)எனை ஆளும் கருணையால், புவிமேல்
சரம்தரு மானுடச் சட்டை சாத்தி,
அழியா ஒளிவந்(து) அழியா மொழியை 75
வழியா மொழிய, வந்தனம் குருவாய்;
ஆணவக் கடற்குள் அலைபடு துரும்பும்,
பூணுறு மாயைப் புலிவாய்ப் பசுவும்,
கருமச் சூறைக் காற்றுறு சருகும்
தரு(ம்)இச் சுழலைச் சார்ந்திடும், எளியநின் 80
வருத்தம் குறித்து வருந்தேல்; உனக்குத்
திருத்தகும் உணர்வு செப்ப வேண்டி
வந்தனம், முத்தி வழங்குதும் என்றான்;
அந்தநல் மொழிகேட்(டு) அன்பொடும் துதித்தேன்
கற்பக வனம்போல் கமழ்பூங் காவில் 85
பொற்புற விளங்கும் பொலன்மணிக் கனகப்
பன்னக சாலையுள் பதுமபீ டிகைமேல்,
துன்னுபூந் தருக்கள் சூழ்கற் பகம்போல்,
சங்கமீன் நாப்பண் தயங்குவெண் மதிபோல்,
அங்கை கூப்பி அடியர்நின்(று) ஏத்த 90
இனி(து)எழுந் தருளி, என்முகம் நோக்கிப்,
புனிதநீர் ஆடப் போகென மொழிந்தான்;
நீரிடை மூழ்கி, நெடும்கலை அணிந்து
சார்தலும், ஓமச் சடங்குகள் இயற்றி,
வெண்ணீ(று) அணிந்து, விதிஎழுத்(து) அஞ்சும் 95
தெள்நீர் மையினிற் செவியிற் புகட்டி
அறு(கு)எரு வுடன்,கை அள்ளுநீ ருடன் என்
மறு(கு)உடல், ஆவி, வான்பொருள் கொண்டான்.
பரவுசஞ் சிதம்,நம் பார்வையால் ஒழிந்த,
விரவுமுற் பவங்கள், வினையுடம்(பு) அளவில் 100

அத்தன் அருள்,மேல் ஆகா மியங்கள்
பற்றில, நினது பண்புபோல் இருந்த;
நம்பெரு வடிவை நாடுகென்(று) அருளித்,
தம்பொன் கரமலர், என்தலை தீண்டி;
முழுநிலம் புரப்ப முடிசூட் டுவபோல், 105
செழுமணிப் பத(ம்)என் சிரமிசைப் பொருத்திப்;
பாத தீர்த்தம் பரிகல சேடம்,
ஆதரக் குழவிக்(கு) அன்னைபோல் அருத்தி;
குருபதம் பணிதல், குஞ்சர முகனைக்
கருதல், சங்கற்பம், கங்கையின் பூசை, 110
திருந்து முத்திரைகள், திக்கு பந்தம்,நீ(டு)
அருந்துயர் நீக்கும் அத்திர சந்தி,
தத்துவத் திரயம், தாளத் திரயம்,
சுத்(த) ஆசமனம், தொடுமிடம் தொடுகை,
கரமுடன் அங்கம், கருதிடு நியாசம், 115
விரவு தருப்பணம், விளங்குநீ(று) அணிகை,
அஞ்செழுத்(து) ஓதி ஆதவற் பணிதல்,
விஞ்சும்ஆ கமத்து விதிமுறை முடித்துப்
பண்டையோர் நம்மைப் பரவுசொற் பாடல்
கொண்டு,நீ துதிகள் (கூறு)என விளம்பிப் 120
பத்திகூர் விரதம் பயின்றிடின், நாலாம்
சத்திநி பாதம் தரும்எனப் பகர்ந்தான்;
அன்னமிட்(டு) எவர்க்கும் அரும்பசி தீர்த்துப்
பன்னரும் சாலை, படித்துறைத் தடாகம்,
வந்தார் அருந்தும் வாசநீர்ப் பந்தர், 125
நந்தா வனங்கள் நலம்பெற அமைத்தே,
ஈங்(கு)இவை முதலா எண்ணான்(கு) அறமும்,
தீங்(கு)இலா வண்ணம், செய்கென மொழிந்தான்;
காலையில் எழுந்து கடிமலர் பறித்து,
மாலிகை தொடுத்து, மதிமுடிக் கடவுள் 130
பூசனைக்(கு) உதவிப், புனிதஆ லயத்தின்
வாசல் விளக்கிட்(டு) அலகொடு மெழுக்கிட்(டு)
ஆறுகா லமும்சென்(று,) அரன்பதம் இறைஞ்சி,
ஏறுளான் அடியார்க்(கு) ஏவல்பூண்(டு) ஒழுகல்,
இத்திறம் முதலா இயற்றுதல் சரியை, 135
சுத்தசா லோக்கியம் துய்க்கும்என்(று) இசைத்தான்
பொய்வகை நீக்கிப், பூதம் முதலா

ஐவகைச் சுத்தி மெய்வகை விளக்கி,
மணம்பொலி கந்த வர்க்கமாம் மலர்கள்,
இணங்குநல் தூபம், எழில்குலாம் தீபம், 140
தருநை வேத்தியம், தாம்பூலம் முதலாய்
வரும்உப சார வகைபல இயற்றி,
அகம்தவிர் உளத்தோ(டு) அகம்புறம் இறைஞ்சிச்
சுகம்கிளர் அங்கித் தொடுகடன் முடித்துப்
போற்றுறும் இலிங்க பூசனைக் கிரியை 145
சாற்றுசா மீப்பியம் தரும்எனப் பகர்ந்தான்;
கட்டளை கப்பணம் கட்டளை யிட்டுத்
தட்டுறு மலம்தீர் சாதனம் ஒழிந்து,
கடுங்கொலை, வெறும்பொய், களவு,கள், காமம்
படும்பெயர் பஞ்ச பாதகம் தீர்த்துக் 150
காமம், கோபம், கசடுறும் உலோபம்,
தீமன மோகம், சேர்மத, மாற்சரியம்;
ஈண்டிவை முதலா எண்ணில பாவம்
பூண்டன ஒழியப் புந்திதந் தருளி;
மன்னுகீழ் அரணி, வருத்தமில் உணர்வாய்ப் 155
பின்னும்மேல் அரணி, பிரணவம் ஆகக்
கடையவே, ஞானக் கனல்எழும் என்றே
தடைபடாப் பாச தகனம் செய்தான்;
அருளெனும் தலத்தில் அறிந்துகால் மடக்கி
இருளற இருக்கும் இயற்கையும் விண்டான்; 160
பன்னிரண்(டு) அங்குலம் பறிந்திடும் பிராணன்,
பின்னதின் நான்கும் பிரிந்துபோம்; அதனால்
ஆயுளும் குறைந்திட்(டு) ஆக்கையும் தளர்ந்து
சாயும்என்(று) உரைத்துச் சாகா(து) இருக்க,
நாடிஓர் பத்தும் நாடி,நா டிகள்புக்(கு) 165
ஓடிய வாயு ஒருபதும் தேர்ந்து,
சொன்ன நாடிகளிற், சுழுமுனை நடுவாம்
இன்னதின் பக்கத்(து) இடைபிங் கலையாம்
அக்கினி திங்கள் ஆதவன் கலைகள்
புக்கமுச் சரமும் போய்மீண்(டு) இயங்கும், 170
மூலகுண் டலியாம் உரகம் மூச்செறிந்து,
வாலது மேல்கீழ் மண்டலம் இட்டுப்,
படந்தனைச் சுருக்கிப் படுத்துறங் குவது,
நடந்து மேல்நோக்கி, ஞானவீ(டு) அளிக்கும்;

மண்டலம் மூன்று மருவுதூண் புகஅக் 175
குண்டலி எழுப்பும் கொள்கையீ(து) என்றான்,
முன்ன(து) இரேசகம் முப்பத் திரண்டு;
பின்னது பூரகம் பேசும்ஈ ரெட்டுக்
கும்பகம் நாலோ(டு) அறுபதாக் கூறும்
தம்பமாத் திரையின் தன்மையும் உணர்த்தி; 180
மூலமே முதலா முடிநடு உச்சிப்
பால்அள வினும்நீள் படுதுளை நோக்கி;
மூலா தாரத்தின் முச்சுழிச் சுடரை:
மேல்ஆ தாரத்தின் மெல்லெனத் தூண்டி
இருவழிக் காலும் ஒருவழி நடத்திக் 185
கருவழி அடைத்துக்; கமலம்(ஆறு) உருவிப்,
பன்னிரண்(டு) அந்தம், பரிதியும் மதியும்
மன்னி ஒன்றான வண்ணமும் தெரிந்து!
கமடம்ஐந்(து) அடக்கும் கருத்தெனப், பொறியின்
மமதைகள் அடக்கி, மனோலயம் ஆக்கி; 190
மூலக் கனலால் முழுமதி உருக்கிப்,
பாலைப் பருகும் பண்புதந் தருளி
இட்டகா மியமும், எண்ணெண் கலையும்,
அட்டமா சித்தியும் அன்புறக் கொடுத்துப்
பன்னிரு பட்சியும் பறவா வண்ணம். 195
என்னுளே நிறுத்தும் இயற்கையும் விண்டான்;
மூலமே முதலா மூவிரு தலத்தின்
கோலமும், பூதக் குறிகளும், அதன்பால்
ஐம்பதோ(டு) ஒன்றாம் அக்கர விதமும்,
பொன்பொலி கமலப் பூஇரு மூன்றும், 200
தாரக எழுத்தும், சார்பெழுத்(து) அஞ்சும்,
வாரண முகவன் மலரோன், திருமால்
வருத்தம்இல் உருத்திரன், மகேச்சுரன், சதாசிவன்
உருத்தெளிந் திடநம் உருவே ஆகும்;
ஆறுமா முகத்(து) அமர்ந்ததும் இதுவே; 205
வேறிலை என்று மெய்ம்மொழி செப்பி,
இலங்கும்ஆ யிரத்தெட்(டு) இதழ்த்தா மரைமேல்
துலங்கிடும் நடனச் சோதியும் காட்டி,
இருபத் தோரா யிரத்(து) அறுநூறாய்
மருவிநாள் தோறும் வளர்சுவா சத்தைச் 210
சங்என வாங்கிச், சமனுறக் கும்பித்(து)

அங்ஙஎன்(று) எழுப்பும் அசபையும் அருளிப்;
பொருள்,அருள், ஆன்மாப் பொருந்திடும் திரோதை
மருஇரு மலமாய் வயங்கும் அஞ்செழுத்தி(ல்)
திரோதையும் மலமும் தீர்த்(து)அத னிடத்தில் 215
வரோதையம் ஆன வாசியை நிறுவி,
வளம்பொலி சிவய வசிஎன்(று) உளத்தில்
விளம்புக; நின்னை விளக்கும் ஆநந்த
முத்தி அஞ்செழுத்து மொழிந்தனம்; இதனைச்
சித்த சாந்தியினிற் செப்பென மொழிந்தான் 220
வாசிவா என்ன வழங்குமூன்(று) எழுத்தும்
பேசுதல், முதிர்ந்த பே(று)என மொழிந்தான்;
இன்பமாம் வாசி என்னும் ஈரெழுத்தில்,
அன்புறு மகிமை அதிசயம் என்றான்;
சீஎழுத்(து) ஒன்றே சிந்தையிற் கருதத் 225
தூயநல் சுடராய்த் தோன்றுவை என்றான்;
விந்துவும் நாதமும் மேவிய வெளியிற்
சிந்தையை நிறுவிச் சிவன்வடி வாகித்,
தாக்குவை மூலம்; நோக்குவை அதீதம்,
போக்குவை பிறவி, ஆக்குவை இன்பெனத்; 230
தராப்புகு நாப்போல் சமனுற நிற்கும்
இராப்பகல் அற்ற இடத்தே இருத்தி,
நலம்படர் சோதி நடனகுஞ் சிதத்தாள்
சிலம்பொலி கேட்கும் திறம்பா லித்தான்;
மயல்பொறி புலன்வாய், மனம்புகு நனவில்; 235
இயற்றிடு தவங்கள், இயமநிட் டையதாம்
சார்பொறி விடுத்த சாக்கிரக் கனவு,
சேர்தரு கருத்தால் செய்தவம் நியமம்;
நீங்காக் கரணம் நீங்கவே, நனவில்
தூங்காத் தூக்கச் சுழுத்திஆ சனமாம்; 240
அறிந்து தொண்ணூறும் ஆறும் வே(று)ஆக்கிப்
பிறிந்து,தற் கண்டு, பிரமமே தானாய்ச்
சாதனம் விடுத்த சாக்கிர துரியம்;
பேதமற்(று) இருக்கை, பிராணா யாமம்,
சான்றுசாக் கிரமபோய்த் தான்இருந் தமையும் 245
தோன்றிடா(து) உலகைச் சுழற்றும் கால்போல்,
பறந்திடும் காலால் பரமறந்(த) அளவில்,
பிறந்திடும் அதீதம் பிரத்தியா காரம்;

வான்எனும் அகண்ட வடிவுகண்(டு) எங்கும்
தான்என்(று) இருக்கை தாரணை ஆகும்; 250
காட்சிகள் அனைத்தும் கண்ணதாய் விளங்கி,
ஆட்சியின் அமைந்த(து) அதுவே தியானம்;
தற்பதம், தொம்பதம், சார்ந்திடும் உபாதி
கற்பனை தீரக் கண்(டு)அசி பதமாம்
சச்சிதா நந்த சமரச நிலைதேர்ந்(து) 255
உற்றசிற் ப்தம்பெற்(று) உறங்குதல் சமாதி
மன்னிடு சாம மறைஉப நிடதம்
சொன்ன வாக்கியத்தின் தொகைஇதே; ஞான
யோகஎட்(டு) அங்கம், உண்மைநீ உணர்தி,
ஏகசா ரூப்பியம் இதுஎன மொழிந்தான், 260
சரியை கிரியை தருக்கமா யோகம்
சுருதியின் முறையே தொடங்கிய அனைத்தும்,
நான்எனும் போத நாட்டமே அன்றி,
ஈனம்இல் உணர்வுக்(கு) இன்பம் காணேன்;
என்றுநான் வினவி இறைஞ்சலும் நகைத்து 265
நன்றென மொழிவான், ஞானம், உரைக்கில்
பாச ஞானம், பகர்பசு ஞானம்.
ஈச ஞானம் என்னமூன்(று) உளவாம்
அதுகேள், பாசம் ஆவது ஆணவம்
மதிமயல் கன்மம், மாயை இரண்டும், 270
தெருமரல் காட்டும் கருமமும், திரோதையும்,
மருவிடும் பஞ்ச மலங்காண்; இதனை
ஆ(சு)என உணரா(து) அகம்என இருக்கை
பாச ஞானப் பண்பது ஆகும்
தரும்பசு ஞானம் சாற்றுதும் கேண்மின் 275
வரும்பவம் மூட்டும் மலம்ஐந்து; அவற்றின்
ஆணவம் ஒன்றும் அகலா மையினால்,
காணுறும் விகடக் கருவிகள் தீர்ந்து,
தன்னை உணர்ந்து, தானே பிரமம்
என்னக் கருதி இருப்ப(து) ஆகும்; 280
பதிஞா னத்தைப் பகருதும்; அகம்கூர்
மதிஞா னத்தால், வரும்பவம் ஒழியா(து)
ஆகையால், அருள்புக்(கு) ஆணவம் ஒழிந்திட்(டு,)
ஏகமாம் இன்பத்(து) எய்துவது ஆகும்;
தத்துவம் முழுதும், சடம்உனைக் காணா(து) 285

இத்தைநீ நடத்தற்(கு) இறைவனோ? அல்லை,
அறிவனும் அல்லை, அறியான் அல்லை;
செறிஅருள் காட்டத், தேர்ந்துகாண் பவன்நீ;
யாதுசார்ந் திடினும், யான்அது என்னும்
போதம்நின்(று) உணர்வு புகன்றிடிற் சிறிதாம்; 290
மறைத்திடும் மூல மலத்தினால், பாசச்
சிறைக்குளே கிடந்து, தேகம்நான் என்று
வல்வினை புரிந்து மயங்கினை; அந்தத்
தொல்வினைப் பயன்கள் சூட்டினம்; இப்பால்
இருவினை ஒப்பு, மலபரி பாகம்; 295
திருவருள் பதிக்கத் தேடிவந் தனம்யாம்:
மே(வு)ஒரு மலத்து விஞ்ஞானா கலர்க்(கு)
ஓவறு முத்தி, உணர்வில் நின்(று) அளிப்போம்;
பெரு(கு)இரு மலம்கொள் பிரளயா கலர்க்கு,
மருவுநன் மூர்த்தி வடிவுகொண்(டு) அருள்வோம், 300
மும்மலம் உடைய சகலன்நீ மொழியின்;
அம்மலம் நீக்கி ஆட்கொண்(டு) அருள,
மானைக் காட்டி மான்பிடிப் பவர்போல்,
மானுட வடிவாய் வந்தனம்; தெள்நீர்
மீனது போல, விழியுற நோக்கி; 305
ஆன(து)ஓர் கமடம் போல்,அகத்(து) உன்னிப்;
பறவை போலப் பரிசம் செய்து:
திறமிகு முந்நூல் தெளிவுரை பகர்ந்து:
பக்குவத்(து) அடைவே பாலித்(து) அருள்நீ
புக்கிட வேண்டிப் போந்த(து) என்(று)இசைத்தான் 310
பற்பல சமயப் பகுதிசேர் நிலையும்,
சொல்வகை மறப்பும் துகளற மொழிந்தான்;
தெய்வம் சிவமே; சிவனருள் சமயம்
சைவம், சிவத்தொடு சம்பந்தம் என்றான்;
பூதம் பழித்துப், பொறியற உணர்த்தி, 315
வாதமாம் கரண வல்லபம் நீக்கிப்,
பித்துறும் கலாதிப் பிணக்(கு)அற விடுத்துச்,
சுத்த தத்துவம் தூடணம் ஆக்கி,
முப்பது முப்பது முப்பதோ(டு) ஆ(று)எனச்
செப்பும் கருவிகள், சேரா(து) அகற்றித்; 320
துன்னிடும் அத்துவா சோதனை கண்டு,
தன்னை உணர்ந்(து) தனித்(து)இருள் நீக்கி,

யாம்ஆம் உலகம் அனைத்தினும், சாட்சி
நாமே என்னும் ஞானமும் கடந்திட்(டு)
அண்ட பிண்டம் யாவும் தோன்றா(து) 325
உண்(டு)எனும் உணர்வூ(டு) உறக்கமும் விட்டு;
விசுவக் கிராசம், வீ(று)உப சாந்தம்,
அசிபதம் குறிக்கும் ஆசையும் தீர்த்துக்;
கால்புகா இடத்தில் கறங்காத் தீபமும்,
மேல்விசை தீர்ந்து வீழ்ந்தபம் பரமும், 330
சித்திர வடிவும், திரைதீர் புனலும்,
ஒத்தவந் நிலைசார்ந்(து) ஒளிஅருள் நோக்கி,
என்செயல் ஏதும் இல்லையென்(று) எய்து
தன்செயல் நோக்கிச், சார்கென மொழிந்தான்;
சும்மா இருக்கச் சொன்ன(து)ஓர் வார்த்தை, 335
அம்மா அதிசயம், ஆருடன் புகல்வேன்?
கரைசேர்த்(து) அருள்வான் கருணையை நோக்கி
இரைதேர்கொக்(கு) ஒத்(து.) ஏ(சு)அறஇருந்தேன்
என்செயல் அகன்றேன்; யான்அற, ஈசன்
தன்செயல் நடக்கும் தன்மையும் கண்டேன் 340
ஆத்துமிகத் தோ(டு) அடைதரு பௌதிகம்
போற்றுதெய் விகம்இவை புரிவதும் கண்டேன்;
புலக்கணக் கதவு பூட்டினேன்; சிந்தை
அலக்கண் தீர்ந்த அறிவையும் கண்டேன்;
பொறிபுலன், கரணம், பொருந்திடும் கலாதி 345
அறிகரு விகள்போய், அடங்(கு)இடம் கண்டேன்
தாழும்என் இழப்பில், தயங்குறு விளக்கின்
சூழுறும் ஒளிபோல், துலங்குதல் கண்டேன்
பஞ்ச வருணப் படாம்விரித் ததுபோல்,
விஞ்சுபல் சோதி விளங்கிடக் கண்டேன்; 350
சித்திர படத்திற் சேர்பல வடிவம்
ஒத்த அநேகம், ஒளிக்குளே கண்டேன்;
பஞ்சமூர்த் திகளும், பஞ்சசத் திகளும்
விஞ்சைபோல் ஒளிக்குள் வெளிப்படக் கண்டேன்;
மண்ணெடும் கடம்போல் வரைமா திரங்கள் 355
எண்ணில் புவனமும், என்னுளே கண்டேன்,
எழுவகைத் தோற்றத்(து) இயைந்தபல் உயிரும்,
வழுவறச் சோதி வான்இடைக் கண்டேன்,
தன்னுளே சகமும், சகத்துளே யானும்,

பின்னமற்(று) இருக்கும் பெற்றியும் கண்டேன்; 360
பளிங்கு போலப் படரொளி விந்து,
விளங்குவெண் மதிபோல் வெளிப்படக் கண்டேன்
பருதி போலப் படரொளி தோன்றி,
ஒருபது நாதம் ஒலிக்கவும் கண்டேன்;
அக்கினி போலும், அனந்தமீன் போலும் 365
தக்கபே ரொளியாய்ச், சராசரம் அனைத்தும்
புரந்தருள் அகண்ட பூரணம் ஆகிப்
பரந்தசெஞ் சுடரைப், பரையெனக் கண்டேன்;
அருள்பரை ஒளிக்குள் அழுந்தும்அந் நேரம்,
உருக்கமும், கண்ணீர் ஒழுக்கமும், திகைப்பும், 370
கம்பமும், புளகமும், களிப்புடன் நகையும்,
சிம்புள்போல் வலியும், சித்தியும் கண்டேன்;
மேலுள விஞ்சை விதிநெறி விடுத்த
பாலன்,உன் மத்தன், பக்குவம் கண்டேன்;
ஓங்கும் பரைக்குள், உள்ஒளி ஆகித் 375
தேங்கும் ஆநந்தச் செழுஞ்சுடர் கண்டேன்;
உள்ஒளிக்(கு) உவமை, ஒன்றும் காணேன்;
விள்ளவும் தரமோ? மீமிசை விளங்கித்
தெளிபடும் சுடரைச், சிவமென்(று) உணர்ந்து,
களிபடும் ஞானக் கண்ணினால் கண்டேன்; 380
பார்த்திடும் என்னைப் பசையற விழுங்க,
ஆர்த்(து) அதில் வீழ்ந்துற்(று) ஆநந்தம் ஆனேன்:
தன்னைத் தந்தான், என்னைக் கவர்ந்தான்;
பின்னைப் பெறும்ஓர் பேற்றையும் காணேன்:
சுயம்பிர காசம், சொரூபா நந்தம் 385
இயம்புதற்(கு) அரிதாம், இன்பப் பெருக்கம்;
தாள்தலை போலும், கால்தலை போலும்
கூடலை என்னால் கூறவும் படுமோ?
பேய்பிடி யுண்டான் பெற்றி போலச்
சாய்படு கருவிச் சங்கமும், நானும், 390
பகலோன் வெயிலிற் பாயிருள், விண்மீன்,
சகசமாய்க் கலந்த தன்மையும் பெற்றேன்;
காந்தம் இரும்பும், கனல்படும் இரும்பும்,
வேய்ந்த இந்தனமும் வெந்நீர் உப்பும்,
குளிகைபொன் மதுரம் கொண்டநா என்னத், 395
தளிவிடா(து) என்னைத் தடுத்தாட் கொண்டான்

விண்டேன் பிறப்பை; வேதா கமத்தோர்
சண்டை தீர்ந்து சமரசம் ஆனேன்:
திருமலி செந்தூர்ச் சேவல் பெருமான்
நிருமல ஞானம் நிகழ்த்தி, ஆட்கொண்ட(து) 400
இவ்வணம் தமியேற்(கு) இருநிலப் பரப்பில்
அவ்வவர்க்(கு) அளிக்கும் அருள்நெறி உணரேன்
ஆகையால், இந்த அருள்பெறல் வேண்டின்,
ஓகையால் திருச்செந் தூர்இடத்(து) ஏகிக்
குமரவேள் சரணம் குறித்துமா தவத்தீர்! 405
நிமலமெய்ஞ் ஞானம் நீவிரும் பெறுவீர்;
உத்தமர் ஆவீர்; உண்மையீ(து) என்று
சிற்றம் பலவன் செய்யுளால் புகன்றான்.

## நூற்பயன்

கருத்துற இதனைக் கற்போர் கேட்போர்,
திருத்தகும் அன்பால் தினந்தொறும் துதிப்போர் 410
பெறும்பலன் இதனைப் பேசுதும் கேண்மின்
உறும்பலன் வேண்டும், உலகத் தோரே!
பாவந் தீரும்; பார்மிகு தருமம்,
மே(வு)இளம் பிறைபோல் மென்மேல் வளரும்
துட்டதே வதைகள் தொட்டதும், வஞ்சர் 415
இட்ட பில்லி இடர்களும் தீரும்;
வாதம், பித்தம், வலிபடும் காசம்
சீதம் வெதுப்புத் தீரா நோய்கள்,
வேதனை மிகுந்த வியாதிகள் எல்லாம்
ஆதவற் கண்ட பனிபோல் அகலும் 420
சாகா வரமும் தந்திடும்; உடம்பிற்
போகாப் பீடை போக்கி ரட்சிக்கும்;
வறுமை நீங்கும் வாழ்வுண் டாகும்;
செறிதரும் அட்டமா சித்தியும் கொடுக்கும்
சரியை, கிரியை, சார்ந்திடும் யோகம், 425
தெரிதரு ஞானமும் செறிந்து வாழ்குவரே.

திருச்செந்தூரகவல் முற்றிற்று

உ

# கந்தரந்தாதி

## அருணகிரிநாதர்

### காப்பு

வாரணத் தானை யயனைவிண் ணோரை மலர்க்கரத்து
வாரணத் தானை மகத்துவென் றோன்மைந் தனைத்துவச
வாரணத் தானைத் துணைநயந் தானை வயலருணை
வாரணத் தானைத் திறைகொண்ட யானையை
வாழ்த்துவனே.

### இதுவுமது

உண்ணா முலையுமை மைந்தா சரணம் பரருயிர்சேர்
உண்ணா முலையுமை மைந்தா சரண மருணைவெற்பாள்
உண்ணா முலையுமை மைந்தா சரணந் தனமுமொப்பில்
உண்ணா முலையுமை மைந்தா சரணஞ் சரணுனக்கே.

### நூல்

திருவாவி னன்குடி பங்காள ரெண்முது சீருரைச
திருவாவி னன்குடி வானார் பரங்குன்று சீரலைவாய்
திருவாவி னன்குடி யேரகங் குன்றுதொ றாடல்சென்ற
திருவாவி னன்குடி கொண்டதண் கார்வரை செப்புமினே.

செப்புங் கவசங் கரபா லகதெய்வ வாவியம்பு
செப்புங் கவசங் கரிமரு காவெனச் சின்னமுன்னே
செப்புங் கவசம் பெறுவார் கனுந்தெய்வ யானைதனச்
செப்புங் கவசம் புனைபுயன் பாதமென் சென்னியதே. 2

சென்னிய மோகந் தவிராமு தோகண் டிகிரிவெண்ணெய்ச்
சென்னிய மோகம் படவூ தெனத்தொனி செய்தபஞ்ச
சென்னிய மோகந் தரம்புனத் தேன்புணர் தேவைத்தெய்வச்
சென்னிய மோகம் பணிபணி யேரகத் தேமொழிக்கே. 3

தேமொழி யத்தம் பெறவோந் தனக்கன்று சேணுலகத்
தேமொழி யத்தம் சினங்காட் டவுணரைச் சேமகரத்
தேமொழி யத்தம் புயமவர் சூடிகை சிந்தவென்ற
தேமொழி யத்தம் பதினா லுலகுமந் தித்ததொன்றே. 4

தித்தவித் தார மனித்தரைத் தேவர் வணங்கமுன்போ
தித்தவித் தாரகை மைந்தர்செந் தூர்க்கந்தர் சிந்துரவா
தித்தவித் தார முடையா ரருள்வெள்ளந் தேக்கியன்பு
தித்தவித் தாரந் தனிவீ டுறத்துக்கச் செவ்வனலே. 5

செவ்வந்தி நீலப் புயமுரு காபத்தர் சித்தமெய்யிற்
செவ்வந்தி நீலத்தை யுற்றருள் வாய்திங்கட் சேய்புனைந்த
செவ்வந்தி நீலத் தொருபாகர் போன்ற தினிச்சிந்தியார்
செவ்வந்தி நீலத்தி னீடுமுற் றால திமிரமுமே. 6

திமிரத் திமிரக் கதரங்க கோபசெவ் வேலகைவேல்
திமிரத் திமிரக் ககுலாந் தகவரைத் தேன்பெருகுந்
திமிரத் திமிரத் தனையாவி யாளுமென் சேவகனே
திமிரத் திமிரக் கனலாய சந்தன சீதளமே. 7

சீதனங் கோடு புயங்கைகொண் டார்தந் திருமருக
சீதனங் கோடு முடியாளர் சேய்தனக் கேதுளதோ
சீதனங் கோடு னிதருமென் பார்தொழுந் தேவிபெறுஞ்
சீதனங் கோடு கொடிவேன் மயூரஞ் சிலையரசே. 8

சிலைமத னம்படு மாறெழுஞ் சேய்மயி லுச்சிட்டவெச்
சிலைமத னம்படு சிந்துவை யிந்துவைச் செய்வதென்யான்
சிலைமத னம்படு காட்டுவர் கேளிருஞ் செங்கழுநீர்ச்
சிலைமத னம்படு தாமரை வாவி திரள் சங்கமே. 9

திரளக் கரக்கரை வென்கண்ட வேலன் றிசைமுகன்மால்
திரளக் கரக்கரை யான்பாட நாடுதல் செய்யசங்க
திரளக் கரக்கரை காண்பான்கைந் நீத்திசை வார்பனிக்க
திரளக் கரக்கரை வானீட்டு மைந்தர்புந் திக்கொக்குமே.
10

திக்கத்திக் கோடு படிபுடைச் சூதத் தெறிபடபத்
திக்கத்திக் கோடு கடடக் கடறடி சேப்படைச்சத்
திக்கத்திக் கோடு துறைத்திறத் தற்ற குறக்குறச்சத்
திக்கத்திக் கோடு பதித்துக்கொ டாதி சிறைபிறப்பே. 11

சிறைவர வாமையி லேறிச் சிகரி தகரவந்து
சிறைவர வாமையில் கூப்பிடத் தானவர் சேனைகொண்ட
சிறைவர வாமையில் வாங்கிதன் றேங்கழல் யாங்கழலாச்
சிறைவர வாமையி னெஞ்சுட னேநின்று தேங்குவதே.
12

தேங்கா வனமும் மதகரி வேந்துடன் சேர்ந்தவிண்ணோர்
தேங்கா வனமுனை யவ்வேற் பணியெனுஞ் சேயிடமேல்
தேங்கா வனமுந் தளர்நடை யாயஞ்சல் செண்பகப்பூந்
தேங்கா வனமுங் கழுநீ ரிலஞ்சியுஞ் செந்திலுமே. 13

செந்தி லகத்தலர் வாணுதல் வேடிச் சிமுகபங்க
செந்தி லகத்தலர் துண்டமென் னாநின்ற சேயசங்க
செந்தி லகத்தலர் ராசிதந் தானைச் சிறையிட்டவேற்
செந்தி லகத்தலர் தூற்றிடுங் கேடு திவாகருளே. 14

திவாகர கன்ன கொடைப்பாரி யென்றுழ றீனவல்லீர்
திவாகர கன்ன புரக்குழை வல்லி செருக்குரவந்
திவாகர கன்ன சுகவா சகதிறல் வேல்கொடென்புந்
திவாகர கன்ன மறலி யிடாதுயிர்ச் சேவலுக்கே. 15

சேவற் கொடியும் பணிசாந் தகனுந் திருக்கரத்துச்
சேவற் கொடியுங் கொடியகண் டாய்தினை சூழ்புனத்துச்
சேவற் கொடியுந் திவளத் தவளுந்தந் திக்களபச்
சேவற் கொடியு முடையாய் பிரியினுஞ் சேரினுமே. 16

சேரிக் குவடு மொழிவிழி யாடனச் செவ்விகுறச்
சேரிக் குவடு விளைந்ததன் றேநன்று தெண்டிரைநீர்
சேரிக் குவடு கடைநாளி லுஞ்சிதை வற்ற செவ்வேள்
சேரிக் குவடு புடைசூழ் புனத்திற் றினைவிளைவே. 17

தினைவேத் தியன்புசெய் வேந்தன் பதாம்புயத் திறப்பத்திபுந்
தினைவேத் தியமுகந் தேற்றினர் மாற்றினர் பாற்றினந்தீத்
தினைவேத் தியர்நெறி செல்லாத விந்தியத் தித்தியினத்
தினைவேத் தியங்குயிர் கூற்றாரி லூசிடுஞ் சீயுடம்பே. 18

சீயனம் போதி யெனவாய் புதைத்துச் செவிதரத்தோல்
சீயனம் போதி யமலையிற் றாதை சிறுமுநிவன்
சீயனம் போதி கடைந்தான் மருகன்செப் பத்திகைத்தார்
சீயனம் போதி லரனா திருக்கென் செயக்கற்றதே. 19

செயதுங்க பத்திரி போற்றும் பகீர திகரசெவ்வேற்
செயதுங்க பத்திரி சூடுங் குறத்தி திறத்ததண்டஞ்
செயதுங்க பத்திரி புத்திரி பாதத்தர் செல்வதென்பாற்
செயதுங்க பத்திரி யத்திரி யாதிரென் சிந்தையிலே. 20

சிந்தா குலவ ரிசைப்பேரு மூருநஞ் சீருமென்றோர்
சிந்தா குலவ ரிடத்தணு காதரு டீமதலை
சிந்தா குலவரி மாயூர வீர செகமளப்பச்
சிந்தா குலவரி மருக சூரனைச் செற்றவனே. 21

செற்றை வரும்பழ னஞ்சோலை யிஞ்சி திகழ்வரைமேற்
செற்றை வரும்பழ நிக்கந்த தேற்றிடு நூற்றுவரைச்
செற்றை வரும்பழ நாடாள நாடிகண் சேய்விடுத்த
செற்றை வரும்பழ மாங்கூடு வேமத் தினத்தில்வந்தே.
22

தினகர ரக்கர தங்கெடுத் தார்குரு தேசிகர்செந்
தினகர ரக்கர மாறுடை யார்தெய்வ வாரணத்தந்
தினகர ரக்கர சத்தியின் றாகிலத் தேவர்நண்ப
தினகர ரக்கர தந்தீர்வ ரீர்வர் செகமெங்குமே. 23

செகம்புர வார்கிளை யெல்லா மருண்டு திரண்டுகொண்டு
செகம்புர வாதிங்ஙன் செய்வதென் னோமயல் செய்யவன்பு
செகம்புர வாச மெனத்துயில் வார்செப்ப பங்கபங்க
செகம்புர வாமுரல் செந்தூர வென்னத் தெளிதருமே.
24

தெளிதரு முத்தமிழ் வேதத்திற் றெய்வப் பலகையின்கீழ்
தெளிதரு முத்தமி ழாநித்தர் சேவித்து நின்றதென்னாள்
தெளிதரு முத்தமிழ் தேய்நகை வாசகச் செல்விதினைத்
தெளிதரு முத்தமிழ் செவ்வே ளிருப்பச் செவிகுனித்தே.
25

செவிக்குன்ற வாரண நல்கிசை பூட்டவன் சிந்தையம்பு
செவிக்குன்ற வாரண மஞ்சலென் றாண்டது நீண்டகன்மச்

செவிக்குன்ற வாரண வேலா யுதஞ்செற்ற துற்றனகட்
செவிக்குன்ற வாரண வள்ளிபொற் றாண்மற்றென்
(றேடுவதே. (26)

தேடிக்கொடும்படை கைக்கூற் றடாதுளஞ் சேவின்மைமீன்
தேடிக் கொடும்படை கோமான் சிறைபட வேறுளபுத்
தேடிக் கொடும்படை யாவெகு நாட்டன் சிறைகளையுந்
தேடிக் கொடும்படை மின்கேள்வ னற்றுணை
சிக்கெனவே. (27)

சிக்குறத் தத்தை வழங்கா திழந்து தியங்குவர்தே
சிக்குறத் தத்தை வடிவே லெனார்சில ரன்பர்செந்தாள்
சிக்குறத் தத்தை கடிந்தேனல் காக்குஞ் சிறுமிகுறிஞ்
சிக்குறத் தத்தை யனகிலெப் போதுந் திகழ்புயனே. (28)

திகழு மலங்கற் கழல்பணி வார்சொற் படிசெய்யவோ
திகழு மலங்கற் பகவூர் செருத்தணி செப்பிவெண்பூ
திகழு மலங்கற் பருளுமின் னாவமண் சேனையுபா
திகழு மலங்கற் குரைத்தோ னலதில்லை தெய்வங்களே.
(29)

தெய்வ மணம்புணர் தீகால் வெளிசெய்த தேவரைந்த
தெய்வ மணம்புண ராரிக்கு மருக செச்சையந்தார்
தெய்வ மணம்புண ருங்குழ லாளைத் தினைப்புனத்தே
தெய்வ மணம்புணர் கந்தனென் னீருங்க டீதறவே. (30)

தீதா வசவ னுபவிக்க மண்ணிலும் விண்ணிலுஞ்செந்
தீதா வசவ னியாயஞ்செய் வேதிய ரேதியங்காத்
தீதா வசவ னிமலர்செல் வாசாக் கிரவசத்த
தீதா வசவன் புறப்பா ரெனுமுத்தி சித்திக்கவே (31)

சித்திக்கத் தத்துவ ருத்திர பாலக செச்சைகுறிஞ்
சித்திக்கத் தத்துவ ரத்தியின் மாவென்ற சேவகவிச்
சித்திக்கத் தத்துவர் வாய்மொழி மாதர்க் கெனுந்திணைவா
சித்திக்கத் தத்துவ ருத்தப் படாதுநற் சேதனமே. (32)

சேதனந் தந்துறை யென்றுமை செப்புங் குருந்துறைகாற்
சேதனந் தந்துறை யல்லிமன் வாவிச்செந் தூர்கருத
சேதனந் தந்துறை யென்றறி யார்நிற நீங்கிநெஞ்சே
சேதனந் தந்துறை மற்றுமுற் றாடித் திரிகைவிட்டே. (33)

திரிகையி லாயிர வெல்லாழி மண்விண் டருசிரபாத்
திரிகையி லாயிர வாநந்த நாடகி சேரிமகோத்
திரிகையி லாயிர மிக்குமைந் தாசெந்தி லாயொருகால்
திரிகையி லாயிரக் கோடிசுற் றோடுந் திருத்துளமே. (34)

திருத்துள வாரிகல் போதுடன் சேண்மழை தூங்குஞ்சங்க
திருத்துள வாரிதி கண்டுயி லாசெயன் மாண்டசிந்தை
திருத்துள வாரன்னை செந்தூரையன்னள்
செம்மேனியென்பு
திருத்துள வார்சடை யீசர்மைந் தாவினிச்
செச்சைநல்கே. (35)

செச்சைய வாவி கலயில்வல் வாயிடைச் சேடனிற்கச்
செச்சைய வாவி பருகுஞ் சிகாவல செங்கைவெந்தீ
செச்சைய வாவி விடுகெனுஞ் செல்வநின் றாளணுகச்
செச்சைய வாவி னுயிர்வாழ் வினியலஞ் சீர்ப்பினுமே.
(36)

சீர்க்கை வனப்பு மலர்வேங்கை யானவன்
செஞ்சிலையோர்
சீர்க்கை வனப்பு னிதத்தவ வேடன் றினைவளைக்குஞ்
சீர்க்கை வனப்பு னமதுருக் காட்டிய சேய்தமிழ்நூற்
சீர்க்கை வனப்பு னிமிர்சடை யோன்மகன் சிற்றடிக்கே.
(37)

சிற்றம் பலத்தை யரன்புநெய் நூற்றிரி சிந்தையிடுஞ்
சிற்றம் பலத்தை வரஞான தீபமிட் டார்க்குப்பரி
சிற்றம் பலத்தை யருளுஞ்செந் தூரர் பகைக்குலமாஞ்
சிற்றம் பலத்தைப் பதவரந் தோளிலிந் தீவரமே. (38)

தீவர கந்தரி தாம்பகி ராருற வானசெம்பொன்
தீவர கந்தரி யாநொந்த போதினிற் செச்சையவிந்
தீவர கந்தரி சிந்துரை பாக சிவகரண
தீவர கந்த ரிபுதீ ருனதடி சேமநட்பே. (39)

சேமர விக்கம் படையாக வீசுப தேசமுன்னூற்
சேமர விக்கம் பலந்தரு வாய்செரு வாயவெஞ்சூர்ச்
சேமர விக்கந் திரித்தாய் வருத்திய வன்றிறென்றல்
சேமர விக்கம் புயவாளி விண்டிரை தெண்டிரையே. (40)

தெண்டன் புரந்தர வக்குன்றில் வாழ்கந்த சிந்துவிலுத்
தெண்டன் புரந்தர லோகஞ் செறாதுசெற் றோய்களைவாய்
தெண்டன் புரந்தர நற்கேள் சிறுவ ரழச்செய்தெம்மைத்
தெண்டன் புரந்தர வின்படி நூக்கிய தீநரகே. (41)

தீனந் தினத்து தரச்செல்வர் பாற்சென் றெனக்கென்பதோர்
தீனந் தினத்து முதரா னலஞ்சுடச் சேர்ந்துசுடுந்
தீனந் தினத்து னிகளைசெங் கோட்டினன் செந்திலந்நீர்
தீனந் தினத்து தவத்துப் பிரசதஞ் செய்யவற்றே. (42)

செய்யசெந் தாமரை யில்லாத மாதுடன் செந்தினைசூழ்
செய்யசெந் தாமரை மானார் சிலம்பிற் கலந்துறையுஞ்
செய்யசெந் தாமரை யென்னுங் குமார சிறுசதங்கைச்
செய்யசெந் தாமரை சேர்வதென் றோவினை
சேய்தொலைத்தே. (43)

சேதாம் பலதுறை வேறும் பணிகங்கை செல்வநந்தன்
சேதாம் பலதுறை யாதசிற் றாயன் றிருமருக
சேதாம் பலதுறை செவ்வாய்க் குறத்தி திறத்தமுத்திச்
சேதாம் பலதுறை யீதென் றெனக்குப தேசநல்கே. (44)

தேசம் புகல வயிலேயெ னச்சிறை புக்கொருகந்
தேசம் புகல வணவாரி செற்றவ னீசற்குப
தேசம் புகல திகவாச கன்சிறி தோர்கிலன்மாந்
தேசம் புகல கமுதவி மானைச் செருச்செய்வதே. (45)

செருக்கும் பராக வயிராவ தத்தெய்வ யானைமணஞ்
செருக்கும் பராக தனந்தோய் கடம்ப செகமதநூல்
செருக்கும் பராக மநிரு பனந்தந் தெளிவியம்பு
செருக்கும் பராகம் விடுங்கடை நாளுந் திடம்பெறவே. (46)

திடம்படு கத்துங் கெடீர்கன்ம லோகச் சிலுகுமச்சோ
திடம்படு கத்துந் திரித்தம்பு வாலியு ரத்தும்பத்துத்
திடம்படு கத்துந் தெறித்தான் மருக திருகுமும்ம
திடம்படு கத்துங் கநகங் குனித்தவன் சேயெனுமே. (47)

சேயவன் புந்தி வனவாச மாதுடன் சேர்ந்த செந்திற்
சேயவன் புந்தி கனிசா சராந்தக சேந்தவென்னிற்
சேயவன் புந்தி பனிப்பானு வெள்ளிபொன் செங்கதிரோன்
சேயவன் புந்தி தடுமாற வேதருஞ் சேதமின்றே. (48)

சேதக மொன்று மனாதியுந் தாதையுந் தேடரியார்
சேதக மொன்றுஞ் சதங்கையங் கிண்கிணி
செச்சையந்தாள்
சேதக மொன்றும் வகைபணி யாயினித் தீயவினைச்
சேதக மொன்று மறியா துழலுயிர்ச் சித்திரமே. (49)

சித்திர மிக்க னவில்வாழ் வெனத்தெளி யுந்தவவா
சித்திர மிக்க னெறிக்கழிந் தேற்கினிச் செச்சைநல்வி
சித்திர மிக்க தனக்குறத் தோகை திறத்தமுக்தி
சித்திர மிக்க வருளாய் பிறவிச் சிகையறவே. (50)

சிகைத்தோகை மாமயில் வீரா சிலம்புஞ் சிலம்பம்புரா
சிகைத்தோகை மாமயில் வாங்கிப் பொருது
திசைமுகன்வா
சிகைத்தோகை மாமயில் வானில்வைத் தோய்வெஞ்
செருமகள்வா
சிகைத்தோகை மாமயில் செவ்விநற் கீரர்சொற் றித்தித்ததே.
(51)

தித்திக்குந் தொந்திக்கு நித்தம் புரியுஞ் சிவன்செவிபத்
தித்திக்குந் தொந்திக் கறமொழி பாலக தேனலைத்துத்
தித்திக்குந் தொந்திக் கிளையாய் விளையுயிர்க்
குஞ்சிதைதோல்
தித்திக்குந் தொந்திப் பனவேது செய்வினைத் தீவிலங்கே.
(52)

தீவிலங் கங்கை தரித்தார் குமார திமிரமுந்நீர்
தீவிலங் கங்கை வருமான் மருக தெரிவற்றவான்
தீவிலங் கங்கை வரவா விரைக்குத் திரிந்துழலுந்
தீவிலங் கங்கை யமன்றொட ராமற் றிதம்பெறவே (53)

திதத்தத்தத் தித்தத் திதிதாதை தாததுத் தித்தத்திதா
திதத்தத்தத் தித்தத் திதித்தித்த தேதுத்து தித்திதத்தா
திதத்தத்தத் தித்தத்தை தாததி தேதுதை தாததத்து
திதத்தத்தத் தித்தித்தி தீதீ திதிதுதி தீதொத்ததே. (54)

தீதோ மரணந் தவிரும் பிறப்பறுந் தீயகற்புந்
தீதோ மரணம் பரமீது தானவர் சேனைமுற்றுந்
தீதோ மரணந் தனபூ சுரர்திரண் டேத்தியமுத்
தீதோ மரண மலையாளி யென்றுரை தென்னுறவே. (55)

தென்ன வனங்கனஞ் சூழ்காத் திரிநக சூலகரத்
தென்ன வனங்கனந் தப்பத நீட்டினன் செல்வமுன்பின்
தென்ன வனங்கனன் னீற்றாற் றிருத்திய தென்னவின்னந்
தென்ன வனங்கனங் கைச்சிலைக் கூனையுந்
தீர்த்தருளே. (56)

தீத்தன் பரவை வெளிநீங்கிச் சேய்தொழச் செல்பதவுத்
தீத்தன் பரவை முறையிட மாங்குறை தீங்குறவே
தீத்தன் பரவை தழைக்கவிண் காவெனச் சென்னியின்மேல்
தீத்தன் பரவையில் வேலத்த னேகுரு சீலத்தனே. (57)

சீலங் கனமுற்ற பங்கா கரசல தீரக்க்நி
சீலங் கனமுற்ற முத்தூர்செந் தூர சிகண்டியஞ்சு
சீலங் கனமுற்ற வேதனை மேவித் தியங்கினஞ்சீ
சீலங் கனமுற்ற விப்பிறப் பூடினிச் சேர்ப்பதன்றே. (58)

சேர்ப்பது மாலய நீலோற் பலகிரித் தெய்வவள்ளி
சேர்ப்பது மாலய முற்றா ரெனப்பலர் செப்பவெப்புச்
சேர்ப்பது மாலய வத்தைமன் யாக்கை சிதைவதன்முன்
சேர்ப்பது மாலய வாசவன் செப்பிய செப்பதத்தே. (59)

செப்பத் தமதிலை மாற்றார் கொளுமுன்னஞ்
செல்வர்க்கிடச்
செப்பத் தமதிலை யெங்ஙனுய் வார்தெய்வ வேழமுகன்
செப்பத் தமதிலை வாணுத னோக்கினர்
சேணில்வெள்ளிச்
செப்பத் தமதிலை வென்றார் குமாரவத் திக்கரசே. (60)

திக்கர சத்தி தவன்சென்று முன்றி திகுமரர்வந்
திக்கர சத்தி யிடத்தோயென் செய்வ தெனத்தருநீ
திக்கர சத்தி விதிர்த்திலை யேலெவன் செய்குவரத்
திக்கர சத்தி யலைவாய் வளர்நித் திலக்கொழுந்தே. (61)

திலமுந் தயில முநிகர வெங்குந் திகழ்தருசெந்
திலமுந் தயில முருகா வெனாதத் திநகையினித்
திலமுந் தயிலமு தத்தா லுருகிய சித்தவென்னே
திலமுந் தயில கலவினை மேவித் தியங்குவதே. (62)

தியங்காப் பொறியுண் டெனுந்தனுத் தீதலு மேதியையூர்
தியங்காப் பொறியுண் டவமிலி யேயென்று செப்பலுஞ்சத்

தியங்காப் பொறியுண் டயன்கைப் படாது திரவெற்புநி
தியங்காப் பொறியுண்டைபண்டுயப்போர்செய்தசேவகனே.

சேவக மன்ன மலர்க்கோமுன் னீசொலத் தெய்வவள்ளி
சேவக மன்ன வதனாம் புயகிரி செற்றமுழுச்
சேவக மன்ன திருவாவி னன்குடிச் செல்வகல்விச்
சேவக மன்ன முநிக்கெங்ங னாணித் திகைப்புற்றதே.
(64)

திகைப்படங் கப்புயந் தந்தரு ளானெனன் படிங்கணிய
திகைப்படங் கத்தமை யார்செந்தி லாரென்ப டென்னனுய
திகைப்படங் கப்புகல் சேயென்பள் கன்னிகண் ணீர்தரவி
திகைப்படங் கத்தமை யாதெமை யாட்கொளுஞ்சீகரமே.
(65)

சீகர சிந்துர வுத்தவெஞ் சூர செயபுயவ
சீகர சிந்துர வல்லிசிங் கார சிவசுதசு
சீகர சிந்துர கந்தர வாகன் சிறைவிடுஞ்சு
சீகர சிந்துர மால்வினைக் குன்றைச் சிகண்டிகொண்டே.
(66)

சிகண்டிதத் தத்த மரவாரி விட்டத் திரிபுத்ரரா
சிகண்டிதத் தத்த நகபூ தரதெய்வ வள்ளிக்கொடிச்
சிகண்டிதத் தத்த மலர்மேற் குவித்திடை செப்புருவஞ்
சிகண்டிதத் தத்த கறபோ பலமென்னுஞ் சேகரனே. (67)

சேகர வாரண வேல்வீர வேடச் சிறுமிபத
சேகர வாரண மேவும் புயாசல தீவினையின்
சேகர வாரண வெற்பாள நாளுந் த்ரியம்பகனார்
சேகர வாரண நின்கையில் வாரணஞ் சீவனொன்றே.
(68)

சீவன சத்துரு கன்பாற் பிறப்பறத் தேவருய்யச்
சீவன சத்துரு மிக்குமெய் யோன்கையிற்சேர்த்தசெவ்வேள்
சீவன சத்துருச் செய்யாண் மருகவெ னாதிடையே
சீவன சத்துரு வெய்தியெய் தாப்பழி சிந்திப்பதே. (69)

சிந்துர வித்தக வாரும் புகர்முகத் தெய்வவெள்ளைச்
சிந்துர வித்தக வல்லிசிங் காரசெந் தூரகுன்றஞ்

சிந்துர வித்தக முத்திக்கு மாய்நின்ற செல்வதுஞ்சா
சிந்துர வித்தக னம்போலு மிங்கிளந் திங்களுமே. (70)

திங்களு மாசுண மும்புனை வார்செல்வ னென்னையிரு
திங்களு மாசுண மாக்கும்ப தாம்புயன் செந்திலன்னாள்
திங்களு மாசுண மன்போல் விழியுஞ் செழுங்கரும்புந்
திங்களு மாசுண நன்றான மாற்றமுந் தீட்டினன்றே. (71)

தீட்டப் படாவினி யுன்னாலென் சென்னி கறைப்பிறப்பில்
தீட்டப் படாவி யவரல்லன் யான்றிக்கு நான்மருப்புத்
தீட்டப் படாவி தமுகா சலன்சிறை விட்டவன்றாள்
தீட்டப் படாவி வனையே நினைவன் றிசாமுகனே. (72)

திசாமுக வேதனை யன்பாற் கரன்றிங் கடங்களவ
திசாமுக வேதனை யீறிலு மீறிலர் சீறுமம்போ
திசாமுக வேதனை வென்கண்ட வேலன் றினைப்புனத்தந்
திசாமுக வேதனை நண்ணுதண் கார்வரை சேர்பவரே.
(73)

சேரப் பொருப்பட வித்தே னிறைவன் றிரைசிறையைச்
சேரப் பொருப்பட வல்லவன் சூரைச் சிகரியுடன்
சேரப் பொருப்பட வென்றண்ட ரேத்திய சேவகன்வான்
சேரப் பொருப்பட வேணியிற் சேர்த்தவன் செய்தவமே.
(74)

செய்தவத் தாலஞ்சு சீரெழுத் தோதிலந் தீதலருஞ்
செய்தவத் தாலஞ்சு கம்பெறச் சேயுரைக்கேற் றுருப்போய்ச்
செய்தவத் தாலஞ்சு வைக்கனி யீன்றதென் னேம்வினையே
செய்தவத் தாலஞ்சு கின்றன மும்மலச் செம்மல்கொண்டே.
(75)

செம்மலை வண்டு கடரங்க மாவென்ற திண்படைவேற்
செம்மலை வண்டு வசவார ணத்தனைச் செப்பவுன்னிச்
செம்மலை வண்டு தவந்தமிழ்ப் பாணதெண்
டீங்கையில்வாய்
செம்மலை வண்டு விருப்புறு மோவிது தேர்ந்துரையே.
(76)

தேரை விடப்பணி யேறேறி முப்புரஞ் செற்றபிரான்
தேரை விடப்பணி சூராரி யென்க தெரிவையர்பால்

தேரை விடப்பணி வாய்ப்படு மாறு செறிந்தலகைத்
தேரை விடப்பணித் தென்றோடி யென்றுந் திரிபவரே.

(77)

திரிபுரத் தப்புப் புவிதரத் தோன்றி சிலைபிடிப்பத்
திரிபுரத் தப்புத் தலைப்பட நாண்டொடுஞ் சேவகன்கோத்
திரிபுரத் தப்புத் திரமான் மருக திருக்கையம்போ
திரிபுரத் தப்புத் துறையா யுதவெனச் செப்புநெஞ்சே.

(78)

செப்பா ரமுதலை மன்னோ திகனங்கு ரும்பைமுலை
செப்பா ரமுதலை கண்கா னகைமுருந் தீரிருகண்
செப்பா ரமுதலை வாவியிற் சென்ற பிரான்மருகன்
செப்பா ரமுதலை வேர்களை வான்வரைச் சீரினுக்கே.

(79)

சீராம ராம சிவசங்க ராநுந் திருமுடிக்குச்
சீராம ராம துகரத் துழாயென்பர் தெண்டிரைமேற்
சீராம ராம நிறந்திறக் கத்தொட்ட சேய்கழற்குச்
சீராம ராம னிமையோர் மகுடச் சிகாவிம்பமே. (80)

சிகாவல வன்பரி தப்பாடு செய்யுஞ்செவ் வேலவிலஞ்
சிகாவல வன்பரி வூரார் மதனித் திலஞ்சலரா
சிகாவல வன்பரி யங்கங் குழல்பெற்ற தேமொழிவஞ்
சிகாவல வன்பரி யானல மன்றிலுந் தென்றலுமே. (81)

தென்றலை யம்பு புனைவார் குமார திமிரமுந்நீர்த்
தென்றலை யம்புய மின்கோ மருக செழுமறைதேர்
தென்றலை யம்பு சகபூ தரவெரி சிந்திமன்றல்
தென்றலை யம்பு படுநெறி போயுயிர் தீர்க்கின்றதே. (82)

தீரா கமல சலிகித போக மெனத்தெளிந்துந்
தீரா கமல மெனக்கரு தாததென் சேயவநூல்
தீரா கமல குகரம் பொறுப்ப னெனத்திருக்கண்
தீரா கமல மரவே கருகச் சிவந்தவனே. (83)

சிவசிவ சங்கர வேலா யுததினை வஞ்சிகுறிஞ்
சிவசிவ சங்கர வாமயில் வீர செகந்திருக்கண்
சிவசிவ சங்கர மாவை யெனுந்திற லோய்பொறைவா
சிவசிவ சங்கர மான்பட்ட வாவொளி சேர்ந்தபின்னே.

(84)

சேந்த மராத்துடர் தானவர் சேனையைத் தெண்டிரைக்கண்
சேந்த மராத்துடன் கொன்றசெவ் வேல திருமுடிமேற்
சேந்த மராத்துட ரச்சூடி மைந்த திளைத்திளைத்தேன்
சேந்த மராத்துட ரின்னாரி யென்னுமிச் சேறுபுக்கே. (85)

சேறலைத் தாறலைக் கப்பா லெழுந்து செழுங்கமுகிற்
சேறலைத் தாறலைக் குஞ்செந்தி லாய்சிந்தை தீநெறியிற்
சேறலைத் தாறலைத் தீர்க்குங் குமார திரியவினைச்
சேறலைத் தாறலைக் கத்தகு மோமெய்த் திறங்கண்டுமே.
(86)

திறம்பா டுவர்தண் புனத்தெய்வ மேயென்பர் சேதத்துமாந்
திறம்பா டுவர்முது நீரெனக் காய்பவர் செந்தினைமேல்
திறம்பா டுவரிதழ் கண்டுரு காநிற்பர் செப்புறச்செந்
திறம்பா டுவரி லிவர்வல் லவர்நஞ் செயல்கொள்ளவே.
(87)

செயலங்கை வாளை யிறைகோயி லைச்சிவ னாரமுதைச்
செயலங்கை வாளை முனிகொண்டல் வாளியைத் தேவர்
பிரான்
செயலங்கை வாளை முனைவேலை யன்னவிச் சேயுறையுஞ்
செயலங்கை வாளை யுகள்செந்தில் வாழ்பவள்
சேல்விழியே.

சேலையி லாருந் தவன்சூல மேறச் சினத்தவன்கண்
சேலையி லாருந் திவனோற் பவையர சிந்திரியச்
சேலையி லாரும் பராபரி புக்குறச் சிக்கெனுமிச்
சேலையி லாருந் திறையிட் டனர்தங்கள் சித்தங்களே.
(89)

சித்தத் தரங்கத்தர் சித்தியெய் தத்திரி கின்றதென்னர்ச்
சித்தத் தரங்கத்தர் சந்ததி யேசெந்தி லாய்சலரா
சித்தத் தரங்கத்த ரக்கரைச் செற்றகந் தாதிங்களிஞ்
சித்தத் தரங்கத்தர் சேயா ரணத்தந் திகிரியையே. (90)

திகிரி வலம்புரி மாற்கரி யார்க்குப தேசஞ்சொன்ன
திகிரி வலம்புரி செய்யா ரிலஞ்சிசெந் தூர்கனதந்
திகிரி வலம்புரி வேறும் படைத்தருள் சேய்தணியில்
திகிரி வலம்புரி சூடிய வாநன்று சேடியின்றே. (91)

சேடி வணங்கு வளைத்தோ ளெனப்புணர் சேயவட
சேடி வணங்கு திருத்தணி காவல நின்செருக்காற்
சேடி வணங்கு கொடியிடை யாரையென் செப்புமுலைச்
சேடி வணங்கு தலைக்களி றீந்தது செல்லநில்லே. (92)

செல்லலை யம்பொழில் சூழசெந்தி லானறி யானிறைகைச்
செல்லலை யம்பொழி லெங்கணு மேற்ப வெனத்தெறித்த
செல்லலை யம்பொழி லங்கைக் கருடிரு மானிறம்போற்
செல்லலை யம்பொழி லாகவ மாதுயிர் சேதிப்பதே. (93)

சேதிக் கனைத்து களதாக்கு நோக்கினன் செல்வசெந்திற்
சேதிக் கனைத்து நிலைபெறச் சூரங்கஞ் சீரங்கமால்
சேதிக் கனைத்து வரிதோ யயில்கொடெற் சேர்க்கவந்தாற்
சேதிக் கனைத்து வருமா மறலி திறலினையே. (94)

திறவா வனக புரிவாச னீக்கச் சிகரிநெஞ்சந்
திறவா வனச முநியைவென் றோய்தென் றிசைத்திருச்செந்
திறவா வனமயி லோயந்த காலமென் சிந்தைவைக்கத்
திறவா வனநின் றிருவான தண்டைத் திருவடியே. (95)

திருக்கையம் போதிக ளோகஞ்ச மோநஞ்ச மோதிருமால்
திருக்கையம் போசெய்ய வேலோ விலோசனந்
தென்னனங்கத்
திருக்கையம் போருகக் கைந்நீற்றின் மாற்றித்தென்
னூல்சிவபத்
திருக்கையம் போக வுரைத்தோன் சிலம்பிற் சிறுமிதற்கே.

சிறுமிக் குமர நிகர்வீர் பகிரச் சிதையுயிர்த்துச்
சிறுமிக் குமர சரணமென் னீருய்விர் செந்திினைமேற்
சிறுமிக் குமர புரைத்துநின் றோன்சிலை வேட்டுவனெச்
சிறுமிக் குமர வணிமுடி யான்மகன் சீறடிக்கே. (97)

சீரங்க ராக மறமோது திகிரி செங்கைகொண்ட
சீரங்க ராக மருகந்த தேசிக செந்தினைமேற்
சீரங்க ராக தனகிரி தோய்கந்த செந்தமிழ்நூற்
சீரங்க ராக விநோதவென் பார்க்கில்லை தீவினையே.
(98)

தீவினை யற்ற சினந்தீ ரகத்துண்மெய்த் தீபநந்தந்
தீவினை யற்ற வநந்தா தெடுத்தனஞ் செந்தினைமேல்
தீவினை யற்ற புனமான் கொழுநன் செழுங்கனகத்
தீவினை யற்ற வடியார்க் கருள்பெருஞ் செல்வனுக்கே.
(99)

செல்வந் திகழு மலநெஞ்ச மேயவன் றெய்வமின்னூர்
செல்வந் திகழு நமதின்மை தீர்க்கும்வெங் கூற்றுவற்குச்
செல்வந் திகழுந் திருக்கையில் வேறினை காத்தசெல்வி
செல்வந் திகழு மணவாள னல்குந் திருவடியே. (100)

கந்தரந்தாதி முற்றிற்று

உ

# திருச்செந்தூர்
# நிரோட்டக யமக அந்தாதி

## துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள்

### காப்பு

கட்டளைக் கலித்துறை

கொற்ற வருணனை நின்றன் றுழக்கிய கொக்குருவைச்
செற்ற வருணனை யன்னசெவ் வேற்படைச் செந்திலர்க்கு
முற்ற வருணனை யந்தாதி யென்று முதிர்மதப்பேர்
பெற்ற வருணனை யானனத் தாதியைப் பேசுவனே. 1

### நூல்

கட்டளைக் கலித்துறைகள்

யானைக்கண் டங்கரி சென்றேத் தெழிற்செந்தி லின்றடைந்தே
யானைக்கண் டங்கரி யற்கங் கயிலையை யேய்ந்ததகை
யானைக்கண் டங்கரி சேரெண்டிக் காக்கினற் கீநலிசை
யானைக்கண் டங்கரி தாகிய சீர்க்கதி யெய்தினனே. 2

தினகர னந்த நனியிலங் காநின்ற செய்யநற்செந்
தினகர னந்த நிதியா யினனடற் சீரயிலேந்
தினகர னந்த கனைச்செற்ற தாளர் திகழ்கனகா
தினகர னந்த நடனர் தனயனென் சிந்தையனே. 3

சிந்தனை யாகத் திசையந் தணர்க்கிறை சேரகங்க
சிந்தனை யாகத் தரையளித் தாடரை சென்றிரந்த
சிந்தனை யாகத் திடையியைந் தான்றந்த சேயளியாற்
சிந்தனை யாகத்த நற்செந்தி லாய்நினைச் சேர்ந்தனனே. 4

தனத்தலங் கார நிறைநா ரியரந் தரத்தசைகே
தனத்தலங் கார நிகழரங் காடச்செய் தன்னினயத்
தனத்தலங் கார தராயியங் கத்தக்க தண்செந்திற்கந்
தனத்தலங் காரனை யானய னேத்திடத் தங்கினனே. 5

தங்கந் தனங்க ளடையத் தனியெனைத் தள்ளியங்கே
தங்கந் தனங்க டரச்சென் றனரறிந் தாரிலைகா
தங்கந் தனங்க ளலர்காக்க ணாரெழிற் றண்செந்திலார்
தங்கந் தனங்க நிகர்செக்கர் செய்சஞ் சலத்தினையே. 6

சலந்தர னாகந் தரித்தார்தந் தாதன் றனதிடைச்சஞ்
சலந்தர னாகந் தரைநடந் தாலெனச் சார்ந்ததண்டன்
சலந்தர னாகந் தளரச்செற் றார்தன யன்றலநச்
சலந்தர னாகந் தனக்கிறை சேர்செந்திற் சார்ந்திடற்கே. 7

சாரங்கஞ் சங்கரி கட்கிச்சித் தேய்ந்தகைச் சங்கரனார்
சாரங்கஞ் சங்கரி தாஞ்சக் கரங்கையிற் றாங்கினன்சேய்
சாரங்கஞ் சங்கரி யாநண் ணினர்க்கந்தத் தந்திரத்தா
சாரங்கஞ் சங்கரி தேயெனச் செய்நின் சரண்டந்ததே. 8

தந்தனஞ் சங்கை யணிகரர் சேர்க்கத் தடங்கணலை
தந்தனஞ் சங்கை யலரென்செய் யாடங்கச் சற்சனர்நித்
தந்தனஞ் சங்கை யகலறத் தீசெந்திற் சார்கதனித்
தந்தனஞ் சங்கை யநக னிளையனற் றாடரற்கே. 9

தரங்கனந் தார னனியேற் றெழிற்செந்திற் றந்தைநிரந்
தரங்கனந் தாரக நாடினென் றேறினை சத்தியரந்
தரங்கனந் தார நகரீசர் சேய்கிரித் தையலர்க்கந்
தரங்கனந் தாரள கஞ்சிற் றிடைசல சங்கண்களே. 10

சங்கங் களங்கழ னிக்கரை சேர்செந்திற் றங்கினநஞ்
சங்கங் களங்கர நண்ணரன் சேயெய்தச் சார்ந்தனஞ்சற்
சங்கங் களங்க னியைநிகர் தண்ட தரற்கினிய
சங்கங் களங்க ரெனநின்ற யாங்கணெஞ் சங்கரைந்தே. 11

கரத்தரிக் கங்கணங் கட்டர னார்தந்த கந்தரழ
கரத்தரிக் கங்கணங் கண்டசெய்ச் செந்திலெங் காங்கெயர்சா
கரத்தரிக் கங்கணங் கட்கய னார்கெழிற் காசணிசே
கரத்தரிக் கங்கணங் கற்றிடத் தாங்கினர் கைச்சத்தியே. 12

சத்திக் கரத்த னகச்சேயங் கத்தினைத் தந்தனனற்
சத்திக் கரத்த னகச்சிலை யாளிதன் றாளிணைநே
சத்திக் கரத்த னகத்தியைந் தேத்தரன் தந்தகதிர்ச்
சத்திக் கரத்த னகசெந்தி லாய்நின் சரண்சரணே. 13

சரிதங்கை யாரக் கலன்றந் தனந்தரித் தார்நரகே
சரிதங்கை யாரக் கரிடத்தி னார்தந்த தண்செந்தினே
சரிதங்கை யாரக் கணத்தின்னல் கைத்தல் சரதந்தஞ்சீர்ச்
சரிதங்கை யாரக் கசிந்திசைக் கின்ற தகையினர்க்கே. 14

இனனந்தி யங்கி நிகர்த்தசெங் கேழன்கை யீரிரண்டா
யினனந்தி யங்கிரி யைச்சிலை யாக்கிதன் சேயெழிற்செய்
யினனந்தி யங்கி யிருங்கஞ்சஞ் சேர்செந்தி லெந்தைதனை
யினனந்தி யங்கிசை யக்கதி யீந்தன னென்றனக்கே. 15

தனக்கடங் காரெயில் செற்றகங் காளன் றனயனங்கந்
தனக்கடங் காதிழி தந்திக் கிளையன றளிரெழிற்சந்
தனக்கடங் காநிறை செந்திலி னற்சேய் சயிலநங்கை
தனக்கடங் காணினச் சாரிலை யண்ண றரணியிலே. 16

தரணி யனைய நிறத்தண்ண லாரிரந் தன்றளந்த
தரணி யனைய னிறைஞ்சயி லார்நற் றனிச்சிலையாந்
தரணி யனைய னகனணை யந்தரி தந்திடுகந்
தரணி யனையனெஞ் சேயலர்த் தாள்க டரித்திறைஞ்சே. 17

தரிக்கனத் தங்கலை நீள்சடைக் கைக்கனற் சங்கரனந்
தரிக்கனந் தங்கலை நீதிகள் சாற்றரன் றந்தநற்கந்
தரிக்கனந் தங்கலை நீர்ச்செய்க்க ணாஞ்செந்தி லார்தளையா
தரிக்கனந் தங்கலை நீத்திழந் தேங்கரச் சங்கங்களே. 18

சங்கரி யக்க நிகர்த்தநின் றாதை தகையதென்னச்
சங்கரி யக்க ரிறைஞ்செழிற் செந்திற் சடானனகஞ்
சங்கரி யக்கதிர் தானிசை கின்ற சரணத்தினாற்
சங்கரி யக்கணத் தேயெற் செறியந் தகற்சினந்தே. 19

தகர னலங்க நிறைநிறத் தான்செந்திற் றந்தைசங்கேய்ந்
தகர னலங்க னளினா தனத்தினன் றாழளகந்
தகர னலங்க டரநின்ற சத்தியன் றாளெனினந்
தகர னலங்கனன் றாலெனச் சீறிடத் தக்கரன்றே. 20

தக்க னகத்தி னடறணித் தானயன் றன்கதிசந்
தக்க னகத்தி கிரிக்கர னாக்கங்க டந்தளிக்கத்
தக்க னகத்தி யனையாளி யென்னெஞ்ச தாஞ்சலசந்
தக்க னகத்தி னகரன்றன் செந்திலைச் சந்திக்கினே. 21

சந்தத்த னத்திக டந்திறத் தாசை தலத்தினிச்சை
சந்தத்த னத்தி னசைதீ ரடியன் றனதிலிற்சேர்
சந்தத்த னத்தி யதளான் றனய தடக்கயல்கஞ்
சந்தத்த னத்தி னினங்கீ ழிழிசெந்திற் றங்கினற்கே. 22

தங்கச் சினகர நேராக் கலந்திச் சகநிறைந்தார்
தங்கச் சினகர நேயர் தனயன் றனக்கினிதாந்
தங்கச் சினகர நீள்செந்தி னாட்டிற் றனகரிதந்
தங்கச் சினகர நற்கன னென்னங் கடையலர்க்கே. 23

அலரின னந்தலை யாழிகண் டாங்குச் சிகியினிடை
யலரின னந்த நிகரயி லான்செந்தி லாயிழையை
யலரின னந்த நினைநிலந் தேர்ந்ததற் கன்றயலா
ரலரின னந்தஞ் சொலற்கிட னாநெஞ் சழிகின்றதே. 24

தேயத் தியங்கி யலகி றலங்களிற் சென்றடிகள்
தேயத் தியங்கி யலைய றிடங்கதி சேர்தலறைந்
தேயத்தி யங்கின நித்திலந் தானெறி செந்திலடைந்
தேயத்தி யங்கி தரித்தான் றனயற் றெரிசிக்கினே. 25

சிக்கத் தனங்க டிறக்கின்ற கன்னியர் சிந்தைகணே
சிக்கத் தனங்க ளளித்தழிந் தேற்கெழிற் செந்திறரி
சிக்கத் தனங்க மூலையேத்த நல்கினன் சீர்நிறைகா
சிக்கத் தனங்க ளகிலேசன் றந்த திறற்கந்தனே. 26

கந்தரங் கானந்த னிற்சென் றடங்கிலென் காசிக்கநே
கந்தரங் கானந்த நண்ணிலென் கன்னியர் கட்டளக
கந்தரங் கானந்த நின்றா டெழிற்செந்திற் கண்டிறைஞ்சிக்
கந்தரங் கானந்த நல்கச் சனனங் கடந்திலரே. 27

கடனந்தி னாகத் ததளாடை யாயெனைக் காக்கனிற்கே
கடனந்தி நாணிறத் தாயென நாரணன் கண்டிறைஞ்செங்
கடனந்தி நாதன் றனயனற் செந்திலிற் காரிகையே
கடனந்தி னாயகங் காதலர் தேரிற் கலிக்கின்றதே. 28

கணக்காக நாய்கடின் காய நிலையெனக் கண்ணியென்ன
கணக்காக நானலைந் தெய்த்தே னெழிற்செந்திற் கந்தநெற்றிக்
கணக்காக னார்தந்த நின்றனை யேயினிக் காதலினாற்
கணக்காக னாநிகர்த் தேயழி யங்கத்தின் காதலற்றே. 29

காதலை யானின்றனக்காக் கினனினிக் காயந்தந்தே
காதலை யானின் றனக்கா ரணனடிக் கஞ்சங்கணீங்
காதலை யானின் றகங்கரைந் தேத்தரன் கண்ணியராக்
காதலை யானின்ற சங்கரன் சேய்செந்திற் காங்கெயனே.30

காயங் கலைய நலியந் தகனணை காலஞ்செய்ய
காயங் கலையத ளானில நீரழல் காற்றெழிலா
காயங் கலையன லரிசித் தாயினன் காதலழ
காயங் கலையதி ருஞ்செந்தி லாயென்க கன்றனெஞ்சே.31

திருசெந்தூர் நிரோட்டயமக அந்தாதி முற்றிற்று

உ

# மருதமலை யமகவந்தாதி

## கந்தசாமி சுவாமிகள்

### காப்பு

கட்டளைக் கலித்துறை

மருதா சலவி யமகவந் தாதிச்சை மாற்றிமெய்க்கா
மருதா சலவி யமகவந் தாதி யெனவழுத்து
மருதா சலவி யமகவந் தாதிக்கு வாய்த்ததுணை
மருதா சலவி ய்மகவந் தாதிதன் மாணடியே. 1

### நூல்

கட்டளைக் கலித்துறைகள்

வாரண வத்திரள் சூசுக வள்ளி மகிழ்ந்தணைவான்
வாரண வத்திர னைப்போற்று சீர்மரு தாசலத
வாரண வத்திர மார்காய வாழ்க்கையை மாற்றுபுமூ
வாரண வத்திர நாடகத் தாளிடை வைக்குதியே. 2

வைக்கா தரமை விழியார்சொற் கொண்டு வரைதருஞ்சி
வைக்கா தரமைந்த னாமரு தாசலன் வண்புகழ்ச்சு
வைக்கா தரமை யலின்மூழ்கு மூடர்கள் வாய்ந்திடுந
வைக்கா தரமைந் தினுந்தாழ் குறும்பி வழிபுழையே. 3

வருத்தம் பலவிதத் துங்கொண் டுழன்றிட மாசுறுமை
வருத்தம் பலமிக் கியற்றின ரர்ச்சுன வள்ளனின்முன்
வருத்தம் பலநடத் தார்க்கரு ளுண்மை வகுத்துனுட்க
வருத்தம் பலம்பெறு மெய்த்தொண் டரிலொரு
வன்னெனவே. 4

வன்னத் தலைவழங் கார்கலிக் கப்புற மன்னிமுகில்
வன்னத் தலைவனை யாண்மரு தாசல வாரிசத்தன்
வன்னத் தலைவது கண்டும்வன் னீதி மதித்துளத்தின்
வன்னத் தலைவறி துற்றாயென் செய்வன் மதியிலியே.5

மதியங் கரந்தை யலர்முக மோதிகண் மானுமென்றுன்
மதியங் கரந்தை யலதின்பின் றர்ச்சுன மால்வரைமேய்
மதியங் கரந்தை யலர்வேணி யன்குர வற்றுதிப்பின்
மதியங் கரந்தை யலர்திருச் சேவை வழங்குமன்றே. 6

வழக்கம் பலபல வுஞ்செய் துலகின் மயங்குவிர்தி
வழக்கம் பலபல மெய்திடுங் காலை நுமக்கிடர்கள்
வழக்கம் பலபல முள்ளுன்னிப் பார்மின் மதுரரத
வழக்கம் பலபலஞ் சான்மரு தாசலன் வாரிசமே. 7

வாரிச வாதனத் தான்கரந் தொட்டின மாயப்புலை
வாரிச வாதனப் பைபுகுத் தாதன்பின் வாழ்த்துமென்சொல்
வாரிச வாதன கப்புயந் தோய்மரு தக்கலருள்
வாரிச வாத னறுந்தமிழ்ப் பாவலர் மாதவமே. 8

மாதங் கவிலங் கமைகொப்பம் வீழ்ந்திடன் மானமனை
மாதங் கவிலங் கணைவார் மதியின் மதிப்பருஞ்சீர்
மாதங் கவிலங் கலினீ டருச்சுனம் வாழ்த்தினமே
மாதங் கவிலங் கடைகில மெய்தலை வம்புறுமே. 9

வம்புத் துணர்திருக் கோவீர் மருத வரையிறைதாள்
வம்புத் துணர்திருக் கோவிலிற் கண்டிட்டு வாழ்த்திடுத
வம்புத் துணர்திருக் கோன்பேறு மேவுதிர் மாறிடில
வம்புத் துணர்திருக் கோடுறுங் கூசிட வாய்தருமே. 10

வாயசங் கங்கட னாய்நரி யாதிகண் மாந்திரையாய்
வாயசங் கங்கடம் புக்கிளைத் தேன்மலர் வாவிக்கரை
வாயசங் கங்கடண் ணார்நில வேய்மரு தாசலகா
வாயசங் கங்கட யேன்பெற வஞ்சலென் மாற்றம்விண்டே.11

மாற்றுய ரம்பங்க நல்கிடும் வேள்கர வாரிசமெய்ம்
மாற்றுய ரம்பங் கருதுநெஞ் சேமலர் வாழ்பிரமன்
மாற்றுய ரம்பங்க ரேத்து மருத வரைக்குகன்பொன்
மாற்றுய ரம்பங் கயப்பதம் பேரின்ப வான்றுணையே. 12

வானத் தரங்கத் திருமான் மருகன்முன் வந்தழுத
வானத் தரங்கத் திருமே விடும்படி வைத்தகன
வானத் தரங்கத் திருக்கும் பதங்கண் மதித்திடுசு
வானத் தரங்கத் திருக்குநெஞ் சர்ச்சுன மாடடைந்தே. 13

மாடா டிரண மெனவறி யாது வயக்கியிழி
மாடா டிரண மவாவுவி ரர்ச்சுன மால்வரையின்
மாடா டிரணச் சிலம்படி சூடிட வாஞ்சிமின்சும்
மாடா டிரணஞ் சுமக்க விதிவிதி மாய்ந்தறவே. 14

மாயா மலகந் தரநிழல் போன்று மடியுடல
மாயா மலகந் தழைத்தே குளிகைகண் மாந்திடுவீர்
மாயா மலகந் தகைபொழி லர்ச்சுன வள்ளலினுண்
மாயா மலகந் தவிர்வீரி தொப்பதின் மாநிலத்தே. 15

மானிலத் தோடிணை யஞ்சனக் கண்ணியர் மால்பெருகி
மானிலத் தோடி யிளைத்தேனைத் தீம்புனல் வாவியிற்பூ
மானிலத் தோடிய வோடங் கிடக்கு மருதவெற்புன்
மானிலத் தோடிகழ் கிள்ளையி லாள மதித்தருளே. 16

மதியாத வன்கண்ண ருங்க விதம்மேல் வகுத்துறிற்கேண்
மதியாத வன்கண்ண லென்றேவற் கோதி வழங்குகின்றார்
மதியாத வன்கண் ணலமேல் வருமரு தாசலதா
மதியாத வன்கண் ணருணீசெய் யாமை மரபல்லவே. 17

மரகதத் தோகைத் திடத்தோ நிற்கிச்சை வழுத்தெனுமம்
மரகதத் தோகைய ரேவலர் தென்றிசை வாழ்சமன்கொண்
மரகதத் தோகை கெடுவார் மருத வரைக்குகனை
மரகதத் தோகையைப் பாடுநர்க் கன்னவன் வந்தனியே. 18

வந்திக்கு வந்தவொ ராளாகி மாணிக்க வாசகர்த
வந்திக்கு வந்தவர் காணச்செய் தார்குர வன்மருதம்
வந்திக்கு வந்தர நோக்கா துருவழி மாரவிகல்
வந்திக்கு வந்தம்பு பெய்யே லெளிதன்று வைச்சத்தியே. 19

வையத்தங் கற்பணி மின்னார்க்கு வந்திறு மாப்பிர்கணீர்
வையத்தங் கற்பணி தன்னையு நும்முண் மதித்திலிரோ
வையத்தங் கற்பணி யாரர்ச் சுனவரை யன்வடிவுள்
வையத்தங் கற்பணித் தொண்டருள் ளாநலம்
வாஞ்சிமினே. 20

வாஞ்சித்த வண்ண மடியார் தமக்கு வழங்கிடவ
வாஞ்சித்த வண்ண மருதா சலநினை வாழ்த்திடற
வாஞ்சித்த வண்ண முதலாப் புகல்கவி மாலைகொண்டு
வாஞ்சித்த வண்ணண் ணிடுமா றருணின் மனமுவந்தே. 21

மனங்கண்ட குற்றம் புரிந்தானை யுந்தயை வாய்ந்துயர்க
மனங்கண் டரிக்கும் பரிகொடி யாக்கொண் மருதவெற்பாய்
மனங்கண் டனதமி ழாலுனை நாடொறும் வாழ்த்துமெனை
மனங்கண் டழைக்க வருளாம லேனின்னம் வாதிப்பதே. 22

வாதிக் குமையல ருங்கொண் டவனமன் வாரிசனோ
வாதிக் குமைய லியற்றநொந் தேன்குற வள்ளிகண
வாதிக்கு மையருந் தாழ்மரு தாசல வள்ளலொரு
வாதிக்கு மைய லறப்புரி யாயிரம் வந்தனமே. 23

வந்தனங் காத லடியார் செயர்ச்சுன வள்ளலையு
வந்தனங் காதமை யப்பாடி நாடுமொர் மாண்பமைந்தேம்
வந்தனங் காதர மோரா துலகுடன் மானமிக்க
வந்தனங் காதலிப் பாரின் மதித்துந்தல் வம்பலரே. 24

வம்பல ரும்பர்கொ ணின்னர்ச்சு னப்புகழ் வாழ்த்துமென்னை
வம்பல ரும்ப லனமாந்தர் யாரும் வழுத்திடக்க
வம்பல ரும்ப விடாதே மடிப்பைகொன் மாமகத்து
வம்பல ரும்பழிச் சப்புரி வாய்கொன் மதித்திலனே. 25

மதித்தற் கரிய மருதா சலன்புகழ் வாழ்த்துநர்வான்
மதித்தற் கரிய னடுப்பதத் தெய்துவர் மாறுகொள்புன்
மதித்தற் கரியங் கசநெறிப் பட்டலர் வாய்ந்திவண்டா
மதித்தற் கரிய நிரயங் கதியா வதிபவரே. 26

வதிமா தரங்கம வாவிடி லோர்மாத் திரையிடையு
வதிமா தரங்கணத் தாழ்த்திடு நெஞ்சே மருவமரா
வதிமா தரங்க வனம்புகுஞ் சீர்மரு தாசலன்றாள்
வதிமா தரங்க நிகரான சிற்சுக மன்னிடுமே. 27

மன்னவ ராகந் தசகோடி சற்றென வன்கடத்துண்
மன்னவ ராகந் தகைய மடிந்த மதித்துமிப்பார்
மன்னவ ராகந் தணந்திலை நெஞ்சே மருதவெற்பின்
மன்னவ ராகந் தனைப்போற்று மாறுள வாவுதியே. 28

வாவிக் கணத்து நிலையா தலர்த்தண் வனத்திடைய
வாவிக் கணத்துவண் டொத்தோடு நெஞ்சால்வ
ருந்தியெய்த்தேன்

வாவிக் கணத்துல வுஞ்சீர் மருத வரையவென்முன்
வாவிக் கணத்துட் களிப்பான் முகினேர் மயிலென்னவே. 29

மையத் தியங்கண் டகுவிய ரேச மகேந்திரத்த
மையத் தியங்கண்டர் ம்ன்மகற் கோதிய வாபுவிவான்
மையத்தியங் கண்டந் தாமரு தாசல வள்ளலுள்ள
மையத் தியங்கண் டகவோதி லென்றுயர் வான்மலரே. 30

வானத் தரம்பைய ரெய்தினு முண்மரு ளாமலமை
வானத் தரம்பைய வென்னாது வல்லை வழங்கிடுவாய்
வானத் தரம்பை யரவத் தனந்தலர் வந்துமகிழ்
வானத் தரம்பை யணியார் மருத வரைக்கரசே. 31

வரைக்கடங் காதுடன் புக்கிருப் பாகு மலரயன்கை
வரைக்கடங் காதலித் தெய்த்தே னடைக்கலம் வந்தருளாய்
வரைக்கடங் காதழு வாரோ கணத்தில் வளர்மருத
வரைக்கடங் காதர நீபாரந் தோயகன் மார்பத்தனே. 32

மாரணஞ் சம்பவத் துக்காற் றிடாதற வாடிமங்கை
மாரணஞ் சம்பவத் தாற்பக லெல்லியை மானவரு
மாரணஞ் சம்பவத் துக்கிளைத் தேன்மரு தாசலமெய்
மாரணஞ் சம்பவ மாக்கும் வினையை மடித்தருளே. 33

மடியாண வத்திர சத்தின்பம் வேட்டு மறலியென்ன
மடியாண வத்திர மாயமின் னாரை மணம்புணர்த்து
மடியாண வத்திரத் துக்குடைந் தேனிம வான்மகளின்
மடியாண வத்திர மார்மரு தாசல மாமணியே. 34

மாமணி வண்ணத் துளவக லாவகன் மார்புடைய
மாமணி வண்ணத்து மான்மரு காமரு தாசலகண்
மாமணி வண்ணத்து ளார்பாவை யாகி ம்தியளிக்கு
மாமணி வண்ணத் துனையேத்திப் போற்ற வரமருளே. 35

வரப்பிர சாதல மட்டுங் குளிர வயக்கிடுது
வரப்பிர சாதர வாவி யருண்மரு தாசலன்றன்
வரப்பிர சாதம் படைத்தமெய்த் தொண்டர்கண் மைந்தரென
வரப்பிர சாத மயில்வார்க்கு மெய்தலர் வாய்மையிதே. 36

வாய்மையற் றங்கத் தினுக்கின்பிற் றுன்பம் வழங்குநர்கண்
வாய்மையற் றங்கத் திகைப்பீரிப் புன்மதி மாற்றியங்கா
வாய்மையற் றங்கத் திரிமரு தேய்மின்முன் மாமகத்தில்
வாய்மையற் றங்கத் திடவூர்ந்த காதை மனத்தமைத்தே. 37

மனக்குரங் கோட்ட மிகுத்தைம் புலத்தின் மருவுபுக
மனக்குரங் கோட்டகு நீர்போன் றுலகின் மயக்கிலதன்
மனக்குரங் கோட்ட மதியேன்பெற் றுய்ய வழங்கியென்று
மனக்குரங் கோட்டத் தணிமரு தாசல மாணிக்கமே. 38

மாணிக்க வாசகந் தேறத்தந் தொப்பின் மதுரமலி
மாணிக்க வாசகர் போற்றநின் றாற்கு மறைகொள்பிர
மாணிக்க வாசகஞ் சொற்றான் மருத வரையடையின்
மாணிக்க வாச கணையோடு மென்முனி மத்தையொத்தே. 39

மத்தம் புயங்க மணிவார் நுதற்கண்ணின் மாய்ந்தவன்கா
மத்தம் புயங்கச் செயத்தளர்ந் தேன்வள்ளி மான்புணர்சே
மத்தம் புயங்களி லென்பாட லேற்றெனை வாட்டுசர
மத்தம் புயங்களிற் சேர்ப்பாய் மருத மலைக்கரசே. 40

மலையவ சந்தத் துலாவரும் வேடன் மலர்க்கணையான்
மலையவ சந்தத் துறவா ருணர்வரு மாமருத
மலையவ சந்தத் துணைப்போற்று மேன்மை
வழங்கியென்று
மலையவ சந்தத்து வங்கழன் றின்புற வைத்தருளே. 41

வைத்த வுடம்பிடிக் கையான் மருத வரையைநெஞ்சுள்
வைத்த வுடம்பிடித் தேவறி யார்க்கு மனையிடைக்கு
வைத்த வுடம்பிடி நல்கா ருயிரை நமன்கொடுந
வைத்த வுடம்பிடி காலத்தி லென்னை வயக்குவரே. 42

வயப்பட் டரைக்கண நில்லாம லோடுபு மங்கையர
வயப்பட் டரைக்கண வாய்ச்சிற் சுகங்கொள் வகையறியா
வயப்பட் டரைக்கண மாநினைத் தேமரு தாசலன
வயப்பட் டரைக்கணஞ் சேர்ந்தாடிப் பாடி மகிழ்மனமே. 43

மகிழந் துணரணி வேடன் கிருபை வழங்குவதே
மகிழந் துணரணி மெய்க்குயிர்க் குத்தம்ப வாய்ப்புவியோ
மகிழந் துணரணித் தண்டலை யர்ச்சுன வள்ளறரன்
மகிழந் துணரணி யார்தன்ன தொப்பில் வடிவமன்றே. 44

வடிவேற் றிகழுங் கரமரு தாசல மாரனொஞ்சும்
வடிவேற் றிகழுங் கரமார் பவள மலைபுரைநின்
வடிவேற் றிகழுங் கரவரை யுங்கவின் மாதர்தம்மை
வடிவேற் றிகழுங் கரங்கொடு மாற்றவ வாவினனே. 45

வாரிக் கரையன் றடும்விழிப் பாலக வந்துபொரும்
வாரிக் கரையன் றடுமாறச் செய்மரு தேசவற்ற
வாரிக் கரையன் றடுமிட யானெதிர் வந்துகையால்
வாரிக் கரையன் றடுத்தோது மாற்றம் வளம்படவே. 46

வளக்கடத் தந்தினைக் காவல்செய் வாடன் வனமுலைப
வளக்கடத் தந்திட வேட்டுளத் தன்பின் மலைநிகர்க
வளக்கடத் தந்தி முகற்போற் றருச்சுன வள்ளன்மெய்து
வளக்கடத் தந்திய மேயாதுன் பாத மனையருளே. 47

மனைமா தரங்கத் தினைவா னிழலினை மானவகன்
மனைமா தரங்கத் திருவைத் துணையா மதித்தனெஞ்சே
மனைமா தரங்கத் தினில்வாழ் தடமரு தத்தளியின்
மனைமா தரங்கத் திருத்தா டுணையுன் மலங்கெடவே. 48

மலங்கப் புரிமை யமைத்தேயெண் ணற்றசென் மங்கடந்து
மலங்கப் புரிந்தெனை யோர்மாத் திரையும் வழாப்பிணிப்பார்
மலங்கப் புரியட்ட கங்கெடுத் துன்றாண் மருவவைப்பாய்
மலங்கப் புரிமைத் தடமரு தாசல வானவனே. 49

வான வரம்பன் றகச்செய் பழநி மலைக்குகநீள்
வான வரம்பன் றதினீ டருச்சுன மால்வரையில்
வான வரம்பன் றளியினிற் போற்றென்முன் வந்திலகாய்
வான வரம்பன் றழித்தான் வடிவ மயிலிவர்ந்தே. 50

மயிலை மகத்து வருமையை யூர்மரு தக்கிரியாய்
மயிலை மகத்துவப் பாவை யெழச்செய் மறையவகான்
மயிலை மகத்து வயமார்பில் வேய்ந்தருள் வள்ளலெற்றூ
மயிலை மகத்துவஞ் செய்யா தருடுணை மற்றிலனே. 51

மற்றில்லை யின்றுணை யென்றே மதித்து மருண்டவமே
மற்றில்லை யின்றுணை வார்சீர்ப் பினுமவர் வாழ்க்கையல
மற்றில்லை யின்றுணை தேர்நாட கர்க்கு வகுத்தசொல்லாய்
மற்றில்லை யின்றுணை தீர்மரு தாசல வல்லவனே. 52

வல்லாள மன்னன் சிகரியி னுங்குதி மாதவனை
வல்லாள மன்னன் றெதிர்ந்தாய் முருகநா மம்வழுத்தும்
வல்லாள மன்னன் கரமீந் தனைமரு தாசலந்தோய்
வல்லாள மன்னன் படியேற் கருள வருவதென்றே. 53

வருமந் தணந்தடி யேற்குமுன் றான வரொடுபண்ண
வருமந் தணந்தரத் தோன்றமு தத்தினு மாண்டுளங்க

வருமந் தணந்தந் தருள்செய்ய வேண்டும் வனசமிசை
வருமந் தணந்தவிர் வாவித் தடமரு தாசலனே. 54

தாசத் துவம்பொலிந் துன்மெய்த் திருப்புகழ் சாற்றிடச்ச
தாசத் துவம்பொருந் தக்கணி யாய்மரு தாசலசித்
தாசத் துவம்பொழி யாநீப கூதளத் தாரமெய்க்கந்
தாசத் துமவம்பொளிர் கொங்கைப் பிடிவள்ளித்
தாரத்தனே. 55

தாரகன் மாரண மெய்தச்செய் சத்தி தயங்குவெட்சித்
தாரகன் மாரண வீரப் புயமரு தாசலவு
தாரகன் மாரண வேடக் கொடிசுரர் தம்பிடியாந்
தாரகன் மாரண நெஞ்சுடன் மாய்த்தெனைத்
தாங்கிக்கொள்ளே. 56

தாங்கற் கரிய துயர்கோடி நல்கித் தரணிவிண்ணந்
தாங்கற் கரிய மனத்தினொந் தேன்மரு தாசலநீ
தாங்கற் கரியவ னன்னக் கொடியன்முற் சாற்றமரர்
தாங்கற் கரியமெஞ் ஞானோப தேசத்தைத் தந்தெனையே. 57

தந்தத் தனத்தன வென்றுன் றிருப்புகழ் சாற்றுபுவி
தந்தத் தனத்தரு ளோமொழி வேட்குந் தரத்தனிவி
தந்தத் தனத்தமெய் தப்பார்க்கு நீர்மை தகுதிகொல்சூ
தந்தத் தனத்தமை வேலையிற் போழ்மரு தாசலனே. 58

தாக்கா திருக்க வியன்முடி யாய்கவி தப்பினர்ச்ச
தாக்கா திருக்கவி டாதரிந் தோனகஞ் சஞ்சலிக்கத்
தாக்கா திருக்கவிக் கிள்ளைகொ டோண்மரு தாசலத்தோய்
தாக்கா திருக்கவி ஞானத்தை நின்பதஞ் சாரச்செய்தே. 59

சாரத் திருப்புகழ் பல்லா யிரநின் றடம்புயத்தா
சாரத் திறப்புற வோதிடு மிச்சை தழைப்பனிவி
சாரத் திருப்புறழ் வாழ்க்கையுள் வாடிய சாலுமுண்மை
சாரத் திருப்புகண் டாய்மரு தேச தயைசெய்தின்றே. 60

தயங்க மலத்தியங் கூடலிற் கூம்புபு சாம்புமென்னி
தயங்க மலத்தி யலர்ப்பாணம் பாயத் தளர்ந்ததென்று
தயங்க மலத்தியங் கற்குன் றெரிசனந் தந்தருளாய்
தயங்க மலத்தி யனவாவி யர்ச்சுன சைலத்தனே. 61

சயிலங் கமலை யெனக்கான்றன் மாந்துதுத் தத்தவரிச்
சயிலங் கமலை மடவா ருறவு தணந்திசையிற்

சயிலங் கமலை கமழ்மரு தாசலஞ் சார்ந்தருள்வாஞ்
சயிலங் கமலை வறநின் றிருப்புகழ் சாற்றவையே. 62

சாற்றுந் தமிழ்க்கவி ரைக்கலை வாரைத் தணந்துளன்பிற்
சாற்றுந் தமிழ்க்கவி மெய்யடி யாரிடை சார்த்தணியார்
சாற்றுந் தமிழ்க்கவி னோக்கியின் பெய்திடத் தந்தருள்வீர்
சாற்றுந் தமிழ்க்கவி தண்டலை யார்மரு தாசலரே. 63

தாக்கணங் காற்ற வருளா மையினிச் சகத்தினிடை
தாக்கணங் காற்றளர் வுற்றேன் குககதிர் தாங்குசவி
தாக்கணங் காற்றளிக் கும்பொழி லார்மரு தாசலந்தோய்
தாக்கணங் காற்ற லருளித் திதிசெய் ததியுகந்தே. 64

ததித்தித் திட்டதென் றுண்டான் புகழ்மரு தாசலகந்
ததித்தித் திட்ட மளித்தரு ளாலெனைத் தாங்கியிது
ததித்தித் திட்ட ருடன்கூட்டி யாண்மெய்த் தகையருளு
ததித்தித் திட்ட ருறவினிச் சற்றுஞ் சகிக்கிலனே. 65

சகித்தற் கரிய துயர்கோடி கொண்டு தவநெறிபி
சகித்தற் கரிய வழிப்பட் டுழன்றேன் றவறனைத்துஞ்
சகித்தற் கரியவ னொத்தியல் பேறரு டந்தியைவ
சகித்தற் கரிய குறமாதைத் தோய்மரு தாசலனே. 66

தாசல சத்த விருங்கட லொத்தெதிர் தானவர
தாசல சத்த விருகமொப் பேனுமெய் தங்குமரு
தாசல சத்த விருகண்ணி னிற்றரி சித்தனன்கந்
தாசல சத்தி விரும்பிர மன்விதி தானறவே. 67

தான வரத வடிவேற் கரவிசா காகுககந்
தான வரத வடிவா ரெழின்மரு தாசலவந்
தான வரத வடித்தமி ழாலுனைச் சாற்றமலைத்
தான வரத வடியேற் கருணின் சரண்சரணே. 68

சரணம் பரவியன் மாமுக டார்மரு தாசலவா
சரணம் பரவியன் மாமிச பிண்டந் தணந்துநின்பொற்
சரணம் பரவியன் மாதவ மேனிலை தாங்கிடுதா
சரணம் பரவியன் மாட்சிப் பெருவெளி தங்கவையே. 69

தங்கத் திருப்பது மைக்கிணை மாதர்ச் சதமெனம
தங்கத் திருப்பது போலுநெஞ் சீர்மெய்த் தகையினர்மூர்த்

தங்கத் திருப்பது போவது மெய்யெனச் சாற்றலுன்னித்
தங்கத் திருப்பது மந்தாவென் றர்ச்சுனற் றாழுமினே 70

தாழ்த்துங் கடியமா யாமல யாக்கைத் தளையமைந்து
தாழ்ந்துங் கடிபட டிருத்தனன் றன்றுநுந் தம்மனத்தே
தாழ்த்துங்க பத்தி கொடுமரு தாசலஞ் சார்ந்திறைக்குள்
தாழ்ந்துங் கடிப்பிய மெய்ச்சுக மென்று ததைகுவிரே.71

தத்தைக் களிக்குந்து மாரன் றுறையிடை தாழ்பிரமா
தத்தைக் களிக்குந் தகையாக்க வேண்டுவிர் சந்தவிசைத்
தத்தைக் களிக்கும் புயத்தான்மெய் யன்பருட் சாருமினோ
தத்தைக் களிக்குந் தினிமைத் தடப்பூ தவக்கலுற்றே. 72

தவத்திருக் கோவறச் செய்மாய வாழ்வுட் சலித்துமனந்
தவத்திருக் கோத மெனநீர் வடித்துத் தயங்குவிர்மெய்த்
தவத்திருக் கோசிக னன்னார் புகழ்மரு தாசலனு
தவத்திருக் கோயில்கொண் டுள்ளான றிந்தைதிற்
சாருமினே. 73

சாரத் தியம்ப ரடளவென் றுட்படர் தானைசுற்றச்
சாரத் தியம்பவ னன்செலுத் தச்சென்று சற்றுமுள்ளஞ்
சாரத் தியம்படி வந்தொலைத் தாண்மரு தாசலமெய்ச்
சாரத் தியம்பன் சயந்தனுக் கோதுந் தகைமையொத்தே.74

தகைக்கும் படிற்று மலத்தான் மிகவுட் டயங்குவன்சீ
தகைக்கும் படியில் புனற்சுனை மாமரு தாசலகந்
தகைக்கும் படிசெய் பிழையையெண் ணாதுநின் றாடொழுமே
தகைக்கும் படியருட் சேர்ந்துய்யு மாறு தயவுசெய்யே.75

தயவாழி யென்று மருதா சலத்துத் தவருளத்து
தயவாழி யென்று நிகர்மேனி கொண்டு தயங்குமென்னி
தயவாழி யென்று தினநின் புகழ்மிகச் சாற்றுவன்க
தயவாழி யென்று திருவருட் பேறு தருகுவையே. 76

தருக்கவி யாக ரணமாதி கற்றுச் சமர்செய்வர்தீர்த்
தருக்கவி யாக ரணமீ குநரைத் தவிர்த்துவிண்ணத்
தருக்கவி யாக ரணம்புரி சீர்மரு தாசலவெந்
தருக்கவி யாக ரணப்புனி தத்தவர்ச் சாரவையே. 77

சாரங்க மங்கையர் தோய்மரு தாசல சற்குருவே
சாரங்க மங்கை யணையாமுன் மன்றற் சரோசதவி
சாரங்க மங்கை யமைவார் செவியிடஞ் சாற்றுமறைச்
சாரங்க மங்கை யருளிய கற்றென்புன் சம்பவமே. 78

சம்பந்தத் தெய்வ வினைத்தடிப் பைத்திர சாடையர்தஞ்
சம்பந்தத் தெய்வசந் தன்கோற் கிலக்கைமெய் தானெனவே
சம்பந்தத் தெய்வமைந் தெய்த்தேன் மருதா சலக்கொழுந்தே
சம்பந்தத் தெய்வமென் றெண்ணிலர்க் கின்பமுன்
றந்தனையே. 79

தந்திக் கனதனத் தங்கனை யார்நலந் தன்னையுள்வி
தந்திக் கனத னவைநெறிச் சென்றிச் சகத்திடைநி
தந்திக் கனதனந் தோடாம னின்புகழ் சாற்றும்வண்ணந்
தந்திக் கனதனம் போருகஞ் சேர்மரு தாசலனே. 80

சலசத்த மாத ரருளுமில் லேன்பார் தனைவிடுநிச்
சலசத்த மாதவ மேலோர் நிலைமையுந் தாங்கிலன்றண்
சலசத்த மாதரங் கம்பொலி வாவித் தனிமருதா
சலசத்த மாதர் மருவுந் தடந்தோட் சரவணனே. 81

சரதத் திருப்புனி தக்கிள்ளை யன்பினிற் சாற்றருட்புஞ்
சரதத் திருப்புக ழோதி யருச்சுனஞ் சார்ந்துதைப்பூ
சரதத் திருப்புறு நின்சே வடிதரி சித்தலில்வஞ்
சரதத் திருப்பு மனத்தேனெவ் வாறரு டாங்குவதே. 82

தாங்கற்ற கைய ரியம்பமெய் யென்று சகநடையில்
தாங்கற்ற கைய மையுமனத் தான்மிகத் தட்டழிந்தேன்
தாங்கற்ற கையரு ளாழி யருச்சுன சைலவெனைத்
தாங்கற்ற கைய ரிவைபெற முன்றழைப் பித்ததொத்தே. 83

தழையம யங்கை யமணர் குலமறத் தண்டுவரி
தழையம யங்கை பெருமானி தன்னி தயத்துவகை
தழையம யங்கை முகன்றன் சமயந்தா பித்தருளுந்
தழையம யங்கை யமைபொழி லர்ச்சுன சையத்தனே. 84

சையத் தனந்தந் திடைதாங் கரிதெனுந் தையலரி
சையத் தனந்தந் திடைதரு வேன்பொன் சயிலவில்லி
சையத் தனந்தந் திடையனி லென்றமை தன்மருத
சையத் தனந்தந் திடையோர் வரியமெய்த் தத்துவனே. 85

தத்தைத் திருத்தடந் தோண்மரு தாசல சாமிநின்ப
தத்தைத் திருத்தவன் பாலென் மனமுட் டவாதுகரு
தத்தைத் திருத்த நினையாய்க தாயுதந் தாங்குநன்செய்
தத்தைத் திருத்த னையர்செய் விபத்துடன் றாண்டிடவே. 86

தாண்டவ நாதற் கருணைச் சிகரிதன் னின்றுகப்பால்
தாண்டவ னாதற் கரும்பே றருடலிற் றாரணிமால்
தாண்டவ நாதற் கருளின் மருதா சலத்தவிர்மார்த்
தாண்டவ னாதற் கருளாழி நாமந் தயங்கிடுமே. 87

தயங்குன் றிருவுரு வண்ட முகட்டைத் தடவுமரு
தயங்குன் றிடத்தி லமைவது கண்டுந் தரணியிலி
தயங்குன் றிவஞ்ச மனமாயை யின்வன் றலையிடைசந்
தயங்குன் றிடார்கெடு வார்பாவர் தோய்நர
சன்மமென்னே. 88

சனன விலங்கை யறுமரு தேசநிற் சார்ந்திடவஞ்
சனன விலங்கை யமரா மலகத் தகையில்விரோ
சனன விலங்கைய தாவந்துன் வாய்கொடஞ் சன்மொழிதுர்ச்
சனன விலங்கை யநுசற் களித்தவன் றன்மருகே. 89

தனம்புத் திரமித் திரரான மாயையிற் றாழ்ந்திடவந்
தனம்புத் திரமித் திடக்காட்டு மாதரின் சார்வருண்ம
தனம்புத் திரமித் தினையாம லர்ச்சுனச் சைலநிற்சார்ந்
தனம்புத் திரமித் திரத்தகை பெற்றிடத் தந்தருளே. 90

தந்தனங் காட்டி மயக்கிடு வார்க்குக்கை தாங்குதனந்
தந்தனங் காட்டி லுழல்வீரப் பொன்சற் சனர்க்கிடிலோர்
தந்தனங் காட்டில் வரக்கூ விடுமரு தாசலனந்
தந்தனங் காட்டில் பதமீந் தொழிப்பன் சரமத்தையே. 91

சரவணங் கோவி லெனவளர்ந் தும்பரைத் தானவவஞ்
சரவணங் கோவித் திடும்பணி நீத்தவர் தந்தவக்குஞ்
சரவணங் கோவியச் சூசுகந் தோய்மரு தாசலவெஞ்
சரவணங் கோவி யருளாய்நின் றாட்டுணைத் தாவளமே. 92

தாவிக் குணமனைத் துங்கைவிட் டேங்கென் றனதுநெஞ்சே
தாவிக் குணமனை யொத்துறும் போதிற் சகத்துறவார்
தாவிக் குணமனை பாற்புகு மர்ச்சுனன் றாட்டுணையாந்
தாவிக் குணமனை நாடாய்நந் துன்பறச் சாம்பவின்றே. 93

சாம்பவி யந்திரி பால வெனத்தினஞ் சாருமிடர்
சாம்பவி யந்தரி யாதியர் தாழ்மரு தாசலனே
சாம்பவி யந்தரி யாத்துயர்ப் போதுமுற் சார்ந்தருளாற்
சாம்பவி யந்தரி நெல்லுத வாரிற் றணந்திடலே. 94

தணப்பத் திருவுளஞ் செய்யேலுன் னாணைநின் றாட்டுணைமந்
தணப்பத்தி நல்கிமெய்த் தொண்டர்கொ ளின்பந் தனையளியாய்
தணப்பத்தி மாமுகன் றானத்திற் றோன்றுந் தடம்பொலிப
தணப்பத்தி மாட மருதா சலப்பிர தாபத்தனே. 95

தாப தரிச்சித்த வாதா மருதா சலசகத்தோர்
தாப தரிச்சித் தசதுறை யோயெனச் சாற்றிடச்ச
தாப தரிச்சித்த மெய்யா தசலந் தயங்குபிர
தாப தரிச்சித் தமைந்திட நல்கிடுன் றாட்டுணையே. 96

தாளத் தனத்தத்தை நேர்மொழி யார்நசை தாங்குபுபா
தாளத் தனத்தத்தை யேய்ந்தழி வீர்மலை தந்தருளாத்
தாளத் தனத்தத்தை போற்று மருதா சலன்கமலத்
தாளத் தனத்தத்தை யெய்திடி லின்பந் தருங்கணத்தே. 97

தருக்கந் தரங்கப் பிணியொப்பன் றீது தவவெணிலந்
தருக்கந் தரங்க மறியாத வேதற் றளைப்படுத்தத்
தருக்கந் தரங்கந் தகப்போதித் தான்பிர சாதங்கொள்ளீர்
தருக்கந் தரங்கஞ் சுமக்கு மருச்சுனச் சைலமுற்றே. 98

சயிலத் தலைவியர் பாலின் புளதெனத் தாங்கொடுந
சயிலத் தலைவியர்த் தத்தலை வீர்வினை சாருடற்ற
சயிலத் தலைவியர்த். தொப்பின்மெய்ச் சீலந் தழைமருத
சயிலத் தலைவிய னாடகத் தாளுட் டழுவுமினே. 99

தழுக்குப் பவக்கட லாரிடங் கர்க்கிணை தையலரி
தழுக்குப் பவளமொப் பென்றுழ னெஞ்சே தருமலர
தழுக்குப் பவணுர மார்மலர்க் காமரு தாசலன்றாள்
தழுக்குப் பவவினை வேரறு மெய்ச்சுகஞ் சாருமன்றே. 100

சாரத் திருத்தமிழ் கொண்டுனைப் போற்றெனைத் தாங்குசும்வி
சாரத் திருத்த நினையேல் கிருபை தழைத்துனடி
சாரத் திருத்தக் கருதுன் சரணஞ் சரணமொப்பில்
சாரத் திருத்த மருதா சலது சவாரணனே. 101

மருதமலை யமகஅந்தாதி முற்றிற்று

உ

# கந்தரநுபூதி

## அருணகிரிநாதர்

### காப்பு

நெஞ்சக் கனகல்லு நெகிழ்ந் துருகத்
தஞ்சத் தருள்சண் முகனுக் கியல்சேர்
செஞ்சொற் புனைமாலை சிறந் திடவே
பஞ்சக் கரவானை பதம் பணிவாம்.

### நூல்

ஆடும் பரிவே லணிசே வலெனப்
பாடும் பணியே பணியா வருள்வாய்
தேடுங் கயமா முகனைச் செருவிற்
சாடுந் தனியானை சகோதரனே. 1

உல்லாச நிராகுல யோக விதச்
சல்லாப விநோதனு நீ யலையோ
எல்லாமற என்னை யிழந்த நலஞ்
சொல்லாய் முருகா சுரபூ பதியே. 2

வானோ புனல்பார் கனல்மா ருதமோ
ஞானோ தயமோ நவில்நான் மறையோ
யானோ மனமோ எனையாண் டவிடந்
தானோ பொருளா வதுசண் முகனே. 3

வளைபட் டகைம்மா தொடுமக் களெனுந்
தளைபட் டழியத் தகுமோ தகுமோ
கிளைபட் டெழுசூ ருரமுங் கிரியுந்
தொளைபட் டுருவத் தொடுவே லவனே. 4

மகமாயை களைந்திட வல்ல பிரான்
முகமாறு மொழிந்து மொழிந் திலனே
அகமாடை மடந்தை யரென் றயருஞ்
சகமா யையுள்நின் றுதயங் குவதே. 5

திணியா னமனோ சிலைமீ துனதாள்
அணியா ரரவிந் தமரும் புமதோ
பணியா வெனவள்ளி பதம் பணியுந்
தணியா வதிமோ கதயா பரனே. 6

கெடுவாய் மனனே கதிகேள் கரவா
திடுவாய் வடிவே லிறைதாள் நினைவாய்
சுடுவாய் நெடுவே தனைதூள் படவே
விடுவாய் விடுவாய் வினையா வையுமே. 7

அமரும் பதிகே ளகமா மெனுமிப்
பிமரங் கெடமெய்ப் பொருள் பேசியவா
குமரன் கிரிராச குமாரி மகன்
சமரம் பொருதா னவநா சகனே. 8

மட்டூர்குழல் மங்கையர் மையல் வலைப்
பட்டூசல் படும் பரிசென் றொழிவேன்
தட்டூ டறவேல் சயிலத் தெறியும்
நிட்டூர நிராகுல நிர்ப் பயனே. 9

கார்மா மிசைகா லன்வரிற் கலபத்
தேர்மா மிசைவந் தெதிரப் படுவாய்
தார்மார்ப வலாரி தலாரி யெனுஞ்
சூர்மா மடியத் தொடுவே லவனே. 10

கூகா வெனவென் கிளைகூ டியழப்
போகா வகைமெய்ப் பொருள்பே சியவா
நாகா சல வேலவ நாலுகவித்
தியாகா சுரலோக சிகா மணியே. 11

செம்மான் மகளைத் திருடுந் திருடன்
பெம்மான் முருகன் பிறவா னிறவான்
சும்மா இருசொல் லறவென் றலுமே
அம்மா பொருளொன் றுமறிந் திலனே. 12

முருகன் தனிவேல் முனிநங் குருவென்
றருள்கொண் டறியா ரறியுந் தரமோ
உருவன் றருவன் றுளதன் றிலதன்
றிருளன் றொளியன் றெனநின் றதுவே. 13

கைவாய் கதிர்வேல் முருகன் கழல்பெற்
றுய்வாய் மனனே கொழிவா யொழிவாய்
மெய்வாய் விழி நாசியொடுஞ் செவியாம்
ஐவாய் வழிசெல் லுமவா வினையே. 14

முருகன் குமரன் குகனென்று மொழிந்
துருகுஞ் செயல்தந் துணர்வென் றருள்வாய்
பொருபுங் கவரும் புவியும் பரவுங்
குருபுங் கவஎண் குணபஞ் சரனே. 15

பேராசை யெனும் பிணியிற் பிணிபட்
டோரா வினையே னுழலத் தகுமோ
வீரா முதுசூர் படவே லெறியுஞ்
சூரா சுரலோ கதுரந் தரனே. 16

யாமோ தியகல் வியுமெம் மறிவுந்
தாமே பெறவே லவர்தந் ததனாற்
பூமேல் மயல்போ யறமெய்ப் புணர்வீர்
நாமேல் நடவீர் நடவீ ரினியே. 17

உதியா மரியா வுணரா மறவா
விதிமா லறியா விமலன் புதல்வா
அதிகா வநகா வபயா வமரா
பதிகா வலசூர பயங் கரனே. 18

வடிவுந் தனமும் மனமுங் குணமுங்
குடியுங் குலமுங் குடிபோ கியவா
அடியந் தமிலா அயில்வே லரசே
மிடியென்றொரு பாவி வெளிப் படினே. 19

அரிதா கியமெய்ப் பொருளுக் கடியேன்
உரிதா வுபதேச முணர்த் தியவா
விரிதா ரணவிக் ரமவே ளிமையோர்
புரிதா ரகநா கபுரந் தரனே. 20

கருதா மறவா நெறிகாண எனக்
கிருதாள் வனசந் தரஎன் றிசைவாய்
வரதா முருகா மயில்வா கனனே
விரதா சுரசூர விபாட ணனே. 21

காளைக் குமரே சனெனக் கருதித்
தாளைப் பணியத் தவமெய் தியவா
பாளைக் குழல் வள்ளி பதம்பணியும்
வேளைச் சுரபூ பதி மேருவையே. 22

அடியைக் குறியா தறியா மையினால்
முடியக் கெடவோ முறையோ முறையோ
வடிவிக் ரமவேல் மகிபா குறமின்
கொடியைப் புணருங் குணபூ தரனே. 23

கூர்வேல் விழி மங்கையர் கொங்கையிலே
சேர்வே னருள் சேரவு மெண்ணுமதோ
சூர்வே ரொடு குன்று தொளைத்தநெடும்
போர்வே லபுரந் தரபூ பதியே. 24

மெய்யே யெனவெவ் வினைவாழ் வையுகந்
தையோ அடியே னலையத் தகுமோ
கையோ அயிலோ கழலோ முழுதுஞ்
செய்யோய் மயிலே றியசே வகனே 25

ஆதார மிலே னருளைப் பெறவே
நீதா னொருசற்று நினைந் திலையே
வேதாகம ஞான விநோத மனோ
தீதர் சுரலோக சிகா-மணியே. 26

மின்னே நிகர்வாழ் வைவிரும் பியயான்
என்னே விதியின் பயனிங் கிதுவோ
பொன்னே மணியே பொருளே யருளே
மன்னே மயிலே றியவா னவனே. 27

ஆனா அமுதே அயில்வே லரசே
ஞானா கரனே நவிலத் தகுமோ
யானாகிய வென்னை விழுங்கி வெறுந்
தானாய் நிலைநின் றதுதற் பரமே. 28

இல்லே யெனுமா யையி லிட்டனைநீ
பொல்லே னறியாமை பொறுத் திலையே
மல்லே புரி பன்னிரு வாகுவிலென்
சொல்லே புனையுஞ் சுடர்வே லவனே. 29

செவ்வா னுருவிற் றிகழ்வே லவனன்
றொவ்வா ததென வுணர்வித் ததுதான்
அவ்வா றறிவா ரறிகின் றதலால்
எவ்வா றொருவர்க் கிசைவிப் பதுவே. 30

பாழ்வாழ் வெனுமிப் படுமா யையிலே
வீழ்வா யென என்னை விதித்தனையே
தாழ்வா னவைசெய் தனதா முளவோ
வாழ்வா யினிநீ மயில்வா கனனே. 31

கலையே பதறிக் கதறித் தலையூ
டலையே படுமா றதுவாய் விடவோ
கொலையே புரிவேடர் குலப் பிடிதோய்
மலையே மலை கூறிடு வாகையனே. 32

சிந்தா குலவில் லொடுசெல் வமெனும்
விந்தா டவியென்று விடப் பெறுவேன்
மந்தா கினிதந்த வரோ தயனே
கந்தா முருகா கருணா கரனே. 33

சிங்கார மடந்தையர் தீநெறி போய்
மங்காம லெனக்கு வரந் தருவாய
சங்க்ராம சிகா வலசண் முகனே
தங்கா நதி பால க்ருபாகரனே. 34

விதிகாணு முடம்பை விடா வினையேன்
கதிகாண மலர்க்கழ லென் றருள்வாய்
மதிவா ணுதல்வள் ளியையல் லதுபின்
துதியா விரதா சுரபூ பதியே. 35

நாதா குமரா நமவென் றரனார்
ஓதா யெனவோ தியதெப் பொருள்தான்
வேதா முதல் விண்ணவர் சூடுமலர்ப்
பாதா குறமின் பதசே கரனே. 36

கிரிவாய் விடுவிக் ரம வேளிமையோர்
பரிவா ரமெனும் பதமே வலையே
புரிவாய் மனனே பொறையா மறிவால்
அரிவா யடியோடு மகந் தையையே. 37

ஆதாளியை யொன் றறியே னையறத்
தீதாளியை யாண் டதுசெப் புமதோ
கூதாள கிராத குலிக் கிறைவா
வேதாள கணம் புகழ்வே லவனே. 38

மாவேழ் சனனங் கெடமா யைவிடா
மூவேடணை யென்று முடிந் திடுமோ
கோவே குறமின் கொடிதோள் புணருந்
தேவே சிவ சங்கர தேசிகனே. 39

வினையோட விடுங் கதிர்வேல் மறவேன்
மனையோடு தியங்கி மயங் கிடவோ
சுனையோ டருவித் துறையோடு பசுந்
தினையோ டிதணோடு திரிந் தவனே. 40

சாகா தெனையே சரணங் களிலே
காகா நமனார் கலகஞ் செயுநாள்
வாகா முருகா மயில்வா கனனே
யோகா சிவஞா னொபதே சிகனே. 41

குறியைக் குறியா துகுறித் தறியும்
நெறியைத் தனிவேலை நிகழ்த் திடலுஞ்
செறிவற் றுலகோ டுரைசிந் தையுமற்
றறிவற் றறியா மையுமற் றதுவே. 42

தூசா மணியுந் துகிலும் புனைவாள்
நேசா முருகா நினதன் பருளால்
ஆசா நிகளந் துகளா யினபின்
பேசா அநுபூதி பிறந் ததுவே. 43

சாடுந் தனிவேல் முருகன் சரணஞ்
சூடும் படிதந் ததுசொல லுமதோ
வீடுஞ் சுரர்மா முடிவே தமும்வெங்
காடும் புனமுங் கமழுங் கழலே. 44

கரவா கியகல்வி யுளார் கடைசென்
றிரவா வகைமெய்ப் பொருளீ குவையோ
குரவா குமரா குலிசா யுதகுஞ்
சரவா சிவயோக தயா பரனே. 45

எந்தா யுமெனக் கருள்தந் தையுநீ
சிந்தா குலமா னவைதீர்த் தெனையாள்
கந்தா கதிர்வே லவனே யுமையாள்
மைந்தா குமரா மறைநா யகனே. 46

ஆறா றையுநீத் ததன்மேல் நிலையைப்
பேறா வடியேன் பெறுமா றுளதோ
சீறா வருசூர் சிதைவித் திமையோர்
கூறா வுலகங் குளிர்வித் தவனே. 47

அறிவொன் றறநின் றறிவா ரறிவிற்
பிறிவொன் றறநின் றபிரா னலையோ
செறிவொன் றறவந் திருளே சிதைய
வெறிவென் றவரோ டுறும்வே லவனே. 48

தன்னந் தனிநின் றதுதா னறிய
இன்னம் மொருவர்க் கிசைவிப் பதுவோ
மின்னுங் கதிர்வேல் விகிர்தா நினைவார்
கின்னங் களையும் க்ருபைசூழ் சுடரே. 49

மதிகெட் டறவா டிமயங் கியறக்
கதிகெட் டவமே கெடவோ கடவேன்
நதிபுத் திர ஞான சுகா திபவத்
திதிபுத் திரர்வீ றடுசே வகனே. 50

உருவா யருவா யுளதா யிலதாய்
மருவாய் மலராய் மணியா யொளியாய்க்
கருவா யுயிராய்க் கதியாய் விதியாய்க்
குருவாய் வருவா யருள்வாய் குகனே. 51

உ

# கந்தரலங்காரம்

## அருணகிரிநாதர்

### காப்பு

அடலரு ணைத்திருக் கோபுரத் தேயந்த வாயிலுக்கு
வடவரு கிற்சென்று கண்டுகொண் டேன்வரு
வார்தலையில்
தடப டெனப்படு குட்டுடன் சர்க்கரை மொக்கியகைக்
கடதட கும்பக் களிற்றுக் கிளைய களிற்றினையே.

### நூல்

பேற்றைத் தவஞ்சற்று மில்லாத வென்னைப்ர
பஞ்சமென்னுஞ்
சேற்றைக் கழிய வழிவிட்ட வா!செஞ் சடாடவிமேல்
ஆற்றைப் பணியை யிதழியைத் தும்பையை யம்புலியின்
கீற்றைப் புனைந்த பெருமான் குமாரன் க்ருபாகரனே. 1

அழித்துப் பிறக்கவொட் டாவயில் வேலன்
கவியையன்பால்
எழுத்துப் பிழையறக் கற்கின்றி லீரெரி மூண்டதென்ன
விழித்துப் புகையெழப் பொங்குவெங் கூற்றன்
விடுங்கயிற்றாற்
கழுத்திற் சுருக்கிட் டிழுக்குமன் றோகவி கற்கின்றதே. 2

தேரணி யிட்டுப் புரமெரித் தான்மகன் செங்கையில்வேற்
கூரணி யிட்டணு வாகிக் கிரௌஞ்சங் குலைந்தரக்கர்
நேரணி யிட்டு வளைந்த கடக நெளிந்ததுசூர்ப்
பேரணி கெட்டது தேவேந்தர லோகம் பிழைத்ததுவே. 3

ஓரவொட் டாரொன்றை யுன்னவொட் டார்மல
ரிட்டுனதாள்
சேரவொட் டாரைவர் செய்வதென் யான்சென்று
தேவருய்யச்
சோரநிட் டூரனைச் சூரனைக் காருடல் சோரிகக்கக்
கூரகட் டாரியிட் டோரிமைப் போதினிற் கொன்றவனே.
4

திருந்தப் புவனங்க ளீன்றபொற் பாவை திருமுலைப்பால்
அருந்திச் சரவணப் பூந்தொட்டி லேறி யறுவர்கொங்கை
விரும்பிக் கடலழக் குன்றழச் சூரழ விம்மியழுங்
கருந்தைக் குறிஞ்சிக் கிழவனென் றோதுங் குவலயமே. 5

பெரும்பைம் புனத்தினுட் சிற்றேனல் காக்கின்ற
பேதைகொங்கை
விரும்புங் குமரனை மெய்யன்பி னான்மெல்ல
மெல்லவுள்ள
அரும்புந் தனிப்பர மாநந்தந் தித்தித் தறிந்தவன்றே
கரும்புந் துவர்த்துச்செந் தேனும் புளித்தறக் கைத்ததுவே. 6

சளத்திற் பிணிபட் டசட்டு க்ரியைக்குட் டவிக்குமென்றன்
உளத்திற் ப்ரமத்தைத் தவிர்ப்பா யவுண ருரத்துதிரக்
குளத்திற் குதித்துக் குளித்துக் களித்துக் குடித்துவெற்றிக்
களத்திற் செருக்கிக் கழுதாட வேல்தொட்ட காவலனே. 7

ஒளியில் விளைந்த வுயர்ஞான பூதரத் துச்சியின்மேல்
அளியில் விளைந்ததொ ராநந்தத் தேனை யநாதியிலே
வெளியில் விளைந்த வெறும்பாழைப் பெற்ற
வெறுந்தனியைத்
தெளிய விளம்பிய வா!முக மாறுடைத் தேசிகனே. 8

தேனென்று பாகென் றுவமிக் கொணாமொழித்
தெய்வவள்ளி
கோனன் றெனக்குப தேசித்த தொன்றுண்டு கூறவற்றோ
வானன்று காலன்று தீயன்று நீரன்று மண்ணுமன்று
தானன்று நானன் றசரீரி யன்று சரீரியன்றே. 9

சொல்லுகைக் கில்லையென் றெல்லா மிழந்துசும் மாவிருக்கு
மெல்லையுட் செல்ல எனைவிட்ட வாஇகல் வேலனல்ல
கொல்லியைச் சேர்க்கின்ற சொல்லியைக் கல்வரைக் கொவ்வைச்செவ்வாய்
வல்லியைப் புல்கின்ற மால்வரைத் தோளண்ணல் வல்லபமே. 10

குசைநெகி ழாவெற்றி வேலோ னவுணர் குடர்குழம்பக்
கசையிடு வாசி விசைகொண்ட வாகனப் பீலியின்கொத்
தசைபடு கால்பட் டசைந்தது மேரு அடியிடவெண்
டிசைவரை தூள்பட்ட அத்தூளின் வாரி திடர்பட்டதே. 11

படைபட்ட வேலவன் பால்வந்த வாகைப் பதாகையென்னுந்
தடைபட்ட சேவல் சிறகடிக் கொள்ளச் சலதிகிழிந்
துடைபட்ட தண்ட கடாக முதிர்ந்த துடுபடலம்
இடைபட்ட குன்றமு மாமேரு வெற்பு மிடிபட்டவே. 12

ஒருவரைப் பங்கி லுடையாள் குமார னுடைமணிசேர்
திருவரைக் கிண்கிணி யோசை படத்திடுக் கிட்டரக்கர்
வெருவரத் திக்குச் செவிடுபட் டெட்டுவெற் புங்கனகப்
பருவரைக் குன்று மதிர்ந்தன தேவர் பயங்கெட்டதே. 13

குப்பாச வாழ்க்கையுட் கூத்தாடு மைவரிற் கொட்படைந்த
இப்பாச நெஞ்சனை ஈடேற்று வாயிரு நான்குவெற்பும்
அப்பாதி யாய்விழ மேருங் குலுங்கவிண் ணாருமுய்யச்
சப்பாணி கொட்டிய கையா றிரண்டுடைச் சண்முகனே. 14.

தாவடி யோட்டு மயிலிலுந் தேவர் தலையிலுமென்
பாவடி யேட்டிலும் பட்டதன் றோபடி மாவலிபால்
மூவடி கேட்டன்று மூதண்ட கூட முகடுமுட்டச்
சேவடி நீட்டும் பெருமான் மருகன்றன் சிற்றடியே. 15.

தடுங்கோள் மனத்தை விடுங்கோள் வெகுளியைத் தானமென்றும்
இடுங்கோ ளிருந்த படியிருங் கோளெழு பாருமுய்யக்

கொடுங்கோபச் சூருடன் குன்றந் திறக்கத்
தொளைக்கவைவேல்
விடுங்கோ னருள்வந்து தானே யுமக்கு வெளிப்படுமே.
16.

வேதா கமசித்ர வேலா யுதன்வெட்சி பூத்ததண்டைப்
பாதார விந்த மரணாக அல்லும் பகலுமில்லாச்
சூதான தற்ற வெளிக்கே யொளித்துச்சும் மாவிருக்கப்
போதா யினிமன மேதெரி யாதொரு பூதர்க்குமே. 17

வையிற் கதிர்வடி வேலோனை வாழ்த்தி வறிஞர்க்கென்றும்
நொய்யிற் பிளவள வேனும் பகிர்மின்க ளுங்கட்கிங்ஙன்
வெய்யிற் கொதுங்க வுதவா வுடம்பின் வெறுநிழல்போற்
கையிற் பொருளு முதவாது காணுங் கடைவழிக்கே. 18

சொன்ன கிரௌஞ்ச கிரியூ டுருவத் தொளைத்தவைவேல்
மன்ன கடம்பின் மலர்மாலை மார்பமௌ னத்தையுற்று
நின்னை யுணர்ந்துணர்ந் தெல்லா மொருங்கிய
நிர்க்குணம் பூண்
டென்னை மறந்திருந் தேனிறந் தேவிட்ட திவ்வுடம்பே. 19

கோழிக் கொடிய னடிபணி யாமற் குவலயத்தே
வாழக் கருது மதியிலி காளுங்கள் வல்வினைநோய்
ஊழிற் பெருவலி யுண்ணவொட் டாதுங்க ளத்தமெல்லாம்
ஆழப் புதைத்துவைத் தால்வரு மோநும் மடிப்பிறகே. 20

மரணப்ர மாத நமக்கில்லை யாமென்றும் வாய்த்ததுணை
கிரணக் கலாபியும் வேலுமுண் டேகிண் கிணிமுகுள
சரணப்ர தாப சசிதேவி மங்கல்ய தந்துரக்ஷா
பரணக்கு பாகர ஞானா கரசுர பாஸ்கரனே. 21

மொய்தா ரணிகுழல் வள்ளியை வேட்டவன் முத்தமிழால்
வைதா ரையுமங்கு வாழவைப் போன்வெய்ய
வாரணம்போற்
கைதா னிருப துடையான் தலைபத்துங் கத்தரிக்க
எய்தான் மருகன் உமையாள் பயந்த இலஞ்சியமே. 22

தெய்வத் திருமலைச் செங்கோட்டில் வாழுஞ்
செழுஞ்சுடரே
வைவைத்த வெற்படை வானவ னேமற வேனுனைநான்

ஐவர்க் கிடம்பெறக் காலிரண் டோட்டி யதிலிரண்டு
கைவைத்த வீடு குலையுமுன் னேவந்து காத்தருளே. 23

கின்னங் குறித்தடி யேன்செவி நீயன்று கேட்கச்சொன்ன
குன்னங் குறிச்சி வெளியாக்கி விட்டது கோடுகுழல்
சின்னங் குறிக்கக் குறிஞ்சிக் கிழவர் சிறுமிதனை
முன்னங் குறிச்சியிற் சென்றுகல் யாண முயன்றவனே. 24

தண்டா யுதமுந் திரிசூல மும்விழத் தாக்கியுன்னைத்
திண்டாட வெட்டி விழவிடு வேன்செந்தில் வேலனுக்குத்
தொண்டா கியவென் னவிரோத ஞானச் சுடர்வடிவாள்
கண்டாய டாவந்த காவந்து பார்சற்றென்
கைக்கெட்டவே. 25

நீலச் சிகண்டியி லேறும் பிரானெந்த நேரத்திலுங்
கோலக் குறத்தி யுடன்வரு வான்குரு நாதன்சொன்ன
சீலத்தை மெள்ளத் தெளிந்தறி வார்சிவ யோகிகளே
காலத்தை வென்றிருப் பார்;மரிப் பார்வெறுங்
கர்மிகளே. 26

ஓலையுந் தூதருங் கண்டுதிண் டாட லொழித்தெனக்குக்
காலையு மாலையு முன்னிற்கு மேகந்த வேள்மருங்கிற்
சேலையுங் கட்டிய சீராவுங் கையிற் சிவந்தசெச்சை
மாலையுஞ் சேவற் பதாகையுந் தோகையும் வாகையுமே.
27

வேலே விளங்குகை யான்செய்ய தாளினில் வீழ்ந்திறைஞ்சி
மாலே கொளவிங்ஙன் காண்பதல் லான்மன வாக்குச்செய
லாலே யடைதற் கரிதா யருவுரு வாகியொன்று
போலே யிருக்கும் பொருளையெவ் வாறு புகல்வதுவே.
28

கடத்திற் குறத்தி பிரானரு ளாற்கலங் காதசித்தத்
திடத்திற் புணையென யான்கடந் தேன்சித்ர மாதரல்குற்
படத்திற் கழுத்திற் பழுத்தசெவ் வாயிற் பணையிலுந்தித்
தடத்திற் றனத்திற் கிடக்கும்வெங் காம சமுத்திரமே. 29

பாலென் பதுமொழி பஞ்சென் பதுபதம் பாவையர்கண்
சேலென்ப தாகத் திரிகின்ற நீசெந்தி லோன்றிருக்கை

வேலென் கிலைகொற்ற மயூர மென்கிலை
வெட்சித்தண்டைக்
காலென் கிலைமன மேயெங்ங னேமுத்தி காண்பதுவே.
30

பொக்கக் குடிலிற் புகுதா வகைபுண்ட ரீகத்தினுஞ்
செக்கச் சிவந்த கழல்வீடு தந்தருள் சிந்துவெந்து
கொக்குத் தறிபட் டெறிபட் டுதிரங் குமுகுமெனக்
கக்கக் கிரியுரு வக்கதிர் வேல்தொட்ட காவலனே. 31

கிளைத்துப் புறப்பட்ட சூர்மார் புடன்கிரி யூடுருவத்
தொளைத்துப் புறப்பட்ட வேற்கந்த னேதுறந் தோருளத்தை
வளைத்துப் பிடித்துப் பதைக்கப் பதைக்க வதைக்குங்
கண்ணார்க்
கிளைத்துத் தவிக்கின்ற என்னை யெந்நாள்வந்
திரட்சிப்பையே. 32

முடியாப் பிறவிக் கடலிற் புகார்முழு துங்கெடுக்கு
மிடியாற் படியில் விதனப் படார்வெற்றி வேற்பெருமாள்
அடியார்க்கு நல்ல பெருமாள் அவுணர் குலமடங்கப்
பொடியாக் கியபெரு மாள்திரு நாமம் புகல்பவரே. 33

பொட்டாக வெற்பைப் பொருதகந் தாதப்பிப்
போனதொன்றற்
கெட்டாத ஞான கலைதரு வாயிருங் காமவிடாய்ப்
பட்டா ருயிரைத் திருகிப் பருகிப் பசிதணிக்குங்
கட்டாரி வேல்விழி யார்வலைக் கேமனங் கட்டுண்டதே.
34

பத்தித் துறையிழிந் தாநந்த வாரி படிவதினால்
புத்தித் தாங்கந் தெளிவதென் றோபொங்கு வெங்குருதி
மெத்திக் குதிகொள்ள வெஞ்சூ ரனைவிட்ட சுட்டியிலே
குத்தித் தரங்கொண் டமரா வதிகொண்ட கொற்றவனே.
35

கழித்தோடு மாற்றிற் பெருக்கான துசெல்வந்
துன்பமின்பங்
கழித்தோடு கின்றதெக் காலநெஞ் சேகரிக்
கோட்டுமுத்தைக்

கொழித்தோடு காவிரிச் செங்கோட னென்கிலை
குன்றமெட்டுங்
கிழித்தோடு வேலென் கிலையெங்க னேமுத்தி கிட்டுவ[illegible].
36

கண்டுண்ட சொல்லியர் மெல்லியர் காமக் கலவிக்கள்ளை
மொண்டுண் டயர்கினும் வேன்மற வேன்முது கூளித்திரள்
டுண்டுண் டுடுடுடு டுடூ டுடுடுடு டுண்டுடுண்டு
டிண்டிண் டெனக்கொட்டி யாடவெஞ் சூர்க்கொன்ற
ராவுத்தனே. 37

நாளென் செயும்வினை தானென் செயுமெனை நாடிவந்த
கோளென் செயுங்கொடுங் கூற்றென் செயுங்கும ரேசரிரு
தாளுஞ் சிலம்புஞ் சதங்கையுந் தண்டையுஞ் சண்முகமுந்
தோளுங் கடம்பு மெனக்குமுன் னேவந்து தோன்றிடினே.
38

உதித்தாங் குழல்வதுஞ் சாவதுந் தீர்த்தெனை
யுன்னிலொன்றா
விதித்தாண் டருள்தருங் காலமுண் டோவெற்பு நட்டுரக
பதித்தாம்பு வாங்கிநின் றம்பரம் பம்பரம் பட்டுழல
மதித்தான் திருமரு காமயி லேறிய மாணிக்கமே. 39

சேல்பட் டழிந்தது செந்தூர் வயற்பொழில் தேங்கடம்பின்
மால்பட் டழிந்தது பூங்கொடி யார்மனம் மாமயிலோன்
வேல்பட் டழிந்தது வேலையுஞ் சூரனும் வெற்புமவன்
கால்பட் டழிந்ததிங் கென்றலை மேலயன் கையெழுத்தே.
40

பாலே யனைய மொழியார்த மின்பத்தைப் பற்றியென்றும்
மாலேகொண் டுய்யும் வகையறி யேன்மலர்த் தாள்தருவாய்
காலே மிகவுண்டு காலே யிலாத கணபணத்தின்
மேலே துயில்கொள்ளு மாலோன் மருகசெவ்
வேலவனே. 41

நிணங்காட்டுங் கொட்டிலை விட்டொரு வீடெய்தி
நிற்கநிற்குங்
குணங்காட்டி யாண்ட குருதே சிகனங் குற[illegible]சிறுமான்

பணங்காட்டு மல்குற் குருகுங் குமரன் பதாம்புயத்தை
வணங்காத் தலைவந்தி தெங்கே யெனக்கிங்ஙன் வாய்த்
தனுவே. 42

கவியாற் கடலடைத் தோன்மரு கோனைக் கணபணக்கட்
செவியாற் பணியணி கோமான் மகனைத் திறலரக்கர்
புவியார்ப் பெழத்தொட்ட போர்வேன் முருகனைப்
போற்றியன்பாற்
குவியாக் கரங்கள்வந் தெங்கே யெனக்கிங்ஙன்கூடியவே.
43

தோலாற் சுவர்வைத்து நாலாறு காலிற் சுமத்தியிரு
காலா லெழுப்பி வளைமுது கோட்டிக்கைந் நாற்றிநரம்
பாலார்க்கை யிட்டுத் தசைகொண்டு மேய்ந்த
அகம்பிரிந்தால்
வேலாற் கிரிதொளைத் தோனிரு தாளன்றி வேறில்லையே.
44

ஒருபூ தருமறி யாத்தனி வீட்டி லுரையுணர்வற்
றிருபூத வீட்டி லிராலென் றானிரு கோட்டொருகைப்
பொருபூ தரமுரித் தேகாச மிட்ட புராந்தகற்குக்
குருபூத வேலவ னிட்டூர சூர குலாந்தகனே. 45

நீயான ஞான விநோதந் தனையென்று நீயருள்வாய்
சேயான வேற்கந்த னேசெந்தி லாய்சித்ர மாதரல்குற்
றோயா வுருகிப் பருகிப் பெருகித் துவளுமிந்த
மாயா விநோத மநோதுக்க மானது மாய்வதற்கே. 46

பத்தித் திருமுக மாறுடன் பன்னிரு தோள்களுமாய்த்
தித்தித் திருக்கு மமுதுகண் டேன்செயன் மாண்டடங்கப்
புத்திக் கமலத் துருகிப் பெருகிப் புவனமெற்றித்
தத்திக் கரைபுர ளும்பர மாநந்த சாகரத்தே. 47

பத்தியை வாங்கிநின் பாதாம் புயத்திற் புகட்டியன்பாய்
முத்திரை வாங்க அறிகின்றி லேன்முது சூர்நடுங்கச்
சத்தியை வாங்கத் தரமோ குவடு தவிடுபடக்
குத்திர காங்கேய னேவினை யேற்கென் குறித்தனையே.
48

சூரிற் கிரியிற் கதிர்வே லெறிந்தவன் தொண்டர்குழாஞ்
சாரிற் கதியன்றி வேறிலை காண்தண்டு தாவடிபோய்த்
தேரிற் கரியிற் பரியிற் றிரிபவர் செல்வமெல்லாம்
நீரிற் பொறியென் றறியாத பாவி நெடுநெஞ்சமே. 49

படிக்குந் திருப்புகழ் போற்றுவன் கூற்றுவன் பாசத்தினாற்
பிடிக்கும் பொழுதுவந் தஞ்சலென் பாய்பெரும்
பாம்பினின்று
நடிக்கும் பிரான்மரு காகொடுஞ் சூர னடுங்கவெற்பை
இடிக்குங் கலாபத் தனிமயி லேறு மிராவுத்தனே. 50

மலையாறு கூறெழ வேல்வாங்கி னானை வணங்கியன்பின்
நிலையான மாதவஞ் செய்குமி னோநும்மை நேடிவருந்
தொலையா வழிக்குப் பொதிசோறு முற்ற துணையுங்கண்டீர்
இலையா யினும்வெந்த தேதா யினும்பகிர்ந் தேற்றவர்க்கே.
51

சிகராத்ரி கூறிட்ட வேலுஞ்செஞ் சேவலுஞ் செந்தமிழாற்
பகரார்வமீ; பணி பாசசங் க்ராம பணாமகுட
நிகராட் சமபட்ச பட்சி துரங்க ந்ருபகுமரா
குமராட் சசபட்ச விட்சோப தீர குணதுங்கனே. 52

வேடிச்சி கொங்கை விரும்புங் குமரனை மெய்யன்பினாற்
பாடிக் கசிந்துள்ள போதே கொடாதவர் பாதகத்தாற்
றேடிப் புதைத்துத் திருட்டிற் கொடுத்துத் திகைத்திளைத்து
வாடிக் கிலேசித்து வாழ்நாளை வீணுக்கு மாயப்பவரே.
53

சாகைக்கு மீண்டு பிறக்கைக்கு மன்றித் தளர்ந்தவர்க்கொன்
றீகைக் கெனைவிதித் தாயிலை யேயிலங் காபுரிக்குப்
போகைக்கு நீவழி காட்டென்று போய்க்கடல் தீக்கொளுந்த
வாகைச் சிலைவளைத் தோன்மரு காமயில் வாகனனே. 54

ஆங்கா ரமுமடங் காரொடுங் கார்பர மாநந்தத்தே
தேங்கார் நினைப்பு மறப்பு மறார்தினைப் போதளவும்
ஓங்காரத் துள்ளொளிக் குள்ளே முருக னுருவங்கண்டு
தூங்கார் தொழும்புசெய் யாரென்செய் வார்யம
தூதருக்கே. 55

கிழியும் படியடற் குன்றெறிந் தோன்கவி கேட்டுருகி
இழியுங் கவிகற் றிடாதிருப் பீரெரி வாய்நரகக்
குழியுந் துயரும் விடாய்ப்படக் கூற்றுவ னூர்க்குச்செல்லும்
வழியுந் துயரும் பகரீர் பகரீர் மறந்தவர்க்கே. 56

பொருபிடி யுங்களி றும்விளை யாடும் புனச்சிறுமான்
தருபிடி காவல சண்முக வாவெனச் சாற்றிநித்தம்
இருபிடி சோறுகொண் டிட்டுண் டிருவினை யோமிறந்தால்
ஒருபிடி சாம்பருங் காணாது மாய வுடம்பிதுவே. 57

நெற்றாப் பசுங்கதிர்ச் செவ்வேனல் காக்கின்ற நீலவள்ளி
முற்றாத் தனத்திற் கினிய பிரானிக்கு முல்லையுடன்
பற்றாக்கை யும்வெந்து சங்க்ராம வேளும் படவிழியாற்
செற்றார்க் கினியவன் தேவேந்த்ர லோக சிகாமணியே.
58

பொங்கார வேலையில் வேலைவிட் டோனருள் போலுதவ
எங்கா யினும்வரு மேற்பவர்க் கிட்ட திடாமல்வைத்த
வங்கா ரமுமுங்கள் சிங்கார வீடு மடந்தையருஞ்
சங்காத மோகெடு வீருயிர் போமத் தனிவழிக்கே. 59

சிந்திக் கிலேனின்று சேவிக்கி லேன்றண்டைச் சிற்றடியை
வந்திக் கிலேனொன்றும் வாழ்த்துகி லேன்மயில் வாகனனைச்
சந்திக் கிலேன்பொய்யை நிந்திக்கி லேனுண்மை சாதிக்கிலேன்
புந்திக் கிலேசமுங் காயக் கிலேசமும் போக்குதற்கே 60

வரையற் றவுணர் சிரமற்று வாரிதி வற்றச்செற்ற
புரையற்ற வேலவன் போதித் தவா! பஞ்ச பூதமுமற்
றுரையற் றுணர்வற் றுடலற் றுயிரற் றுபாயமற்றுக்
கரையற் றிருளற் றெனதற் றிருக்குமக் காட்சியதே. 61

ஆலுக் கணிகலம் வெண்டலை மாலை யகிலமுண்ட
மாலுக் கணிகலந் தண்ணந் துழாய்மயி லேறுமையன்
காலுக் கணிகலம் வானோர் முடியுங் கடம்புங்கையில்
வேலுக் கணிகலம் வேலையுஞ் சூரனு மேருவுமே. 62

பாதித் திருவுருப் பச்சென் றவர்க்குத்தன் பாவனையைப்
போதித்த நாதனைப்போர்வேலனைச்சென்று போற்றியுய்யச்
சோதித்த மெய்யன்பு பொய்யோ அழுது தொழுதுருகிச்
சாதித்த புத்திவந் தெங்கே யெனக்கிங்ஙன் சந்தித்ததே. 63

பட்டிக் கடாவில் வருமந்த காவுனைப் பாரறிய
வெட்டிப் புறங்கண் டலாதுவி டேன்வெய்ய சூரனைப்போய்
முட்டிப் பொருதசெவ் வேற்பெரு மாள்திரு முன்புநின்றேன்
கட்டிப் புறப்பட டாசத்தி வாளென்றன் கையதுவே. 64

வெட்டுங் கடாமிசைத் தோன்றும்வெங் கூற்றன் விடுங் கயிற்றாற்
கட்டும் பொழுது விடுவிக்க வேண்டும் கராசலங்கள்
எட்டுங் குலகிரி யெட்டும்விட் டோடவெட் டாதவெளி
மட்டும் புதைய விரிக்குங் கலாப மயூரத்தனே. 65

நீர்க்குமி ழிக்கு நிகரென்பர் யாக்கைநில் லாதுசெல்வம்
பார்க்கு மிடத்தந்த மின்போலு மென்பர் பசித்துவந்தே
ஏற்கு மவர்க்கிட வென்னினெங் கேனு மெழுந்திருப்பார்
வேற்கும ரற்கன்பி லாதவர் ஞான மிகவுநன்றே. 66

பெறுதற் கரிய பிறவியைப் பெற்றுநின் சிற்றடியைக்
குறுகிப் பணிந்து பெறக்கற் றிலேன்மத கும்பகம்பத்
தறுகட் சிறுகட் சங்க்ராம சயில சரசவல்லி
இறுகத் தழுவுங் கடகா சலபன் னிருபுயனே. 67

சாடுஞ் சமரத் தனிவேன் முருகன் சரணத்திலே
ஓடுங் கருத்தை யிருத்தவல் லார்க்குகம் போய்ச்சகம்போய்ப்
பாடுங் கவுரி பவுரிகொண் டாடப் பசுபதிநின்
றாடும் பொழுது பரமா யிருக்கு மதீதத்திலே. 68

தந்தைக்கு முன்னந் தனிஞான வாளொன்று சாதித்தருள்
கந்தச் சுவாமி யெனைத்தேற் றியபின்னர்க் காலன்வெம்பி
வந்திப் பொழுதென்னை யென்செய்ய லாஞ்சத்தி வாளொன்றினாற்
சிந்தத் துணிப்பன் தணிப்பருங் கோபத்ரி சூலத்தையே. 69

விழிக்குத் துணைதிரு மென்மலர்ப் பாதங்கள் மெய்ம்மைகுன்றா
மொழிக்குத் துணைமுரு காவெனு நாமங்கள் முன்புசெய்த
பழிக்குத் துணையவன் பன்னிரு தோளும் பயந்ததனி
வழிக்குத் துணைவடி வேலுஞ்செங் கோடன் மயூரமுமே. 70

துருத்தி யெனும்படி கும்பித்து வாயுவைச் சுற்றிமுறித்
தருத்தி யுடம்பை யொறுக்கிலென் னாஞ்சிவ யோக
மென்னுங்
குருத்தை யறிந்து முகமா றுடைக்குரு நாதன்சொன்ன
கருத்தை மனத்தி லிருந்துங்கண் டீர்முத்தி
கைகண்டதே. 71

சேந்தனைக் கந்தனைச் செங்கோட்டு வெற்பனைச்
செஞ்சுடர்வேல்
வேந்தனைச் செந்தமிழ் நூல்விரித் தோனை விளங்குவள்ளி
காந்தனைக் கந்தக் கடம்பனைக் கார்மயில் வாகனனைச்
சாந்துணைப் போது மறவா தவர்க்கொரு
தாழ்வில்லையே. 72

போக்கும் வரவு மிரவும் பகலும் புறம்புமுள்ளும்
வாக்கும் வடிவு முடிவுமில் லாதொன்று வந்துவந்து
தாக்கு மநோலயந் தானே தருமெனைத் தன்வசத்தே
ஆக்கு மறுமுக வாசொல் லொணாதிந்த ஆநந்தமே. 73

அராப்புனை வேணியன் சேயருள் வேண்டு
மவிழ்ந்த அன்பாற்
குராப்புனை தண்டையந் தாள்தொழல் வேண்டுங்
கொடிய ஐவர்
பராக்கறல் வேண்டும் மனமும் பதைப்பறல்
வேண்டுமென்றால்
இராப்பக லற்ற இடத்தே யிருக்கை யெளிதல்லவே. 74

படிக்கின் றிலைபழ நித்திரு நாமம் படிப்பவர்தாள்
முடிக்கின் றிலைமுரு காவென் கிலைமுசி யாமலிட்டு
மிடிக்கின் றிலைபர மாநந்த மேற்கொள விம்மிவிம்மி
நடிக்கின் றிலைநெஞ்ச மேதஞ்ச மேது நமக்கினியே. 75

கோடாத வேதனுக் கியான்செய்த குற்றமென்
குன்றெறிந்த
தாடாள னேதென் தணிகைக் குமரநின் றண்டையந்தாள்
சூடாத சென்னியு நாடாத கண்ணுந் தொழாதகையும்
பாடாத நாவு மெனக்கே தெரிந்து படைத்தனனே. 76

சேல்வாங்கு கண்ணியர் வண்ணப் பயோதரஞ்
சேரஎண்ணி
மால்வாங்கி யேங்கி மயங்காமல் வெள்ளி மலையெனவே
கால்வாங்கி நிற்குங் களிற்றான் கிழத்தி கழுத்திற்கட்டு
நூல்வாங்கி டாதன்று வேல்வாங்கி பூங்கழல்
நோக்குநெஞ்சே. 77

கூர்கொண்ட வேலனைப் போற்றாம லேற்றங்கொண்
டாடுவிர்காள்
போர்கொண்ட கால னுமைக்கொண்டு போமன்று
பூண்பனவுந்
தார்கொண்ட மாதரு மாளிகை யும்பணச் சாளிகையும்
ஆர்கொண்டு போவரை யோகெடு வீர்நும்
மறிவின்மையே. 78

பந்தாடு மங்கையர் செங்கயற் பார்வையிற் பட்டுழலுஞ்
சிந்தா குலந்தனைத் தீர்த்தருள் வாய்செய்ய வேல்முருகா
கொந்தார் கடம்பு புடைசூழ் திருத்தணிக் குன்றினிற்குங்
கந்தா இளங்கும ராஅம ராவதி காவலனே. 79

மாகத்தை முட்டி வருநெடுங் கூற்றன்வந் தாலென்முன்னே
தோகைப் புரவியிற் றோன்றிநிற் பாய்சுத்த நித்தமுத்தித்
த்யாகப் பொருப்பைத் த்ரிபுராந் தகனைத் த்ரியம்பகனைப்
பாகத்தில் வைக்கும் பரமகல் யாணிதன் பாலகனே. 80

தாரா கணமெனுந் தாய்மார் அறுவர் தருமுலைப்பால்
ஆரா துமைமுலைப் பாலுண்ட பால னரையிற்கட்டுஞ்
சீராவுங் கையிற் சிறுவாளும் வேலுமென் சிந்தையவே
வாரா தகலந்த காவந்த போதுயிர் வாங்குவனே. 81

தகட்டிற் சிவந்த கடம்பையு நெஞ்சையுந் தாளிணைக்கே
புகட்டிப் பணியப் பணித்தரு ளாய்புண்ட ரீகனண்ட
முகட்டைப் பிளந்து வளர்ந்திந்த்ர லோகத்தை
முட்டவெட்டிப்
பகட்டிற் பொருதிட்ட நிட்டூர சூர பயங்கரனே. 82

தேங்கிய அண்டத் திமையோர் சிறைவிடச் சிற்றடிக்கே
பூங்கழல் கட்டும் பெருமாள் கலாபப் புரவிமிசை
தாங்கி நடப்ப முறிந்தது சூரன் தளந்தனிவேல்
வாங்கி யனுப்பிடக் குன்றங்க ளெட்டும் வழிவிட்டவே. 83

மைவருங் கண்டத்தர் மைந்தகந் தாவென்று வாழ்த்துமிந்தக்
கைவருந் தொண்டன்றி மற்றறி யேன்கற்ற கல்வியும்போய்
பைவரும் கேளும் புதியுங் கதறப் பழகிநிற்கும்
ஐவருங் கைவிட்டு மெய்விடும் போதுன் னடைக்கலமே. 84

காட்டிற் குறத்தி பிரான்பதத் தேகருத் தைப்புகட்டின்
வீட்டிற் புகுதன் மிகவெளி தேவிழி நாசிவைத்து
மூட்டிக் கபாலமூ லாதார நேரண்ட மூச்சையுள்ளே
ஓட்டிப் பிடித்தெங்கு மோடாமற் சாதிக்கும் யோகிகளே.
85

வேலா யுதன்சங்கு சக்ராயு தன்விரிஞ் சன்னறியாச்
சூலா யுதன்தந்த கந்தச் சுவாமி சுடர்க்குடுமிக்
காலா யுதக்கொடி யோனரு ளாய கவசமுண்டென்
பாலா யுதம்வரு மோயம னோடு பகைக்கினுமே. 86

குமரா சரணஞ் சரணமென் றண்டர் குழாந்துதிக்கும்
அமரா வதியிற் பெருமாள் திருமுக மாறுங்கண்ட
தமராகி வைகுந் தனியான ஞான தபோதனர்க்கிங்
கெமராசன் விட்ட கடையேடு வந்தினி யென்செயுமே. 87

வணங்கித் துதிக்க அறியா மனித ருடனிணங்கிக்
குணங்கெட்ட துட்டனை யீடேற்று வாய்கொடி யுங்கழுகும்
பிணங்கத் துணங்கை யலகைகொண் டாடப் பிசிதர்தம்வாய்
நிணங்கக்க விக்ரம வேலா யுதந்தொட்ட நிர்மலனே. 88

பங்கே ருகனெனைப் பட்டோ லையிலிடப் பண்டுதளை
தங்காலி லிட்ட தறிந்தில னோதனி வேலெடுத்துப்
பொங்கோதம் வாய்விடப் பொன்னஞ் சிலம்பு
புலம்பவரும்
எங்கோ னறியி னினிநான் முகனுக் கிருவிலங்கே 89

மாலோன் மருகனை மன்றாடி மைந்தனை வானவர்க்கு
மேலான தேவனை மெய்ஞ்ஞான தெய்வத்தை மேதினியில்
சேலார் வயற்பொழிற் செங்கோட னைச்சென்று
கண்டுதொழ
நாலா யிரங்கண் படைத்தில னேயந்த நான்முகனே. 90

கருமான் மருகனைச் செம்மான் மகளைக் களவுகொண்டு
வருமா குலவனைச் சேவற்கைக் கோளனை வானமுய்யப்
பொருமா வினைச்செற்ற போர்வேல னைக்கன்னிப்
பூகமுடன்
தருமா மருவுசெங் கோடனை வாழ்த்துகை சாலநன்றே 91

தொண்டர்கண் டண்டிமொண் டுண்டிருக் குஞ்சுத்த
ஞானமெனுந்
தண்டயம் புண்டரி கந்தரு வாய்சண்ட தண்டவெஞ்சூர்
மண்டலங் கொண்டுபண் டண்டரண் டங்கொண்டு
மண்டிமிண்டக்
கண்டுருண் டண்டர்விண் டோடாமல் வேல்தொட்ட
காவலனே. 92

மண்கம ழுந்தித் திருமால் வலம்புரி யோசையந்த
விண்கமழ் சோலையும் வாவியுங் கேட்டது வேலெடுத்துத்
திண்கிரி சிந்த விளையாடும் பிள்ளைத் திருவரையிற்
கிண்கிணி யோசை பதினா லுலகமுங் கேட்டதுவே. 93

தெள்ளிய ஏனலிற் கிள்ளையைக் கள்ளச் சிறுமியெனும்
வள்ளியை வேடடவன் தாள்வேட் டிலைசிறு
வள்ளைதள்ளித்
துள்ளிய கெண்டையைத் தொண்டையைத் தோதகச்
சொல்லைநல்ல
வெள்ளிய நித்தில வித்தார மூரலை வேட்டநெஞ்சே. 94

யான்றா னெனுஞ்சொல் லிரண்டுங்கெட் டாலன்றி
யாவருக்குந்
தோன்றாது சத்தியந் தொல்லைப் பெருநிலஞ் சூகரமாய்க்
கீன்றான் மருகன் முருகன்க்ரு பாகரன் கேள்வியினாற்
சான்றாரு மற்ற தனிவெளிக் கேவந்து சந்திப்பதே. 95

தடக்கொற்ற வேள்மயி லேயிடர் தீரத் தனிவிடில்நீ
வடக்கிற் கிரிக்கப் புறத்துநின் றோகையின் வட்டமிட்டுக்
கடற்கப் புறத்துங் கதிர்க்கப் புறத்துங் கனகசக்ரத்
திடர்க்கப் புறத்துந் திசைக்கப் புறத்துந் திரிகுவையே. 96

சேலிற் றிகழ்வயற் செங்கோடை வெற்பன் செழுங்கலபி
ஆலித் தநந்தன் பணாமுடி தாக்க அதிர்ந்ததிர்ந்து
காலிற் கிடப்பன மாணிக்க ராசியுங் காசினியைப்
பாலிக்கு மாயனுஞ் சக்ரா யுதமும் பணிலமுமே. 97

கதிதனை யொன்றையுங் காண்கின்றி லேன்கந்த
வேல்முருகா
நதிதனை யன்னபொய் வாழ்விலன் பாய்நரம்
பாற்பொதிந்த
பொதிதனை யுங்கொண்டு திண்டாடு மாறெனைப்
போதவிட்ட
விதிதனை நொந்துநொந் திங்கேயென் றன்மனம்
வேகின்றதே. 98

காவிக் கமலக் கழலுடன் சேர்த்தெனைக் காத்தருளாய்
தூவிக் குலமயில் வாகன னேதுணை யேதுமின்றித்
தாவிப் படரக் கொழுகொம் பிலாத தனிக்கொடிபோல்
பாவித் தனிமனந் தள்ளாடி வாடிப் பதைக்கின்றதே. 99

இடுதலைச் சற்றுங் கருதேனைப் போதமி லேனையன்பாற்
கெடுதலி லாத்தொண் டரிற்கூட் டியவா!
கிரௌஞ்சவெற்பை
அடுதலைச் சாதித்த வேலோன் பிறவி யறவிச்சிறை
விடுதலைப் பட்டது விட்டது பாச வினைவிலங்கே. 100

சலங்காணும் வேந்தர் தமக்குமஞ் சார்யமன்
சண்டைக்கஞ்சார்
துலங்கா நரகக் குழியணு கார்துட்ட நோயணுகார்
கலங்கார் புலிக்குங் கரடிக்கும் யானைக்குங்
கந்தனன்னூல்
அலங்கார நூற்று ளொருகவி தான்கற் றறிந்தவரே. 101

திருவடி யுந்தண்டை யுஞ்சிலம் புஞ்சிலம் பூடுருவப்
பொருவடி வேலுங் கடம்புந் தடம்புயம் ஆறிரண்டும்
மருவடி வான வதனங்க ளாறும் மலர்க்கண்களுங்
குருவடி வாய்வந்தென் னுள்ளங் குளிரக் குதிகொண்டவே.
102

இராப்பக லற்ற இடங்காட்டி யானிருந் தேதுதிக்கக்
குராப்புனை தண்டையந் தாளரு ளாய்கரி கூப்பிட்டநாள்

கராப்படக் கொன்றக் கரிபோற்ற நின்ற கடவுள்மெச்சும்
பராக்ரம வேல நிருதசங் கார பயங்கரனே. 103

செங்கே ழடுத்த சினவடி வேலுந் திருமுகமும்
பங்கே நிரைத்தநற் பன்னிரு தோளும் பதுமமலர்க்
கொங்கே தரளஞ் சொரியுஞ்செங் கோடைக் குமரனென
எங்கே நினைப்பினும் அங்கேயென் முன்வந் தெதிர்நிற்பனே.

ஆவிக்கு மோசம் வருமா றறிந்துன் னருட்பதங்கள்
சேவிக்க என்று நினைக்கின்றி லேன்வினை தீர்த்தருளாய்
வாவித் தடவயல் சூழுந் திருத்தணி மாமலைவாழ்
சேவற் கொடியுடை யானே யமர சிகாமணியே. 105

கொள்ளித் தலையில் எறும்பது போலக் குலையுமென்றன்
உள்ளத் துயரை யொழித்தரு ளாயொரு கோடிமுத்தந்
தெள்ளிக் கொழிக்குங் கடற்செந்தின் மேவிய சேவகனே
வள்ளிக்கு வாய்த்தவ னேமயி லேறிய மாணிக்கமே. 106

சூலம் பிடித்தெம பாசஞ் சுழற்றித் தொடர்ந்துவருங்
காலன் தனக்கொரு காலுமஞ் சேன்கடல் மீதெழுந்த
ஆலங் குடித்த பெருமான் குமாரன் அறுமுகவன்
வேலுந் திருக்கையு முண்டே நமக்கொரு மெய்த்துணையே.
107

கந்தரலங்காரம் முற்றிற்று.

உ

# திருப்போரூர் அலங்காரம்

## சிதம்பர சுவாமிகள்

### காப்பு

முக்கட் பவள மலைவந்த தேனை முராரிதங்கை
பக்கத் தெடுக்கும் பரிமளப் பூவைப் பருமயிலோற்
கொக்கத் துணைவந்த வுத்தம தேவை யுயர்பொருளைச்
செக்கச் சிவந்தநன் மால்யானை யைச்சிந்தை சேர்க்குதுமே. 1

### நூல்

பூமேவு நாபனும் நான்முகத் தோனும் புரந்தரனுந்
தாமேவு வாழ்வும் அதிகார மும்பெறத் தார்புனைந்த
கோமேவு வேல்கொண் டவுணரை மாய்த்த குமரனெங்கோன்
தூமேவு தாள்மலர் போரூரி லென்முடி சூடினனே. 2

தெய்வப் பிடிவந்து சேருந் துகிர்க்கிரி செந்தளிர்போல்
மெய்வைத்த வள்ளிக் கொடிபடர் தாரு வியனுலகிற்
சைவப் பயிரை வளர்க்குந்தண் மேகந் தகைமைசெறி
நெய்வைத்த வேல்கொண்டு போரூரி லென்றும்
நிகழ்தெய்வமே. 3

கருதார் புரங்கொன்ற சேவக னார்க்குங் களிப்புறவே
ஒருதா ரகப்பொரு ளோதிய வாவுன தன்பரைப்போல்
தருதா ரணிசொலும் நாயேனும் அன்புளந் தானுளனோ
விருதாசெஞ் சேவற் சமரா புரிவரு வேலவனே. 4

சிற்றறி வொன்று நினைப்போடு நித்திரை சேர்ந்தியங்கு
மற்றிவை நீங்கி லதுதா னெவைகளு மாகிநின்ற
அற்றமில் பேரறி வூடே கலந்திடு மாயவிதே
பற்றறு முத்தியென் றான்சம ராபுரிப் பண்ணவனே. 5

எல்லார்க்கு மேலவன் நீயென் றறிந்துனை யேத்தியன்பாய்ப்
பொல்லாக் கருமலந் தீர்ந்தான் பொதியப் புகழ்முனிவன்
சொல்லாற் புனைதொங்கல் நக்கீரன் சாத்தித் துனிகடந்தான்
நல்லார்க்கு நல்லவ னேசம ராபுரி நாயகனே. 6

தோட்குங் குமநக்குங் கோக்குழை மாதர்க்குந் தொல்லைமத
வேட்கும் உளங்குலைந் தேனைவி டேல்விண்டு மாமலர்க்கை
வாட்குங் கொடிய மருப்பார் மகிடன் வளைப்பிலுறா
தாட்கொண் டருளுகண் டாய்போரி வாழும் மயிலவனே. 7

அண்டஞ் சராசரம் எண்திசை யாவும் அளித்தவளுங்
கண்டங் கரிய சிவனுந் தமஅங்க ரங்களின்மேல்
மண்டன்பின் ஏந்தி முறைமுறை தந்து மகிழ்மதலாய்
தொண்டன் பெனக்கு முளதோதென் போரிச் சுராதிபனே. 8

கொங்கணர் ஆரியர் ஒட்டியர் கோசலர் குச்சரராஞ்
சிங்களர் சோனகர் வங்காளர் ஈழர் தெலுங்கர்கொங்கர்
அங்கர் கலிங்கர்கன் னாடர் துருக்க ரனைவருமே
தங்கள்தங் கட்கிறை நீயென்பர் போரிச் சரவணனே. 9

மான்சூட் டிறைச்சிசெந் தேன்தோய்த் தருந்தும் வனசரர்மான்
கூன்கோட் டிளம்பிறை நெற்றிக்கும் வேலிணைக் கூர்விழிக்குங்
கான்கூட்ட மாமலர்க் கூந்தற்குங் கொங்கைக்குங் காதல்கொண்டோன்
தேன்கூட்டம் வாழ்பொழிற் போரூர னென்குரு தேசிகனே. 10

கோக்குஞ் சரமத நாற்றந் தவிர்த்துக் குலநரந்தந்
தேக்கும் புழுகு மணம்வீசும் போரியெந் தேவன்செவ்வேள்
நோக்கும் விழியருள் போக்கும் பிணியினை நூபுரத்தாள்
காக்கும் பவம்புக வொட்டா தெமக்கென் கவலைநெஞ்சே. 11

ஆயன் குழலிசை கேட்கும் பணாமுடி யாடரவம்
வாயையங் காந்து மணிகா லுதல்வள்ளல் பாடல்கொண்டு
தூய கொடைகொடுத் தாங்குறும் போரிச் சுராதிபனை
நாயக னைக்கும ரேசனை நாடுவர் ஞானிகளே. 12

இடமுறச் சூழும் முழைதோறும் நாகம் எரிபுரையும்
படமணிச் சென்னி யெடுத்தாள்தன் மங்கலப் பந்தரிலே
சுடர்மணித் தண்டினைச் சூழ விளக்கிட்ட சோதியொக்குந்
தடவரைப் போரிச் சரவண நாயகன் தஞ்செனக்கே. 13

பிடிபார்த் தலற எயினச் சிறார்கள் பிரிந்தகன்றைக்
கொடியாற் பிணித்ததன் மேலேறி யாடுங் குளிர்பொழில்சூழ்
அடிவாரப் போரிப் பதிவே லவனைவந் தண்டினனென்
குடியார்க்கு நல்ல கதிவாய்த்த தென்றுளங் கொண்டனனே. 14

தோகை நடித்திட வேடச் சிறாருழைத் தோற்பறையை
நாகம் பறித்துலர் வாகைநெற் றாற்கொட்ட நாடியளி
ஓகை தரும்பண் ணிசைபாடுஞ் சந்தன வொண்பொழில்சூழ்
மாகர் தொழுந்திருப் போரூரன் தாளென் மதிவிழியே. 15

மேகங்கள் சூற்கொண்டு சாரற் படிந்து மிகக்குமுற
நாகங்கள் கோடிறப் பாயத் தெறித்த நகைத்தரள
மோகந் தருங்குற மின்னார்கள் மேலுற மொய்த்தெதிர்பார்த்
தாகந் தடவிய போரூர்க் குகனென் னருட்டந்தையே. 16

வரைமுத் தொளிரும் பளிக்கா டரங்கின் மயில்நடித்தல்
புரையில் சரிமண் டலத்தாடல் மாதர் புரிவதொக்கும்
விரவுற்ற சாரலம் போரூர் விசாகன் விரைமலர்த்தாள்
உரையற் றுணர்வற் றுயரின்ப மாகிய வுள்ளொளியே. 17

பளிக்கறை யூடு தருக்குழைப் பாயலிற் பள்ளிகொண்டே
களிக்குறு மாகந் தருவார்தங் கீதமுங் காரையினால்
விளக்குறு மேனிலத் தோகையர் கீதமும் வேறறவே
கிளக்க லுறுந்திருப் போரூரன் அன்பர்தங் கேண்மையனே. 18

கருநாகத் தொண்டைக் கயமுனிக் கூட்டங்கள் கல்லுச்சில்லுப்
பொருநாசிக் கேழ லுடனாடுஞ் சாரலம் போரிச்செவ்வேள்
இருபாத தாமரை யேத்தி வணங்கியெந் நாளுநினைந்
தொருவா திருந்திலை நெஞ்சேயென் வீணி லுழன்றனையே. 19

அகிலேந்து நல்ல முகிலேய்ந்த கூந்தல் அரிவையர்தம்
நகிலேந்தும் ஆர வடம்போல் அருவி நகந்திகழும்
முகிலேந்தும் மாடநம் போரூர்க் குகன்பத முண்டகத்தைத்
தகிலேந்து நெஞ்சினர் மேல்மத வேளெய்யத் தானஞ்சுமே. 20

மதுவார்த் திடுகடம் போலே மயக்குறு மாதரையோர்
கொதுகாக் கருதுறுங் காலமுண் டோகொடி யேன்றனக்கே
விதுவாற் சலந்தருங் கற்சுனை யூடு விளங்குபிடி
சதுராக் குடைந்து விளையாடும் போரிச் சரவணனே. 21

அள்ளித் தெளித்தன்ன கள்ளிவெந் நீழ லணுகுழைதான்
நள்ளிப் புனலெனப் பேய்த்தேரை நாடி நலிவதுபோல்
உள்ளிப்பொய் வாழ்வினை யூர்தொறுஞ் சென்றுழ
லாதெனையாள்
வெள்ளிப் பொருப்பினன் மைந்தாதென் போரியில்
வேலவனே. 22

முடைமாற முல்லை குழல்சூடும் ஆய்ச்சியர் மூதளைதான்
கடைதோறும் ஆரத்தின் மார்பில் தெறித்திடக் கன்றுதுள்ளும்
புடைபாய் உழுவை குமுறுமென் றிந்நிலப் போரியெங்கோன்
படைவேல் துணையுண் டெமக்கொரு நாளும்
பயமில்லையே. 23

பூவையுங் கோவும் அசுணமும் நாகமும் பூம்பொறிக்கான்
சேவலுஞ் சித்திரம் போற்கேட் டுறங்கச் சிறார்ப்பொதுவர்
தூவருந் தீங்குழ லோசை வளர்க்கின்ற தொல்லைமுல்லைத்
தேவருந் தேடும் பொருள்போரி வேலன் திருவடியே. 24

கட்டான் நிரம்பி யகவிதழ் கீண்டெழு கஞ்சமுடன்
முட்டா டுவைத்திட மேதி தெறித்தொளிர் முத்தையன்னப்
புட்டான் சினையென்ற ணைக்கின்ற போரிப்
புனிதச்செவ்வேள்
மட்டாருஞ் சேவடி தொட்டா லெமக்குநல் வாழ்வுளமே. 25

மடுப்ப மயக்கிடை கொண்டேகு நெஞ்சினை மாற்றியென்னை
எடுப்ப துனக்குக் கடனைய னேயெழில் கூர்பழனத்
துடுப்பு முகக்கொழுச் செல்கின்ற சீதையி லூறியநீர்
கடுப்ப வனசப் பிழியூறும் போரியன் காங்கெயனே. 26

பச்சைக் குடைதிருப் புந்தகைப் பாசடை யூடுருவ
மெச்சக் கடைசியர் சேல்பாயும் போரி விசாகனெங்கோன்
கொச்சைச் சிறியனை யிந்நாளும் பண்ணிய கோகனகத்
தச்சற் கினியெனைப் பண்ணக் கொடானிது சத்தியமே. 27

விருந்துண்டு பின்னைக் குபசாரஞ் செய்யும் விதத்தின்நத்துப்
பொருந்துஞ் சரோருகத் தேனுண்டு முத்துமிழ் போரியிலோர்
மருந்துண்ட தன்பெயர் செவ்வே ளஃதென் மலப்பிணியுந்
திருந்து முடற்பிணி தன்னையும் போக்கிடுஞ் சித்தமிதே. 28

தண்டா மரையில் அனப்பே டுறவது தன்னருகே
வெண்டா மரையிரண் டாலுதல் வாணிக்கு வெண்கவரி
கொண்டார வீசுதல் போலுறும் போரிக் குகனிருதாள்
கண்டாலும் இன்பக் கடல்வந்து கோக்குங் கருத்தினையே. 29

வண்டுகிண் டக்கஞ்சம் விண்டுதண் தேன்சிந்த வால்வளைகள்
கண்டயின் றின்புறும் போரூர் முருகன் கழலிணைக்கே
கொண்டுவந் தின்புறு வோர்பாத தாமரைத் தூளென்சென்னி
கொண்டுவந் தேன்மலம் விண்டேன் பரகதி கூடினனே. 30

கன்னிய ராடிக் கழித்தகத் தூரி கயல்மணக்கும்
மன்னிய வாவி திகழ்சம ராபுரி மாமயிலோன்
பொன்னியல் கிண்கிணித் தாளையுந் தோளையும்
போற்றுவையேல்
உன்னிய யாவு முறுநெஞ்ச மேயுண்மை யுண்மையிதே. 31

வள்ளைக் கொடிச்செவி சைவலக் கூந்தல் வனசமுகந்
தெள்ளூற்ற நீலக்கண் ணாம்பற்செவ் வாய்திக ழுந்திகிரிப்
புள்ளூக் குயமன்னப் பேட்டு நடையுடைப் பொய்கைமங்கை
நள்ளத் திகழ்கின்ற போரூர் விசாகனை நாடுள்ளமே. 32

கருப்புத் திரளை யறுத்துச் செறித்த கனைசகட
மருப்புப் பகட்டைக் கழையால் உழவர்கள் மாறுதொறும்
விருப்புற்ற முத்துத் தெறித்தொளிர் சாளர வீடுபுகுந்
திருப்பொற்ற போரிக் குகன்தா ளறிஞர்க்குத் தித்திக்குமே. 33

கரண்டம் அடிக்கடி நீர்மூழ்கி யாங்குக் கயலெடுத்தே
மருண்டமென் னோக்கியர் முன்காட்டல் நுங்கண் மலர்விழிக்கு
வெருண்ட கயலன் றிதுபார்மி னென்று விளம்பலொக்குந்
தெருண்டவர் சூழ்திருப் போரூரின் தேவர் சிரோமணியே. 34

காளைச் சலப்பெயர் நாயின மூழ்கக் கயமடுவில்
ஆளைப் பகட்டுறும் வாளைப் பகட்டினம் அம்பினிற்போய்ப்
பாளைக் கமுகின் மிடறறப் பாய்ந்துநெற் பண்ணைபுகுங்
கேளொத்த போரிக் குகனன்ப ரேயென் கிளைஞர்களே. 35

கருக்கடல் நாயடி யேன்புகு தாவகை காத்துமுத்திப்
பெருக்குறு மின்பத் திருத்துகண் டாய்பெரு நீர்க்கரையின்
வருக்கை வெடித்தெழு செஞ்சாற்றுச் சேற்றில் வழுக்கிநத்துக்
குருக்கொளும் முத்துமிழ் போரூர்ச் சடானனக்
கோக்கொண்டலே. 36

வீட்டின்ப நாடி யிருப்போர் தமக்கும் விடயசுக
நாட்டங்கொண் டாங்கவர் போலிருப் போர்க்கும் நலனுறவே
காட்டும் உவமைய தாக்கொக்கு நீர்மடைக் கண்ணிலகுந்
தீட்டும் புகழ்கொண்ட போரூரன் வேல்சுரர் தேவதையே. 37

வாவிக் கரைக்கமு கேய்கொக்கு நீழல் வயங்குதெண்ணீர்த்
தாவிக் கயலதைக் கண்டே வெருவுதல் தன்கனவின்
மேவுற்ற காட்சி நனவிற்கண் டானின் விளங்கலுறும்
பூவிற் றிருத்திகழ் போரூர்க் குகன்பதம் போற்றுள்ளமே. 38

பச்சை நிறத்த நிறைநீர்க் குடங்கள் பலசுமந்தே
உச்சியி லுற்ற கதிரோனுக் கீயு முயாந்துளதெங்
கெச்ச மறச்செறி போரூர்ச்செவ் வேளை யிறைஞ்சிநினைப்
பிச்சநெஞ் சேயடு கின்றனன் பாரென்பிர தாபத்தையே. 39

சாறூற் றெழுந்து கணுவுடைத் தோடுந் தழைக்கரும்பை
வீறேற்று வாழைக் குலையொடு மாசினி வீழ்ந்தொடித்துச்
சேறாக் கியவயற் போரூர் முருகன்நந் தீதகற்றிப்
பேறாக் கருணைசெய் தேநெஞ்ச மேதரும் பேரின்பமே. 40

பவளக் கொடியிற் பிணித்தூசல் புன்னையிற் பார்வைமயற்
குவளைக்கண் கற்கு மடமாத ராடவக் கோடரும்பைத்
தவளத் தரள மழைபோ லவர்மெய் தனிற்சொரியுந்
திவளுற்ற போரிக் குமரேசன் என்குல தேவதையே. 41

வல்லைத் துரந்த முலைநுளை மாதர் வளையெறியப்
பல்லைத் திறந்துறு மிக்கவி தாலப் பழமிகுக்கு
தொல்லைத் திருத்திகழ் போரூர்க் குகன்பதஞ் சூடும்சென்னிக்
கில்லைப் பிரமன் துயருறக் கீறும் எழுத்துக்களே. 42

வாடைக் கொதுங்கிடப் பார்ப்புகள் வெள்ளை வனசங்கள்மேல்
தேடிப் பெடையனந் தன்பா லணைத்துறந் தீதில்நெய்தல்
நீடத் திகழ்கின்ற போரூர் விசாகன் நிமலபதம்
நாடிக் களிப்பவர்க் குண்டோ துயரெனும் நாமங்களே. 43

செக்கர்க் கிடையின் உடுக்கூட்ட மென்னத் திரைகளினால்
தொக்கப் படுந்துகிர் வண்டலின் மீது சுரிமுகங்கள்
கக்கப் படுமுத் தொளிருந்தென் போரியிற் காங்கெயனைப்
பக்கத் துடன்பணி வாரவ ரேசுக பாரணரே. 44

வண்டணை யாக்கொண்டு கண்தூங்கும் பூங்குழல் மாதரையே
கண்டணை யாயினுங் காலமுண் டோகடை யேன்றனக்கே
ஞெண்டினங் கேதகைத் தாதரித் துண்டறல் நீடுபொய்கைத்
தண்டுறை ஞெண்டுடன் ஆடிடும் போரிச் சரவணனே. 45

சந்திர காந்த மணிமாடத் தூடுதன் சாயைகண்டோர்
பைந்தொடி மாது தலைவனொ டூடப் பரிந்தவனே
சுந்தர ஆடி நிழற்காட்டி யின்புறு சொற்புகலுஞ்
செந்திருப் போரிக் குகனைக்கண் டார்க்குண்டு சித்திகளே. 46

ஏதங் கருதினர் செல்மினென் றேயும் இதங்கருதும்
போதஞ் சிறந்தவர் வம்மினென் றேயும் புகல்வனபோல்
வாதஞ் செறியக் கொடியாடும் போரி வரதன்தண்டை
நாதங்கள் யோகியர் யோகினிற் காண்குறு நாதங்களே. 47

தேரூர் இரவி வலவன்கை மீது செழுங்கொடிகள்
ஏராகத் தாக்குத லெங்கோன் அயிலொளிக் கெய்துமுன்கோல்
நேரோசொல் நில்லென்று போரூர்கைக் கொண்டு நிறுத்தலொக்குஞ்
சீரூரும் இந்நக ரேகயி லாயந் தெளிந்தவர்க்கே. 48

மனப்பரி சோர இறுமாந்து நாவி மதம்பொழியுந்
தனக்களிற் றன்ன முருகா குகாஎன்று தானுரைப்பப்
புனக்கிளி கற்கின்ற போரூர் இறையைப் புகழ்ந்தவரைச்
சினக்கனல் காமக் கனலும்விட் டோடுந் திசைப்புறனே. 49

மதிகொண்ட பூச்சக்ர வாளக் குடையின் வருநிழற்கீழ்த்
துதிகொண்ட யானைப் பிடர்மேல் வருமச் சுகந்தனிலும்
நதிகொண்ட பேரன்பி னாற்போரி வேலனை நண்ணியின்பக்
கதிகொண்ட மேலவர் கால்தலை தாங்கல் கனசுகமே. 50

அளகா புரியன்ன பட்டணத் தேசுதை யால்வனைந்த
களவார் முகில்படி மாடத்தி னூடு களித்தலினும்
புளகா டவியெழ மெய்ப்போரி வேலனை போற்றியுய்வார்
வளவார் புறந்திண்ணை வைகுத லேதமில் மாசுகமே. 51

உள்ளக் கவலை யெலாமொழிந் தேன்ஒழி யாதுசெய்யுங்
கள்ளக் கருமங்கள் யாவும்விண் டேன்கலை வாணியுடன்
வள்ளக் கமல மலர்மாது தந்தருள் வாழ்வடைந்தேன்
தெள்ளத் தெளிந்தனன் போரூர் முருகனைச் சேவைசெய்தே. 52

பூதர விற்கொண் டவுணரை மாய்த்த புராரிமைந்தன்
ஆதர வாலணிப் போரூ ரிருந்திங் கவனருளாற்
சீதரன் நன்மரு காமுரு காஎன்று செப்பினன்பின்
தாதரம் போலுறுந் தீவினை யாவுந் தணந்தனவே. 53

வட்டாடல் போலப் பிறப்பதுஞ் சாவது மாக்கியென்றும்
ஒட்டாரஞ் செய்கின்ற மாயை யுணர்ந்தும் உணரவொட்டா
தட்டாவ தானஞ்செ யுஞ்சீவ ரைப்பொய்மை யாயிருத்துங்
கட்டாணி யானமுத் தேசம ராபுரிக் காங்கெயனே 54

ஆள்வேட்டம் ஆடும் அயில்விழி மாதர் அமைகடந்த
தாள்வேட்ட புன்னெஞ்ச மேயது சீவரைச் சூழ்ந்துகொண்டே
வேள்வேட்டம் ஆடுவ தாங்கேகல் போரி விசாகன்இரு
தாள்வேட்டு நாடுதி மேல்வீட்டின் இன்பந் தழைத்துறுமே.55

ஆறு சமயருந் தம்மிலொவ் வாதிங் கலைவதென்னே
தேறும் அறிவின ரெல்லாம் அறிந்துந் தெளிந்திலரே
பேறு தருந்தெய்வம் யாவைக்கும் யான்பெருந் தேவனென்றே
வீறு முகங்கொண்டு போரூர் முருகன் விளங்கியதே. 56

மற்றவர் நிற்கமெய்ஞ் ஞானிகள் வம்மின் வகுத்துரைக்கேன்
உற்றது கேண்மினெம் போரூர் முருகன் உயர்கதியை
நற்றமிழ்க் காழிவந் தெண்ணிலி யோர்க்கு நயந்தளித்தான்
கொற்றம் அவனதல் லாலெவர்க் குண்டினிக் கூறுமினே.57

கரும்பாற்செய் வேலி சுரும்பார்க்கும் போரியங்
காங்கெயன்போல்
திரும்பாச் சுகந்தரு வீடீவ தற்குஞ் சிறப்புடனே
பெரும்பாற் றிருத்தரு பெற்றிக்குந் தேவர் பிறரிலையென்
றிரும்பாற் கடற்றுயின் றோன்நெய்யி னூடுகை யிட்டனனே.58

வேதனெங் கேயவன் தாதையெங் கேவிண்ணின் நண்ணுபுரு
கூதனெங் கேமிகு தேவரெங் கேகுறை யாததவப்
போதரெங் கேயற மாதியெங் கேதிருப் போரியில்வாழ்
நாதனெங் கோனவ ரைப்போலச் சூரையும் நாடிடிலே.59

திருநீல கண்டம்வெந் தீவினை தீண்டப் பெறாஎனவே
கருநீல கண்டனைப் பாடி யடியரைக் காத்தவன்எம்
உருமே லிருந்த பிணியையும் மாற்றுவன் உண்மைநெஞ்சே
இருநீல வாவிநம் போரூ ரனைப்பணிந் தேத்துவையே.60

அஞ்ஞானத் தாலடி யேன்பிழை செய்யினு மாரருள்சேர்
மெய்ஞ்ஞானத் தாய்பொறுத் தாட்கொள்ள வேண்டும்
வியன்மறைதேர்
செஞ்ஞானத் தார்புகழ் போரூர் முருக செகமுயிராம்
பொய்ஞ்ஞானக் கூட்டத்துக் குட்புற னாகிய பூரணனே. 61

புரங்கொன்ற தேவெள்ளி மாமலை நீலப் புயமலைமேல்
உரங்கொண் டெடுத்தவன் ஈரைந்து சென்னியும் ஊடுறவே
கரங்கொண்ட வாளியி னாலெய்த மாயன் கனமருகா
திரங்கொண்ட போரி முருகாஎன் தீவினை தீர்த்தருளே. 62

நெஞ்சைக் கலக்குறுஞ் சேலோ ரிரண்டை நேரிழையார்
வஞ்சக் கலவிமெய் யென்றே மயங்கினை வன்னெஞ்சமே
துஞ்சற்கும் வந்து பிறத்தற்கும் ஏதது சொற்கதிசேர்த்
துஞ்சற்கு நீதிருப் போரூர்க் குகனை யுறப்பணியே. 63

கொலையாதி செய்தவ ராயினும் அன்பு குணம்பொறுமை
இலையாம் உளத்தின ராயினும் போரி யிசைந்தகுண
மலைபோ லிருந்த வடிவே லனைவந்து வாழ்த்தினரேல்
தொலையாமெய்ஞ் ஞான மடைவார்முன் மேவுந்
துயரிலரே. 64

இமையாக் கருங்கண் முலையானை மாதரை
யெண்ணியெண்ணிச்
சுமையாகப் பாவஞ் சுமக்குநெஞ் சேயிது துன்புகண்டாய்
சமையாதி யாறும் உடையோர்க்கு வீடு தரும்பெருமான்
நமையாட்கொள் போரிக் குமரேசன் சேவடி நாடின்பமே. 65

சடையாம் பவளக் கொடிபடர் பேரின்ப சாகரத்தே
கடையா தெழுந்த சுகவா ரமுதினைக் கஞ்சம்ஒன்று
புடைதோன்றும் உந்திப் புணரி மருகனைப் புண்ணியனை
மிடைதீரப் போரியிற் கண்டேன் கதியின்ப மேவினனே. 66

மேருப் பொருப்பினைச் சென்றே வியன்அண்ட கூடமுட்டுஞ்
சூரப் பொருப்பைத் தொளைத்தவை வேலவன்
துங்கன்எங்கோன்
போரிப் பிரான்எம் பிழைபொறுத் தாலன்ன பூதலத்தே
யாரிப் படிபொறுப் பார்சொல்க நீயிங் கறிந்துள்ளமே. 67

அண்டப் பரப்பினைக் கண்டோர் நொடிவரும் ஆய்ந்தபச்சைக்
கொண்டற் சிறைப்பெரு மாமயி லோன்குகன் எங்கள்ஐயன்

தண்டைத் திருப்பதம் போரூரில் வானவர் தம்முடிமேல்
தொண்டுற்ற பேர்முடி மேல்மறை மேலென்றுந்
தோன்றிடுமே. 68

தரைபகச் சீத்துத் திசையதி ரச்சிறை தான்புடைத்தே
எரிநிறச் சென்னி நிமிர்த்து வளைத்தெண் புலிநகவாய்
விரைவுறத் தோன்றத் திறந்தூழி மேக மெனத்தொனிக்கும்
பொருகொடிச் சேவலன் போரூர னாரினும் புண்ணியனே. 69

நதிபிறை கொன்றை செறிசென்னி மூன்றுகண் நான்குபுயந்
துதியிரு தாள்நிகர் மாணிக்க வெற்பைத் தொடர்ந்துபடர்
கதிதரு பச்சைக் கொடிதோன்றும் இன்பக் கனிஅளகை
அதிவளம் மேவிய போரூரில் வந்தெமை யாட்கொண்டதே. 70

நன்மை நினைத்துன் திருவடி சேர நயக்குமென்னைப்
புன்மைநினைத் துளங்கொண்டேக நொந்தனன்
பொய்மையினேன்
மும்மை யழிக்குறும் இன்பன்நம் போரி முருகப்பிரான்
செம்மை யளிக்கும் நினைவினி வேண்டுஞ் சிறியனுக்கே. 71

அவுணக் கருங்கடல் செங்கட லாக்கு மணிநெடுவேற்
சிவணுற்ற தோட்கிரிச் சேவகன் தன்னைச் செழுங்கொடிக்காற்
கவணுற்ற கைக்குற மானைத் திருடிய கள்வன்தன்னைக்
குவடுற்ற சாரலம் போரியி லேகண்டு கொண்டனனே. 72

கோலக் கருங்குயி லேமயி லேயென்று கொஞ்சுமலை
வாலைப் பருவமின் தந்தருள் ஆனந்த மாமுகிலைச்
சோலைப் புயல்மலர்த் தேன்பொழி போரிச் சுராதிபனை
மாலைக் கடந்த மனத்திற்கண் டார்க்குண்டு வாழ்வுகளே. 73

நீரிற் கயலெனக் கண்ணீர் துலங்கிநெஞ் சைக்கவற்று
நாரிச் சமனையும் நம்புவ ரோநல னேகொடுக்கும்
போரிப் பதியெங் குமரேசன் தாட்கன்பு பூண்டுநித்தஞ்
சீரிற் பெரிய கதிமேவி யின்பஞ் செறிபவரே. 74

சூரன் கிளைகளைந் தெண்ணிலி தேவர் துயர்களைந்து
வீரஞ் சிறந்த நவவீரர் முன்னவன் வேலையில்மேய்ந்
தாரம் புயல்துயில் போரூர் முருகன் அருளெனக்குச்
சீருங் குணமும் மருவுந் தவமும்நற் செல்வமுமே. 75

இருகோட் டொருமதி சூடும் பிரான்மகிழ்ந் தின்புறவே
திருகோட் டுபோதம் உரைசெய்த தேசிகன் செங்குழையாற்
குருகோட்டி மாதர் விளையாடும் போரிகைக் கூப்பினரைப்
பொருகோட் டெருமையன் கண்டாலும் அஞ்சிப்
புறஞ்செல்லுமே. 76

ஆரணன் நாரணன் இன்னமுங் காண்டற் கரியபரி
பூரணந் தோன்றிய பூரண னேதிருப் போரியில்வாழ்
காரண னேயொரு நாள்நீ யளித்த கரையில்சுக
பாரணம் என்றருள் வாய்கடை யேற்கெம் பரம்பொருளே. 77

மெய்வேடம் பூண்டவர்க் குள்ளும் புறனும் விளங்கும்பிரான்
பொய்வேடம் பூண்டனன் என்றாலுங் காத்தனை
பூங்கணையால்
எய்வேட னால்வருந் தாதெனை யாளினி யேய்ந்ததினை
கொய்வேட மானை மணந்தோய்தென் போரிக்
குணக்கொண்டலே. 78

அருண கிரிப்பெயர் மெய்ஞ்ஞான நாதன்சொல் லால்வனைந்த
பொருநை நகிக்கிரி யான்புகழ் மாலை புனைபுயனே
கருணை மிகுத்தென்னை யாண்டாய்க்கும் ஈண்டுகைம்
மாறுளதோ
தருண வளத்தின னேசம ராபுரிச் சண்முகனே. 79

மாலோன் விருந்தையை யுண்டாக்கிக் கொண்டிலன்
மாமலரோன்
மேலான நன்சிரம் ஒன்றாக்கிக் கொண்டிலன் மீதுயர்ந்த
நாலா மறைபுகழ் போரூரன் சம்பந்த நாமங்கொண்டே
நூலாம் இடைமயி லாக்கினன் என்பை நொடியினிலே. 80

சகல மதங்களை யெல்லா முணர்ந்த தவமுனிவோர்
புகலும் இலக்கம்எண் ணாயிரம் பேரைப் பொருகழுவில்
இகலுற வைத்தும் வரும்ஏத மொன்றின்றி யேயிருந்தான்
திகழுறும் போரியன் சம்பந்த நாமஞ் சிறந்துகொண்டே. 81

எண்ணற் கரிய சமணக் களைகளைந் தேதமிலாத்
தண்ணுற்ற பேரருள் நீர்பாய்ச்சிச் சைவப் பயிர்வளர்த்து
நண்ணச் சிவானந்த போகம் விளைவிக்கும் நல்உழவன்
விண்ணுற்ற தேவருஞ் சூழ்போரி வாழ்கின்ற வேலவனே. 82

தாருகன் கோளரி மாமுகன் கொக்கின் தனதுபெயர்க்
காருறு மால்வரை சூதம்வெஞ் சூரகங் காய்ந்தவைவேல்
பேருறு வோர்தமைக் காலனுந் தீண்டப் பெறான்எனிலே
போரியென் நாயகன் தாட்கே சரணம் புகுநெஞ்சமே. 83

ஆருயிர் யாவைக்கும் ஆனந்தத் தேனை யளிக்குமுக்கண்
தாருவி னாற்கவி மாமழை யேபொழி தண்முகிலே
காரிருள் மாமலந் தீர்த்தெனை யாளக் கடனுனக்கே
சீருரு தேசிக னேபோரி மாநகர்ச் சிற்பரனே. 84

வீரத் தவுண ருயிர்களை மேய்ந்து விரைவின்அவர்
சோரிக் கடலிடை யாடிக் குடர்த்தொங்கல் சூடிவெற்றிக்
கூருற்ற வேல்கரங் கொண்டோன்தென் போரிக் குமரன் என்மேல்
சீருற்ற பேரருள் வைத்தான் இஃதென் தெளிந்திலனே. 85

தேவரும் நாகரும் யாவரும் மும்முறை தெண்டனிட
மேவரும் மாமகு டத்தின் இராசிகள் மீதொளிருந்
தூவரு மாமணி ராசிகள் மேவித் தொடச்சிவந்த
பூவரு தாளினன் போரூர்க் குகனெனும் புங்கவனே. 86

கொக்கரித் தேவருந் தானவர் சேனையைக் கொன்றுழக்கி
மிக்கரத் தக்கட லாடிப் பிணமலை மீதிவர்ந்து
செக்கரில் தோன்றுங் கணநாதர் சேவிக்குஞ் சேவடியான்
இக்கரிக் குஞ்சுரும் பார்க்கின்ற போரிக் கிறையவனே. 87

மணிகொண்ட சேடன் படர்முடி தூக்கி மணியுதறித்
திணிகொண்ட மால்வரை மாடே பறந்துறச் சேண்பறந்தங்
கணிகொண்ட தேவர் தொழச்சென்று மீண்டிங் ககவுமும்மைக்
குணில்கொண்ட பேரிகை யார்க்கின்ற போரிக் குகன்மயிலே. 88

வாரி சுழல வடவரை யாதி வரைசுழலக்
காரொடு சந்திர சூரியர் மீன்கறங் காச்சுழலக்
கூரிருள் யாக்கை அரக்கர் சுழன்றிடக் கோதில்பச்சைத்
தேரென வட்டம் வரும்போரி வேலன் சிறைமயிலே. 89

மின்னல் சுடர்விழு தோட்டு மணிக்குழை மெல்லியலார்
பொன்னுற்ற பூண்முலை வேட்டநெஞ் சேயிது பொய்ம்மயக்கே

தன்னைத் தலைவனை யாராய்ந் தடையுந் தகைமையின்புக்
கென்னப்ப னாகிய போரூர்ச்செவ் வேளை
யிறைஞ்சுவையே. 90

முகடிடித் துச்சக்ர வாளத்தை முட்டிவெம் மூரியெட்டுப்
பகடுகுத் திக்கனல் சிந்திடப் பார்த்துப் பரவையெல்லாம்
அகடுறத் தேக்கி விடுத்துறத் தாவி யரைக்கணம்போய்க்
ககனமுற் றும்வரும் போரூரன் ஏறுங் கனதகரே. 91

மகுடங்க ளாறுங் குழையோர் பனிரண்டும் வானவரும்
புகழுங் கடகங்கள் ஈராறும் ஆழியும் பூனதப்பொன்
திகழும தாணியுஞ் செந்துகிர் ஆடையுஞ் செஞ்சிலம்பும்
நிகழும் படிதரித் தோர்தெய்வம் போரி நிலாவியதே. 92

நின்பாத தாமரைக் கன்பேது மின்றிய நீசன்பொல்லேன்
புன்போத மேலிட்ட பொய்யேன் பிழையைப் பொறுத்தருளாய்
அம்போ ருகமலர் ஒரா றலர்ந்த அருட்கடலே
செம்போரி வேலவ னேயிமை யோர்கள் சிகாமணியே. 93

செப்புக் கவித்தன்ன வன்குரத் தால்மண் சிதைத்தெறியுந்
துப்புற்ற மாவிற் கிணையாக வோதினர் சொல்கணத்தே
ஒப்பற்ற மூவுல கும்போய்த் திரும்பு மொருமனத்தே
எப்பெற்றி யாலுரைத் தார்சம ராபுரி எண்குணனே. 94

மெய்யாம் நெறிக்கண் அடியேன் செலுத்த விலங்கிமிகு
பொய்யாம் நெறிக்கண் எனைக்கொடு போமுளப்
போர்க்களிற்றை
ஐயா நினதரு ளாங்கயிற் றாற்பிணித் தானதண்டைச்
செய்யாருந் தாட்கந்து சேர்ப்பாய்தென் போரியஞ்
சேவலனே. 95

உள்ளூறு புல்நினை வெல்லா மொழிந்திங் குணர்வரிய
நள்ளிரு ளன்னஅஞ் ஞானமுந் தீர்ந்து நலனுதவுந்
தெள்ளிய பேரரு ளூடே கலந்தின்பு சேர்ந்திருப்பக்
கள்ளநெஞ் சேற்கும் வருமோதென் போரியங் காங்கெயனே. 96

எல்லாப் பொருள்களுந் தானாகித் தானொன்றி
லேய்வதின்றாய்ச்
சொல்லாற் கருத்தத னாற்சென்று கூடருஞ் சோதியதாம்

மல்லா ரணப்பொருள் நாயேற்கும் ஈய மதித்திகொல்லோ
நல்லார்க் கினிய குகனேதென் போரியென் னாயகனே. 97

எண்ணிய எண்ணிய வாறே சிறியனுக் கீந்தருளும்
புண்ணிய னேநின் மகிமையை யோர்ந்திலன் பொய்யவனேன்
கண்ணுறு மாமணி யேகருத் தூறுங் கனிரசமே
தண்ணளி மாமுகி லேபோரி மேவிய சண்முகனே. 98

உள்ளத் தழுக்கினை யெல்லா மகற்றி யுனதுபத
வள்ளக் கமலத் தெழுநற வானந்த வாரியிலே
கள்ளச் சிறியனை வைத்தாள வேண்டுங் கழனிமடை
அள்ளத் திறந்திடும் வாளைகள் போரி அயிலவனே. 99

மலஞ்சோர் கடத்தைப் பிணிக்கூட்டை ஒன்பது வாயிற்பையை
நலஞ்சால எண்ணிக் கடையேன் களித்தன னாய்ப்புலையேன்
திலஞ்சார் தயில மெனஎங்கு மானசி வானந்தத்தேன்
கலந்தே களிப்பதென் றோசம ராபுரிக் காங்கெயனே. 100

எண்ணிலி காலத்தின் பின்னரிக் காயம் இனிதளித்தாய்
நண்ணுறும் ஈதினும் மெய்ப்பத்தி யீந்திலை நாயடியேன்
பண்ணிய பாவமென் றேகும் பரகதி யென்றடைவேன்
விண்ணுறு தேவருஞ் சூழ்போரி வாழ்கின்ற வேலவனே. 101

திரவணி நீடிய போரூர்கை கூப்பிச் செழுங்கமலச்
சரவண வாவியில் நீராடித் தங்கச் சதங்கை கொஞ்சுங்
குரவணி பாதம் பணிவோர்க் கினிமை கொடுக்கும்பிரான்
அரவணி வோன்கும ராவடி யேனுன் அடைக்கலமே. 102

திருப்போரூர் அலங்காரம் முற்றிற்று

உ

# மருதமலை அலங்காரம்

## கந்தசாமிசுவாமிகள்

### காப்பு

கட்டளைக் கலித்துறை

சிலங்கா ரனைய குழன்மீ தணியுந் திருவனையார்
குலங்கா ரணைய மயில்போ னடனங் குயிற்றிசைசால்
வலங்கா ரகன்புகழ்ந் தேத்து மருத வரைக்குகன்ற
னலங்கா ரநல்கு மிராமானந் தன்பொன் னடித்துணையே. 1

### நூல்

கட்டளைக் கலித்துறைகள்

நேசத்து வந்து தினம்பேணு மன்பினர் நெஞ்சகத்தே
பாசத்து வந்துவஞ் சேராம லாண்டிடும் பண்பினவான்
மாசத்து வப்பெரி யோரேத்துஞ் சீர்கொண் மருதவெற்பில்
வாசத் துளவன் மருகோன் றிருவடி வாரிசமே. 2

மன்றங்க ளெங்கு நடமாடு மீசன்றன் மார்புடனே
குன்றங்க ளெங்குங் கமழ்ந்திடுஞ் சேய்பொற்
குளிர்மலர்த்தாண்
மின்றங் கருச்சுன வெற்பிற்கண் டேத்தினர் விண்ணவர்கண்
மென்றங் கலர்பொழிந் தேத்தவன் னோன்புர மேவுவரே. 3

கின்னம் பொருந்து மடவா ரகட்டிற் கிருமியைப்போ
லின்னம் பொருந்த விடாதே யடைக்கலம் யானடியேன்
சின்னம் பொருந்து மணிக்கவு மாரர் திரளெனவெள்
ளன்னம் பொருந்து மலர்த்தடஞ் சூழ்மரு தாசலனே. 4

பொன்னை மதித்தழி வார்களை யோர்பொரு ளாமதியா
துன்னை மதித்தடைந் தேனடி யேன்றனை யொத்திடநீ
யென்னை மதித்தரு ளிற்றுய ரொன்றெனை யெய்திடுமோ
பின்னை மதித்தணை வோன்றாழ் மருதப் பிறங்கலனே. 5

நறவார் மலர்ப்பொழில் சூழர்ச் சுனகிரி நாதநின்றாண்
மறவா வரமடி யேற்கீந் தினியுமொர் மாதகட்டிற்
பிறவாத வண்ணம் புரிந்தா ளுனையன்றிப் பேசின்மற்றோ
ருறவா னவரின் றுலகெவற் றூடு மெனதுயிர்க்கே. 6

உன்றிருப் பாதந் துணையென்று பஃறுதி யோதிடுமஃ
தன்றிமற் றொன்று மறிகின்றி லேன்மெய் யருச்சுனப்பேர்க்
குன்றிடத் தாயடி யார்மாட்சி நல்குவை கொல்கருவூ
டொன்றிடச் செய்வைகொ லோதெரி யேனின
துட்குறிப்பே. 7

பாடிடு மன்பர்க்கின் பீந்திடு நின்பத பங்கயங்கள்
கூடிடு மொப்பில் பரானந்த வின்பங் குவலயத்தி
லூடிடு மங்கையர் பொய்ச்சுகம் வாஞ்சித் தொழிவிலிடு
காடிடு மாக்கை படைத்தேங்கு மானிடர் காண்பரிதே.8

சழக்குண்ட வஞ்சக் கொடுமாயை யின்வன் றளையிடைப்பட்
டுழக்குண் டயரு மடியேனுக் குன்றா ளுபயநெஞ்சிற்
பழக்குண்ட தொண்டர் பெறும்பே றருளச்சம் பந்தமிக்க
வழக்குண்டு னக்கின் றெனிலெனக் குண்டு மருதையனே.9

கண்டமட் டுங்கறுத் தார்குரு நாதனைக் கார்முகிலிற்
கொண்டமட் டுங்கறுத் தோன்றாமு மர்ச்சுனக் குன்றிடத்திற்
றண்டமட் டும்புரி வாரையுங் கார்நிறச் சண்டன்முனங்
கண்டமட் டுந்திறற் றீர்வான் பிரமன் கதிநினைத்தே.10

அல்லாக்குஞ் சோலை யதனிடை பாம்பி னரதனங்க
ளெல்லாக்குஞ் சீர்கொண் மருதா சலனையுள் ளெண்ணிலுடன்
மல்லாக்கு மைம்புலன் மல்லாக்கும் வஞ்ச மனவடிவா
யில்லாக்கு மாயையை யில்லாக்கு மானந்த மீந்திடுமே.11

மருதா சலன்பொன் னடிகளை யன்பின் மனத்திருத்தக்
கருதாத நித்தப் புவிவாழ்வை மெய்யெனக் கண்ணியென்றும்
விருதா வினிலுழல் வார்நர சென்மத்தின் மிக்கதுகாண்
வருதா ரணிமிதித் தற்கஞ்சு பேய்பெறும் வன்பிறப்பே.12

திருவளிக் கும்பெருங் கல்வியு நல்கிடுஞ் சேணுலகார்
தருவளிக் கும்பத ம்யாவையு மீந்திடுந் தன்னனைய
வுருவளிக் குந்தொண்ட ரெண்ணிய யாவு முடனளிக்கு
மருவளிக் கும்பொழில் சூழ்மரு தாசலன் வண்பதமே. 13

தானந்த மாதியி லாதோங்கு நின்றிருத் தாட்டுணையா
மானந்த சாகரத் தெந்நா ளணைய வருள்புரிவாய்
பானந்த மேந்துகை மாயனின் மேகம் படிந்தணியார்
வானந்தந் தோய்மரு தாசல மேவிய வானவனே. 14

உன்னையொப் பாமுயர் வுள்ளாரு மெந்த வுலகிடத்து
மென்னையொப் பாமிழி வுள்ளாரு மின்றிவ் விருவகையாற்
றன்னையொப் பாநிலை பெற்றனம் யாமிந்தத் தன்மையினா
லன்னையொப் பாயுகந் தென்னையொப் பாய்மரு
தாசலனே. 15

அகோரவி கற்புரி மாயை வலைப்பட் டரிவையர்தம்
பகோதரத் திற்றொடக் குண்டழி யாதுகண் பார்த்தெனையுன்
சுகோதயப் பொன்னடி யூடொன்று மாறென்று
தோய்த்தருள்வா
யகோவெனும் பல்வளஞ் சான்மரு தாசல வாண்டவனே. 16

வானாருந் தேவர் துயரொழித் தாண்டவை வேலரசே
தேனாரு மின்பக் கவிகொண் டுனைத்துதி செய்திடுவேன்
யானாருந் துன்பறிந் துந்தா மதித்த லியல்புகொல்லோ
கானாரும் பூம்பொழில் சூழ்மரு தாசலக் காவலனே. 17

என்பற்ற புன்புழு வென்முற் றுடித்தலி னிவ்வுலகத்
தின்பற்ற வாழ்விற் றுடித்தோர் செயலற் றிரங்கெளியேற்
குன்பற்றல் லாற்பற்று வேறுள தோசொன்மு
னும்பர்கொண்ட
துன்பற் றிடச்செய் திடுமரு தாசலத் தூமணியே. 18

கல்லைப் புரையு மனத்தீனச் செல்வரைக் கண்டுவந்து
செல்லைப் புரைகைய னேயென்று பல்கவி செப்பியுறும்
பல்லைப் புரைபடக் காட்டுந ரேளனம் பண்ணவென்றன்
சொல்லைப் புரைபடுத் தேன்மரு தாசலச் சுந்தரனே. 19

அனங்கன் றிசைமுக னந்தக னாமிவ ராட்சியினான்
மனங்கன்றி யெண்ணரி தாந்துயர் கொண்டுமெய்
வாடக்கண்டு

முனங்கன்றி லாண்ட முறைமறந் தாய்முறை யோமுருகா
கனங்கன்றின் மேயு மருதா சலவருட் கண்ணருளே. 20

படைத்தலை யாற்றுவன் வேண்டாதுஞ் சூட்டுநின் பாதமென்ற
னுடைத்தலை மேல்வைத் திடவிரந் துஞ்சற் றுதவுகிலாய்
மடைத்தலைக் கொக்கஞ்சப் பாய்சேற்றண் வாவி
மருதவெற்பா
ளுடைத்தலை வாவருட் சிந்தேயென் றன்னை
யுகந்துகொள்ளே. 21

பொல்லாத தீமைக் குணங்கோடி கொண்டுநம்
பொன்னடிக்கன்
பில்லாத பாவியென் றென்னைப் புறந்தள்ள
வெண்ணுதியேற்
கல்லாத பேதைக் கூருள்வா ரெவர்கரு ணைக்கடலே
பல்லா தவரில் வயங்குவை வேற்கைப் பரஞ்சுடரே. 22

வாளார்ந்த வஞ்சகக் கண்மட மாதர் வடிவினையே
கோளார்ந்த வென்மனத் தூடுநின் னுள்ளங் குளிர்தவமெய்த்
தாளார்ந்த தொண்ட ருளந்தொறுந் துன்னடி சார்தலுண்டோ
வேளார்ந்த வின்பிற் பணிமரு தாசல வித்தகனே. 23

பகடேறி வந்ததட் டுங்கொடுங் கூற்றனும் பாவையர்த
மகடே றிடப்புரி மாரனும் வேதனு மான்றதையிற்
சகடே றிடுமரு தாசலன் றாளன்றிச் சாற்றுமண்ட
முகடேறி னாலும் விடார்மன மேசற்றுண் முன்னுதியே. 24

இந்தியத் தின்மனஞ் செல்லும் பொழுதி லிசைந்துளதாம்
புந்தியிற் காண்டரு சொற்ப னமாமிப் புவிப்பொருளை
நந்திற வாழ்வென் றுழல்வீ ரறிவின்மெய்ந் நாடியன்பின்
முந்தியுட் டோயு மருதா சலனடி முன்னுமினே. 25

தன்னையொப் பாம்வடி வேலாநின் றாட்டுணை தானினையா
தன்னையுந் தந்தையு முற்றாரென் றோர்கணத் தாயிரர்த்தோய்
மின்னையொத் தோடிடு பொன்னைநத் தென்னவி
வேகந்தனை
யென்னையென் றோதிடு வேன்மரு தாசலத் தெம்மிறையே. 26

ஊனானெ னச்சொற் றுழன்ற தல்லாலுன துண்மையருண்
ஞானாநு பூதி நிலையோர் சிறிது நயந்தறியேன்

மானா ரகடு புகாமைக்கென் செய்வன் மலர்பொழியுந்
தேனார் தடம்பொலி சீர்மரு தாசல சிற்பரனே. 27

வேடம் புனைந்தெதிர் காண்போர்க ளுள்ளம் வெருளமெத்த
வாடம் பரஞ்செய் திடுவேனுன் பாத மடைவதுண்டோ
தோடம் பரந்திழி வேன்றலை மீதடி சூட்டிடுவாய்
நீடம் பரந்தொட் டிடுமரு தாசல நின்மலனே. 28

மலையிடத் தாடல்செய் நின்றிருத் தாளென் மனமெனும்வன்
சிலையிடத் தாக வமைந்திட நீயுளஞ் செய்யிலுட
னுலையிடத் தாமெழு கேபோன் றிடற்கைய மொன்றுளதோ
தலையிடத் தாமணி நாகங் குலாமரு தாசலனே. 29

போதென் றுவமை பொருந்துநின் பாதம் புகுந்ததொண்டர்
கோதென்று விட்ட குணங்களெல் லாமொன்று
கூடியென்பால்
வாதென்றுஞ் செய்ய மனந்தளர் வேனைநின் வாரிசத்தாண்
மீதென்று கூட்ட நினைவா யருச்சுன வெற்பரசே. 30

மாயையென் றொன்றுனை யல்லாதுண் டென்ன
மதிக்கிலனுன்
சேயையிவ் வாறு செயலே னகலச் சினந்திடினுந்
தாயையல் லாலிளஞ் சேய்க்கிடம் வேறிச் சகத்திலுண்டோ
வேயையொப் பாமனத் தேற்கரு ளர்ச்சுன வேதண்டனே. 31

காமன் றனதலர் வாளிக் கயர்ந்திளங் கன்னியரை
மாமன்ற லாற்ற மதிக்குநெஞ் சொன்று வழுத்திடக்கே
ளேமன் றருதுய ரெல்லையில் லாதன வெண்ணியருட்
சேமந் தருமரு தாசலற் றோயின்பஞ் சித்திக்கவே. 32

உருவாழ்வு கொண்டிட வாரமு தான வுணவுகொள்ளுந்
தருவாழ்வு தானுமொர் வாழ்வன் றெனிலிச் சகவறித்தக்
கருவாழ்வு கண்டிறு மாத்தனன் றோவுட் கலந்தழியாப்
பெருவாழ்வு சீர்மரு தாசலன் றாளவை பேணுநெஞ்சே. 33

விரவுஞ்சத் தாதிய வாமரு தாசல வேலநின்றாள்
பரவுஞ்சத் தார்குண வீரர்க டாரகப் பாதகனாற்
கிரவுஞ்சத் தார்தரு பெற்றியுற் றேனெனைக் கிட்டுபுவாழ்
தரவுஞ்சத் தாள்பெற நல்குநின் செம்பொற் சரண்சரணே. 34

செய்வகை யொன்றறி யாதே யுலகச் சிறுநடையி
னைவகை மிக்குழன் றேன்மரு தாசல நாயகயா

னுய்வகை கொள்ளநின் பாலடுத் தேனரு ளூற்றுனைத்தோய்
மெய்வகை யன்பரன் பீந்தா ளுனைமிக வேண்டினனே.35

அல்லும் பகலு மறியா விடத்தி லமர்ந்தடியேன்
சொல்லும் பொருளுமற் றுன்பத பங்கயந் தோய்சுகத்தி
லொல்லும் படியெற் கருளுந் தினமொன் றுளதுகொலோ
செல்லும் பரிதியுந் தோய்மரு தாசல சிற்பரனே. 36

மனமென்ற பாவி மயல்கொண்டு தீவினை மங்கையர்தந்
தனமென்ற வெற்பி லிவர்ந்திழி யல்குற் சலதிபுக்குக்
கனமென்ற னந்தம் பிணிமழை பெய்பொய்க் கடங்கடக்குந்
தினமென்றென் றேனுஞ்சொல் வாய்மரு தாசல
சேவகனே. 37

வனங்கா தலிக்குஞ் சடையானுங் கும்பனும் வாழ்த்துபுதம்
மனங்கா தலிக்கு மருதேசன் பாத மறந்துவன்பே
யினங்கா தலிக்கு மினமான மாதரொ டேதமிக்க
தனங்கா தலிக்கு மனமே யுனக்கென்ன சால்புடைத்தே.38

தேனூறு மின்ப மருதா சலன்புகழ் செப்பெனவே
நானூறு கோடி தரமுனைப் போற்றி நவிலினும்விட்
டூனூ றுடையபொய் வாழ்விலின் புண்டென் றுழன்றனையா
லேனூ றுனைவிட் டகலுநெஞ் சேமதித் தெண்ணுதியே.39

பவந்தோறு மென்மன மேயுன் வழியிற் படர்ந்தளவி
லவந்தோயுந் துன்புழந் தேன்பிறப் பொன்றிதி லாயினும்யா
னுவந்தோது மாற்ற மதித்தன்பி னோடென் னுடனிணங்கிச்
சிவந்தோயு மாமரு தாசலன் றாட்டுணை சேர்ந்துருகே. 40

பெருகும் பரசுகத் தேனல்குன் றாட்டுணை பேணியுள்ள
முருகுஞ் செயல்சற் றடையாத பாவி யொதியனையேன்
பொருகுஞ் சரநிகர் மெய்த்தொண்டர் பான்மை
பொருந்தலுண்டோ
முருகுந்து தண்டலை சூழ்மரு தாசல முன்னவனே. 41

முன்னந் தரங்கக் கடற்றாண்டிச் சூரை முடித்திமையோர்
மன்னந் தரங்கவி னெய்தச்செய் தாளு மருதவெற்பா
யென்னந் தரங்க மறிந்துஞ் சிறிது மிரங்கிலர்போ
லின்னந் தரங்கம் பெறக்காண்ட னின்னருட் கேற்பதன்றே.42

பழிக்கே பிறப்பிட மாமட மாதர்தம் பாலமுத
மொழிக்கே கலக விழிக்கே யிடையின் முடைகொளுந்திச்

சுழிக்கே விருப்பம் பெறுவதல் லாற்சிற் சுகங்கொணின்றாள்
வழிக்கே வராமனத் தாலிளைத் தேன்மரு தாசலனே. 43

வகையொன்றுந் தேர்கில னாயாண வாதி மலங்களினான்
மிகையொன்றும் வெம்பவத் தின்னன்மிக் கெய்த்தனன் வேதவருட்
சிகையொன்று நின்பதஞ் சூட்டிமெய்த் தொண்டர்கொள் சீர்பெறவே
தகையொன்று மாமரு தாசல சற்றெனைத் தாங்கிக்கொள்ளே. 44

வெப்பின் றியதண் விளக்கா யெனதுள மேவியநின்
னொப்பின் றியதுணைத் தாணாடிச் சற்று முருகலின்றித்
துப்பின் றியவத் தலையுமென் னெஞ்சநின் றொண்டரொப்பாத்
தப்பின் றியநெறி தாங்கலெந் நாண்மரு தாசலனே. 45

காலத்தை வீணிற் கழித்ததல் லாலருட் காட்சிபெறுஞ்
சீலத்தை யோர்சற் றறிகின்றி லேன்வெஞ் சினத்தொடிருட்
கோலத்தை மேவி வருநம னுக்கென் குயிற்றிடுவேன்
சாலத்தை நீக்கி யருண்மரு தாசல தற்பரனே. 46

சின்னஞ் சிறுபரு வத்தில்வந் தாண்டின்று தேர்கிலர்போற்
பென்னம் பெரிய துயருறக் கண்டும்பே சாதிருந்தாய்
கன்னங் கரிய நிறத்தந் தகன்கொளக் காட்டிவிடே
றன்னந் தனிப்பொரு ளேமரு தாசல சண்முகனே. 47

தருவாகி நின்றம ரர்க்குறு போகந் தருதலிற்சற்
குருவாகி வந்தடி யேற்கருட் சீலங் கொடுத்துமின்னங்
கருவாகி டும்வழி யென்னெஞ்ச மோடக் கறங்கிலெய்த்தே
னருவாகி வாழ வருண்மரு தாசல வாண்டவனே. 48

பண்டுண்ட வொன்றினை நாளும் புதிதெனப் பற்றுமிஞ்சி
யுண்டுண் டலைமனத் தேனீ யருள்சற் றுதவினன்றித்
தொண்டுண்ட மெய்யடி யார்போல நின்சிற் சுகக்கடலின்
மொண்டுண் டமையே னிசமரு தாசல முத்திவித்தே. 49

உலைக்கண் ணிடுமெழு கேபோல நெஞ்ச முருகுனன்பர்
முலைக்கண்ணிற் பாற்பெரு வாரிதி தோன்று முறையிலின்ப

வலைக்கண் ணியைந்தனர் நானேழை வஞ்சக
வைம்புலப்பொய்
வலைக்கண் ணிருந்துயர் கொண்டேன் மருத வரையரசே. 50

நானுட னீயென் றிடும்பேத முற்று நசிக்கநறுந்
தேனுடன் பால்கலந் திட்டது மொப்பின்மெய்ச் சிற்சுகத்தி
லூனுட னுள்ள முருகும் படிக்கென் றுதவியென்னை
மானுடப் பேறு பெறப்புரி வாய்மரு தாசலனே. 51

மீனென்று மானென்றும் வேலென்றுங் கோலென்றும்
வேடனம்பு
தானென்று மாதர்கண் ணைப்புகழ் மோகந் தவிர்ந்தவனி
வானென்று மேத்து மருதாச லேசநின் வண்புகழ்ச்சீர்
நானென்றுந் துத்தியஞ் செய்துய்யு மாறரு ணல்குவையே. 52

விடந்தீண் டிடுந்தகை போலெனைச் சற்றும் விடாதுமயற்
சடந்தீண்டி வாதனை தந்திடச் சாலத் தளர்ந்தனன்வா
னிடந்தீண் டியமரு தாசல மீதி லிலங்குனின்ப
நடந்தீண் டியபத நான்றீண்ட வென்றரு ணல்குதலே. 53

வழியாது மோர்கில னாயா ணவவன் மலத்தினுட்கண்
விழியா தழுஞ்சிறு சேய்போற் கிடந்து வெதும்புகின்றேன்
சுழியா தருளிலுய் வேன்சோதிப் பானீ தொடங்கிலுய்யேன்
பொழிவார் மதுப்பொழில் சூழ்மரு தாசலப் புண்ணியனே. 54

புண்ணியர் யாருநின் பொன்னடி போற்றிப்
பொருவிலின்பாங்
கண்ணிய மெய்திக் களிதூங் கினரிக் கடையவனேன்
மண்ணியல் வாழ்க்கையை மெய்யென்று நாடி மதியிழந்து
புண்ணியன் மாயையி லாழ்ந்தேன் மருதப்
பொருப்பிறையே. 55

அந்தோவிவ் வேழைச் சிறியேன் சகித்தற் கரியதுன்பா
னொந்தோல மிட்டரற் றும்பான்மை தன்னையுண்
ணோக்கினிற்குச்
சந்தோட மேவுவ தோமே விடிலதென் சம்மதங்காண்
பைந்தோகை யாட லறாமரு தாசலப் பார்த்திபனே. 56

கவலைகள் யாவுங் கழிந்தேநின் செம்பொற் கழற்றுணையா
முவமையின் மெய்ச்சச்சி தானந்த வாரிதி யுண்டெழுந்து

நவரசப் பாடல்பல் கோடிபெய் தாட னவிற்றவென்னுட்
டவவிழைந் தேன்மரு தாசல வாஞ்சை தருவதென்றே. 57

வார்க்குங் குமமுலை யாரநு ராக வழியிலென்னை
யீர்க்குங் கொடுமனப் பேய்க்கோட்பட் டெய்க்குமெ
னின்னலறத்
தீர்க்கும் படியென்று நீநினை வாயுயர் சேணையெட்டிப்
பார்க்குஞ் சிகரி குலாமரு தாசலப் பார்த்திபனே. 58

திருந்துங் குணமலி மெய்த்தொண் டடியவர் சென்னிமிசை
பொருந்தும் பதமலர்க் கென்சென்னி சாலப்
பொருத்தமின்றோ
முருந்துந் தளவ வரும்பும் பொருங்கதிர் மூரல்வள்ளி
வருந்துன் படவி புகுமரு தாசல வானவனே. 59

கீர்த்தியென் றூழ்மரு வென்னே ரருண கிரிப்பெயர்சான்
மூர்த்தி புகலுன் றிருப்புகழ்ப் பாக்கண் முதிருமன்பி
லார்த்தியி லோதித் துதிக்காத வத்தி லலையெனைக்கண்
பார்த்திடு தற்கிசை வாயோ மருதப் பருப்பதனே 60

பனையென்று நீடுயர் பல்கோடி நல்குமிப் பார்நடையின்
மனையென்று மைந்தரென் றுஞ்சுழன் றெய்க்குமென்
வஞ்சநெஞ்ச
நினையென்று மன்பி னினையென்று சால நிகழ்த்தினும்யான்
றினையென்றுங் கொள்கில தேமரு தாசல சிற்பரனே. 61

கண்டுண்ட மாதிய கொண்டுநின் றாளிற் கலந்தவின்ப
மொண்டுண் டகிலச் சிறுநடை தோயு முயக்கறுமெய்த்
தொண்டுண்ட பேரன் பினர்போ லடியேன் றுலங்கிடுநா
ளுண்டுண்டு கொன்மரு தாசல வேலவ வோதுதியே. 62

வேதா கமமுடி மீதே முடியில் விளங்குநின்பொற்
பாதார விந்தமல் லாதுன தாணையிப் பார்மிசையோ
ராதாரங் காண்கில னீதுன் னுளமறி யாச்செயலோ
மாதா பிதாகுரு வாமரு தாசல வானவனே. 63

மட்டாரு நின்பொற் சரண்சர ணென்று மதித்தவெனை
யெட்டாத பேரின்ப ஞானாநு பூதி யிசைத்தருளில்
விட்டாலு மல்லது மாபாவி யென்றுள் வெறுத்திருளி
னுட்டாழ வைக்கினும் பாரநிற் கர்ச்சுன வோங்கலனே. 64

மயனிறை வுற்றபொய்ப் பார்மீதிற் றந்தை மரபமைந்தா
ரியனினைக் குந்தொறுஞ் சோதனை நீமிக் கியற்றிடினும்
வியனில குற்றெனொர் நெஞ்சத்து ளோகை மிகுக்கின்றதால்
கயனில வுஞ்சுனை யார்மரு தாசல கந்தப்பனே. 65

தேனென நின்புக ழேபாடு மாசை செறிந்தவெனை
யானெனக் கூவி யணையாம னெஞ்சத் தருளிலர்போ
லேனெடுஞ் சோதனை பல்வா றியற்றியு ளெய்க்கவைத்தாய்
கானெழுந் தண்டலை சூழ்மரு தாசல காங்கெயனே. 66

பித்துல கத்தவர் தம்மையுற் றாரெனப் பெற்றவரோ
டொத்துழ லுங்கொடு மாயப் பிணிமுற் றொழிந்தறவே
நத்துல வுங்கட லுண்டாற் கருண்மொழி நல்கிடுவாய்
சத்துமுன் முப்பொரு ளாமரு தாசல சற்குருவே. 67

எற்றுங் கொடும்புலக் கோட்பட்டி யானீண் டிரங்குசெயன்
முற்றுந் தெரிந்து மிரங்கா திருத்தன் முறைமைகொல்லோ
வெற்றுன்ப நின்றுனை யல்லா லெடுப்பவர் யாரிசையாய்
விற்றுன்று மண்டிலந் தோய்மரு தாசல வித்தகனே. 68

மானிட ரானவர் யாவரு மர்ச்சுன வள்ளனின்றாள்
வானிடந் தோய்ந்திறப் பின்றிய வானந்த மன்னினர்யா
னூனிதி லாசை மிகுத்தே யுணர்வற் றுழன்றிடும்வெங்
கானிடத் தார்விலங் கொத்திழிந் தேன்கதி
காண்பதென்றே. 69

மனங்கண்ட குற்றங்கள் பற்பல கோடி மலைகடல்போற்
றினங்கண்ட பாவிக் கொடியேனென் றுன்மெய்த்
திருவுளத்திற்
சினங்கண் டனையெனி னாயேன் றனக்கொரு திக்குளத்தோ
கனங்கண் டகவுஞ் சிகிமரு தாசல கந்தப்பனே. 70

எப்படி யாகினு நம்மைவி டானெந்தை யென்றுதின
மிப்படி மீதெதிர் கண்டோ ரிடத்து மிசைக்குமென்சொல்
பொய்ப்படி யாகிடு மாறரு ளாது புறக்கணியேன்
முப்படி யுந்தொழுஞ் சீர்மரு தாசல முன்னவனே. 71

வம்புந்து மைம்புல வேடர்க ளான்மிக மாழ்கிநொந்து
வெம்புந் தகையுடை யேனா யினுநின் விரைமலர்த்தா
ணம்புந் தகையு முடையே னெனைக்கை நழுவவிடேல்
கொம்புந்து தேன்கொட் டிடுமரு தாசலக் கொற்றவனே. 72

வேண்டா திகழ்ந்துரைக் குஞ்சமன் றன்பதி மேவநம்மைக்
கூண்டா ரொடும்வந் தழைக்குமக் காலுளக் கோயில்கொண்ட
வாண்டான் மருதப் பிறங்கலில் வாழ்நம் மருட்கடறான்
வீண்டா னிருந்திடு வானோவ வன்றுதி விண்மனமே.73

கற்பனை பற்பல கோடிகொண் டொவ்வொர் கணத்துமுயர்
மற்பனை போற்றுயர் கொண்டுகொண் டேங்கென்
மடநெஞ்சமே
யற்பனை மார்க ளனந்தரிற் சீர்த்த வருண்மருத
வெற்பனை நாடுதி யேலெய்து மின்பம் விளம்பரிதே.74

கோதுசெய் வஞ்சக் கொடுமாயை யின்னங் குவலயத்திற்
காதுசெய் வஞ்ச விழியார் கரங்கொளக் காட்டிடுமோ
யாதுசெய் யுங்கொலென் றேங்கிடு வேற்கு ளிரங்கியெந்தப்
போதுசெய் வாயருண் மாமரு தாசல புண்ணியனே.75

ஆனந்த வாரிதி மேலெழுந் தார்க்கு மலையெனவே
நானந்த மின்றிநின் சீர்கோடி யாக நவின்றுதியா
வானந்த மெய்திட வாஞ்சித் தனனந்த வண்ணநல்கா
தேனந்த வீண்டலைக் கின்றா யுருச்சுனத் தெம்மிறையே.76

பேயென்று மேலவர் தாம்வெறுத் தோதிய பேதையர்தோள்
வேயென்று மங்கதைத் தோயென்றுஞ் சால
விளம்பியென்னை
நோயென்றுஞ் செய்மன மேமரு தேசனை நோக்கியன்பிற்
சேயென் றுரைத்தறி வாயெனின் மற்றிதைச்
சீயென்பையே.77

எங்கெங்கு போஞ்சனி கட்பற்றிச் சுற்றமென் றெண்ணியிகத்
தங்கங்குஞ் சென்று பொருளீட்டி மற்றவர்க் காக்கிமிகு
பங்கஞ் சுமந்து மடிவேற்கு ஞானம் பலித்திடுமோ
துங்கம் பொருந்து மருதா சலத்தமர் தூமணியே. 78

நசைசான்ற தொண்டர்க டோய்மரு தாசல நாயகனின்
னிசைசான்ற பத்தியில் லாரிறு மாக்கு மிகற்கலியில்
வசைசான்ற விவ்வுல கத்திருத் தற்குண் மதிக்கலனித்
தசைசான்ற துன்பப் பொறையொழித் துன்பதஞ்
சார்த்தருளே.79

பணமென்று மாடென்றுங் காடென்றும் வீடென்றும்
பாவைநல்லார்
மணமென்றும் பேசி யிருந்தே சுவாச வழக்கொழியிற்
பிணமென் றெடுத்திடு காட்டிட் டழுதமை பேயர்நட்பைக்
கணமென்றும் வேண்டுகி லேன்மரு தாசல காத்தருளே. 80

அம்பர மோவெனுங் கண்மட வார்மிசை யாசைமிஞ்சிப்
பம்பர மோவென வோயாது சுற்றுமென் பாவிநெஞ்சஞ்
செம்பர மோக்கம வாயுனை நாடொர் தினமுளதோ
வம்பர மோடணை யுங்கோ புரமரு தாசலனே. 81

ஞானத் திருப்புளஞ் சாலரு ணைச்சுக் நாதனவில்
கானத் திருப்புக ழோதியொர் சற்றுங் கசிந்துருகா
வீனத் திருப்புள வஞ்சனை யுன்னடி யெய்துமன்பர்
மானத் திருப்புகண் டாய்மரு தாசலம் வாழ்குகனே. 82

முன்னெஞ்ச லின்றி யருளாடல் கோடி முயன்றதன்பர்
நன்னெஞ்ச மேவிய தன்மையி னாலென நன்குணர்ந்தே
னென்னெஞ்ச மேவிய தன்மையி னிற்கு மிரங்குகிலா
வன்னெஞ்ச மாகிய தான்மரு தாசல மாமணியே. 83

மதிகொண்ட தொண்ட ருளத்தோ டுயரு மருதவெற்பிற்
குதிகொண்ட தாமரைத் தாள்சிரஞ் சூட்டியென்
கோதொழித்துப்
பதிகொண்ட வாழ்விற் பதித்தரு ளாய்செழும் பங்கயந்தோய்
சுதிகொண்ட நான்மறை யோனாதி யர்தந் தொடர்பறவே. 84

தேகாபி மானத் தளையுண்ட நித்த செகப்பெயர்கொண்
மோகா டவியிற் சுழல்பாவி வன்கொடு மூர்க்கனிவ
னாகா தவனமக் கென்றுளத் துன்னி யகற்றுதியே
லேகா வருட்கட லேமரு தாசல யார்கதியே. 85

தாயா தரிக்கில னேற்பிள்ளைக் கேதொரு சார்பதுபோ
னீயா தரிக்கிலை யேன்மரு தாசல நெஞ்சயர்ந்திட்
டோயா தரிக்கும் புலனா லலைப்புண் டொழிவதல்லாற்
சேயா தரிக்கும் வகையேது நீயுட் டெரிவதிதே. 86

முருகாவென் றுன்னரு ணாமமெய் யன்பின் மொழிந்திடுவாட்
கருகாகி நீகர மீந்தாண் டருள்கை யறிந்திருந்தும்
பெருகா தரங்கொடுன் பேரோதி நின்னடி பேணிலராய்
வருநாசிக் கான்மறிப் பார்மதி யென்மரு தாசலனே. 87

மையுற்ற வையக் கடத்தின்மின் னாரென் வனசரரென்
கையுற்ற ஞானப் பொருளா றலைக்கக் கலங்கிநொந்தேன்
மெய்யுற்ற நின்னரு ளாந்துணை தன்னை விடுக்கிலுய்வேன்
வையுற்ற வேற்படை யாய்மரு தாசல வானவனே. 88

கரணத்தொ டைம்பொறி யாதியு மெத்தக் கலங்கவரு
மரணத் தொடுபவ மென்றெற்றொடர்பிணி மாற்றவுன்பொற்
சரணத் துணைசர ணத்துணை யாமெனச் சார்ந்தனன்பைங்
கிரணத் தொகரப் பரியூர் மருதக் கிரிக்கந்தனே. 89

வன்புள மாயை வடிவா மனமென் வசமகன்றே
துன்புள வைம்புலப் பாற்கணந் தோறுஞ் சுழற்றவெய்த்தே
னன்புளத் தொண்டர் பெரும்பே றெனக்கென்
றளித்தருள்வாய்
பொன்புணர் கஞ்சத் தடஞ்சூழ் மருதப் பொருப்பிறையே. 90

உலைமீ துறுமெழு கேபோல நெஞ்ச முருகிடவென்
றலைமீதுன் பொன்னடி சூட்டிமெய்த் தொண்டர்கள்
சார்ந்தவின்ப
நிலைமீ தமையப் புரிந்தருள் வாய்நிக ரின்மருத
மலைமீ தமைகுரு வேசற் றுனது மனமுவந்தே. 91

தாட்டா மரைத்துணை யென்சென்னி மீதிற் சதுமுகன்கை
தீட்டாமற் சேய்கொள்ளி நாட்டாம லுள்ளஞ் சிறிதிரங்கிச்
சூட்டாமன் மெய்ந்நிலை காட்டாம லின்னமுஞ் சோதனையோ
சேட்டா மருவு மருதா சலத்தெஞ் சிவக்கொழுந்தே. 92

விரதவித் தாரமெய்த் தொண்டர்க ளொத்திட மேனடிக்கும்
பரதவித் தார முடையே னெனினுநின் பங்கயந்தோய்
சரதவித் தாகிய வாஞ்சையு ளேன்மரு தாசலஞ்சால்
வரதவித் தாலென்னை யாட்கொள்ள நிற்கொர்
வழக்குளதே. 93

எனைத்தடுக் குந்தடை யெல்லாந் தடுத்துனை யெய்தநெஞ்சி
னினைத்தடுத் தேனடி யேற்கருள் செய்ய நினைத்தடுக்கி
னினைத்தடுக் குந்தடை யொன்றுள தேகொ னிகழ்த்திடுவாய்
கனைத்தடுக் கும்புய றோய்மரு தாசலக் காவலனே. 94

வெதுப்புஞ் சகலத் தொடுகேவ லத்தில்வி ழாமலுன்பொன்
மதுப்புண் டரிகத் திருத்தாளி லென்றெனை வைத்தருள்வாய்

சதுப்புந்து மாயைப் புவிவாழ்வி லிச்சை தவிர்ந்தவருள்
விதுப்புந்து சீர்மரு தாசல மேவிய வித்தகனே. 95

மின்கவின் மேனி யருட்குரு வாக விளங்கியரு
ணின்கரு ணைத்திறஞ் சற்றேனு மன்பி னினைந்துருகா
வன்கருங் கல்லன்ன நெஞ்சகத் தேன்வயக் கும்பிழைகட்
கென்கட வேன்கழு வாய்மரு தாசலத் தெம்மிறையே. 96

சும்மா விருசொல் லறவென்று நீமுனஞ் சொற்றலுமே
யம்மா பொருளொான் றுமறிந் திலனெ னருணையெங்கோன்
விம்மானந் தானு பவஞ்சிறி யேற்கு விளக்கிடுவாய்
கைம்மா வுலவும் பொழின்மரு தாசல காரணனே. 97

மலவாகக் கானடைந் திட்டே னடைக்கல மற்புரியும்
புலவேட ராலரிப் புண்டே னடைக்கலம் புன்மனச்சஞ்
சலவாழ்க்கைக் குட்சலித் திட்டே னடைக்கலந் தாங்கியரு
ணலமேற் றடைக்கல நான்மரு தாசல நாயகனே. 98

வள்ளிதெய் வப்பிடி நாதா வபய மணங்கமழுங்
கள்ளிய னீபத் தொடையா யபயங் கலாபவெழிற்
புள்ளி மயிற்பரி யானே யபயம் பொருதுசத்தோ
டொள்ளிய வேன்மரு தேசா வபய முனதடிக்கே. 99

படைக்கலந் தாங்கிப் பொரும்வேள் சமன்றன் பகைபெறும்பார்
நடைக்கலந் தோர்புக லுங்காண் கிலதுநின் னாண்மலர்த்தாட்
கடைக்கல மாயின னாயேனை யுன்ற னருளடியார்
புடைக்கலந் தின்புறப் பார்மரு தாசல போற்றியவே. 100

திசையாறு மேமுக மாய்ச்சம யங்க டிருப்புயமா
யிசைவேத வாகம நிச்சயந் தாள்க ளிரண்டெனக்கொண்
டசையாப் பரந்தண்ட மேந்துகைத் தேசிக னாமுருவாய்
நசைதோ யடியர் தொழமரு தாசல நண்ணியதே. 101

மருதமலை அலங்காரம் முற்றிற்று

உ

# திருமுருகாற்றுப்படை

## நக்கீரர்

### 1. திருப்பரங்குன்றம்

உலக முவப்ப வலனேர்பு திரிதரு
பலர்புகழ் ஞாயிறு கடற்கண் டாஅங்
கோவற விமைக்குஞ் சேண் விளங் கவிரொளி
யுறுநர்த் தாங்கிய மதனுடை நோன் தாள்
செறுநர்த் தேய்த்த செல்லுறழ் தடக்கை 5
மறுவில் கற்பின் வாணுதல் கணவன்
கார்கோள் முகந்த கமஞ்சூன் மாமழை
வாள்போழ் விசும்பில் வள்ளுறை சிதறித்
தலைப்பெய றலைஇய தண்ணறுங் கானத்
திருள்படப் பொதுளிய பராரை மராஅத் 10
துருள்பூந் தண்டார் புரளு மார்பினன்
மால்வரை நிவந்த சேணுயர் வெற்பிற்
கிண்கிணி கவைஇய வொண்செஞ் சீறடிக்
கணைக்கால் வாங்கிய நுசுப்பிற் பணைத்தோள்
கோபத் தன்ன தோயாப் பூந்துகிற் 15
பல்காசு நிரைத்த சில்கா ழல்குற்
கைபுனைந் தியற்றாக் கவின்பெறு வனப்பி
னாவலொடு பெயரிய பொலம்புனை யவிரிழைச்
சேணிகந்து விளங்குஞ் செயிர்தீர் மேனித்
துணையோ ராய்ந்த விணையீ ரோதிச் 20
செங்கால் வெட்சிச் சீறித ழிடையிடுபு
பைந்தாட் குவளைத் தூவிதழ் கிள்ளித்
தெய்வ வுத்தியொடு வலம்புரி வயின்வைத்துத்
திலகந் தைஇய தேங்கமழ் திருநுதன்
மகரப் பகுவாய் தாழமண் ணுறுத்துத் 25

துவர முடித்த துகளறு முச்சிப்
பெருந்தண் சண்பகஞ் செரீஇக் கருந்தகட்
டுளைப்பூ மருதி னொள்ளிண ரட்டிக்
கிளைக்கவின் றெழுதரு கீழ்நீர்ச் செவ்வரும்
பிணைப்புறு பிணையல் வளைஇத் துணைத்தக 30
வண் காது நிறைந்த பிண்டி யொண்டளிர்
நுண் பூ ணாகந் திளைப்பத் திண் காழ்
நறுங்குற டுரிஞ்சிய பூங்கேழ்த் தேய்வை
தேம்கமழ் மருதிணர் கடுப்பக் கோங்கின்
குவிமுகி ழிளமுலைக் கொட்டி விரி மலர் 35
வேங்கை நுண்டா தப்பிக் காண்வர
வெள்ளிற் குறுமுறி கிள்ளுபு தெறியாக்
கோழி யோங்கிய வென்றடு விறற்கொடி
வாழிய பெரிதென் றேத்திப் பலருடன்
சீர்திகழ் சிலம்பகஞ் சிலம்பப் பாடிச் 40
சூரர மகளி ராடுஞ் சோலை
மந்தியு மறியா மரன்பயி லடுக்கத்துச்
சுரும்பு மூசாச் சுடர்ப்பூங் காந்தட்
பெருந்தண் கண்ணி மிலைந்த சென்னியன்
பார்முதிர் பனிக்கடல் கலங்கவுள் புக்குச் 45
சூர்முத றடிந்த சுடரிலை நெடுவே
லுலறிய கதுப்பிற் பிறழ்பற் பேழ்வாய்ச்
சுழல்விழிப் பசுங்கட் சூர்த்த நோக்கிற்
கழல்கட் கூகையொடு கடும்பாம்பு தூங்கப்
பெருமுலை யலைக்குங் காதிற் பிணர்மோட் 50
டுருகெழு செலவி னஞ்சுவரு பேய்மகள்
குருதி யாடிய கூருகிர்க் கொடுவிரற்
கண்டொட் டுண்ட கழிமுடைக் கருந்தலை
யொண்டொடித் தடக்கையி னேந்தி வெருவர
வென்றடு விறற்களம் பாடித்தோள் பெயரா 55
நிணந்தின் வாய டுணங்கை தூங்க
விருபே ருருவி னொருபே ரியாக்கை
யறுவேறு வகையி னஞ்சுவர மண்டி
யவுணர் நல்வல மடங்கக் கவிழிணர்
மாமுதற் றடிந்த மறுவில் கொற்றத் 60
தெய்யா நல்லிசைச் செவ்வேற் சேஎய்
சேவடி படருஞ் செம்ம லுள்ளமொடு

நலம்புரி கொள்கைப் புலம்பிரிந் துறையுஞ்
செலவுநீ நயந்தனை யாயிற் பலவுட
னன்னர் நெஞ்சத் தின்னசை வாய்ப்ப 65
வின்னே பெறுதிநீ முன்னிய வினையே
செருப்புகன் றெடுத்த சேணுயர் நெடுங்கொடி
வரிப்புனை பந்தொடு பாவை தூங்கப்
பொருநர்த் தேய்த்த போரரு வாயிற்
றிருவீற் றிருந்த தீதுதீர் நியமத்து 70
மாடமலி மறுகிற் கூடற் குடவயி
னிருஞ்சேற் றகல்வயல் விரிந்துவா யவிழ்ந்த
முட்டாட் டாமரைத் துஞ்சி வைகறைக்
கட்கமழ் நெய்த லூதி யெற்படக்
கண்போன் மலர்ந்த காம்மரு சுனைமல 75
ரஞ்சிறை வண்டி னரிக்கண மொலிக்குங்
குன்றமர்ந் துறைதலு முரிய னதாஅன்று.

## 2. திருச்சீரலைவாய்

வைந்நுதி பொருத வடுவாழ் வரிநுதல்
வாடா மாலை யோடையொடு துயல்வரப்
படுமணி யிரட்டு மருங்கிற் கடுநடைக் 80
கூற்றத் தன்ன மாற்றரு மொய்ம்பிற்
கால்கிளர்ந் தன்ன வேழ மேல்கொண்
டைவே றுருவிற் செய்வினை முற்றிய
முடியொடு விளங்கிய முரண்மிகு திருமணி
மின்னுற ழிமைப்பிற் சென்னிப் பொற்ப 85
நகைதாழ்பு துயல்வரூஉம் வகையமை பொலங்குழை
சேண்விளங் கியற்கை வாண்மதி கவைஇ
யகலா மீனி னவிர்வன விமைப்பத்
தாவில் கொள்கைத் தந்தொழில் முடிமார்
மனனேர் பெழுதரு வாணிற முகனே 90
மாயிருண் ஞால மறுவின்றி விளங்கப்
பல்கதிர் விரிந்தன் றொருமுக மொருமுக
மார்வல ரேத்த வமர்ந்தினி தொழுகிக்
காதலி னுவந்து வரங்கொடுத் தன்றே யொருமுக
மந்திர விதியின் மரபுளி வழாஅ 95
வந்தணர் வேள்வியோர்க் கும்மே யொருமுக
மெஞ்சிய பொருள்களை யேமுற நாடித்

திங்கள் போலத் திசைவிளக்கும்மே யொருமுகஞ்
செறுநர்த் தேய்த்துச் செல்சம முருக்கிக்
கறுவுகொ ணெஞ்சமொடு களம்வேட் டன்றே
யொருமுகம் 100
குறவர் மடமகள் கொடிபோ னுசுப்பின்
மடவரல் வள்ளியொடு நகையமர்ந் தன்றே யாங்க
மூவிரு முகனு முறைநவின் றொழுகலி
னாரந் தாழ்ந்த வம்பகட்டு மார்பிற்
செம்பொறி வாங்கிய மொய்ம்பிற் சுடர்விடுபு 105
வண்புகழ் நிறைந்து வசிந்துவாங்கு நிமிர்தோள்
விண்செலன் மரபி னையர்க் கேந்திய
தொருகை யுக்கஞ் சேர்த்திய தொருகை
நலம்பெறு கலிங்கத்துக் குறங்கின்மிசை யசைஇய
தொருகை
யங்குசங் கடாவ யொருகை இருகை 110
யையிரு வட்டமொ டெஃகுவலந் திரிப்ப வொருகை
மார்பொடு விளங்க வொருகை
தாரொடு பொலிய வொருகை
கீழ்வீழ் தொடியொடு மீமிசைக் கொட்ப வொருகை
பாடின் படுமணி யிரட்ட வொருகை 115
நீனிற விசும்பின் மலிதுளி பொழிய வொருகை
வானர மகளிர்க்கு வதுவை சூட்ட வாங்கப்
பன்னிரு கையும் பாற்பட வியற்றி
யந்தரப் பல்லியங் கறங்கத் திண்காழ்
வயிரெழுந் திசைப்ப வால்வளை ஞரல 120
வுரந்தலைக் கொண்ட வுருமிடி முரசமொடு
பல்பொறி மஞ்ஞை வெல்கொடி வகவ
விசும்பா றாக விரைசெலன் முன்னி
யுலகம் புகழ்ந்த வோங்குயர் விழுச்சீ
ரலைவாய்ச் சேறலு நிலைஇய பண்பே யதாஅன்று 125

## 3. திருவாவினன்குடி

சீரை தைஇய வுடுக்கையர் சீரொடு
வலம்புரி புரையும் வானரை முடியினர்
மாசற விமைக்கு முருவினர் மானி
னுரிவை தைஇய வூன்கெடு மார்பி

னென்பெழுந் தியங்கு மியாக்கையர் நன்பகற் 130
பலவுடன் கழிந்த வுண்டிய ரிகலொடு
செற்ற நீக்கிய மனத்தின ரியாவதுங்
கற்றோ ரறியா வறிவினர் கற்றோர்க்குத்
தாம்வரம் பாகிய தலைமையர் காமமொடு
கடுஞ்சினங் கடிந்த காட்சிய ரிடும்பை 135
யாவது மறியா வியல்பினர் மேவரத்
துனியில் காட்சி முனிவர் முற்புகப்
புகைமுகந் தன்ன மாசி றூவுடை
முகைவா யவிழ்ந்த தகைசூ ழாகத்துச்
செவிநேர்பு வைத்த செய்வுறு திவவி 140
னல்லியாழ் நவின்ற நயனுடை நெஞ்சின்
மென்மொழி மேவல ரின்னரம் புளர
நோயின் றியன்ற யாக்கையர் மாவி
னவிர்தளிர் புரையு மேனிய ரவிர்தொறும்
பொன்னுரை கடுக்குந் திதலைய ரின்னகைப் 145
பருமந் தாங்கிய பணிந்தேந் தல்குன்
மாசின் மகளிரொடு மறுவின்றி விளங்கக்
கடுவோ டொடுங்கிய தூம்புடை வாலெயிற்
றழலென வுயிர்க்கு மஞ்சுவரு கடுந்திறற்
பாம்புபடப் புடைக்கும் பல்வரிக் கொடுஞ்சிறைப் 150
புள்ளணி நீள்கொடிச் செல்வனும் வெள்ளேறு
வலவயி னுயரிய பலர்புகழ் திணிதோ
ளுமையமர்ந்து விளங்கு மிமையா முக்கண்
மூவெயின் முருக்கிய முரண்மிகு செல்வனு
நூற்றுப்பத் தடுக்கிய நாட்டத்து நூறுபல் 155
வேள்வி முற்றிய வென்றடு கொற்றத்
தீரிரண் டேந்திய மருப்பி னெழினடைத்
தாழ்பெருந் தடக்கை யுயர்த்த யானை
யெருத்த மேறிய திருக்கிளர் செல்வனு
நாற்பெருந் தெய்வத்து நன்னகர் நிலைஇய 160
வுலகங் காக்கு வொன்றுபுரி கொள்கைப்
பலர்புகழ் மூவரும் தலைவ ராக
வேமுறு ஞாலந் தன்னிற் றோன்றித்
தாமரை பயந்த தாவி லூழி
நான்முக வொருவற் சுட்டிக் காண்வரப் 165

பகலிற் றோன்று மிகலில் காட்சி
நால்வே றியற்கைப் பதினொரு மூவரொ
டொன்பதிற் றிரட்டி யுயர்நிலை பெறீஇயர்
மீன்பூத் தன்ன தோன்றலர் மீன்சேர்பு
வளிகிளர்ந் தன்ன செலவினர் வளியிடைத் 170
தீயெழுந் தன்ன திறலினர் தீப்பட
வுருமிடித் தன்ன குரலினர் விழுமிய
வுறுகுறை மருங்கிற்றம் பெறுமுறை கொண்மா
ரந்தரக் கொட்பினர் வந்துடன் காணத்
தாவில் கொள்கை மடந்தையொடு சின்னா 175
ளாவினன் குடி யசைதலும் உரிய னதாஅன்று

## 4. திருவேரகம்

இருமூன் றெய்திய வியல்பினின் வழாஅ
திருவர்ச் சுட்டிய பல்வேறு தொல்குடி
யறுநான் கிரட்டி யிளமை நல்லியாண்
டாறினிற் கழிப்பிய வறனவில் கொள்கை 180
மூன்றுவகைக் குறித்த முத்தீச் செல்வத்
திருபிறப் பாளர் பொழுதறிந்து நுவல
வொன்பது கொண்ட மூன்றுபுரி நுண்ஞாண்
புலராக் காழகம் புலர வுடீஇ
யுச்சிக் கூப்பிய கையினர் தற்புகழ்ந்து 185
ஆறெழுத் தடக்கிய வருமறைக் கேள்வி
நாவியன் மருங்கி னவிலப் பாடி
விரையுறு நறுமல ரேந்திப் பெரிதுவந்
தேரகத் துறைதலு முரிய னதாஅன்று

## 5. குன்றுதோறாடல்

பைங்கொடி நறைக்கா யிடையிடுபு வேல 190
னப்பொதிப் புட்டில் விரைஇக் குளவியொடு
வெண்கூ தாளந் தொடுத்த கண்ணிய
னறுஞ்சாந் தணிந்த கேழ்கிளர் மார்பிற்
கொடுந்தொழில் வல்விற் கொலைஇய கானவர்
நீடமை விளைந்த தேக்கட் டேறற் 195
குன்றகச் சிறுகுடிக் கிளையுடன் மகிழ்ந்து
தொண்டகச் சிறுபறைக் குரவை யயர

விரலுளர்ப் பவிழ்ந்த வேறுபடு நறுங்காற்
குண்டுசுனை பூத்த வண்டுபடு கண்ணி
யிணைத்த கோதை யணைத்த கூந்தன் 200
முடித்த குல்லை யிலையுடை நறும்பூச்
செங்கான் மராஅத்த வாலிண ரிடையிடுபு
சுரும்புணத் தொடுத்த பெருந்தண் மாத்தழை
திருந்துகா ழல்கு றிளைப்ப வுடீஇ
மயில்கண் டன்ன மடநடை மகளிரொடு 205
செய்யன் சிவந்த வாடையன் செவ்வரைச்
செயலைத் தண்டளிர் துயல்வருங் காதினன்
கச்சினன் கழலினன் செச்சைக் கண்ணியன்
குழலன் கோட்டன் குறும்பல் லியத்தன்
றகரன் மஞ்ஞையன் புகரில் சேவலங் 210
கொடிய னெடியன் றொடியணி தோள
னரம்பார்த் தன்ன வின்குரற் றொகுதியொடு
குறும்பொறிக் கொண்ட நறுந்தண் சாயன்
மருங்கிற் கட்டிய நிலனேர்பு துகிலினன்
முழவுறழ் தடக்கையி னியல வேந்தி 215
மென்றோட் பல்பிணை தழீஇத் தலைத்தந்து
குன்றுதோ றாடலு நின்றதன் பண்பே யதாஅன்று

## 6. பழமுதிர்சோலை

சிறுதினை மலரொடு விரைஇ மறியறுத்து
வாரணக் கொடியொடு வயிற்பட நிறீஇ
யூரூர் கொண்ட சீர்கெழு விழவினு 220
மார்வல ரேத்த மேவரு நிலையினும்
வேலன் றைஇய வெறியயர் களனுங்
காடுங் காவுங் கவின்பெறு துருத்தியும்
யாறுங் குளனும் வேறுபல் வைப்புஞ்
சதுக்கமுஞ் சந்தியும் புதுப்பூங் கடம்பு 225
மன்றமும் பொதியிலுங் கந்துடை நிலையினு
மாண்டலைக் கொடியொடு மண்ணி யமைவர
நெய்யோ டையவி யப்பியை துரைத்துக்
குடந்தம் பட்டுக் கொழுமலர் சிதறி
முரண்கொ ளுருவி னிரண்டுட னுடீஇச் 230
செந்நூல் யாத்து வெண்பொரி சிதறி
மதவலி நிலைஇய மாத்தாட் கொழுவிடைக்

குருதியொடு விரைஇய தூவெள் ளரிசி
சில்பலிச் செய்து பல்பிரப் பிரீஇச்
சிறுபசு மஞ்சளொடு நறுவிரை தெளித்துப் 235
பெருந்தண் கணவீர நறுந்தண் மாலை
துணையற வறுத்துத் தூங்க நாற்றி
நளிமலைச் சிலம்பி னன்னகர் வாழ்த்தி
நறும்புகை யெடுத்துக் குறிஞ்சி பாடி
யிமிழிசை யருவியொ டின்னியங் கறங்க 240
வுருவப் பல்பூத் தூஉய் வெருவரக்
குருதிச் செந்தினை பரப்பிக் குறமகண்
முருகிய நிறுத்து முரணின ருட்க
முருகாற்றுப் படுத்த வுருகெழு வியனக
ராடுகளஞ் சிலம்பப் பாடிப் பலவுடன் 245
கோடுவாய் வைத்துக் கொடுமணி யியக்கி
யோடாப் பூட்கைப் பிணிமுகம் வாழ்த்தி
வேண்டுநர் வேண்டியாங் கெய்தினர் வழிபட
வாண்டாண் டுறைதலு மறிந்த வாறே
யாண்டாண் டாயினு மாகக் காண்டக 250
முந்துநீ கண்டுழி முகனமர்ந் தேத்திக்
கைதொழூஉப் பரவிக் காலுற வணங்கி
நெடும்பெருஞ் சிமையத்து நீலப் பைஞ்சுனை
ஐவரு ளொருவ னங்கை யேற்ப
அறுவர் பயந்த வாறமர் செல்வ 255
ஆல்கெழு கடவுட் புதல்வ மால்வரை
மலைமகண் மகனே மாற்றோர் கூற்றே
வெற்றி வெல்போர்க் கொற்றவை சிறுவ
விழையணி சிறப்பிற் பழையோள் குழவி
வானோர் வணங்குவிற் றானைத் தலைவ 260
மாலை மார்ப நூலறி புலவ
செருவி லொருவ பொருவிறன் மள்ள
அந்தணர் வெறுக்கை யறிந்தோர் சொன்மலை
மங்கையர் கணவ மைந்த ரேறே
வேல்கெழு தடக்கைச் சால்பெருஞ் செல்வ 265
குன்றங் கொன்ற குன்றாக் கொற்றத்து
விண்பொரு நெடுவரைக் குறிஞ்சிக் கிழவ
பலர்புகழ் நன்மொழிப் புலவ ரேறே

யரும்பெறன் மரபிற் பெரும்பெயர் முருக
நசையுநர்க் கார்த்து மிசைபே ராளா 270
அலந்தோர்க் களிக்கும் பொலம்பூட் சேஎய்
மண்டமர் கடந்தநின் வென்றா டகலத்துப்
பரிசிலர்த் தாங்கு முருகெழு நெடுவேஎள்
பெரியோ ரேத்தும் பெரும்பெய ரியவுள்
சூர்மருங் கறுத்த மொய்ம்பின் மதவலி 275
போர்மிகு பொருந குரிசி லெனப்பல
யானறி யளவையி னேத்தி யானாது
நின்னளந் தறிதன் மன்னுயிர்க் கருமையி
னின்னடி யுள்ளி வந்தனெ னின்னொடு
புரையுந ரில்லாப் புலமை யோயெனக் 280
குறித்தது மொழியா வளவையிற் குறித்துடன்
வேறுபல் லுருவிற் குறும்பல் கூளியர்
சாறயர் களத்து வீறுபெறத் தோன்றி
யளியன் றானே முதுவா யிரவலன்
வந்தோன் பெருமநின் வண்புகழ் நயந்தென 285
வினியவு நல்லவு நனிபல வேத்தித்
தெய்வஞ் சான்ற திறல்விளங் குருவின்
வான்றோய் நிவப்பிற் றான்வந் தெய்தி
யணங்குசா லுயர்நிலை தழீஇப் பண்டைத்தன்
மணங்கமழ் தெய்வத் திளநலங் காட்டி 290
யஞ்ச லோம்புமதி யறிவனின் வரவென
வன்புடை நன்மொழி யளைஇ விளிவின்
றிருணிற முந்நீர் வளைஇய வுலகத்
தொருநீ யாகித் தோன்ற விழுமிய
பெறலரும் பரிசி னல்குமதி பலவுடன் 295
வேறுபஃ றுகிலி னுடங்கி யகில்சுமந்
தார முழுமுத லுருட்டி வேரற்
பூவுடை யலங்குசினை புலம்புவேர் கீண்டு
விண்பொரு நெடுவரைப் பரிதியிற் றொடுத்த
தண்கம ழலரிறால் சிதைய நன்பல 300
வாசினி முதுசுளை கலாவ மீமிசை
நாக நறுமல ருதிர யூகமொடு
மாமுக முசுக்கலை பனிப்பப் பூநுத
லிரும்பிடி குளிர்ப்ப வீசிப் பெருங்களிற்று
முத்துடை வான்கோடு தழீஇத் தத்துற்று 305

நன்பொன் மணிநிறங் கிளரப்பொன் கொழியா
வாழை முழுமுத றுமியத் தாழை
யிளநீர் விழுக்குலை யுதிரத் தாக்கிக்
கறிக்கொடிக் கருந்துணர் சாயப் பொறிப்புற
மடநடை மஞ்ஞை பலவுடன் வெரீஇக் 310
கோழி வயப்பெடை யிரியக் கேழலொ
டிரும்பனை வெளிற்றின் புன்சா யன்ன
குரூஉமயி ரியாக்கைக் குடாவடி யுளியம்
பெருங்கல் விடரளைச் செறியக் கருங்கோட்
டாமா நல்லேறு சிலைப்பச்சேணின் 315
றிழுமென விழிதரு மருவிப்
பழமுதிர் சோலை மலைகிழ வோனே!

## திருமுருகாற்றுப்படை: வெண்பாக்கள்

குன்றம் எறிந்தாய் குரைகடலிற் சூர்தடிந்தாய்
புன்றலைய பூதப் பொருபடையாய்—என்றும்
இளையாய் அழகியாய் ஏறூர்ந்தான் ஏறே
உளையாயென் உள்ளத் துறை. 1

குன்றம் எறிந்ததுவும் குன்றப்போர் செய்ததுவும்
அன்றங் கமரரிடர் தீர்த்ததுவும்—இன்றென்னைக்
கைவிடா நின்றதுவுங் கற்பொதும்பிற் காத்ததுவும்
மெய்விடா வீரன்கை வேல். 2

வீரவேல் தாரைவேல் விண்ணோர் சிறைமீட்ட
தீரவேல் செவ்வேள் திருக்கைவேல்—வாரி
குளித்தவேல் கொற்றவேல் சூர்மார்பும் குன்றும்
துளைத்தவேல் உண்டே துணை. 3

இன்ன மொருகால் எனதிடும்பைக் குன்றுக்கும்
கொன்னவில்வேற் சூர்தடிந்த கொற்றவா—முன்னம்
பனிவேய் நெடுங்குன்றம் பட்டுருவத் தொட்ட
தனிவேலை வாங்கத் தகும். 4

உன்னை ஒழிய ஒருவரையும் நம்புகிலேன்
பின்னை ஒருவரையான் பின்செல்லேன்—பன்னிருகைக்
கோலப்பா வானோர் கொடியவினை தீர்த்தருளும்
வேலப்பா செந்திவாழ் வே. 5

அஞ்சு முகந்தோன்றின் ஆறு முகந்தோன்றும்
வெஞ்சமரில் அஞ்சலென வேல்தோன்றும்—நெஞ்சில்
ஒருகால் நினைக்கின் இருகாலுந் தோன்றும்
முருகாஎன் றோதுவார் முன். 6

முருகனே செந்தி முதல்வனே மாயோன்
மருகனே ஈசன் மகனே—ஒருகைமுகன்
தம்பியே நின்னுடைய தண்டைக்கால் எப்பொழுதும்
நம்பியே கைதொழுவேன் நான். 7

காக்கக் கடவியநீ காவா திருந்தக்கால்
ஆர்க்குப் பரமாம் அறுமுகவா—பூக்கும்
கடம்பா முருகா கதிர்வேலா நல்ல
இடங்காண் இரங்காய் இனி 8

பரங்குன்றிற் பன்னிருகைக் கோமான்றன் பாதம்
கரங்கூப்பிக் கண்குளிரக் கண்டு—சுருங்காமல்
ஆசையால் நெஞ்சே அணிமுருகாற் றுப்படையைப்
பூசையாக் கொண்டே புகல். 9

நக்கீரர் தாமுரைத்த நன்முருகாற் றுப்படையைத்
தற்கோல நாடோறுஞ் சாற்றினால்—முற்கோல
மாமுருகன் வந்து மனக்கவலை தீர்த்தருளித்
தானினைத்த எல்லாந் தரும். 10

திருமுருகாற்றுப்படை முற்றிற்று

உ

# திருத்தணிகையாற்றுப்படை

## கச்சியப்ப முனிவர்

### விநாயகர் காப்பு

நேரிசை வெண்பா

சீரார் தொடைபுனைந்த செம்பாவை முன்புபோல்
ஏரார் தணிகை யிளவற்கு-நேராகக்
கூட்டுமால் வேற்றுருவங் கொள்ளாமை
யெப்பொருளுங்
காட்டுமால் ஐங்கைக் களிறு.

### நூல்

நேரிசையாசிரியப்பா

பொன்மலைத் திருவில் பன்னக நெடுநாண்
மாயப் பகழித் தாயக் குரிசில்
முரணமை யிருகால் திரள்மறைப் புரவி
அலர்மரை வாழ்க்கை வலவத் தேரும்
வழங்குதற் கமையா வண்மையி னிசைக்கும் 5
பெருந்தகு பாடல் திருந்திசைப் புலவர்
அறன்கடைக் ககலாப் பிறங்குதம் முளத்தில்
சாலாக் கல்வி மாலார்க் ககலா
வரன்மாண் டமைந்த உரன்மாண் பலகையில்
தண்டா விருப்பின் எண்டோள் முதல்வனோ(டு) 10
ஆனாது பயிலிய அருமறைக் கேள்வி
மாயிருந் தமிழ்க்கடல் வடமொழிக் கடலென்(று)
ஆயிரு கடலும் ஆற்றலின் கடையா
ஐயம் திரிபெனும் அழல்விடம் படாது
வெய்ய செம்பொருளெனும் மிளிர்தீஞ் சுதைத்திரள் 15
ஆராக் காதலின் ஆராது கைப்பவும்,
ஊன்றுவிர லழுந்தா(து) உடல்தசை திணிந்து

கான்றதேந் தெரியல் கருங்குழல் மகளிர்க்(கு)
அணங்குள நிறீஇ ஆருயிர் கவர்க்கும்
வளங்கவின் கொழிக்கும் விளங்குசீ ரிளமையும், 20
பல்வகைத் தொழிலும் பண்புற நவின்று
சிந்தை வழிச்செலும் ஐந்து(ம்)நிலை பெறீஇயர்
அளவினைத் திறத்தின் அயரா யாக்கையும்
அளகைக் கோமான் உளமழுக் கறுப்ப
நிலந்தினக் கிடந்த நெடுநிதிச் செல்வமு(ம்) 25
நீடின்(று) இரியும் நிலைமை நாடி
ஏற்போர் அங்கைக் கொடைக்கடன் இறுத்து
நோற்போர் நோற்கும் நோன்மைசால் அறனெனும்
உறுதி யாக்கம் ஒய்யெனக் கழலவும்
வரைத்திரள் புரள்வின் திரைத்தெழும் திரைக்கணம் 30
விலங்கின வழங்கும் விழுக்கலன் செறித்தும்
ஒளிறுவேல் அழுவத்(து) உருத்தெழுந்(து) அடர்த்துக்
குளிறுவார் முரசும் பிளிறுமால் யானையும்
வைத்தபல் படையும் வழாதுகைக் கொண்டு
பராபவத் தெவ்வர் வரிசையி னிறுக்கும் 35
திரைகேழ் உரிமை முறைநேர் நடாவியும்
தத்தந் தொழிலில் தலைநின்று வளர்க்கும்
பொருளெனும் வெறுக்கை போற்றாது நழுவவும்
மிஞிறும் தேனும் வெறிகவர் தும்பியும்
கஞலிப் பண்குரல் கஞற்றுவ சுழலும் 40
இருள்துஞ்சு மலர்ப்பொழில் மருள்சில் லோதிப்
பூவார் சோலைப் புறத்தகப் படுத்து
மேவரத் தடையிய விதுக்குறை கடுக்கும்
திவள்ஒளி மாண்ட குவவுநுதல் வாணுதல்
தீங்கதிர் அமிழ்தத் திங்கட் பிளவின் 45
நீங்குகார்க் கறையும் நிலாத்தவழ் வெண்மையும்
விராய்உருக் கொண்டென மிளிர்மதர் மழைக்கண்
செங்குமு தத்துச் சிறுமதி கிடந்தெனச்
செவ்வா யகத்த செயிர்தீர் வெண்பல்
விலங்குபாய் கதிர்க்குழை வீழ்ந்துசெகில் துயல்வர 50
வள்ளையி னொழுக்கிய அள்ளெழில் செஞ்செவி
செவ்வாய் கவுள்துணைச் சேல்விழி நெற்றி
இவ்வா யுறுப்பான் இன்சுவை அமிழ்த
உறுகொடை யாற்றி வறிதுகொடை காட்டும்

வளைநிதி தன்னைக் குடுமிகைக் கொண்டவ் 55
வளைமேல் கொண்டு வயங்கொளி தோற்றும்
பதும மாநிதி யிதுவெனக் கவன்று
தாவா வுறுவர் மேவா வுள்ளமும்
ஓவப் படமென உஞற்றுறு திருமுகம்
பகுவாய்ப் பொற்குழை மகரமீனா அன்(று) 60
ஐதுமீக் கிடத்தலின் ஐங்கணைக் கிழவோன்
வெய்து தன்னாணை விளக்கிய வுயர்த்த
அணங்குதவழ் கொடியின் இணங்குபணை
வேய்த்தோள்
காம்புபுடை யடுத்து கதிர்மணிக் குன்றின்
தோள்புடை யடுத்த சுடர்ப்பூண் கொங்கை 65
குவிமுலைத் துணைகொள் சவிமணி மார்பில்
தத்தமது ஏணி கடவாது தணிய
நள்ளுநின் றுணர்த்தும் தள்ளாக் குறியின்
அணிவயிற் றொழுகிய மணிமயிர் வல்லி
நெடுகுமயி ரொழுக்கு நெடுவழிப் படர்ந்து 70
கடுமுலைக் கோட்டுக் களிறுபட எடுத்த
படுகுழி யனைய பயம்படு கொப்பூழ்
நடுநின்று வாழ்வோர் நலத்தொடு முரண
நடுநின்று தேய்ந்த இடுகுகொடி மருங்குல்
வையகம் உயிர்த்தோன் மதிபுனைந்(து) இயற்றலின் 75
கைபுனைந் தியற்றும் கதிர்மணித் திண்தேர்
கடா(து)உருக் கொண்(டு)ஓடும் தடாதபேர் அல்குல்
கீழ்மே லாகக் கிளர்ந்தெழின் அத்தகு
வாழையொடு பொரூஉம் வார்ந்தசெறி குறங்கின்
வேற்றொரு தாமரை மேவந்து தொழில்செய 80
வீற்றிருந் தருளும் விரைமலர் ஏய்க்கும்
அலத்தக மலர்ந்த நலத்தகு சீரடி
மயில்இயல் மருளும் இயல்மட மாதரைச்
சீலம் விழைவே செயல்குறி இவற்றால்
நால்வகைப் பேதமும் மால்அறத் தெரிந்து 85
மருந்துமந் திரத்தும் திருந்துவிழை வேற்றித்
தேயம் பயிற்சி சேட்டை யியல்பே
இன்பத் துறையே இருவகைத் தொழிலே
இங்கித வகையே இவைநனி நாடி
இருவகைப் பொழுதொடும் ஏற்ப மருவிய 90

மூன்று காலமும் மூன்று வேகமும்
ஒப்பக் கலவி உஞற்றுபே ரின்ப
அவாஉளம் பொதிந்துகொண்(டு) அழற்றுவெம்
படர்நோய்
தவாதுபிறை போலத் தணிவின்றி வளர
உவாமதி போல உருவே தபவும் 95
கடவுட் பொங்கரும் தடமருப்(பு) ஆவும்
சிந்தா மணியும் நந்தா நிதிகளும்
கலன்முத லான வளம்பல கொழிப்ப
பல்வகைக் கணமும் பணிந்தெழுந் தேத்தத்
தெவ்வுத் தானவர் அவ்வித் தேங்க 100
விரிகதிர்ப் பிழம்பும் அரிமான் தவிசின்
களிகூர் நெஞ்சால் காவல் வைகும்
ஒளிகூர் மகவான் உறுபத மாதி
எளிதினுய்த் தளிக்கும் தெளிவினைப் போலாது
பார்முதிர் புணரிப் பாயல் கடவுள் 105
வார்மதுப் பொகுட்டு மரைபலர்ப் புத்தேள்
என்(று)இவர் தமக்கும் எய்தற் கரிய
சரியை கிரியை யோகத் தவநிலைப்
பெயர்பொச் சாப்பப் பிறக்கணித் துகவும்
ஊன நாடகம் உஞற்றிய திருவருள் 110
ஞான நாடகம் நவிலிய மாறலும்
ஆனா மலப்பகை நோனாது கழலத்
தானா நந்தத் தனிஉயிர் மடங்கக்
கண்காண் குருமுதல் கடவுள் ஆகி
உயிரே அவத்தை உணர்த்தும் தன்மை 115
அருளின் இயல்பே ஆங்கதன் பயனே
பெரும்பெயர்த் திறமே பெற்றவர் முறையென்று
அனைவகை யேழும் அரில்தபத் தெரிப்பத்
தாழாது கேட்டு வீழாது சிந்தித்(து)
அங்கைக் கொண்ட அமிழ்தெனத் தெளிந்து 120
பொங்குபே ரின்பம் புணராது புணரும்
நிட்டை கூட நிலையது நீங்கவும்
பஃறிறப் பகைஞர் படையொடு நேர்ந்தென
வெஃறிறம் காட்டாது வீற்றுவீற்(று) உடற்றும்
பிணிக்கோட் பட்டுப் பேதுறு மனத்தான் 125
முந்தையோர் ஈட்டும் முழுநிதிச் செல்வமும்

பொய்ம்மை யாளர் புகழெனத் தேய
நோய்ப்பகை யாளர்க்கு நொடிந்தென் சிதரின்
பல்வகை மருந்துக்குப் பகர்விலை தொலைச்சி
அதுவென வெறுவி யதன்றுமற் றிதுவென 130
முன்னைநாள் மருந்தை முறைமுறை இகழாப்
பின்னைநாள் மருந்தைப் பெட்டுவாய் மடுத்துப்
பண்டைநோய் மேலும் பருகுபல் மருந்தால்
மண்டுநோய் வேறு மரீஇக்கிளர்ந்(து) உருப்ப
உரைத்தஎன் மொழிவழி ஒழுகினை யல்லைகொல் 135
பெருத்துநோய் தெறுமென மருத்துவன் ஒழியத்
தெய்வத் திறத்தால் தீர்வுகாண் பாம்என
உள்ளூர் வயின்வயின் தெள்ளிதின் ஓங்கும்
புரிமுறுக் கவிழ்க்கும் பூம்புனல் தீர்த்தமும்
பல்வகைத் தெய்வப் பசும்பொற் கோட்டமும் 140
படிந்தும் பணிந்தும் பயன்கா ணாமை
அணிஅயற் புறநகர் மணிகெழு கோட்டமும்
விரத நியதிப் பரவுகட னாதிப்
பல்வேறு தொழிலொடு படர்ந்துபணிந் தேத்தியும்
கவலை நெஞ்சம் கையறு(பு) இனையச் 145
சேட்சென் றொராஅல் செய்தென வலித்து
மிக்கநோய்க் கிரங்கும் ஒக்கல்புறந் தழுவ
வறுமைக் கவற்சியும் இறுகுறப் பிணிப்ப
இல்லும் தமரும் இசைபயில் நாடும்
மென்மெலக் கழீஇ விரிகதிர்ப் படையால் 150
இருள்கால் சீக்கும் எழுபரித் தேரோன்
கடுஞ்சினம் திருகிய கொடுமைகூர் அமயத்து
முளிமுதல் முருக்கிய முழங்(கு)அழல் போழ்ந்து
வளியுலாய்ப் புறத்தும் வழங்குநர்த் தெறூஉம்
பைதரு கானத்துப் படர்நெறி யொதுங்கலின் 155
முந்துபர லுழந்த வெந்துயர்க் கொப்புள்
பிந்துபர லுழத்தொறூஉம் பிளந்துநீ ருகுப்ப
இயங்காச் செல்லல் இணையடி தாங்க
வெயிற்பகை யுழந்த வேர்ப்புறம் நனைப்பச்
சூறை மாருதம் துறைத்துறை யெடுத்த 160
பூழி போர்த்த பொறப்பறு மாசு
கலுழ்நீர் அல்லது கயந்தலை யின்மையின்
கழுவுதல் புரியா முடைபயில் காயமோடு

இலையின் மராத்த நிலையின் மென்னிழல்
சேய்வரல் வருத்தம் சிதைபாக்(கு) அசைந்து 165
நெட்டுயிர்ப் பெறிந்து நினைதரும் இரவல
ஆற்றா நின்னுளத்(து) அவலமினி யொழிக
புளிஞரும் மருளும் போக்கரும் சுரத்து
வீற்றுவீற்(று) ஒழுகும் ஆற்றினில் திரியா(து)
ஒருநெறி எதிர்ப்பா(டு) உற்றது முன்னைப் 170
பழுதறு பெருந்தவப் பயனது போலும்
விழும வெந்துயர் முழு(து)ஒரால் வேண்டின்
பாணியா(து) இன்னே காணிய எழுமதி
தோல்தேர்க்(கு) ஓடும் திருகுகோட்(டு) இரலையின்
நோய்ப்பகை யென்ன வாய்ப்பிலா தமையும் 175
அடுத்தடுத் தியானும் அலமரு காலை
ஊர்ஊர் வைகிய சீர்கெழு மாந்தருள்
உண்டி கலவி உறுதொழில் முதலா
மண்டிய பகுப்பின் வரையறைப் படாது
வேறுவே றுயிர்க்கும் வெம்பிணி யாளரும் 180
கருவி போழ்ந்த பெரும்புண் ணுறுநரும்
குட்டம் பெருநோய் முட்டிய வாதம்
முயலகன் ஆதி மொய்ப்பிணி யுழவரும்
பாப்புக் கோளாதிப் பலவகைக் கடிஞரும்
பேய்க்கோட் படுநரும் பித்துமீக் கூர்நரும் 185
உறுப்புக் குறைநரும் ஒண்குண மிழநரும்
இன்ன பஃறிறத்(து) எனைவரும் அன்றிக்
கல்விவேட் டவரும் கான்முளை வீழ்நரும்
செல்வம் வீழ்நரும் தேய(ம்)நா டுநரும்
அலர்முலை மடவார் கலவிகா முறுநரும் 190
இரண்டறு கலப்பின் இன்பநச் சுநரும்
இனையபல் வேறு நினைவினர் எவரும்
வாட்டுவ தணப்பவும் வேட்டன மணப்பவும்
மேற்கொண் டெழுந்து மேனாள் நேர்ந்த
பொற்கிழித் திரளும் பூந்துகில் மூடையும் 195
மணிப்பூண் பேழையும் வார்தரு கவரியும்
பைம்பொற் கவிகையும் செம்பொற் சிவிகையும்
ஊர்தியும் கொடியும் வார்விசி முரசும்
சூட்டுவா ரணமும் தோகைய மயிலும்
தத்தமக் கியன்ற தழீஇயனர் போதும் 200

ஓசைதிக் கதிர்க்கும் மாசனப் பெருக்கம்
காண்டொறும் காண்டொறும் ஈண்டிய களியேன்
உடங்குசென்(று) இருப்பான் ஒருப்பட் டெழலும்
துன்னிய விழுமநோய் தன்ன(ம்) நீங்க
உறுதுயர் யாக்கை சிறிதுவலி யெய்த 205
ஒய்யெனக் கிளர்ந்த உவகைநெஞ் சத்துப்
படர்பே ரூக்கம் பிடர்பிடித் துந்த
எழுந்தனன் இம்மென ஏகுதல் தொடங்கி
அடிபெயர்த் தோறும் அஞர்ப்பிணி நழுவ
உவரி நீரின் தவளமும் மகிழ்வால் 210
அவன்மிசை பாடா அனைத்து(ம்) நெறியாகச்
சென்றனன், அடுத்து மன்ற(ல்)நகர் நுழைதலும்
வெருவுநோய் இருகூற்(று) ஒருகூறு விலங்கக்
காட்சி ஆர்வம் கையிகந்(து) ஈர்த்தலின்
நறுமணம் கமழும் நந்திநதி குடையா(து) 215
எழுமுனி வரர்தம் எழுசுனை ஆடா(து)
அலைமலைப் பகைஞன் அருட்கயம் படியாது
நாக வண்சுனை நன்புனல் தோயாது
விண்டு தீர்த்தம் மேவரக் குளியாது
அலரவன் இருஞ்சுனை அழிபுனல் முழுகாது 220
எத்துயர்த் திரளும் அத்தினத்(து) அகற்றும்
சரவணப் பொய்கைத் தடம்புனல் துளைந்து
மென்மெலக் குன்றம் மீமிசை இவர்ந்து
காலை நண்பகல் மாலைமுப் போதும்
வைகல் வைகல் மலர்மூன்று தெரிக்கும் 225
நீலப் பைஞ்சுனை நேர்கண்டு தொழுது
புரண்டனர் சூழும் பொற்பினர் மிடைதலின்
அடியிடப் படாஅ ஆரிடை வீதி
ஒதுங்குபு பைப்பைய ஒருமுறை சூழ்ந்து
தூவும் எள்நிலத்துத் தோயாது வெறுத்த 230
தேவர்கள் குழுவும் தேயத் தொழுதியும்
தடைஇய வாயல் தடையாது நுழைந்(து) ஆங்கு
ஒருவர்மெய் மணிப்பூண் ஒருவர்மெய் வடுச்செய
நெருங்கிச் சென்று நித்தில வாள்நகை
வள்ளி நாயகி மணத்தினை முடித்த 235
கள்ள வேழக் கடவுளைப் பணியா
வீரர்ஒன் பதின்மர் வார்கழல் தாழ்ந்துமற்(று)

ஆவயின் வதியும் அமரரைத் தொழுது
பூதப் பகுப்பும் பூதகா ரணமும்
இந்தியக் கூட்டம் இரண்டுமுக் குணமும் 240
நந்து(ம்)ஆங் காரமும் நலத்தகு கரணமும்
இறுவாய் மாயை எழுவாய் ஏழும்
சுற்றம் என்னத் தோன்றிய ஐந்தும்
விராய்நின் றியக்கி மராதுநின் றொளிரும்
ஆரா இன்ப அருள்நிலை அம்ம 245
தீரா மலப்பிணி தீர்த்தருள் கொழிப்ப
அருள்திரு உருவுகொண்(டு) அவிர்மணித் தவிசின்
ஞான சத்தியும் கிரியா சத்தியும்
வானவர் கோமான் வளம்பயில் மகளும்
கானவர் நலங்கூர் கன்னியும் என்ன 250
இரண்டு பாலும் இருந்தனர் களிப்பக்
கண்டமெய் அடியர் கலவினிர் போற்றக்
காணா விண்ணவர் கலவாது ஏத்தக்
கண்கடை யொழுகும் கருணை நோக்கமோ(டு)
இனிதுவீற் றிருக்கும் எழில்நேர் காண்டலும் 255
எஞ்சுநோய் துவர இரியல் போக
விஞ்சுநாற் பொருளும் மேவந்து துவன்ற
ஆற்றாக் கடுந்துயர் அருநர குழப்பவர்
நோற்றமுன் னூழ்நனி நூக்கலு(ம்) நொடிப்பின்
ஆயிடை நின்று மாயிரும் துறக்கம் 260
புக்குழிப் பொலிவித்(து) ஒக்க தோற்றத்து
விம்மித மகிழ்ச்சி மெய்தவ வீக்க
ஒருகதி விட்டுமற்(று) ஒருகதி யடைந்தவர்
மயங்கறி வென்ன உயங்குமுன் உயங்கல்
எய்யே னாகி இறுமாப் பெய்தி 265
செய்முறை தெரியாது திருமுன் நிற்ப
இருமைப் பயனும் எளிதினுற் றளிக்கும்
பூதியும் றிருவுருப் பூச்சுநன் களித்திட்(டு)
என்னைத் தன்வச மாக்கிய உலகை
என்வச மாக்கி என்றுமோர் இயல்பின் 270
நின்றதன் நிலையின் நீங்கா திருத்தி
விடாதுவிட்டருள மெய்யருள் மேற்கொண்டு
ஒழியா தொழிந்து வழிவரு கின்றனன்
அத்தகு பெருமான் அருள்விளை யாடலைச்

சற்றிது கேண்மதி! தவமேம் படுந! 275
விச்சுஒன் றின்றி விளைவுமிக்(கு) ஆக்கியும்
விச்சுமிக் கிருப்ப விளைவுமுழு தொழித்தும்
ஒளிதலை வளர்ப்ப ஒளிகளைத் தணித்தும்
அழுக்கினைக் கழுவ அழுக்கினை யேற்றியும்
உறுந்தொழி லாளர்க்கு உறாதுசேண் அகன்றும் 280
வறுந்தொழி லாளர்க்(கு) உவந்துடன் கலந்தும்
விதித்தநல் விதிகளை விலக்கென உவர்த்தும்
விலக்கினை விதியென மேதகு நயந்தும்
இத்தகு தொழின்மை நித்தலும் இயற்றிப்
பொற்றபே ரின்பு அருள் பெற்றியன் அஃதான்(று) 285
இருமுது குரவர் எழுவாய்ச் சுற்றமொடு
துயர்இலங்(கு) உலகம் தோற்றுதல் பொருட்டுத்
தந்தை யென்ன ஐந்துமுக னாகியும்
அன்னை யென்ன மனோன்மணி யாகியும்
முன்முறை தந்தையர் தாய ரென்ன 290
நாதஞ் சிவமே நலத்தகு விந்து
மேதகு சத்தி வேறுவே றாகியும்
பின்முறை தந்தையர் தாய ரென்ன
மகேசன் உருத்திரன் மகேசைஉமை யாகியும்
தமைய னென்னத் தந்திமுக னாகியும் 295
தனைய னென்னத் தாமரை மருட்டும்
மூவிரு முகமும் முந்நான்கு கரமும்
மருவிவீற் றிருக்கும் ஒருதா னாகியும்
கடப்படும் இரண்டு கைகோள் இயங்க
நான வார்குழல் நகையிழை யானையைக் 300
கானவர் அரும்பெறல் காமரு மாதினைக்
கற்பினில் களவினில் பொற்புற மணந்தும்
பொருள்துறை முழுதும் புரையின்றி நடப்ப
அண்டகோ டிகளும் அரைக்கணத் தளவையின்
வறிதுநகை தோற்றி இறுவது புரியும் 305
எறுழ்வலி யாற்றல் எய்யான் போல
மந்திரம் தூது செலவுஇகல் மற்றும்
ஆற்றிவெஞ் சூர்வலி காற்றி உல(கு)ஓம்பியும்
எல்லாம் அறிந்(து)அறி விக்கும்அவ் வியல்பைக்
கண்கூ டாகக் காட்டுவன் அதாஅன்று 310
மூவகை யுருவாய் மூவுல குயிர்த்தும்

மூவகை உருவும் முயங்காப் பரம்பொருள்
பந்தம் வீடு பல்லுயிர்க் கமைத்தும்
பந்தம் வீடு படாத பெருந்தகை
ஆருயிர்க் குயிராய் அமைந்தன நடாவியும் 315
ஆருயிர் காட்சிக்(கு) அணுகா அருந்திறல்
தானாய் நின்று தற்காண் தனிமுதல்
அளிகளின் அளியா அளிகளூஉங்கு அளியன்
ஒளிகளின் ஒளியா ஒளிகளூஉங்கு ஒளியன்
வெளிகளின் வெளியா வெளிகளூஉங்கு வெளியன்
320
அளவினின் அளவா அளவினூஉங்கு அளவன்
இன்னான் ஒருவனை முன்னுபு சென்றவன்
பூங்கழல் சேவடி போற்றுதி ஆயின்
பேர்அஞர் உறுத்த பேதுறு நோயும்
காரண நோயும் கையிகந்(து) இரியக் 325
கடைக்கணித் தருளிக் கரையில் நாற்பொருளும்
கொடைக்கடன் நீயிர் குறித்த அளவையின்
எண்மடங்கு ஆற்றி என்றும் தீரா
அகம்படித் தொழின்மையின் அழுத்துவன் அன்றே
ஆடகப் பசும்பொன் பாடகச் சீறடி 330
நாடக மகளிர் நவிற்றிய ஆடல்
சிலம்பு கிண்கிணி தீங்குழல் முழவம்
முரசம் தூரி முழங்(கு)ஒலி யானும்
விண்தலம் உரிஞும் வியன்மணிப் புரிசைக்
கொண்டல்கண் படுக்கும் கோபுர நிரைகள் 335
ஆடுகொடி சுமந்த மாடநெடு மாளிகை
இன்னன பிறவும் மன்னுத லானும்
ஒலிதிரைக் கடலும் ஓங்குபல் வரையும்
உடங்கு தொக்(கு)அண்மி ஒண்துறை யாடி
இருபகுப் பினவாய் இருகரை மருங்கும் 340
நோற்றன வதியும் பேற்றினைத் தெரிக்கும்
மும்மையும் அளிக்கும் மூவா முழுமுதல்
ஐம்முக னாகி அமர்ந்தவீ ரட்டமும்
அறுமுக னாகி அமர்ந்த கீழ்க் கோட்டமும்
பொன்னும் மணியும் புதுமலர்க் குவையும் 345
திரைக்கயிற் றூஉய்த் திளைத்தெழுந் தொழுகும்
நந்தி யாற்று நறும்புனல் மடுக்கும்

குரங்குகதிர்ச் சாலியும் கொழுந்தீங் கரும்பும்
குலைப்பூங் கதலியும் கோள்தெங் கினமும்
கோள்கண்மீப் பரிக்கும் பாளைக் கமுகும் 350
வயின்வயின் பொதுளி வளம்பல உறந்த
முருகலர்ப் பண்ணை ஒருபுறஞ் சூழ
அவரை துவரை அரில்கதிர் வரகு
சாமை யிறுங்கு ததைந்தன விளையும்
கொல்லை முல்லை கோழிணர்ப் பூவையும் 355
பந்தர் மாதவி உந்திய கோங்கும்
பைங்காற் கொன்றை பசும்பொற் சுண்ணமும்
வளியுளர்ந் தெடுப்ப மறுபுல வரைப்பும்
போர்த்தன கமழ்ந்து பொறிவண்(டு) அழைக்கும்
அரும்புலப் புறவம் ஒருபுறஞ் சூழச் 360
செருந்தி மந்தாரம் குருந்துவழை பாடலம்
கோங்கு சண்பகம் வேங்கைமகிழ் சந்தனம்
குங்குமம் மரவம் கோழ்அகில் கப்புரம்
இல்லம் ஆவிரை வில்லம் பாங்கர்
பிடர்ஞெமை நமைஆண்(டு) அடர்வரை எகின்சே 365
அசோகம் தேக்கே ஆத்தி சூதம்
மருது போதி வஞ்சி காஞ்சி
ஞாழல் புன்னை நரந்தை மாதுளை
பொகுட்டரை யிருப்பை பூஞ்சினைச் சரளம்
முன்னம் பலாசு முருக்கை வருக்கை 370
சோதி மாமரம் தொத்தின நாகம்
அன்றி அனைத்தும் துன்றிய கறிக்கொடி
மல்லிகை முசுண்டை மற்றும் பரித்து
மணங்கமழ் காமர் வல்லி யொன்றே
இணங்குபூத் தருந்தன் இகழ்ச்சியை நாடி 375
வசைபடத் தத்தம் இசைவிளக் குவபோல்
பொறிவரிச் சுரும்பும் வெறிநுகர் தேனும்
தோகைமா மயிலும் தொடிக்கண் பூவையும்
கிள்ளையும் குயிலும் தெள்ளுகுரல் காட்டி
வண்தளிர்ப் பொதும்பர் மருங்குகால் வளைஇ 380
நுண்தளி நறுந்தேன் நோலாது திவளும்
ததைமலர்ச் சினைய தருவைந் துடுத்த
பொன்நகர் வறுமையை முன்னிநக் காங்கு
வேரல் நரன்றுக்க வெண்மணிக் குப்பையும்

பிறழ்பல் பேழ்வாய்ப் பின்முன் பார்வைச் 385
சிங்கவல் லேறு பொங்குசினந் திருகி
எழுந்துதாய்த் துமிப்ப இருங்கடா யானை
மத்தகம் பிளந்து மாயிருங் குன்றத்து
வெண்புனல் அருவி வீழ்வன போலச்
சலசல வுக்க தரளக் குவாலும் 390
நிலவுராய்த் தவழ நெமிர்ந்தன மிளிரும்
கவான்மலைப் புனத்துக் கதிர்த்தினை காக்கும்
உவாமதி முகத்தார் ஒச்சினர் விடுக்கும்
கவணையில் மணியோ கங்குல் கானவர்
விலங்கினம் துரக்கும் இலங்குகூர்ங் கணையோ 395
அலைத்தர விசும்பின் நிலைத்தரு கலன்கள்
பல்வகை மின்கொடி ஒல்கிவீழ்ந் தென்ன
வெல்வரை நிரையும் பில்குகதிர் மணிப்பூங்
காழும் தாமமும் கவினத் ததைஇய
மண்டபம் மேடை மாடமே னிலைகள் 400
இயங்கா நிலைத்தேர் இயங்குமணிப் பஃறேர்
விமானவூர் திகளும் வேற்றுமை தோற்றா
வளம்பல தழீஇயெம் மருங்குமெய் யடியார்
இடும்அகில் தூமமும் எக்கரின் குவைஇய
படரொளி யூட்ட பளிதக் குப்பை 405
கான்றதீம் புகையும் கழுமிவிண் கெழுமி
யிமையார் நாட்டம் இமைப்பன செய்ய
மல்லல் ஆவணம் மறுகும் வீதியும்
நாடொறும் எழிலால் நவநவ மாகி
இமைக்குநர் நாட்டம் இமையாமை செய்ய 410
மண்தலம் விண்தலம் மாற்றிய தென்ன
இறும்பூது பயவா ஏர்குலாய்க் கிடந்த
திசைகாப் பாளர் இசைநிறை தேவர்
அலரவன் நெடுமால் ஆதிய கடவுளர்
முதுக்குறை யன்பின் முறைமுறை பழிச்சச் 415
சாறுநாள் அல்லது வேறுநாள் அறியா(து)
உலகமுழு(து) ஓம்புபல் சிறப்பின்
நிலைபெறு தணிகை மலைகிழ வோனே.

**திருத்தணிகை யாற்றுப்படை முற்றிற்று**

உ

## கதிரேசன் பேரில்

# ஆனந்தக்களிப்பு

### காப்பு

### குரு விருத்தம்

வெத்தி மாமயில் வேலர் மீதினிற்
சித்தி யானந்தச் சிந்து புகழ்ந்திட
சத்தி வாலை யருள்திரு மாமத
அத்தி மாமுக னைங்கரன் காப்பதாம்.

### ஆனந்தக்களிப்பு

தானந்த னாதந்த னானா-தந்த
தானாத னாதந்த னாதந்த னானா

சீர்மேவுங் கதிர்காமம் வாழும்-வள்ளி
தெய்வானை மணவாளன் மீதிலெந் நாளும்
பார்புகழ வேதுதி சிறக்க-எங்கள்
பாரமதை யானைமுகன் தன்னருள் பெருக்க
தானந்த நடனமயி லேறுஞ்-சுவாமி
சரஹண பவானந்தன் மீதிலருள் சேரும்
ஆனந்தக் களிப்பிதனைப் பாட-கைலை
யாளிமல ரடியைநா னனுதினந் தேட
சதுர்முகன் தேவிநயந் தரவே-யிந்தத்
தாரணியி லுகந்தகவி வாணர்ஜெயம் பெறவே 10
கதிர்காம மானகர் சிறப்பாம்-எங்கள்
கண்ணரரு ளால்சொன்ன ஆனந்தக் களிப்பாம்
திசைமெத்த புகழ்கொண்டு நாளும்-நல்ல
செல்வமிகு வியாபார தர்மமது வாழும்

வசியகுல நகரத்தார் தானே-வந்து
வணங்குமெங்கள் கதிரேசன் சந்நிதியில் நானே
சொன்னகவி தன்னையரங் கேற்ற-வதனில்
சொற்பிழைகள் வாராம லென்னையுமே காத்த
நன்னய மிகுந்த தெய்வானை-யம்மன்
நற்கமல ரடியிணையை நான்துதிப் பேனே 20
அருமறைகள் புகழ்துதிகள் பூணும்- வள்ளி
யம்மையென் கவிதனக் கருள்தரவும் வேணும்
குறுமுனியைப் பணிந்து கவிகூற-அதற்கு
குறைகளொன்றும் வாராமல் சபையிலரங் கேற்ற
சீதையால் ராமனு முன்னாலே-வந்து
தெர்ப்ப சயனஞ்செய்த திருப்புல் லாணியிலே
நாதனருள் கங்கைகுல சீலன்-தங்கம்
ராமசாமி சொன்ன கவிக்குகந்த வேலன்
எச்சரிக்கை யென்றிடும்பன் கூற-வந்து
இருபுறமுங் காவடிகள் நின்றுவிளை யாட 30
பச்சைமயி லேறியருள் சீலன்-நித்தியம்
பக்ஷம்வைத் தென்கலி யகற்றும் வடிவேலன்
தென்கதிர் மானகர் விளங்க-வந்த
தேவாதி தேவர்ஜெயங் கூறியே முழங்க
அன்பான சன்னதி யிலங்க-கதிரை
ஆறுமுக வேலருட மாபதி துலங்க
முன்னாலே கோபுர முகப்பும்-எங்கள்
முருகேசன் கோவில்முழுச் செம்பால் வகுப்பும்
அன்னமெனும் தெய்வானை மாடம்-வள்ளியம்மை
யவள்பந் தடித்துவிளை யாடிடுங் கூடம் 40
மூதண்ட யோகபதி யேறும்-கதிரை
முத்துலிங்க சுவாமியுட சன்னதியைப் பாரும்
நாதமொடு கீதமு முழங்க-வசிய
நகரத்தார் கட்டிவைத்த சத்திரம். விளங்க
காணிக்கை கொண்டு வெகுகோடி-மக்கள்
கதிரேசன் சன்னதிக்கு வருவார்கள் தேடி
மாணிக்க கெங்கைநீ ராட-இங்கே
மாதவரும் மனிதர்களும் வந்துநிதங் கூட

பொன்னலங் காரநகர் வாசம்-எங்கும்
புகழ்பெற்ற நவரத்ன மேவிளையுந் தேசம் 50
சொர்ணமிகு கதிரைவள மெத்த-தோழி
சொல்லுகிறேன் நாட்டுவளம் வானுல குதித்த
இந்திரனுட யேவலதி னாலே-வந்த
ஏழுமேகமு மொன்று கூடியே மேலே
சந்திரனென வாகவுமே வோங்கி-சத்த
சாகர மதில்தாவி தண்ணீரை வாங்கி
மாலென விசும்பிடை படர்ந்து-முகில்கள்
மண்டியே கெர்ச்சித்து மின்னலு மடர்ந்து
நாலுதிசை நாடியே தெளிந்து-கதிரை
நகர்பூமி யெங்கும்மழை மாரிகள் பொழிந்து60
ஏரிகுளம் வாவிகள் நிறைந்து-வயல்க
ளெங்கெங்கு மேகன்னல் செந்நெலும் வளர்ந்து
வீரிய மிகுந்தமு தத்தின்-நல்ல
வெண்கமுகு சோலைமலை மேலெங்குந் தோண
தனியே பழுத்துதிரு வாவும்-அதனில்
தாவியொரு கொம்போடே கொக்குகளு மேவும்
இனியமலர் வாசனைகள் தேடும்-விறுவிறென்
றிருபத்து நாலுகால் வண்டினங் கூடும்
நாகமது நாகமதி லேறும்-துய்ய
நாகமே புனைந்தசில மாதரையும் பாரும் 70
நாகமல ரசோகுமலர் முல்லை-யிந்த
நாட்டினிலே கலைபகடுக் கொருகொம்பு மில்லை
முல்லையிரு வாட்சிக ளெடுத்து-அந்த
முல்லையிலே யிதழில்லா மடவார் தொடுத்து
வல்வினை தீரவெனத் தேடி-மாது
வள்ளி தெய்வானைக் கிடுவார்கள் கோடி
சதுர்மறையும் புகழ்தேவ ரிங்கே-வந்து
தான்வாசஞ் செய்கதிரை மாணிக்க கெங்கை
இதிலே நீராடுவது சித்தி-ஜென்மம்
ஈடேறுஞ் சாயுச்சிய பதவியிலே முத்தி 80
கோலமா மலையழகைப் பாரும்-கதிரை
குமரேச னருளாலே வல்வினைகள் தீரும்

மூலகண பதிக்கிளைய வாகன்-கதிரை
முத்துலிங் கேசருக் கருள்செய்த யோகன்
மாமேவும் புவிபுகழுந் தேட்டான்-கதிரை
மகிமைகளைச் சேடனா லளவிட மாட்டான்
பூமேவுங் குழல்வள்ளி நேயன்-சுவாமி
புண்ணியன் தேவருக்கும் மனிதருக்கும் நாயன்
பச்சைமால் தனக்குமரு கோனே-சுவாமி
பழனிமலை மீதினிலே மேவுமுரு கோனே 90
வச்சிரா யுதன்தம்பி மருகா-உந்தன்
மலரடி யெனக்குநிதந் தரவேணு முருகா
நவவீரர் துணையான குகனே-நம்பி
நாராயணன் றங்கை யபிராமி மகனே
நவமணி யணிந்த வொளி மூவா-நின்று
நடனமிடு மயிலேறி யெனைவந்து காவா
கனககுண் டலமிட்ட நீதா-சுவாமி
கார்த்திகே யாலட்சம் படைவீரர் தானே
தனமேரு பாக்கியமருள் வேலா-எங்கும்
சர்வபரி பூரணா னந்தசிவ பாலா 100
ஓராறு மங்கையர்கள் சேயன்-பவனி
ஒய்யார மாகமயில் மீதுலவு தூயன்
ஈராறு பன்னிருகை யாண்டி-புவன
மெங்கெங்கு மேதுதி மிகுந்த மெய்யாண்டி
ஆண்டிபொன் னாண்டிசிவ னாண்டி-பழனி
யாண்டிமலை யாண்டி சிலையாண்டி யிவனாண்டி
ஆண்டிமக னாண்டியிவ னாண்டி-நதிகள்
அழகான சாமிமலை திருப்பரங்குன் றாண்டி
சிக்கல்புர வச்சேரி யாண்டி-சுவாமி
திருச்செந்தூ ரெட்டிகுடி குன்றைக்குடி யாண்டி 110
மிக்கதிரு வேரகத் தாண்டி-கதிரை
மேவிவளர் வேல்முருக னாறுமுகத் தாண்டி
சோலைமலை கழுகுமலை யாண்டி-நல்ல
தோகைமலை விராலிமலை சென்னிமலை யாண்டி
வாலையருள் பெற்றவடி வேலா-முனிவர்
மாதவர்க் கேயெந்த நாளுமனு கூலா

விடவரவு படமும்விசை கெடவும்-படியே
வடவரைகள் கிடுகிடென கெஜமுமசை படவும்
கடல்சுவற கதிர்மதி கலங்க-தாவி
கனவேக மாகவரு மயில்மீ திலங்க 120
மேலாகி விளையாடு மெய்யா-வெற்றி
காலா யுதத்தையு மெறிந்த முருகையா
சாலோக சாமீப மென்னும்-சுவாமி
சாரூப சாயுச்ய பதவியிலே முன்னும்
ஆகவே நின்றபர நாதா-என்னை
ஆதரித் தாளவர வேணுங்குரு நாதா
தாகமா யிருக்குதுனைக் காண-வந்த
சுவாமி வருவாயெனது கண்ணெதிரே தோண
அரகரா வேலனே நமாவோம்-சுவாமி
ஆறுமுக மாய்வந்த வடிவே நமாவோம் 130
அரகரா முருகா நமாவோம்-வாலை
யம்பிகை பாரசக்தி மைந்தா நமாவோம்
அரகரா குகனே நமாவோம்-சுவாமி
அன்பருக் கன்பான பொருளே நமாவோம்
அரகரா தேவா நமாவோம்-சுவாமி
அகிலபுவ னத்திலும் நிறைந்தாய் நமாவோம்
மயிலேறு மொயிலா நமாவோம்-பொதிகை
மலைமேவுந் தமிழ்முனிவன் குருவே நமாவோம்
மயிலேறும் கந்தா நமாவோம்-வட்ட
வடவாலில் மேவுமால் மருகா நமாவோம் 140
மயிலேறும் நாதா நமாவோம்-சுவாமி
மலைமேவும் பரமனுட குருவே நமாவோம்
மயிலேறு கின்றாய் நமாவோம்-தங்க
வடிவான வேலது வுகந்தாய் நமாவோம்
திரிபுர பவாவா நமாவோம்-வாலை
சேயனே திகழொளி பவாவா நமாவோம்
பரிபுரி பவாவா நமாவோம்-வள்ளி
பாகனே பவனொழி பவாவா நமாவோம்
சரகண பவாவா நமாவோம்-கந்த
சுவாமியே சயவொளி பவாவா நமாவோம் 150

தருமதுரை யேநீரு மென்னை-நல்ல
தருணமிது காணிந்த வேளையிலே யென்னை
காவாவுன் னீரடிகள் தன்னை-நான்
கண்டெனது கலிதீர வந்துமென் முன்னை
வாவென்று சொல்லமன மிலையோ-உமக்கு
வள்ளிதெய் வானைவிடை தந்தனுப்ப விலையோ
தஞ்சமென் றேனே யுனக்கு-எனது
சஞ்சல மெனுங்கலியைத் தீர்ப்பா யெனக்கு
அஞ்சறிவு மானதா யகனே-சுவாமி
அகிலாண்ட கோடி பிர்ம்மாண்ட நாயகனே 160
உன்கிருபை தந்துமேகண் பாரும்-இந்த
உலகமுழு தாள்பவனே யென்கலியைத் தீரும்
அன்புபெரும் வரைராஜன் பேரா-சுவாமி
அடியேனுன் னடியிணையைக் காணநீ ராரா
வாவாயென் றேவாநீ யென்றே-சுவாமி
வடிவேலா வாவாவெனத் தொழுது நின்றே
எவன்றே டினாலுந் தேடட்டும்-நமக்
கென்சொல்லிக் கவிபாடி னாலும் பாடட்டும்
நமக்கென்ன வென்றிருக்கி றீரோ-சுவாமி
ஞாயமோ நானுமுறை யிட்டதறி யீரோ 170
உமக்குமன திரங்காத தேது-எங்க
ளுத்தமி துரந்தரியின் பாலா யிப்போது
ஐயாநீ கிருபைசெய்த தாலே-இந்த
அகிலாண்ட கோடிபூ மண்டலத்தின் மேலே
மெய்யான சரியையி லனேகர்-அதற்கு
மேலான கிரியையி லிருப்பவ ரனேகர்
தவயோகக் காரர்வெகு வெள்ளம்-அங்கு
தங்கியே யிருப்பவர்க ளோமகா வெள்ளம்
அவர்களைப் போல்நான்பிறந்த திலையோ-சுவாமிக்
காளாக வெனக்குவிதி வயனெழுத விலையோ 180
அன்னையவ ளீன்றெடுத்த கெதியோ-எனக்கு
ஆதியிலே முன்னவர்கள் செய்துவந்த சதியோ
என்னகுறை யிருந்தாலுந் தீர்த்து-உந்தன்
இணையடி களாக வென்னையுமே சேர்த்து

ஆளாக்கி யாளலா காதோ-எந்த
    னகந்தனிலே நீயிருந்து வாழலா காதோ
பாழான மனங்குவியு திலையோ-என்ன
    பாவமோ வதிலிருக்கும் பிசகுதெரி யலையே
வஞ்சக மில்லாமலே கண்பாரும்-முடிவில்
    மறலியுட தூதரென்னை வருத்தாமல் காரும் 190
அஞ்சுதலை யாரருளுந் துரையே-உமக்கு
    அஞ்சுதலை யால்வேத னிருந்ததுவுஞ் சரியே
ஆறுதலை கண்டரண்ட ரய்யா-பின்பு
    ஆறுதலை யாய்ப்பதியை யாண்டாரே மெய்யா
ஆறுபடை வீட்டுக் கதிகாரா-வந்த
    அசுரருட னஞ்சாத போர்புரியும் வீரா
சத்தியுமை பாலகனே சாமி-எந்தன்
    தாசனுக்கு தாசனெனைக் காப்பதற் கேகு
சுத்த பரிபூரணா வுன்னை-ஓதி
    துதிக்குமடி யார்க்குமடி யாகவரு-ளென்னை 200
பொய்யாத வாழ்வருள் வேலா-கதிரை
    ஐயாவே யெனையாளுந் தேவாதி தேவா
ஒய்யார மானமுரு கோனே-வந்த
    உற்பவ மெனுந்துதியைச் செப்புவே னானே
உரமான வசுரரிட ராலே-தேவ
    ரோடிமுறை யிட்டாரே கைலைமலை மேலே
அரனசுரர் மேல்கோப மாகி-கைலை
    யாளிவிழி தனிலே யொருபொரி சிதறியே
சரஹணப் பொய்கையி லமர்ந்து-அதுவுஞ்
    சந்திரோ தயம்போலே பாலனென வந்து 210
உருவாகி மலர்மீதி லானார்-எங்கள்
    ஓம்நமசி வாயரெனும் பரமனருள் மகனார்
அப்பவே சென்னியோ ராறாய்-மெத்த
    வழகான செந்திரு புயங்களீ ராறாய்
உற்பவ மானபனி ரண்டு-விழிகள்
    ஒளிவாகி யோராறு பெண்கள்பா லுண்டு
அயனையுஞ் சிறையினில் விடுத்தான்-கந்த
    னரனுக்கு வுபதேசஞ் சொல்லியே கொடுத்தான்

கயமுகா சூரன்முத லோரை-கந்தன்
கைவேலி னாலவர்கள் கருவறுத் தாரே 220
தங்கவடி வேலலங் காரன்-மாது
தையல் தெய்வானை மணமேவு சிங்காரன்
தென்கதிரை மாநக ரிலங்கும்-சுவாமி
சிங்கார மாயுனது வருள்கிருபை பொங்கும்
சித்தமு மகிழ்ந்துவரும் லோலன்-வள்ளி
தெய்வானைக் கிணையான சித்ரமயில் வேலன்
சத்திவே லாயுதமு முடையான்-பூண்ட
தண்டைகள் கலீரென்வே வந்தருளும் நடையான்
கடகமெனு மானதிங் களிலே-எங்கள்
கதிரேசன் திருவிழா பவனிவரு கையிலே 230
கடல்போல பேரிகை முழங்க-விருது
கட்டிய மிருபுரமு மருகே தயங்க
செங்காவிப் பட்டாலே கோடி-கொடிகள்
ஜெண்டாவு மாலவட்டக் குடைகள் பலகோடி
மங்காத சாமரைகள் கோடி-வீசி
வருவார்கள் நடனமிடு மடமாதர் கோடி
சேர்க்கையாய் முரசங் சங்கூத-நல்ல
செந்தீ வளர்ப்பவர்கள் நான்மறை யோத
பார்க்கவெகு மாமுனிவர் வரவே-கவிகள்
பாடியே வரகரா வென்றுபுகழ் பெறவே 240
ஆணிப்பொன் மாலைக ளிலங்க-மொய்த்த
அழகான வாலாத்தி தீபமே துலங்க
மாணிக்கப் பேழையி லுகந்தார்-கந்தன்
மதயானை மேலேறி யேபவனி வந்தார்
மதகரியோ வருகிறதைப் பாரும்-சுவாமி
மாணிக்கப் பேழையி லுகந்ததையும் பாரும்
கதிர்காமத் திருவிழா நேர்த்தி-எங்கள்
கந்தனு முகந்ததிரு வாபரணஞ் சாத்தி
கரியுலவு வனமூடு சென்று-சொல்லக்
கதிர்காமம் போய்வந்து நீரறுப் பென்று 250
சரியான பௌரணையை நாடி-கந்த
சாமிசங் கீதபரி வாரமுடன் கூடி

வாரிபோல் பெருகி நீரோடி-வார
　　மாணிக்க கெங்கையிலே வந்து நீராடி
கூரான வடிவேல் சுமந்து-எங்கள்
　　குமரேசன் வள்ளிதனை நாடியே யுகந்து
புள்ளிமயில் வேலர்விரை வாக-சென்று
　　பூவையெனுங் குறமாது கோவிலுக்குள் ளேக
வள்ளியம்மை சுவாமிதனைக் கண்டு-வாரு
　　மணவாள ரென்றடி பணிந்தன்பு கொண்டு 260
சித்ரமணி மலரணயில் தாவி-நல்ல
　　செங்கமலக் கரத்தா லணைத்திவர்கள் மேவி
கொத்துமுத்து நத்துவளை திருத்தி-யிவர்கள்
　　குளிர்ந்தகம கமெனமலர் வாசனைகள் பொருத்தி
இங்கிர்த மணாளகுண தீதா-யெனக்கு
　　யினியசுக போகமத லீலா வினோதா
எங்கள்குலம் விளங்கவந்த நேசா-சுவாமி
　　யெனக்கிரங்கி யிதுசமயம் வந்தவிசு வாசா
அத்தைபெற்ற முத்தேயெங் கோனே-யென்ற
　　ஆரணங்கை யுபசரித்து தேனேயம் மானே 270
முத்திரையிட் டிலங்குகொங்கை யாளே-வள்ளி
　　மோகனமே யென்றந்த வேலவர்கை யாலே
கலந்தணைந்த சுகந்தமண வாசன்-எங்கள்
　　கட்டழகி வள்ளிதனைப் பார்த்துமத போஜன்
சலதரத்தைப் பழித்தகுழ லாளே-இந்திர
　　தனுவோவென் றதிசயிக்கும் புருவநுத லாளே
என்றனுக் கிசைந்த மனையாளே-வள்ளி
　　இந்திரன்மகள் தெய்வானைக்குகந்த துணையாளே
வந்துவெகு நேரமா குதடி-யெந்தன்
　　மாதுதெய் வானையெனைத் தேடிடுவாள் நாடி
280
போய்வாரேன் விடைதாடி யென்ன-வள்ளி
　　பூவையவள் கேட்டெந்தன் சாமிநீர் சொன்ன
வாய்ச்சம்பிர தாயம்வெகு வீச்சு-நான்
　　போய்வாரு மென்றுசொன்னவகை தானென்ன
பேச்சு

அங்கேபோய் செலுத்துமதி காரம்-யெந்தன்
அரண்மனையி லிருந்தாக்கால் நடக்காதோ வீரம்
இங்கிரண்டு நாளிருந்து போனால்-சுவாமி
என்னகுறை வாகிவிடுங் காணுமுமக் கதனால்
என்மனையி லிருக்கையிலே யவளேன்-உம்மை
யேன்தேட வேண்டியது தாளேன் 290
உண்மையெனக் கின்னதென்று தானே-சுவாமி
உரையுமென வேலவரும் வள்ளியென் மானே
இங்கேவந்து நானிருப்ப தாலே-யென்னை
யெங்கேயோ வென்றுதெய் வானையொருக் காலே
மங்கையருந் தேடுவா ளின்று-யெனக்கு
வள்ளிநீ விடைதாடி போய்வாரே னென்று
இவர்கூற வள்ளிமின் னாளே-சுவாமி
யின்றிரவு யிங்கிருந்து போகலாம் நாளை
அவசர முமக்கென்ன யங்கே-சுவாமி
ஆனாலும்நீர் போக சம்மதியே னிங்கே 300
கூடாது உம்மைவிட மாட்டேன்-மூத்த
குடியாளுக் கஞ்சிநான் பயப்படவு மாட்டேன்
தேடியிங்கே தெய்வானை வரட்டும்-யென்று
செப்புவதும் யொப்பினையும் வள்ளிகை நீட்டும்
பார்த்தே தடிவள்ளி மானே-சற்றும்
பாராம லிம்மொழிக ளேன்சொல்லு வானே
ஆத்திர முனக்கென்ன போடி-தெய்வ
யானைக்கு நிகராவ ரோபெண்கள் கோடி
சொந்தமாய்க் கிருபை பாராட்டி-அந்தத்
தோகையரைப் பருவமதில் நான்மாலை சூட்டி 310
வந்தபடி யாலவ ளுனக்கு-முந்தி
வந்தவளு மானதால் நானுமவ ளுக்கு
அடக்கமா யிருப்பதுவே சிலாக்கியம்-வள்ளி
ஆனாலும் இல்லறத்துக் கதுதானே யோக்கியம்
மடக்கொடி தெய்வானையவ ளிங்கே-நானும்
வந்தவகை தெரியாது தேடுவா ளங்கே
போகவிடை தாவென வதட்ட-யெங்கள்

பூவையெனுங் குறமாதுக் கதிகோப மூட்ட
மாகனக மேடையி லிலங்கும்-உமது
மனையாட்டி மூத்தகுடி யாளென விளங்கும்320
தெய்வானை சொந்தமாய்ப் போச்சோ-நானுந்
திருட்டுத் தனமாய்வந்த கள்ளிபோ லாச்சோ
கைமாயஞ் செய்தோமே நாங்கள்-ஒருவர்
காணாதே மாலையிட்டு வந்தீரோ உங்கள்
சாதியா ரேசுவா ரோகாண்-நீருந்
தலைமறைய யென்மனைக்கு வருவானே யேன்காண்
ஆதியிலே யெனையு நினைத்து-வந்த
தறியாளோ தெய்வானை யும்மை யழைத்து
கூட்டிவந்த நாரதரைக் கேளும்-வனத்தில்
குளத்தருகிலே மிகுந்த கரடிபுலி வாழும் 330
காட்டினி லுமக்குதவி செய்தார்-உங்களண்ணன்
கணபதியைக் கேட்டாலுஞ் சத்தியமாய்ச் சொல்வார்
சிவதலங்கள் செயசபைமுன் னாலே-வைதது
தெய்வானை யைத்தாலி கட்டினதி னாலே
அவள்மாத் திரஞ்சொந்தக் கிளையோ-சுவாமி
ஆனாலும் நான்கிழக்கு முகமிருக்க விலையோ
வள்ளியிவை சொல்லவே திகைத்து-செந்நெல்
வளமான தென்கதிரை வேலனும் நகைத்து
கள்ளிபோல் வீணிலிரை யாதே-பொல்லாக்
கசடான குறவரிட சாதியொளி யாதே 340
இரண்டுசமு சாரமா காது-யென்று
நீணிலத்திற் சொல்லுவது சரியான தோது
வண்டர்குல மானேயுனை நாடி-வந்த
மணவாள னுக்கெதிர்கள் பேசலா மோடி
நில்லுநான் போய்வாரே னென்று-சொன்ன
நினைவறிந்து வள்ளியவள் சீறியெதிர் நின்று
வல்லப முமக்கென்ன காணும்-எனக்கு
வகைசொல்லி யப்பாலே நீர்போக வேணும்
என்சமர்த்தைப் பாருமினி யென்றே-வள்ளி
இடைதனிலே சேலையை யிறுக்கியெதிர்
கொண்டே 350

அன்புற நெருங்குவது கண்டார்-வள்ளி
அப்பாலே நில்லென்று சொல்லுகிறே னென்றார்
சொல்லுகிற சமாச்சார மென்ன-உமது
தொழிலைநான் னெடுகிலு மறிந்துமினி யென்ன
நல்லதினி மேற்கொண்டு பார்ப்போம்-உமது
ஞாயமதை தேவசபையி லேசொல்லிக் கேட்போம்
தேவசபையி லேசொல்லிப் பாரு-அவர்க்கு
தெரியுமடி தினைப்புனத்தில் நீயிருந்த சீரு
ஓவியமே என்னுறுதி கேட்க-யெழுதும்
உடன்படிக்கை முறியுண்டோ கொண்டாடிப் பார்க்க 360
உடன்படிக்கை முறியெழுதித் தாரேன்-வள்ளி
யுனக்கேவல் செய்வதற்கு உன்பிறகே வாரேன்
கடக்கவனைத் தள்ளாதே மானே-யென்று
கட்டிமுத்த மிட்டது கசப்பேறு வானே
தனியே வனத்திலிரு பேருங்-கூடுஞ்
சையோக வேளையிலே பார்த்தென்னை நீரும்
இனியசெந் தேனோகற் கண்டோ-உந்த
னிதழென்று சொன்னதுவு மில்லையோ வுண்டோ
முன்னிருந்த யினிப்பென்ன போச்சோ-யிப்போ
மூத்தகுடி யாளுமக்கு சர்க்கரைபோ லாச்சோ 370
என்னைநீர் வசைசொல்வ தேனோ-சுவாமி
யென்குலத்தை நீரிகழ்ந்து பேசுவது மேனோ
தந்தைஉங்கள் தேட்டையெடுத் தாரோ-யெங்கள்
சாதியார் வந்துநிதந் தின்றுகெடுத் தாரோ
எந்தனாற் குறைகளே துண்டோ-சுவாமி
இழுக்கெந்த சாதியிலு மில்லாம லுண்டோ
மங்களகல் யாணமதில் நல்லாள்-அந்த
மணவரையி லென்தகப்ப னிட்டநகை யல்லால்
உங்களிடம் வந்தநாட் கொண்டோ-யெனக்கு
ருத்ராட்ச வடத்துக்கொரு நவமணியு முண்டோ 380
மாதிவை யுரைக்கமுத் தையன்-வள்ளி
மங்கைதனைப் பார்த்தேது சொல்வார் மெய்யன்
ஏதடிநீ பேச்சதிகங் கொண்டாய்-வள்ளி

யென்னுடைய சாதியி லிழுக்கென்ன கண்டாய்
குபேரன்மகள் போலநீ பேசாதே-உன்தகப்பன்
கொடுத்துவிட்ட வரிசைகளை வெளியே
சொல்லாதே
சபையார்க ளென்ன வறியாரோ-யிந்தத்
தாரணியி லுள்ளவர்க ளெவருமறி யாரோ
உடுத்திவந்த துணிக்குவே றுண்டோ-களிம்பு
ஊறிய பித்தளை யோலைக்குவே றுண்டோ 390
தொடுத்திருந்த கருகமணி யோடே-யென்னைத்
தொடர்ந்துவரும் போதுனக் கேதுபட் டாடை
வண்ணார்கள் வெளுக்காத கலையுஞ்-சுத்த
வாணியர்கள் யெண்ணெயிட் டறியாத தலையும்
புண்ணாக்குப் போலிருக்கு மேலுங்-காட்டில்
புரண்டுசெடி முள்ளிழுத்து சுரண்டிவிட் டாலும்
எப்போதுங் காய்கிழங்கு தின்னும்-நீயும்
இருந்தகெதி தெரியாதோ வரும்போதென் பின்னும்
அப்பவே நானழைத்திடத் தந்து-நல்ல
வாபணர மானதையு மழகா யணிந்து 400
செம்பவள மாளிகை யமைத்து-உனக்கு
செங்கமலத் தாதிகளை யேவல்நே மித்து
நம்பிநான் செய்ததை மறந்து-வள்ளி
நாயகமே பேசுவது மென்னடி யிகழ்ந்து
மானேநீ பதறாதே வாடி-யெந்தன்
மனமுழுது மறியாமல் சொல்லாதே போடி
கோதையே யிதுவென்ன மூர்க்கம்-உங்கள்
கூறறிந்து சொல்லுகிறேன் குறவரிட மார்க்கம்
சாராயங் கள்ளுகள் குடித்து-குறவர்
சந்திக்குச் சந்தியே சண்டைகள் பிடித்து 410
பூராயம் தெரியாமற் கத்தி-கண்ட
பூனைகளை யெராவார முசலென்று குத்தி
தின்பதுவு முண்டதிக மாக-குறவர்
சேரியிலே நீபழகி வந்தவை போக
செம்பவள வாயாளே யென்று-சுவாமி
செப்பவே வள்ளியவள் வெஞ்சினங் கொண்டு

விண்ணானம் பேசுவது சீரோ-சுடலை
மீதிலெலும் பானதுவை தின்றதுவு மாரோ
கண்ணப்ப னெச்சிலைதிங் கலையோ-சிவனுங்
கரிக்காகப் பாலகனைக் கொன்றதுவு மிலையோ 420
புத்தியுமக் கில்லாதே போமோ-கட்ட
புனக்குறவர் பெண்ணைநீர் சம்மதிக்க லாமோ
யெத்திசையும் புகழ்பெற்ற நாதா-வென்று
யிவள்சொல்லும் வசைகண்டு கூறுவார் தோதா
அடந்தேகு வார்குடி மிகுந்தால்-குறவர்
அவர்தனக் கேசெலவுக் கில்லாதி ருந்தால்
கடன்வாங்கு வார்சம்ம தித்து-தாலி
கட்டிய பெண்டுகளை யீடாக வைத்து
கொடுத்துவிட்ட பணத்துக் கீடாக-வைத்த
குறத்திகளைப் பணங்கொடுத்த குறவன் வெகுவாக 430
அடுத்தவளை யனுதினமுங் கூடி-யிவர்கள்
அஞ்சாறு பிள்ளைகளைப் பெற்றபின் தேடி
பணங்கொடுத்து திருப்புகிற போது-பெற்ற
பாலரையுங் கூடவே கூட்டியவள் மாது
குணமாக முன்னீடு வைத்த-பழைய
குறவனுடன் போவதுங்கள் சாதி மெத்த
இதுபுதுமை இவ்வுலகி லுண்டோ-வள்ளி
யேந்திழையே யிதைவிட லெச்சைவே றுண்டோ
கதிகொண்ட மயில்வா கனத்தார்-இந்தக்
கதைசொல்ல வேவள்ளியவ ளெதிருரைத் தாள் 440
குறத்தியென்று யெனக்குவசை புரியுஞ்-சுவாமி
கும்பமுனி யாலுங்கள் சேதிகொஞ்சந் தெரியும்
மறந்தீரோ நீரறிந்த திலையோ-வொப்பன்
மலைவேடன் மகளைப்போய் மாலையிட்ட திலையோ
சிந்தைமகிழ்ந் தொருபெண்ணைத் தூக்கி-உங்கள்
சிவன்தலையில் வைத்துமே சுமந்ததுக்குச் சாட்சி
நந்திகேசு வரர்சொல்லக் கேட்டேன்-சுவாமி
ஞாயநிச மில்லாமல் நான்சொல்ல மாட்டேன்

ஆட்டுக்கா லதூதனை யெடுத்தார்-உங்க
ளப்பனென் றவனிமுழு தெங்கும் பழித்தார்450
கேட்டுபா ருமதுதாய் ஐயோ-ஒற்றை
மாட்டுக் காரனைவைத் திருந்ததுவும் பொய்யோ
கண்ணாயிரங் கொண்ட நேத்தி-யொம்மான்
பெண்ணாசை கொண்டல்லோ வந்தவப கீர்த்தி
பெண்ணொருவர் கொடுக்காத தெதினால்-யொண்ணன்
பெருவயிறு கொண்டுவழிக் கரையிலிருந் ததினால்
அண்ணனுமே மத்தளங் கொட்ட-சொந்த
அருமைமரு மகனின்று கைதாளந் தட்ட
விண்ணவர்கள் கூடியே நகைக்க-வந்த
வேதியரும் மாதவருங் கண்டு பிர்மிக்க 460
தேவடியாள் போலுமது அன்னை-கூடுந்
தேவசபையி லேனின்று ஆடலையோ முன்னை
பாவலருக் கருள்புரியுஞ் சீலா-யிதையும்
பார்த்தவர்கள் சிரியாரோ தங்கவடி வேலா
பத்மாசூரனுக்கு மிகப் பயந்து-உங்கள்
பரமசிவ னோடலையோ காட்டுவழி நடந்து
கைப்பொருளு மில்லாமல் தேகி-யென்று
கைப்பிச்சை வாங்கலையோ பரமசிவ யோகி
கும்பமுனிக் கருள்புரிந் தோரே-யென்று
கூவியேவள்ளி சொல்லுமொழி களறிந் தாரே470
தென்பாக யென்மோக வள்ளி-யிந்தச்
சீமையிலே திருடிவருங் குறவர்குலக் கள்ளி
குதிகொண்ட வனக்குறவர் சாதி-வகையைக்
கூறறிந்து சொல்லுகிறேன் கேளுமவர் சேதி
சதிர்பெருகுந் திருவிழாக் கடையில்-சனங்கள்
சந்தடிக ளாகவே சயனிக்கு மிடையில்
கூசாமல் கூடவே படுத்து-தூக்கம்
குலையாமல் பணிதிகளைக் கழற்றியே யெடுத்து
பேசாம லோடுவது கண்டு-குறத்தி
பெரியதனக் காரர்களு மேபிடித்துக் கொண்டு480
வம்பிலே தலைமயிரைக் கட்டி-குறத்தி
மார்பிலே போடுவார் சொல்லென்று கிட்டி

செம்பாணி கொண்டுமே யிருத்தி-அவர்கள்
சேலையை யுரிந்தம்மண மாகவே நிறுத்தி
அடிதண்ட மாகவே யடிப்பார்-குறவர்
அப்பவு மெடுக்கவிலை யென்றுமே துடிப்பார்
தடியடிக்கு யசையாத சாதி-குறவர்
சங்கைகெட்டு நிற்பார்கள் தெரியுமவர் சேதி
என்றிவ ருரைக்கவுமே மாது-சுவாமிக்
கெதிராக நின்றேது சொல்வாளப் போது 490
தொண்டர்தொழு கின்றமயி லேறுஞ்-சுவாமி
சொல்லுவே னுங்கள்குல வளமைகளைப் பாரும்
அடையாளஞ் சொல்லுகிறேன் கேளும்-நல்ல
ஆவினங்கள் கூடிவரு மாயர்பாடி வாழும்
இடையருட வளவிலெந் நாளும்-உறியி
லிருந்தவெண்ணெய் திருடினதை யாரென்று கேளும்
அன்றுடன் யசோதை யறிந்து-வந்து
ஆவினங்கள் கட்டுகிற கயறால் வரிந்து
ஒன்றாக மாதரொரு பக்கங்-கூடி
உரலோடே கட்டினதைச் சொன்னாலும் வெட்கம் 500
கட்டுண்டதும் ரோச மிலையோ-பெண்கள்
கட்டிய சேலைகளைக் களவாண்ட திலையோ
வெட்டிய சமர்க்களத்தி லேரும்-கிருஷ்ணன்
விசயனுட குதிரைகளை மேய்க்கலையோ பாரும்
ஊத்துகிற கஞ்சிகளை யேத்தார்-கிருஷ்ணன்
ஊர்க்காலி மாட்டையெலாங் கட்டியங்கே மேய்த்தார்
கூத்ததிக முண்டின்னம் ரொம்ப-சொல்லக்
கூசுதே யென்மனமு மென்றிவ ளியம்ப
கேட்டவடி வேலர்கை நீட்டி-வள்ளி
கேளடி யுங்களுட வீடுமலை நாட்டில் 510
நீட்டியிரு கால்களை நிறுத்தி-அதனில்
நெடுமுட் டாகவளை கூட்டியே பொருத்தி
நத்திய கயிற்றால் வரிச்சு-மழைக்கு
நனையாமல் மூங்கிலிலை யால்மேய்ந்த குச்சு
சுத்திவைத்த சுவரெல்லா மோட்டை-யசந்து
தூங்கவும் விடாதங்கே முணுமுணுத்த மூட்டை

ஆடேறி மேயுமதில் தொல்லை-வீட்டில்
அஞ்சுபேர் தமக்கதிக மிருக்க விடமில்லை
மூடாத வாசல்களைக் கண்டு-பார்த்து
மூடினா லுசரவொரு முகட்டொழுக்கு முண்டு 520
தேடாத பொருள்சிலவு காணும்-வைத்த
தீபமுந் தெரியாது தோணாமல் தோணுங்
கூடாது குறவீட்டை நம்ப-சற்றே
குந்தவைக்க முடியாது நசநசப்பு ரொம்ப
குறம்பாடிக் கஞ்சிகளை வாங்கும்-உங்கள்
குறவருட பக்கியெல்லாங் கூரையிலே தூங்கும்
வரம்பேது மில்லையெந் நாளும்-யென்று
வடிவேலர் சொல்லவே வள்ளிமின் னாளும்
தமக்கென்று சிறுகுடிசை கட்டி-குறவர்
தானிருப் பதுவேவசை யில்லாத கெட்டி 530
உமக்கொரு தலத்தினிலும் நாடி-சுவாமி
ஒண்டயிட மில்லாமல் மலைக்குமலை யோடி
கையிலரைக் காசுமே யில்லாமல்-வீடு
கட்டியே குடியிருக்க வகையு மறியாமல்
வெய்யலிலும் வேனிலிலும் காய்ந்து-சுவாமி
மெத்தவரு ஷித்தமழை பனியால் கனிந்து
இருப்பதைக் கண்டுமனம் வாடி-உமக்கு
யிவ்வுலகி லுள்ளவர்க ளெல்லோருங் கூடி
சிறக்கவே கோயில்க ளமைத்து-உமக்கு
செம்பொன்மணி யாபரணம் விருதுகள் சமைத்து 540
வடிவேல வாவென்று யெண்ணி-உமக்கு
வரிசையிட்டு வைத்தார்கள் பிரதிஷ்டை பண்ணி
அடியவர்கள் புண்ணியமீ தய்யா-நீரும்
அழகான கோவில்களி லிருக்கிறது மெய்யா
தேருமக கரிபரியு மிரவல்-உமக்கு
செயமேள பேரிகையுங் கோவில்களு மிரவல்
ஏறுமயில் வாகனமு மிரவல்-உமக்கு
யிட்டநவ ரத்னமணி யாபரண மிரவல்
இத்தனையு முமக்கிரவல் தானே-குறவர்
இருப்பிடத்தைப் பழிக்கிறீ ரெண்ணாமல் வீணே 550

வெற்றிவே லதுதானே சொந்தம்-உமக்கு
வேறேயொரு ஆஸ்திகளின் மேலென்ன சொந்தம்
மச்சமுனி மறைபொருள்க ளாலும்-உங்கள்
வங்கிஷ வகுப்புகளைச் சொன்னாரே கேளும்
மச்சானோ மறையோதும் வேதன்-உமக்கு
வாய்த்ததொரு மாமனும் அளவளந்த தாதன்
ஆத்தாளோ பாலூருப் பறைச்சி-அவளுக்
கருமையுள்ள தமையனையும் வளர்த்தவளு மிடைச்சி
தாத்தாவோ மீன்காரக் கறவவன்-உமக்குத்
தளகர்த்த னானவனும் நல்லகுல மறவன்
அரனாரென் றுமையீன்ற தய்யா-சங்க
மாண்டியல்லோ சாதியிலே சொல்வார்கள்
மெய்யா 560
வரமுறைக ளில்லாத நாட்டம்-உங்கள்
வங்கிஷங்கள் தெரியாதோ பலசாதிக் கூட்டம்
இதற்குமுன்னே நானறிந் தாலும்-உமக்கு
இசைவேனா நீர்குட்டிக் கரணம்போட் டாலும்
அதற்கென்ன செய்யலா மையா-நாங்க
ளானாலும் குறச்சாதி யென்பதும் பொய்யா
பண்டாரம் நானென்று கத்தி-யெந்தன்
பரணெதிரே வந்தீரே யதுவென்ன புத்தி
கொண்டுகுலம் பேசுவது போச்சோ-சுவாமி
கொய்ததினை மாவுக்கெனைக் கெஞ்சினதும்
போச்சோ 570
பேருதெரி யாமலுரு மாறி-வந்து
பிசகுசெய்த மதகரியி னாலேமத மீறி
பாரமத யானைவரா விட்டால்-உமது
பாசாங்குக் குள்ளாக மாட்டேனில்லா விட்டால்
வழகியிந் தாடிகுற வஞ்சி-யென்று
வனவேடன் போல்வந்து யென்னெதிரே கெஞ்சி
களையாகு தெனவந்து முட்டி-நீரும்
காரியங்கள் கொண்டபின் பேசுகிறீர் கெட்டி
வலியநான் வந்தேனோ தொட்டு-நீரும்
வஞ்சகம் பேசுகிறீ ரிதுவென்ன செட்டு 580

சலியாமல் நீருறுதி சொன்ன-மொழிகள்
தவறுவரோ கலிகால மானாலு மென்ன
பொன்னடி துலங்கியென் மாமி-பெற்ற
புண்ணியனே யனுதினமு மகலாமல் சாமி
யென்னருகி லிருமென்று கேட்டால்-சுவாமி
யென்குலத்தை நீர்பழிக்க யுமக்குவிளை யாட்டா
வையகத்துக் கேற்காது யென்னை-நீரும்
வஞ்சகமா யிகழ்ந்து பேசுவது தன்னை
தெய்வானையோ சொல்லி விட்டாள்-எந்தச்
சிறுக்கியுமக் கிவ்வளவு சூதுசொல்லி தொட்டாள் 590
எப்படியோ நானறிய வில்லை-லோக
மெங்கும்நீர் போகாத விடமொன்று மில்லை
இப்படியு மருந்திட்ட தாரு-உமக்கு
யேலாதோ சொல்லவந்த மங்கையர்கள் பேரு
வருந்திவிருந் தளித்தவளைச் சொல்லு-அவளை
மயிர்பிடித்துக் கொண்டாறேன் சற்றேயிங்கே நில்லு
மருந்திடு மயக்கமில்லா விட்டால்-எனக்குப்
பதில்சொல்ல மாட்டீரோ நானெதுவுங் கேட்டால்
முருக்குவளை தாதிகளே வாடி-நம்ம
முத்துலிங்க சுவாமியைநீ கூட்டிவா போடி 600
கருதுகமருந் திடுபிசகு தோணும்-எந்தன்
கணவனெனுங் கந்தருக்கு கைபார்க்க வேணும்
மின்னாரே யென்றிவளுஞ் சொல்ல-எந்தன்
வேலரிது புதுமையெனக் கேட்டவரு மெள்ள
யென்னடிவீண் யோசனைகள் கொண்டாய்-நானும்
யெவள்வீட்டி லேவிருந் துண்ணதைநீ கண்டாய்
என்னுடைய சொல் வுறுதிமீறி-நீயும்
எதிர்பேசி னதினாலே யுன்னைநான் சீறி
சொன்னவகை யல்லாது கண்ணே-சும்மா
தோகையை நானுமுனைப் பேசுவேனோ
பெண்ணே 610
மயங்காதே நீவள்ளி மாதே-உந்தன்
மனமறிய நான்சொன்ன தல்லாதிப் போதே
ஜெயமாக நான்போயி வருவேன்-வள்ளி

தினமுமுனைப் பிரியாமல் தெரிசனமுந் தருவேன்
உனைவிட் டகல்வேனோ மானே-யென்று
வுபசாரஞ் செய்தங்கி ருக்கையிலே தானே
கந்தனையுங் கோவிலுக்குள் தேடி-அங்கே
காணாமல் தெய்வானை யம்மன்மனம் வாடி
மங்கையரே சுந்தரப்பிர காசன்-அந்த
மாணிக்க கெங்கைக்குப் போனமுரு கேசன் 620
யெங்கேயென வேலவரைத் தேடி-நீங்க
ளிதுநிமிஷம் வரவேணு மென்றிடவே யோடி
தாதியர்க ளெல்லோருஞ் சென்று-யெங்கள்
சண்முக வேலாயுதனைத் தேடினா ரென்று
ஆதிசிவ மாணிக்க கெங்கை-தீர்த்த
மாடவந்த வேலவரைக் கண்டீர்களோ யிங்கே
பாதிபிறை நுதலழகி யாளே-அவள்தன்
பர்த்தாவைக் காணோமென்று தேடுவதி னாலே
கதித்தபுகழ் கொண்டமுனி வோரே-யெங்கள்
கந்தனையுங் கண்டதுண்டோ சொல்லுவீர் நீரே 630
காணிக்கை கொண்டுவந் தோரே-எங்கள்
கட்டழகி தெய்வானை மணவாள னாரே
மாணிக்க கெங்கைநீ ராட-யிங்கு
வந்தவரைக் காணீர்களோ யினியெங்கே தேட
பாங்கியர்கள் நதியெங்குந் தேட-கோவில்
பணிவிடைக் காரர்தெரு வீதிவழி நாட
ஏங்கியவர் தேடுவது கண்டு-சுவாமி
யெங்கோனுஞ் சிந்தையி லறிந்தன்பு கொண்டு
நினைவில் மறக்காததெய் வானை-யிந்த
நிமிஷமே கூட்டிவா வென்றேவுஞ் சேனை 640
எனையழைக்க வேணுமென்று தேடி-வாறார்
ஏந்திழையே நான்போய் வரவும்விடை தாடி
தாடியென்று சொல்லவே திகைத்து-வள்ளி
தையலருஞ் சுவாமிதனைப் பார்த்துமே நகைத்து
தேடிவந்த பேர்களைநா னடிப்பேன்-அந்த
தெய்வானை வந்தாலுமே சண்டை பிடிப்பேன்
என்னுடைய கணவனையுந் தேட-அவளுக்

கென்னவதி காரம்விடை கேள்க்குறீ ரோட
மன்னவா யிதுவென்ன வென்றே-சொன்ன
வள்ளிதனை யுபசாரஞ் செய்தருகில் நின்றே 650
யெனக்குரிய மானேநீ கோபம்-இப்போ
யென்பேரில் வைக்காதே வீண்மனஸ் தாபம்
உனக்குநான் பிசகுசெய் வேனோ-பெண்ணே
யோசனைகள் செய்யாதே நான்மறப் பேனோ
போய்வாரேன் வள்ளி தயவாக-யெனக்குப்
புகழ்ந்துவிடை தாடிதெய் வானையிட மேவ
வாய்திறந்து சொல்லுமென மகிழ்ந்து-யென்று
வடிவேலர் கேட்கவே வள்ளியு முகந்து
மறைபுகழு கின்றவடி வேலா-சுவாமி
மனவருத்த மில்லாமல் போய்வாருஞ் சீலா 660
இறையவருக் குகந்தமக னாரே-யென்று
யிவள்சொல்ல வேலர்வழி கூடிநடந் தாரே
சித்திர வடிவேலர் நடந்தார்-இங்கே
தேடிவந்த தாதியர்கள் கண்டடி பணிந்தார்
வெற்றிமயி லோனன்பு கொண்டு-கோயில்
மேவியதெய் வானையையுங் கண்டெதிரே சென்று
மங்கையரே யெனைத்தேடு வானேன்-நம்ம
வள்ளியம்மை தன்னுடைய கோவிலுக்குப் போனேன்
செங்கமல மாதேயென் கண்ணே-யிப்போ
தேடினது மென்னவகை சொல்லாயோ
பெண்ணே 670
தெய்வானை யென்றார் துணிந்து-அந்த
தேவிசெவ் வேள்பாத மலரடி பணிந்து
வைபோக மானவடி வேலை-உடைய
மணவாளா உனக்குநித மிதுதானோ வேலை
இளையாள்மே லிருக்கிற பாசஞ்-சுவாமி
யென்பேரி லேனில்லை யுமக்குவிசு வாசம்
அழையாத விருந்தோநீர் காணும்-வள்ளி
யவள்மனைக்கு நிதம்வலியப் போகவா வேணும்
முழுக்கவே யும்மாலே யேச்சே-சாதி
முறைதவறிக் குறவருட சம்பந்த மாச்சே 680

இழுக்கான சாதியி லேகி-மாலை
யிட்டாலு மேன்மையது தவறுவாரோ யோகி
அடிக்கடிநீ ரவள்மனைக்குப் போனால்-மெத்த
மனக்களிப் பாவே சொல்லுவா ளானால்
குடிதனி லுயர்ந்தவளு மில்லை-வள்ளி
குறவர்குல மானதால் சொன்னேன் சொல்லை
நிசமென்று நீரெண்ணு வீரோ-உமக்கு
நேர்ந்ததுவும் வள்ளியுட மோகமறி வீரோ
அசையாம லானந்த மீறி-வள்ளி
ஆசைகொண்டு பேசுகிறீர் நானுமக்குப் பாரி690
யாகிநா னெடுத்ததென்ன கோட்டை-புவியில்
அறியாரோ நீரெனக்குத் தேடிவருந் தேட்டை
தேகியென வாண்டிபோ லானீர்-வள்ளி
தேவியவள் தினைமாவு தின்னப் போனீர்
திரிபுவனை யருள்பெற்ற பாலா-உமது
சித்தமது எப்படியோ கதிரைவடி வேலா
அரிமருக ரேயென் றுரைக்க-யெங்க
ளாறுமுகன் சொல்லுவார் தெய்வானை மெய்க்க700
மானேநான் உன்வருதி பெற்றேன்-பின்பு
வள்ளிதனை மாலையிட்டு கூட்டிவந்து வைத்தேன்
தேனேயென் மேற்பிழைக ளில்லை-உனக்குத்
தெரியாதோ வீணாகப் பேசுவது தொல்லை
கோவிலுக்கு நீபோடி யென்று-யெங்கள்
குமரேசன் சிம்மா சனத்திலே சென்று
சேவலொரு கையினி லிருக்க-யெங்கள்
சித்திரவடி வேலவரு மேகொலு விருக்க
சூடதீ பாரா தனைக்கு-வந்து
சூழ்ந்தார்கள் கோடானு கோடியன் றைக்கு710
அடியவர் பணிந்துதுதி பாட-கதிரை
ஆறுமுகன் மீதினில் கவிமாலை சூட
சிம்மா தனத்திலி ருக்க-யெங்குஞ்
ஜெயஜெயென வந்தவர்கள் சூழவே பெருக்க
அம்மா பரஞ்சோதி பாலன்-நல்ல
அன்புட னருளுவா ராறுமுக வேலன்

துன்பவினை யணுகாமல் தானே-நீங்கள்
சுகமாக வாழ்வீரென் றெல்லார்க்குந் தானே
தென்கதிரை வேலரரு ளாக-வந்த
தேவர்களு மனிதர்களுந் தங்கள்பதிக் கேக 720
சித்தர்களும் வந்துநிதம் பணிய-யிந்த
செந்தமிழ் தனக்குதவி செய்சுப்பிர மணிய
கர்த்தனரு ளாலேகுறை வில்லை-ஆருங்
கதிர்காம மென்றாலும் வறுமைகளு மில்லை
தேவர்களு முனிவர்களும் வாழி-யெங்கள்
திருமாலு மயனரனு முமையவளும் வாழி
நாவலரும் பாவலரும் வாழி-வள்ளி
நாயகன் மேற்கவியி தெந்நாளும் வாழி
புள்ளிமயில் வடிவேலும் வாழி-யிந்தப்
புவியெங்கும் நகரத்தார் புகழ்பெறவே வாழி 730
வள்ளிதெய் வானையுடன் மேவி-யோக
வாழ்வுபெறுங் கதிரேச னெந்நாளும் வாழி. 732

**கதிரேசன்பேரில் ஆனந்தக்களிப்பு முற்றிற்று**

உ

# ஆரணி ஞானியார் மடாலயத்துக்
# கந்தருலா

## காப்பு

### தமிழ்த்தெய்வம்

### குறள் வெண்பா

தண்டாவென் னெஞ்சே தமிழ்மறையாந் தாயேயாட்
கொண்டாணீ யென்னையென்றே கூறு. 1

### விநாயகர்

### நேரிசை வெண்பா

சீரணி சேணமரர் சேர்ந்திறைஞ்சி யேத்துமெழில்
ஆரணிவாழ் கந்தருலா வாய்ந்தறைய—வாரணிந்த
கொங்கைக் குவட்டுக் குறமான் வெருவமுன்னார்
செங்கையைந் தானைசெப்புந் தேர்ந்து. 2

## நூல்

### நேரிசைக் கலிவெண்பா

### கந்தோற்பவம்

உலகங்க ளுள்ளுவப்ப வோடிக் குணநீ
ரிலகும் படிசே ரிரவி—நலங்கொள் 3
கதிர்போற் கனிந்தொளிருங் கற்றைச்செவ் வேணி
நதியோடு மிக்கு நகுவெண்—மதியோடு 4
கொன்றையுங் கொண்ட குளக்கண்ணர் தாண்மலரிற்
துன்றி யமரர் தொழும்வெண்கைக்—குன்றினனு 5
நான்முகனும் பாற்கடலார் நாரணனும் பாலகரும்
வான்முகமா வாழ்த்தும் வசுக்களுந்—தேன்முகமார் 6
பன்மலர்க டூவிப் பணிந்தேத்தி மற்றெவரு
நன்மொழிக ளாற்றுதித்து நாடியே—பன்மறைக 7

ளாற்றுதித்துப் போற்றி யருள்பாடிக் கைகூப்பி
யேற்றுத் துவசத் திறைவவோ—போற்றியோ 8
போற்றியோ வென்று புலம்பிப் புகழ்ந்தலறி
நாற்றிசையு மோடி நலிவுற்றுக்—காற்றெ 9
திருங்கறங் காச்சுழன்றோங் காணென்று வெட்டுண்
மரம்போல் விழுந்தெழுந்து வாழ்த்தி—புரஞ்செற்ற 10
வத்தனே தக்க னவிக்கிசைந்த வெந்தீமை
சுத்தமுற நீசபித்த சூழ்வினையா—மெத்த 11
வவுணர்தங் காற்குள் ளடங்கிப் படுதன்
மவுனமொடு கண்டுண் மகிழ்ந்தா—யவர்பக்க 12
லின்ன மிடைப்பட் டிறவாம னாங்கட்டாம்
பின்னமுற நின்ற பிழைபொறுத்—துன்னருளிற் 13
சேருவா னாகத் திருக்கருணை செய்கவென்றி
யாருமா வேண்ட வபயந்தந்—தேரெழிற் 14
காமனை வென்று கவின்பிறைவில் லாக்கடுக்கைத்
தாம மலர்கணையாத் தான்மதனா—வேமப் 15
பிறைநுதல் வாட்கண் பிறங்குமுத் தம்ப
னறைமலர் நாரி நனியா—மறையின் 16
விதியாரும் வில்லும் விரற்கணையுங் கொண்டிவ்
விதமா யெழுந்த விமலை—ரதியாக 17
மாரன் போர்செய்ய மகிழ்ந்திளந் தென்றலாந்
தேரன்பின் மீதுமிளிர் தேவியொடு—பேரன்பின் 18
மாகந்த மாதன மன்னுந்தண் சாரலிற்
போகந் தமவாகப் போந்தருளி—யாகம 19
தன்பொத் திருவ ரருளமுத மீதூற
வின்பக் கடலா னினிதாடின்—மென்பூவி 20
னாரு மமுத வறுவர்க் களித்தவர்பா
லாரும் பொருளா தகட்டினின்று—பாரி 21
லறுவருந் தாம்பயப்ப வார்ந்து மதியார்
குறுகிச் சரவணத்திற் கோல—முறுபடிவங் 22
கொண்டெழுந்தோன்; அன்றே கொண்மு விவர்வோனைத்
தண்டெடுத்துத் தாக்கிற் சயங்கொண்டோன்— கண்டினிதா 23

## பிள்ளை விளையாட்டு

வேந்தன் மயிலங்கி வெண்டகர்தென் கோன்கோழி
பாந்தளணி பூணர் படைக்கலங்க—ளேந்திவைத்த 24

தேவர்கள் சூழ்ந்துசுர சேனா பதிப்பட்டந்
தாவிலன் போடு தரப்பெற்றோ—னாவினால் 25
வானவனை நான்முகனை மாதவனை மற்றுமுள
சேனையர்க டம்மைச் சிறுபோர்க்குத்—தானை 26
வளமார் படைகளொடு வம்மினென்று கூவி
விளையாட்டுப் போரிலுயிர் விண்ணுக்—களித்துத்தா 27
நின்ற நிலை மாறாது நின்றோன் றிறந்தெரிந்து
நன்றிஃதென் றெந்தையா நம்பரமன்—றுன்றியென் 28
னப்பனே யையா வரசே யகிலமெலாந்
துப்பற மாண்டு தொலையுமே—மெய்ப்பொருளாங் 29
கண்ணே புரிகக் கருணையென்று காதலுளத்
தெண்ணோடி ரந்திடவி றந்தவர்கள்—புண்ணா 30
ரெழிலோ டெழவே யெழுப்பினோ னன்பிங்
கழியாப் புகழ்நா ரதன்செய்—பழிதீர் 31
மகத்தி லுதித்த மதத்திருகு கோட்டாற்
சகத்தைத் தெறுஞ்செந் தகரை—யகத்தின் 32
மதமடங்கப் பாய்ந்தேறி வாகனமாக் கொண்டே
யுததியுல கங்களெல்லா மூர்ந்தோன்—சதமாம் 33
பிரணவம் பேசும் பிரமனைச் சீறிச்
சிரசுபுடைத் தோர்ந்துசிறை செய்தோன்—பரனான 34
தந்தைக் குபதேசந் தந்துளோ னைந்தொழிலின்
விந்தை மிகுந்த விறலினோன்—சிந்தைமகிழ்ந் 35
தாதிபரா சத்தியுளத் தன்பொடுமும் முக்கோள்கள்
கோதிலா மும்மைக் குணமுளமென்—போதுவாய்ச் 36
சத்திகளைத் தாக்கிச் சதுக்கோண்மூன் றாக்கியச்
சத்திகளை மாறுநிலை சார்வித்து—நித்தியமா 37
வாழ்கவென் றேத்தி வரநல்கிச் சூரியர்கள்
சூழ்கதிர் கோடியொளி துன்றநீ—ளாழ்கடல்போற் 38
காணுங் கருணைகொடு கற்பித் தளித்திடுவேல்
பேணுங்கை யேந்தியன்பிற் பெற்றுளோன்—பேணுந்தன் 39
னன்பர்க் கறமுதலா வாற்று நெறியூட்டியே
யின்பக் கடலை யினிதளிப்போன்—வன்புறுத்து 40
மைம்பொறியை யைம்புலனை யங்கத்தப் பாற்படுத்தும்
பைம்பொனெனச் செய்வோன் பரிவோடு—வெம்புறுத்து 41
மந்தக் கரணங்க ளாய்ந்தசிந்தை யேயாக்கித்
தொந்தமுறச் செய்து துயரொழிப்போன்—பந்தமுறு 42

முக்குணங்க டம்மை முதிர்சாத் துவிகத்துள்
ளொக்க வடங்கவரு ளோம்புவோன்—மிக்குடலுள் 43
ளேழ்நிலை யாறுவீட் டேர்தத் துவநிலைமை
பாழ்நிலைமை மேற்சுடர்மை பால்போல—சூழ்கடிந்து 44
தெள்ளிதிற் காட்டித் தெளிவிப்போன் றத்துவங்க
ளுள்ளத்துக் குள்ளே யுதித்தொடுங்கல்—வெள்ளிடைபோற் 45
காட்டிமுற்றும் வெல்லுநெறி காட்டுவிப்போன் றன்னருளி
னாட்டி மனமா நடத்துவிப்போன்—கூட்டமுறு 46
மாறத்து வாவு மவற்றினிலை யும்பகிர்ப்பு
மாறற்றுச் சீர்காணு மாண்பளிப்போன்—கூறிடிற் 47
கல்விவழி தன்னைக் கடைப்பிடிப்போர்க் கெப்பகையும்
வெல்வலிமை தந்துரிய வீடளிப்போ—னல்வினையே 48
யேவருக்கு மாற்று மெழிற்கருணை நீடிவனை

## தேவர் சிறை மீட்டல்

யாவலொடு தந்தை யருகணைந்து—தாவிலாக் 49
கண்ணே கரும்பே கௌரவப் பேரரசை
விண்ணோர் சிறையை விடுவிக்க—வெண்ணிறமெய் 50
யிந்திரன்கை வச்சிரமு மின்றுளவன் சக்கரமுஞ்
சுந்தரவு ருத்திரர்கைச் சூலமும்பொய்—விந்தை 51
மிகுமவுணர் மாயைவினை வெல்லாவுன் கைவே
றகுமாற் றயைபுரிக வென்று—பரிவா 52
விரும்பியன்பா வேண்ட மிகமகிழ்ந்து சேனை
பெருங்கடலாக் கூட்டியருள் பேணி—யரிய 53
செலவு நயந்துவழிச் சென்றோர் படைவீ
டிலகக் கொலுவீற் றிருந்து—நலனா 54
ரறநெறிபோ திப்ப வருட்டூதுய்ப் பானாத்
திறல்வீர வாகுவாந் தேவை—யுறவளைத்தந் 55
நீதியிலா னுக்குநன் னீதியுந்தன் மத்துயர்வுந்
தீதிலா நஞ்செயலுஞ் சேனைகளின்—கோதிலா 56
வன்மையும் வாய்மை வழக்கால் வழங்கியுயர்
நன்மையே யாக நவின்றறிந்துண்—ணுண்மை 57
தெரிந்துவரு கென்று திருவாய் மலரப்
பரிந்தகன்று சென்றப் பதக—னரசியலைக் 58
காண்பான் மகேந்திரக் கன்மலைமே னின்றறிவான்
சேண்பார்த் தயர்ந்துநிற்குந் தேவர்செயன்—மாண்பா 59

ரரிமுகனு மானை முகனு மவராற்
பெருகும் படிவழியே பெற்று—வரவந்த 60
சுற்றமும் சுற்றத் துணைப்பட்டோர் மந்திரரா
வற்றமி லாக்கடல்போ லார்ந்தனைய—மற்றவருக் 61
கக்கினி தேவ னடுப்பெரித்துத் தீபமிட்
டுக்கி யொருபா லொதுங்குறலுந்—தெற்கா 62
ரியமனுங்கள் சுற்றத் துயிர்கவரே னென்றங்
குயுமா றுரைத்துள் ளொடுங்க—னியருதி 63
தண்டிகை தாங்க றகுநீர் வருணனார்
மண்டிவா சற்றெளித்து மாழ்கலில்லத்—தண்டிநின்று 64
வாயுவு குப்பைகள் வாரிச் சுமத்தலெழின்
மேயவ ளகன்னடப்பை மென்கைதொள—றூயநிலை 65
யீசான மூர்த்தி யிவர்க்கிறுநாள் வந்ததென்று
கூசாது நீறு குழைத்தளித்தல்—கூசி 66
யயன்வருஞ் செய்தி யறைந்துள் ளயர்தல்
புயல்வண்ண னச்சதைகை போற்றி—நயமாக 67
வேந்திமுன் னின்றங் கெதிர்பார்த் திறங்குதல்
வாய்ந்தசுரர் மச்சமுன் வாருத—லாய்ந்தவிசை 68
விஞ்சையர்கள் வீணை மிழற்றுதல் வான்மறையோர்
வஞ்சமிலாப் பாடல் வழங்குதல்—கெஞ்சி 69
யரம்பையர்க ளாடுத லங்கலைகள் பாடல்
புரிந்திடன் மாவிளக்குப் போற்றும்—பரிவுமுதற் 70
கண்டான் வருந்திக் கருணைகொடு கைம்முறுக்கி
மண்டியின்னே மாய்ப்பவென்று வாய்மடித்தான்—
பண்டோன் 71

கருணையை யஞ்சிக் கடிதாறி நேரிற்
றருணமிது பாவிசபை சாரக்—கருதியவன் 72
போகப் புகுதப் பொருந்தவிட மில்லாம
லேகப் புறக்கல்போ லேய்தல்கண்—டோகைமிகுத் 73
தந்தரமாப் பாய்ந்தவ் வவைநடுவிற் சென்றுயர்
சந்தநிறை சிம்மா சனமென்று—விந்தை 74
மிகவருத்தி மீதாக்கி மேவியழ கோடு
தகைபெறுகெம் பீரமொடு சார்ந்தா—னகநொந்து 75
பற்கள் கடித்தான் பதகன் படியோடு
கற்கள் பொடியத்தீ காலக்கண்—ணற்கெடுக்குஞ் 76
செந்தீச் சிதரத் திரட்டி யுருட்டினான்
முந்துநெடுங் கைகண் முறுக்கினான்—வந்தவனிங் 77

காரடா வென்றா னவுணனெம் மையனெனைப்
பாரடா கோபம் பழியடா—நீராக 78
வாறடா கோபமுளி லான்றோர் முறைமையினைத்
தேறடா சிந்தை தெளியடா—கூறடா 79
வென்முகம் பார்த்தடா வென்மொழிகே ணானடா
தன்மயமா யாவரையுந் தாங்குபவர்—நன்முகமாஞ் 80
சண்முகனார் மிக்க தயவினா ரன்பருணீர்த்
தண்முகனா ரெவ்வுயிர்க்குந் தாய்போல்வா—
ரெண்முகமார் 81
சையவுல கங்களீ ரேழுந் தாரணியாம்
வையமுற்று மாய்க்குமுனை வாளினா—ருய்யுமா 82
றெங்கோடி னாலு மெவர்களா னாலும்பின்
னங்கோடிக் கொல்வே லயிலுடையார்—தங்காமல் 83
வில்வளைத்து விட்டால் வெருவியொழித் தோடிடினுங்
கொல்வதன்றிப் பின்வாங்காக் கோலுடையார்—
வல்வினையார் 84
நல்வினையார் தம்மடியை நாடிநின்று பாடுபவர்
புல்வினையைப் போக்கும் புகழுடையார்—
சொல்வினையோ 85
டண்டினரைக் காக்கு மருளுடையார் தெவ்வர்களை
மண்டியுயிர் வாங்கும் வலியுடையார்—கண்டிதமா 86
யென்னிடத் தன்பா வெழின்மலர் வாய்விண்டு
சொன்னவையைச் சொல்கின்றேன் சூதில்லை—நன்னீர் 87
நடுக்கட றன்னி னகரமெடுத் தாள்வோன்
றுடுக்கன் பெரியவொரு துட்ட—னடுக்குணமார் 88
நீதிநெறி நில்லாதா னெட்டூரன் றீதுநினைந்
தேத மிலார்க்கும் மிடர்செய்வோன்—சூதறியாத் 89
தேவர்களை வன்பிற் சிறைசெய்தான் குற்றேவ
லோவற வூட்டி யுத்தினனத்—தேவர்கடந் 90
துன்று சிறையைவிடச் சொல்லிவா சொல்லிடின்
வென்றி மதித்து விடமாட்டே—னென்றக்காற் 91
பொன்றுவாய் சுற்றமொடு போர்முகத்தி லென்றுண்மை
முன்றுணிவு நன்கு மொழிந்துவா—வென்று 92
மலைவிழுங்கும் வல்லோர் மலிகடல்போற் சூழப்
புலமையின் னிற்கெனைப்போ தும்போற்—கலைநாத் 93
திருவாய் மலர்ந்தருளிச் செப்பிவிட நின்பால்
வருமாறு வந்துளேன் வாய்மை—யுரிமையாச் 94

செப்பினே னின்கருத்துச் செப்புக வென்றண்ணறான்
செப்புமுனஞ் சீறிச் சினங்கொண்டா—னப்புக் 95
கடல்கடைநாட் பொங்கக் காரிடித்தாற் போல
விடவாய் திறந்து வெடித்தான்—கடையதனில் 96
நின்றவரை நேர்நோக்கி நெட்டுயிர்த்தா னன்னவன்பாற்
சென்றெம்மான் சேர்ந்து சிறுநகையா—நின்றுநா 97
னொன்று புகல்வே னுனக்குறுதி நன்றாக
மென்று கருத்தினி யெண்ணுவாய்—குன்றோய் 98
வினைவலியுந் தன்வலியு மாற்றான் வலியுந்
துணைவலியுந் தூக்கித் துணியென்—றனரா 99
லுனது வலியுமெங்கோ னோர்வேல் வலியுந்
தினையுமலை யும்போற் றிகழு—மெனலா 100
லெனதிறைவ னோடுபகை யெண்ணாதே யெண்ணின்
மனது துயரமுற வாய்க்குந்—தனதாவத் 101
தேவர் சிறைவிடுத்தெந் தேசிகனைச் சேர்ந்தடியி
லாவ லொடுவணங்கி லாதரிப்பான்—காவனிலைத் 102
தண்டங்க ளொன்றாக வாளுவாய் முன்போலவ்
வண்டம் புகழ்வாழ் வழியாது—விண்டதுகே 103
ளென்றெம்மான் செப்பவே யேறெடுத் துப்பார்த்தான்
றுன்றெரியி னெய்யைச் சொரிந்தாங்கு—குன்றுங்
குவடும் பொடியவெங் கோபத்தீ சண்டப் 104
பவனமுரு மிறுநாட் பட்டாங்—கவன்மூச் 105
செறிந்தா னதிர்த்தா னிவன்சொற்கே ளென்றான்
செறிந்தார் சிலரையெந்தை சீறிக்—குறைந்த 106
மதியோயென் கூற்றுக்கு மாற்ற முரைத்துன்
விதிபோற்பின் சொற்கள்விள் ளென்பக்—
கொதித்துருத்து 107
வீணாச் சுரர்சிறையை விட்டுவிடே னுங்களின்
கோணான சொற்கஞ்சேன் கொள்கையென்று—
வீணாவான் 108
சீறி யிவனைச் செறுமின் பிடிமினென்று
கூறினா னுள்ளாரைக் கூவினான்—றேறித் 109
தெளிந்தான் கடக்கவழி சிந்தித்தா னையன்
வளியந்த ரத்தை மதித்தான்—களிகூர்ந்து 110
பாய்வானாப் பாதம் படியிற வூன்றியுன்னும்
வாய்வா னொளிருமணி மாடங்கள்—கோவாரு 111

கூடங்கள் கோபுரங்கள் கோல்செலுத்து மண்டபங்கண்
மாடஞ் செறிந்தபல மாண்பொருள்க—டேடரிய 112
பல்லோ ருயிரோடு பாழ்பட் டிடிந்தொழியச்
சில்லோர் திகைக்கவெளிச் சேண்பாய்ந்து—
பொல்லோய்நீ 113
கெட்டாய்போ வென்று கிளந்து கிளம்பிவந்திங்
கொட்டாருக் கொட்டாரா மோர்வேலர்—முட்டாட் 114
பதுமமலர்ப் பாதம் பணிந்து நிகழ்வை
மதிமுறையிற் கூறி மனத்தின்—மதித்த 115
குறிப்பைக் குறிப்பினாற் கூறினா னெம்மான்
செறித்துப் பொரச்செலவைச் சிந்தித்—துறுத்துடன்று 116
புள்வாய்ப்பு வள்ளியொடு பூசைகுடைநாள் கால்கோள்
வெள்வாய் வாள்வேனிலைகள் வேண்டாநீள்—
கள்வார்பூம் 117
வெட்சியும் வஞ்சியும் வேண்டா மதில்காக்கு
நொச்சிக் கெதிருழிஞை நோன்மையா—ரிச்சை 118
வழியா நறுந்தும்பை மாலை புனைமின்
றளரீர்மின் காலந்தாட் கீர்மின்—வழியார் 119
செலவு விரும்புமின் சேனை திரட்டி
நலமா நடமினென்று நாடப்—பலபடையாச் 120
சென்று புறமிறுத்துத் தென்கடல்புக் கார்த்து
நின்ற நிலையே நெடுஞ்சூரன்—றுன்று 121
கிளைகட் டொலைத்துக் கிரவுஞ்சங் கொன்றங்
குளையுட் புகுந்தோரை யோட்ட—வளையார்ந்த 122
சிங்கத்தை நேர்கண்ட சிந்துரம்போற் றேம்பசுரன்
பொங்க வயில் வேலைக்கைப் போதினிற்—றுங்க 123
மிகவே யெடுத்து விதிர்ப்ப நடுங்கிப்
புகலேது மின்றிப் புலம்பிற்—றகுதன் 124
கருணைக்கண் காணிற் கரியாகா னென்றுள்
ளொருகவிகை சாய்த்துள்ளி னுற்றுத்—திருவாக் 125
குடைக் கூத்துக் கொண்டான்பின் கொக்கரித்துச் சூரன்
கடலுட் கரந்தொளித்தான் கண்டங்—குடனசுரன் 126
பட்டான் பட்டானென்று பாடித்துடிக் கூத்தைக்
கெட்டான் கெட்டானென்றூர் கேட்க்கை—கொட்டிமிக 127
வாடினா னெம்பெருமா னவ்வசுரன் வானத்தைச்
சாடி மிளிர்ந்து தழைந்துயர்ந்து—நீடிய 128

மாமர மானான் வடிவேலெம் மான்விட்டுச்
சாமரமாக் கூறுபடச் சாய்த்தானம்—மாமரமுன் 129
பொன்றா மிருவரு மொவ்வொருவ ராய்ப்பிரிந்து
குன்றாவேர் கொண்மயிலுங் கோழியுமாய்ப்—
பொன்றாது 130
வந்து வணங்கி மலரடியை வேண்டிநிற்ப
முந்தைப் பயனவர்க்கு முற்றுவிப்பான்—பின்றைப் 131
பிறவாத பேறின்று பெற்றனமென் றென்று
மறவாது வாழும் வகையா—யுறுதியுறும் 132
வாகனமுங் கேதனமு மாகவர நல்கினான்
மாகமுறு வானவர்கள் வாழ்த்தெடுப்பப்—பாகமொடு 133
கூடாண்மை போர்வில் கொடிவாள் வேறார்வீரம்
பாடாண் டிணைபகரும் பாடகர்கள்—பாடவான் 134
மாரி மலர்பொழிய வான்றுந்துமி முழங்க
வீரியதே வர்சிறை மீட்டினோன்—பாரினொடு 135
வானு மகிழமயின் மேற்கோ ழித்துவசந்
தானுவந்து கொண்டென்றுஞ் சஞ்சரிப்போன்—
றேனுவக்குங் 136

## இன்ப விளையாட்டு

காமமகி ழின்பங் கற்புக் களவுவழி
நாமக் கடலாட நச்சினோன்—றாமக் 137
குழற்றேவ சேனைமணங் கொண்டுகற்பின் பார்ந்து
மழக்கிள்ளை வாய்மொழி வள்ளி—விழுக்குடிபோய்த் 138
தேடிக் களவின்பத் தேனுகர்வா னோடியெங்கு
நாடிக்கண் காணா னலிந்துமிக—வாடினோன் 139
கானக் குறவர் பலகன்னியர்கள் சூழ்ந்திறைஞ்ச
வேனற் புனத்துவிண் ணெய்துபரண்—மேனின்று 140
கிள்ளை கடியுங் கிளவியமு துண்டோடிப்
பிள்ளை மதியும் பெருமுகிலும்—வெள்ளத் 141
தறலுஞ் செந்தாமரையு மாம்பலு நீல
நிறமலரு மெண்மலரு நீக்க—மறுபசிய 142
வள்ளையும் பூகமு மாண்கோங் கரும்புகளோ
டொள்ளிய காந்தளு மோர்கொடியிற்—றெள்ளிதிற் 143
கண்டான் பெருங்காட்சி கண்டுமின்கொல்
பெண்கொலென்று
கொண்டானுள் ளையங் குணங்குறியாற்—
பெண்டானென் 144

றையந் தெளிந்தா னகக்குறிப்பை நாடுவான்
வையங் களிக்கவந்த வண்புலமை—யையர்தா 145
நானோக்குங் காலைநிலனோக்கு நோக்காக்காற்
றானோக்கி மெல்ல நகுமென்ற—தேனோக்கிற் 146
கண்டா னுடன்படாக் கண்டுளத்துக் காதலுற்றான்
கொண்டான் றுணிவுட் குறையிரப்பா—னண்டாது 147
பின்னின் றிரந்தான் பெருங்காத லோடார்ந்து
முன்னிலை யாக்கினான் மோந்தணைவான்—றன்னியல்பா 148
வண்டோச்சல் போன்மேனி மாண்புதொட்டின் புற்றான்
விண்டா னலம்புனைந்து மெய்புகழ்ந்தான்—கண்டவிடம் 149
பெற்றுத் தழாலுரைத்தான் பேணிப் பெயர்ந்தவத்தை
யுற்று வருந்தி யுறவு பெற்றின்—புற்றுவந்தோன் 150
பாங்குவழி யின்பமொடு பாங்கிவழி யானுமின்ப
மோங்கவிரண் டாலுமின்ப முற்றுளோ—னீங்கிக் 151
களவின்பங் காதல்வழி கற்பின்ப மூடல்
விளைவுவழி யென்பதனை மேவி—வளமிகுகற் 152
பூடல்வழி யின்பநுகர் வுன்னினோன் வள்ளியொடு
கூடியகோ லத்தோடு குஞ்சரிபா—லோடினான் 153
கண்டான் கறுத்தாண்மெய் கண்சிவந்தா ளூடலுளங்
கொண்டாள்பல் வாயில் குறுகவிட்டான்—மண்டி 154
மறுத்தாள்பின் னேரின் மலரடியில் வீழ்ந்து
பொறுத்தாள்வா யென்றன்பு பூண்டுள்—ளுறவு 155
படுத்தப் படாளாய் பலவிருந்தோ டார்ந்தங்
கடுத்தவிழாக் கொண்டாடி யாற்றிக்—கடுப்பதனை 156
மாற்றி மகிழ்வித்து மாவின்பங் கொண்டுகுறக்
கோற்றொடி பாலிற் குறுகினான்—கோற்றொடிகண் 157
டென்னே யிதனுக்கோ வென்கிளையை யெண்ணாம
லுன்னேய மேபெரிதென் றுற்றுளேன்—மின்னோவம் 158
மற்றவள்பான் மன்னமதி வாய்த்ததெவ னென்றங்க
ணுற்ற மலர்த்தொடையா லோர்கையோ—டுற்ற 159
வொருகையைச் சேர்த்துவெளி யோடாத வாறா
யிருகை களையு மிறுக்கி—வரியவே 160
கட்டியினி யங்கே கருதாதே போகாதே
யெட்டியும் பாராதே யென்றடிப்பப்—பட்டின்பங் 161
கொண்டுநின்றோன் கொள்கையயக் குஞ்சரியா டானுணர்ந்து
கண்டுறுசொற் சேடியரைக் கண்காட்டி—விண்டுசொலி 162

விட்டிழுத்து வாங்களென்ப வேகமொடு வந்துகண்டார்
தொட்டிழுக்க மாட்டார்கள் சூழ்ந்துநின்று—
கட்டவிழ்த்தார் 163
கண்டார் குறமானாள் காவினிரை சேடியராம்
பெண்டார்வந் தார்பாற் பெருஞ்சண்டை—மண்டி 164
யொருவர்க் கொருவ ருறுத்தெதிர்த்துத் தாராற்
பெருமலர்ச் செண்டாற் பெரிதா—யிருதிறத்துச் 165
சேடியரும் போர்புரியச் சீர்மலை மான்மஞ்ஞை
யோடியெதிர் யானைமகட் குற்றமயி—லோடுடன்று 166
சீறியடத் தேவ சேனைதன்மா னோடிவந்து
வீறுகுற மானாள் விரன்மானோ—டுறுபட 167
மோதவன்றில் கண்டு முனைப்போர் விலக்கிடப்
பேதமற வந்தோர் பெருமானைப்—போதுகொடு 168
வீசிவலை போட்டிழுத்து மென்கை விரல்கோத்துப்
பாச மெனவளைந்து பற்றியே—யாசையொடு 169
மெள்ள மெள்ளக் கொண்டு விரிபூந் தடச்சுனை
வெள்ளத்துட் சேர்த்து விரிமலரும்—வெள்ளமுமா 170
மிக்க விறைத்து விளையாட்டுக் காட்டிடின்
றக்குற மின்னாடன் றாதியர்கள்—புக்கியே 171
கூட்டங் குலைத்துக் கொடுங்கைக டாங்கோத்து
பாட்டுநை யாண்டியொடு பாடியின்பம்—வேட்டும் 172
பெருமானைச் சூழ்ந்துயர் பேரின்பங் காட்டி
மருவார் மருதுமலர்க் கோங்கும்—விரைசேர் 173
கடம்பு மசோகுங் கமழ்சந் தனமு
மிடையவரி வண்டுகளு மேவ—மடக்கிளியும் 174
பூவைகளு மஞ்ஞைகளும் பூந்தென்ற லுஞ்செறிந்த
காவை யடைந்துட் கனிவிப்பக்—கோவைக் 175
கனிவாய்க் குறப்பாவை கண்டாள் களித்தா
ளுனக்கிவைவேண் டும்மென் றுருத்தா—ணனியா 176
நகைத்தாள் பெருமா னலிவுகண்டா ளாற்றாள்
வகையா யிரங்கினாள் வாய்மை—தகைகண்டான் 177
பூரித்தா னுள்ளாறப் புன்னகைவெண் பூச்சொரிந்தான்
பாரித்தான் கைகடமைப் பற்றினா—னாரியினோ 178
டில்லம் புகுந்தின்ப மெய்தினா னின்புறுத்துச்
சொல்லினரு ளாலிருவர் துன்னூட—லொல்லை 179
யொழித்தா னுவந்தா னுயரின் பொழியான்
கிழிபோ லிருவரையுங் கிட்டி—யெழிலார் 180

புலமைமிகு குன்றம் பூதனார் விண்ட
நலனினு நான்மடங்கா வின்ப—நலங்கொண் 181
டிருவரையு முண்மகிழ்வித் தேர்பெறவே தன்பா
லிருமருங்குங் கொண்டுமயி லேறித்—திருவளரு 182
மன்பர்தமை யன்பினோ டாதரிப்பா னாகவெழுந்
தின்பமிக வெங்கு மியங்கினோ—னின்பினொடு 183

## சரநித்திய நிலையம்

கூடற் குடவயிற்றுக் குன்றிற் றிறற்கோழி
யாடற் கொடியை யரமகளிர் கூடியன்பால் 184
வாழ்த்திநின் றாடும் வளமிகுந்த நீள்பொழிலிற்
சூழ்த்திக் குறமகளிர் தோளோடு—யாழ்த்தெளிவார் 185
கைகோத் தணைத்துக் களிகொண்டு பாடிக்கை
மெய்கோத்துக் காந்தள்வைத்து வேண்டவவ்—
வையத்தைக் 186
காப்பான் கருதியக் காந்தளெடுத் துப்புனைந்து
நாப்பண்வெறி யாடிடவே னல்குவோன்—றோப்புமிளிர் 187
செந்திப் பதியிற் சிறுகட் பெரும்பிளிறோ
டுந்து கரும்பனைக்கை யொன்றினோ—டந்திப் 188
பிறையிற் கதிரோன் பிறங்கல்போற் செம்பொன்
னுறுகிம் புரிக்கொம்போ டோடை—நறியபொலன் 189
மாலை திகழு மதவேழ மேற்குடைக்கீழ்க்
காலை யிரவி கடலெழுங்—கோலமொடு 190
மன்னிமுடி யோராறு மாமலர்க்கண் ணீராறுந்
துன்னுபடைத் தோள்கரங்க டோன்றவே—மின்னிற் 191
பொலிந்துருமித் தொண்டர் புகழ்பாடி யாடன்
மலிந்து பெருக வருவோன்—வலிந்து 192
மரவுரிபோர்த் தோரு மான்றோ லுடையா
யரையிற் றிரித்தோரும் யாக்கை—விரதக்காப் 193
புற்று மெலிந்தோரு மூனில் லெலும்பினரு
முற்று நரைத்த முடியினருங்—கற்றைச் 194
சடையினரு மொண்டிதருந் தண்டினரும் வெண்ணீற்
றுடலினரு மேனை யுயர்ந்தோரு—மிடையுநடு 195
கஞ்சனா ரிந்திரன்மால் கண்மூன்றார் யாவரு
மஞ்சி நடுங்கி யடிவணங்கிக்—கெஞ்சிநின் 196
றெங்க டொழில்க ளெமக்கருளல் வேண்டுமென்று
பொங்கிப் புலம்பிநின்று போற்றெடுப்பத்—தங்கியே 197

மாகம் புகழா வினன்குடியில் வாழ்வோன்கன்
னாகந் திரண்டபுய நற்றொடை யோன்—றேகத் 198
திருபிறப் போருள் ளொருமுப் புடைநூல்
பொருமார்போ டீரம் புலரா—தரையினிற் 199
கட்டு மறுவையொடு காண்குஞ்சிப் பூஞால
விட்டு விரைமலர்கண் மென்மைகொண்—டெட்டு 200
வகையொடுதாழ்ந் திட்டு வணங்கிநின்று வாழ்த்தத்
தகைநீளு மேரகத்திற் சார்வோன்—பகைபோற் 201
கொடுந்தொழில் வல்விற் கொலையிய வேட
வடுந்தொழி லாளரோ டார்ந்து—புடைமருவு 202
மங்கையர் சூழ்ந்துநின்று வாழ்த்த மகிழ்வினொடு
கொங்கலர்தார் சிந்தக் குதித்தாடி—யங்கங்கார் 203
குன்றுதோ றாடல் குறுகுவோன் சந்ததமு
மன்றும் பொதியுமகி ழானிலையுந்—துன்று 204
சதுக்கமுஞ் சந்தியுந் தண்பொழிலும் வாசப்
புதுப்பூங் கடம்பும் பொருந்தி—நதநதியும் 205
வேறுபல வைப்பு மிளிர்ந்தமர்வோன் சீர்புகழ்வோர்
கூறு மொழிக்கடங்காக் கொள்கையோன்—மாறிலாச் 206
சோலை மலையினன்பிற் றோன்றி நின்றோன் றன்றாளைக்
காலையிலு மாலையிலுங் காண்பார்க்காச்—சால 207

## கோயில் கொளல்

வதியுமிட னொன்று வளமுடைய தாகப்
புதிய விடநாடிப் புக்கும்—பதிகடமிற் 208
தொண்டைத் திருநாட்டிற் றொன்முனிவர் வாழ்க்கைமிளிர்
கெண்டையங் கண்ணார் கிளிமொழியார்—நண்டினுநற் 209
கற்புடையார் நாண்முதலாங் காப்புடையார் தொண்டரடிக்
கற்புடையா ரார்ந்திலகு மாரணியே—பொற்புடைத்தா 210
மென்றுட் களித்தா னிதற்கியலே தென்னிலங்கு
துன்று மகளிர் சுடர்மனைக்—குன்றுகளின் 211
முத்தும் வயிரமு மொய்த்தொளிர் பொன்னுமிளிர்
வித்துரும மாத்தொடைகள் வேய்குவா—ரத்தகைமைக் 212
கொவ்வோமென் றுள்ளியே யூர்ப்புறத்துச் சூழுதல்போல்
வெவ்வேறாஞ் செந்நெல் விளைசூழ—வவ்வயலைக் 213
கண்டீ துடலுயிர்கட் காக்கும் பொருளென்றுட்
கொண்டீதின் பின்னாக் குறுகல்போன்—மண்டு 214

கரும்பு புறஞ்சூழ வக்கரும்பைக் கண்டு
விரும்புமிது சர்க்கரையா மேலும்—பெரும்புனிதக் 215
கற்கண்டாம் பாகாங் கனியிதனுக் குப்புறம்பா
நிற்கப் படுவதே நீர்மையென்று— பொற்கதலி 216
நீங்குதல்போற் சூழ நெடுந்தெங் கவைகட்குத்
தீங்கடையா வாய்க்காக்கச் சேர்குவமென்—றோங்கியே 217
யிப்புறத்திற் சூழ விவைகண்டு மாம்பொழில்க
ளப்புறத்தார் கட்கே யவையளிக்கு—மிப்புறத்துப் 218
போவார் வருவோர் புசித்திடற்கு மாவோமென்
றோவாக் கனிகளுகுத் தோம்பிநிற்குந்—தாவா 219
வளமிகுத்த தென்று மதித்தந் நகரி
லளவறியாப் பொன்மணிக ளாலே—களநஞ் 220
சொழித்தெழுந்த நற்கோவ லூர்ஞானி யார்தாஞ்
செழிப்பாச்செய் வித்துத் திகழு—மெழிலார் 221
மடாலயத்தில் வானீர் மடுக்கும் பொறிகள்
கடாயமணிக் கோபுரங்கள் கண்டு—கெடாநிலையார் 222
பொற்கோயில் கொண்டோன் புனிதர்க் கருள்புரிந்து
நிற்கின்றோன் சண்முகனா நீள் பெருமா—னற்கோயி 223

## உலாவெழல்

லுண்மருவ வொவ்வார்க்கு மொவ்வுநர்க்கு நட்போடு
கண்மகிழக் காட்சி யளிப்பானா—வொண்மணி 224
சங்குறுமி கெண்டை தவில்பகண்டை சச்சரி
பொங்கு முரசுபம்பை பூந்துடி—துங்க 225
முழவு தடாரிவங்கி யந்திமலை மொந்தை
வளைவுறுங் கொம்புகுழல் வானை—யளக்குமொலி 226
யானைமேற் பேரி யலைகடல் வாயடைப்பக்
கூனைப் பரிமேற் கொடுமிடங்கா—வேனை 227
யெருதுமிசை டம்மாண மேங்கக் குழுமி
யொருவா வுருமேறுள் ளுட்கப்—பெருகோதை 228
யெங்குமெழும்பவி யாழ்வீணை தாளவிசை
பெர்ங்கிவிணோர் காதைப் புதைத்திட—வெங்கணு 229
மட்டுக் கணைக்கைம் மதன்குடை யேயென்னப்
பட்டுக் குடைகணிழல் பார்க்களிப்ப—விட்ட 230
வகிற்புகை பூமியெழு மந்துகள்விண் போர்ப்பத்
துகிற்கொடியப் பூழி துடைப்ப—வகிலத் 231

தெழுவா னிசைந்தா னெழின்மேனி கொண்டான்
தொழுவார் துதித்தேத்திச் சூழச்—செழும்வான் 232
புயன்மேவு பொன்மலைமேற் போதனெழுந் தாங்கு
மயின்மேன் மருவி வளர்ந்தான்—வெயின்மேவு 233
சூரியசந்த் ராக்கினிகள் சூழ்ந்தாங் கிரத்னவொளி
வீரியெழ மூவிரண்டு மேன்முடிகள்—சேரழகுந் 234
தெய்வக் கமலந் தெளிந்தமுக மோராறு
மெய்வைத்த வின்னுதலும் வெண்ணீறுங்—கைவைத்துச் 235
சேயைப் புரக்குந்தாய் சித்தம்போ லேயொளிர்ந்து
மாயையிருண் மாய்த்துமிளிர் மாண்பழகுந்—தூயவிரு 236
மும்முத் தளவில்வ மூவிரண்டி னட்டாங்கு
செம்முகங்கண் மூக்கு திகழழகுஞ்—செம்மைக் 237
குமுத மலரினுட் கொல்லைமுல்லை பூத்தங்
கமுதமொழி வாய்நகைக ளம்முஞ்—சுமுகத் 238
திரவியு றைந்தொளிர்ந்தா னென்னமணித் தோடு
பரவியிரு காதசையும் பாங்கு—மெரியுமெரி 239
கற்பூரம் போலும் கவினீறா றாம்புயமேற்
பொற்பூர் கிரீடம் பொலியழகு—மற்பா 240
னவகோளி ரத்தினமா நண்ணியொளிர்ந் தாங்குக்
கவினுரப்ப தக்கக் கவினு—மவிர்தொந்தி 241
யுந்தியிளம் ரோமத் தொழுகழகுஞ் சீரரையி
லந்திச்செக் கர்ப்பட் டணியழகும்—பந்திபடு 242
பன்னிரண்டு கையழகும் பைம்பொனொளிர் வேலழகுந்
துன்னியிரு மாதர்புடை தோயழகு—மின்னிக் 243
கமலமலர்ந் தாங்கு கழலழகுந் துன்றி
விமலப் பரவொளியா மேவத்—தமவிழியாற் 244
கண்டார்கள் கன்னியருங் காளையரு மேனோருங்
கொண்டா ருவகையெவர் கூறுவார்—வண்டார் 245
குழலார்கள் கண்டுகை கூப்பிநின்று வேற்கை
யழகேசன் மேற்காத லானார்—மழவாய்க் 246
குயிற்சின்னக் கோமான் கொடுமரங்கை கொண்டா
னயிற்பகழி யொவ்வொன்றா யாய்ந்தான்—நயந்தரிய 247
கன்னறரு வட்டிற் கடிகைதரச் செல்கருவி
பின்னியொவ்வொன் றாகப் பெயர்வதுபோன்—மன்னியித 248
ழொவ்வொன்றா நீங்கி யுடைந்து விரிந்துருத்து
வெவ்வினையஞ் சாது விளைக்குமுளத்—தெவ்வி 249

னினைப்புக் கொழுத்துநிலை நீர்க்கஞ்ச நெஞ்சுந்
தனிப்பசப்பு றுத்துமாந் தண்பூ—தனத்துஞ் 250
சுவையொடுசொன் மாற்றும் சோகுதுவர் வாயு
நவைசேர மெய்க்கிடையை நல்குஞ்—சுவையொழுகு 251
முல்லை முடித்தலையு மொய்யுணர்வோ டாருயிர்கொல்
வல்லுற் பலம்பகத்தும் வாங்கிவிட்டா—னல்லளக 252
மின்னார்கொள் கோலம் விளம்பலெவன் விண்ணோர்கண்
முன்னாளின் றின்னாண் முளைத்ததெவ—னென்னாவன் 253
னீராவிப் பாண்டிலொன்று னீண்டுதொடர் வண்டிகளை
நேரா விழுத்தோடு நேர்மையதா—நீரார் 254
பொறிபுலன்க ளொக்கப் புறந்தொடர் நெஞ்ச
மெறிகால்போ லோட விமையார்—தறியார் 255
பசப்புறுமென் கொங்கையைக்கை பற்றிக் கசக்கி
விசர்ப்புறுவர் கன்னலை வேம்பென்—றசைத்துமிழ்வா 256
ராடூ மகடூவென் றாயார்முன் செல்வோர்தோள்
வீடாகச் சாய்ந்து விழுவார்மெய்—பாடாகி 257
யெவ்வினையு மின்றி யிரிந்தயர்வா ரிம்முறையா
வெவ்வினையுட் பட்டு மெலிகுவார்—வெவ்வெற் 258
புழுவாத் துடித்தாருட் போத மிழந்தா
ரெழுவார் விழுவாருள் ளேங்கி—யழுதயர்வார் 259
காமக் கனலாறு கண்டபடி யேயோடித்
தாமக் குழலாரைத் தானிழுப்ப—வேமமொடு 260
கண்டுளத்துக் காமங் கடிந்தவன்பர் தொண்டர்
விண்டுகரை நின்று விளையாட்டுக்—கொண்டுவப்ப 261
கைவளையல் சோர்ந்துவிழல் காணார் கலைவீழ்தன்
மைவிழியாற் கண்டெடுக்க மாட்டார்தம்—பைவிளைத்த 262

## பேதை

வல்குற் றடத்தையங்கை யாலு மறைத்திடார்
நல்குரவிவ் வாறுபடு நாரியருட்—பல்கிளியார் 263
கொங்கைகுலுக் கிக்காட்டிக் கும்பிடுவார் சில்லோர்தம்
மங்கண் கடைக்கணித்த ளைத்திடுவா—ரிங்குசற்று 264
நில்லாமற் போனானென் றேங்குவார் சில்லோர்வெண்
பல்லா னகைத்தளைத்துப் பார்த்தெதிர்வா—ரல்லா 265
ரளகங் குலைப்பா ரலர்த்தாரை வீசிக்
களவென்றெ ணாதளைப்பார் கைகொண்—
டளைப்பாரிவ் 266

வாறுபல சித்தினியு மத்தினியு மங்கவர்தந்
தேறுமொழி யில்லாச் சிறுமியரு—மாறுபடா 267
தேகுங் குழுவி னிரும்வாரி யின்வருடத்
தூகம் பெறாதா ளொருபேதை—தாகமுட 268
னன்னாவிப் பச்சை யணிமயின்மே லேகுவோன்
தன்னாகக் கண்டத்திற் றாழ்ந்துருண்டு—மின்னாச் 269
சிவந்து திகழுவதென் னென்றா ளவளுக்
குவந்து மணந்தந் தொளிர்ந்து—புவனங்கள் 270
போற்றும் புகழ்க்கடப்பம் பூந்தா ரெனவுரைப்ப
மாற்றமில் காதன் மனத்தினளாய்ப்—போற்றி 271
முலைகசக்கிப் பால்கொடுத்து முத்தங் கொளுமென்
தலைமகளாம் பொம்மைக்குத் தான்போட்—
டலங்கரித்துக் 272
காண்பான்வாங் கித்தா வெனக்கழறக் கண்டன்னை
சேண்பாரரான் வோர்க டெரியக்கொண்—மாண்பாரும் 273
பத்துப் பொருள்களினும் பட்டதிது வாதலினா
லுத்திகொடு கேளாயென் றோதமகள்—கத்தினாட் 274
டேற்றித் தெளிவிப்பிற் றேவர்பிரான் பல்லோரும்
போற்ற வடுத்ததெரு புக்கினா—னேற்றவங்கு 275

## பெதும்பை

கண்டோர் களிகூர்ந்தார் காதலித்தா ரன்புளத்துக்
கொண்டார் தொழுதாரக் கூட்டத்துண்—மண்டெழின் 276
மாற்ற வரிய மணித்தொகை யின்வருட
மேற்ற வொருபெதும்பை யென்பவள்—சாற்றிற் 277
றலைதனின் முன்னெய் தடவவொட்டாள் கட்டா
ணிலையா டடவுவாய் நீவி—யுலையாது 278
கட்டுவா யென்றாள் கசக்கியெறிந் தாள்பூவை
மட்டொழுகக் கட்டென்று வாய்மலர்ந்தா—ளிட்டமொடு 279
கண்மன்னப் பீழை கழுகாள் கனிந்துமிளிர்
கண்மையிடென்றாள் கடுவெனவவ்—வொண்மான் 280
விழிகள் சிறுக மிளிர்ந்து கறுப்பப்
பழியகறாப் பார்வை படைத்தா—ளெழின்மார்பிற் 281
கொல்லைக் குளியிற் குறுஞ்சுரை வித்திட்டது
மெல்ல முளைகிளம்பின் மேனிலமண்—பொல்லிப் 282
புடைத்தெழும்பல் போலப் புன்னைமுகை யென்னப்
படைத்து முலைமுளைக்கப் பார்ப்பாள்—கிடைத்த 283

வெழின்முலைமேற் பட்டையிழுத்திழுத்துப் போர்ப்பா
ணழுவ நழுவவுள நாணி விழுமிய 284
தன்னழகைப் பார்ப்பா டளைவியப்பா டான்றனது
பின்னழகு காணாள் பெரிதயர்வா—ளன்னையொடிங்285
கென்னே மயின்மே லெழுந்தோன்றன் பக்கமிரு
மின்னார்கை தோளிட்டு மேவுவ—தென்னவென்பான்286
மின்னு மிவர்தம் வதன வழகிற்கென்
றன்னழகு சாலுமோ சாலாவோ—பன்னென்பா 287
ளிவ்வாறு காத லுடனியம்ப வன்னையிவட்
கெவ்வா றுரைப்ப தெனவெண்ணிச்—செவ்வாய்க் 288
கருங்கண் மகளேதங் காதன்மிகிற் றங்கோ
ளிருந்தோண்மேல் வீழ்த லியல்பப்—பெருந்தோளன்289
சீரழகு நின்னழகுட் செப்புறி னுன்றன
தாரழகு பின்ன றறிகுவாய்—தாரணியி 290
லென்றா ளவைகேட் டிரும்பெதும்பை விண்முகிலை
வென்றார் குழற்றாயை வேண்டுவா—ணின்றா 291
னெழிலைக் கிழியி லெழுதித்தா வென்ற
னெழிலை யிணையொத்துப் பார்த்தற்—கொழியாக்292
கருணையோ டென்று கழறினா டன்னை
வருமிவனை யாரெழுத வல்லார்—பரிவா 293
ரடியர்மனத் தல்லா லவனிதனில் யார்க்கும்
வடிவெழுத வொண்ணா வரதன்—வடிவேல 294
னென்றாண் மகளிரங்கி யேங்கினாள் கண்டன்னை
பொன்றா வெழின்மகளைப் போற்றிடிற்—குன்றாத295
பொற்பார் குமரன் புறவீதி போந்தனனங்
கற்பார் பலரு மணைந்துநின்று—சொற்பரவி 296
வாழ்த்தி வணங்கி வலம்வந்து கைதொழுது
சூழ்த்தி நெருங்கிநின்று தோத்திரித்—தேத்துவருட் 297
செவ்வாய்க் கருங்கட் சிறுவெண் ணகைச்சிமி
ழொவ்வா இளமுலைவெய்யோன்வருடச்—
செவ்வாரோர் 298

### மங்கை

மங்கையாள் கண்டாள் மகிழ்ந்தாண் மதிமருண்டாள்
செங்கைகள் கூப்பித் தியங்கித்தான்—கொங்கைகளைப்299
பார்ப்பாள் பரனெழிலும் பார்ப்பாள்பார்த் துக்கரங்கள்
கோப்பா ணெறிப்பாள் குலையாத—காப்பான 300

நாணமட மச்சம் பயிர்ப்பென்னு நான்கனையும்
பேணுதல் விட்டுப் பிதற்றுவாள்—கோணவின் 301
மாரனை யெள்ளுவாள் மைக்கண்வா டீட்டுவாள்
பாரிலுள வேனையோர் பார்ப்பாரோ—தீரமொடென் 302
றுன்னியுன்னிப் பார்ப்பா ளொளிர்மயிலோய் நீயெனக்கிங்
கன்னிகரு மாலை யளித்தாயுன்—பன்னரிய 303
மாலை யளிக்க மனமிலையோ வென்றயர்வாள்
வேலைபோற் காதலுள மேவிநின்றா—ளாலு 304
மயிலின் களப்பூந்தேன் மாந்தச்செல் வண்டே
கயலிளங் கண்ணினாள் காதன்—மயலுழந்தாள் 305
கந்தனைக் காதலொடு காண்பா னவாவினாள்
சிந்தனைக்காச் சற்றுநின்று செல்கவென்று—வந்ததன் 306
காதிற் றனித்துக் கழறென்று கைதொழுவாண்
மாதிப் பரிசு மயலுறவப்—போதினவள் 307
காணுதலுந் தீரக் கதிர்வேல னங்ககன்றான்
சேணுவக்கும் வீதியினிற் சேர்ந்தனன்—மாணிழைமார் 308
மக்களொடுங் கேள்வரொடும் வந்துதொழ மற்றெவருந்
தொக்கு குழுவினிலோர் தோகையினன்—மிக்கான் 309
மதியின் வயதார் மடந்தை மருவி
விதியின் முறைதொழுவான் மேவி—மதியோடு 310
கண்டா ளுளத்தினிற் காதலுற்றா டோத்திரங்கள்
விண்டா டுதித்தாள் விதிர்விதித்தா—ளண்டிநின்று 311
நுண்டா துடுக்குமலர் நோக்குவாள் பங்கதனிற்
தண்டாது வாழ்வார் தவமேமெய்—கண்டதென்பாள் 312
பூந்தொடையை வேண்டிப் புலம்புவா ணின்றோள்நன்
காந்திக் கவினென் கருப்பமா—வாய்ந்தா 313
லவனழகி வின்முகத்தி லாய்வே னவன்றா
னிவனென் றெணவவன்பே ரிட்டுத்—தவமாகப் 314
போற்றுவே னென்றுள்ளிற் புந்தியொடு வானேறு
மேற்றுத் துவச னிளமகனேர்—போற்றிப் 315
புகைப்படம் போற்றனது புந்தித் தடத்தில்
வகைபடக் கையால் வரையாள்—தகைமையுறச் 316
சிந்தனையான் முற்றழகுந் தீட்டினா ளுள்ளத்துள்
வந்தனையாப் போற்றியு வந்திடுனே—கந்தனன்பின் 317
வாழ்வார் மறுகிடை மன்னினா னங்குதொழச்
சூழ்வாருட் டோலார் முரசினிற்—சூழ்வான் 318

## அரிவை

தொகைவயது கொண்டவொரு தோகை யரிவை
நகைமிளிர் கற்பினா ணாரி—தகைமைபெறக் 319
கண்டா ளிவன்மனிதக் காளையல னெவ்வுலகுங்
கொண்டோனே யென்ற குறிப்புளத்துக்—
கொண்டாணல் 320
வேதங்க ளோதிடவும் வேதியர்க ளேத்திடவும்
பாதமலர் காட்டாத பண்பினனென்—றோதினா 321
ளின்னோ னடிகணமக் கெய்திற் றெளிதினா
லின்னோன்பா லன்பகலே னென்றணைவான்—
முன்னாகி 322
வாழ்த்துவா ளேத்துவாண் மாமலர்த்தார் நாடுவாள்
சூழ்த்துவாள் சோர்வா டொடருவாள்—பாழ்த்தவென் 323
கண்கள்கண் டாசைக் கடலேறா முன்மயிலே
புண்கணுறக் கொண்டு போகாய்போல்—வன்கண்மை 324
செய்யாதே யென்றன்பிற் செப்புவாள் பொய்யிலா
மெய்யார் குமரன்பால் வேண்டுவாள்—மையாற் 325
றொழுதெங் கொழுநர் தொழினலன்கை கூட
நழுவுதலி லாதநல நல்கும்—பழுதிலோ 326
யென்று பரவுதலை யேற்றின்ப நல்கியே
நன்றுமிகும் வேறுதெரு நண்ணினான்—குன்றெறிந்த 327

## தெரிவை

வேலுடையெம் மானையவ் வீதியினிற் கண்டோர்கள்
பாலுடைய சொல்லாற் பரவுவருட்—கோலுடைய 328
கண்ணாளோர் வள்ளற் கணக்கின் வயதுடைய
பெண்ணா டெரிவையெனப் பெற்றுளாள்—பண்ணார் 329
மொழியாடன் கண்கொண்டு முன்பார்த்தாள் பின்பா
ரெழிலேயுஞ் சூழ்ந்துகண்டா ளெண்ணிப்—பழுதிலிவன் 330
வேத முதல்வன் விரியுலக முற்றுநிறை
போதன் சரவணத்தன் புண்ணியன்சங்—கீதப் 331
பிரிய னிவன்மலர்த்தாள் பேணியிவன் கீர்த்தி
பரிவினொடு பாடுவனென் றன்பாற்—றிருவரைக
ளார்ந்த வெழில்வீணை யங்கை கொடுதெறித்துக்
கூர்ந்தவினைக் கைக்கிளையைக் கோத்தினிமை—
வார்ந்தொழுகப் 333

பாடினா ளன்பிற் பரவினாள் பான்முருகின்
ஆடினா ணாடினா ளன்புளத்தாற்—கூடினா 334
ளேத்தினா மேன்மேலு மின்பமிகச் செய்யென்று
வாழ்த்தினா ளன்பால் மகிழ்ந்துநின்—றேத்தினவர்க் 335
கன்பா லருள்செய் தடுத்தவெழில் வீதியிடை
யின்பா னணுகினா னீங்குடையார்— துன்பாறக் 336
கண்டார்கள் காரிகைமார் காளையர்மார் காவலர்மார்
கொண்டார்கள் காதன்மிகக் கும்பிட்டார்—
தெண்டனிட்டார் 337

## பேரிளம்பெண்

அக்குழுவின் மிக்கா ளறத்தின் தொகைவருட
இக்குமொழி யோர்பே ரிளம்பெண்ணா—ளக்குகனைக் 338
கண்டா ளுளத்திற் கருதினா ளிக்குகவேள்
கொண்டார்ந்த கோலங் கொடியிடைமொய்—வண்டார் 339
குழலாரைக் கொள்ளைகொளக் கொண்டனனோ வன்றிக்
கழலும் வளைகள் கவர்வதற்கோ—பழகு 340
நிறைகவர்வ தற்கோ நிறையருள்வ தற்கோ
மறைபுகட்டு தற்கோ மதியுள்—ளுறவளித்தற் 341
காகவோ கொண்ட வருட்கோல மென்றயர்ந்தா
டாகமுறு காதலுளந் தாங்காளாய்—மாகவரைத் 342
தேனாய சொல்லாயென் றீங்குழலைக் கொண்டுவா
ஆனாயர் பெற்ற வருட்டனிமை—நானேனுந் 343
தீர்த்துநலங் கொள்வனென்று செப்பிக் குழல்வாங்கிச்
சேத்தவாய் வைத்துச் செகமகிழ—வார்த்த 344
சுரத்தாற் சரவணப வாவென்று தோன்ற
வுரத்தாற் கருத்தானின் றூழி—வரத்தான் 345
முருகா குமரா முதற்குகா கந்தா
வரதா நமோவென்று வாசித்—தொருமனதா 346
நின்றா டனையறியா ணேசமொன்றா லன்னோன்றன்
பொன்றாப் புகழைப் புகழ்வாள்பின்—னின்றாரைத் 347
தேடாடி கையா டியங்காண் மயங்காண்மெய்
கூடாள் புணர்ந்தின்பங் கொண்டாள்சீர்—பாடாளாய் 348
நின்று மகிழ்ந்தாட்கு நீடின் பளித்தருளித்
துன்று மழகுடைய தோகைமேன்—மன்றல் 349

விளங்கவன்பர் வாழ்த்த வெண்ணீறு பூத்துத்
துளங்குதொண்டர் தோத்திரங்கள் பாடக்—களங்கமறு 350
மெய்யடியார் போற்ற விரிபுவன மோங்கவுள்ளிற்
பொய்யடிமை யில்லாப் புனிதர்க—ளுய்யுமா 351
றாறெழுத்தும் பஞ்சாக் கரமு மறைந்துதொழக்
கூறுபடுத் தாறெழுத்தைக் கூறுபவர்—கூற 352
வுலகங்கள் வாழ்க வொளிமணிகள் வாழ்க
வலமிகு மன்னர்மன் கோல்க—ணலமாதர் 353
கற்புமிக வாழ்க கவின்மழைவான் வாழ்கநல்
லற்புத மிக்க வழகோடு—பொற்புலவர். 354
கீதமொடு பாடலைக் கேட்டுவந் தன்பார்ந்த
காதலோ டார்க்குங் கருணைபுரிந்—தாதரவாப் 355
பேதை முதலாநற் பேரிளம்பெண் ணீறான
கோதையருங் காதலுறுங் கோலமொடு—மாத 356
ரிருவ ரிருமருங்கு மெய்த வுலகம்
பரிவுகொடு நின்று பரவக்—கருணையொடு 357
மூவருக்கு மேலா முதல்வ னிவனென்று
தேவர் மலர்பொழியத் தேவனரு—ளேவுட் 358
களிகொள் சிவஞானங் கால்கொண் டெழும்பே
ரொளிகொண்டு வந்தா னுலா. 359

கந்தர் உலா முற்றிற்று

உ

# கொடுமளூர்ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமி

# ஞான உலா

## வீரைக் கவிராஜ பண்டித சுவாமிகள்

### காப்பு

வெண்பா

தக்ககவி ராஜபண்டி தன்கொடும ளூர்முருகன்
பக்கஞ்சொல் ஞானவுலாப் பார்மீதில்—பக்குவமாய்
வாசிப்போர் தன்கவலை மாற்றுங் கணபதியை
நேசித்து வாழ்வேன் நிதம். 1

### நூல்

செங்கமலத் தண்ணலெழு தேவிமார் தாங்குசிவ
செங்கமலத் தண்ணலெனுஞ் செந்திலான்—செங்கமல 2

கங்கைமகன் கந்தன் கருணை பொழிவதனக்
கங்கைமக னான கனதையான்—கங்கையருள் 3

சேந்தன் குகன்கடம்பன் செவ்வே ளெனுமினிய
சேந்தன் குகன்கடம்பன் செவ்வேளன்—சேந்ததினில் 4

கார்த்திகேயன் முருகன் காலாயுதஞ்சிறந்த
கார்த்திகேயன் முருகன் காங்கேயன்—கார்த்திகையா 5

தந்த சரவணத்தான் தந்த சரவணத்தான்
தந்த சரவணத்தான் தாணுவான்—தந்தை 6

முதலா கமத்தான் முடிவிலோ ரைந்துமென
முதலா கமத்தான் முதலான்—முதலான 7

ஆறு முகத்தன் அறுமுகத்தன் தேவருக்காய்
ஆறுமுகத்தன் அறுமுகத்தன்—ஆறுமுகம் 8

குன்றைத்துகள் படுத்துங்கூர்வேலன் வெய்யவினைக்
குன்றைத்துகள் படுத்துங்கூர்வேலன்—குன்றெடுத்து 9

நின்றான் மருகன் நிமலன் திருமருகன்
நின்றான் மருமகன் நிராலம்பன்—நின்றாடுந் 10

தூய கலபத் துரகத் துகந்தேறுந்
தூய கலபத் துரகத்தான்—தூய 11

விடையா னமலன் விமலன் மருகன்
விடையா னமலன் விமலன்—விடையாள் 12

கமலா சனத்தான் கடைநாளில் தோன்றும்
கமலா சனத்தான் கமலன்—கமலநிறை 13

ஆர்க்குஞ் சரவணத்தான் ஆறு சமயவிதம்
ஆர்க்குஞ் சரவணத்தான் ஆதியான்—ஆர்ப்பரவ 14

## முடுகு

வீரமுண்டு கொண்டடர்ந்து மேலெழுந்து வங்கிபொங்கி
வீரமுண்டு சூரைவென்ற வேலினான்—வீரமிகும் 15

வீரனுக்ர துங்கன் விதங்கன் விலக்ஷணமால்
வீரனுக்ர துங்கன் விதங்கனான்—வீனுக்ரன் 16

ஆறு மிருநான்கும் ஐயைந்தும் ரண்டுபத்தும்
ஆறு மிருநான்கும் ஆகினான்—ஆறுவித 17

எட்டெட்டு நான்கும் இருபத்தோ ரைந்துமதில்
எட்டட்டு நான்குவீ டெய்தினான்—எட்டட்டு 18

முந்து முதலின் முடிவுங் கடைநடுவும்
முந்து முதலின் முடிவிலான்—முந்துமுதல் 19

மூவாறு மாறும் முடிவிலோ ரைந்துமென
மூவாறு மாறும் முதலினான்—மூவாறு 20

சஷ்டா க்ஷரத்தான் சடாக்ஷரத்தான் வீறுடைய
சஷ்டா க்ஷரத்தான் சடாக்ஷரத்தான்—சட்டமிடு 21

ஷட்கோண வீதி தவள நவகோண
ஷட்கோண சக்கரமாய்த் தாபிதன்—ஷட்கோணத்து 22

எண்ணான்கும் ஐந்தும் இனையிலஷ்ட கோணமற்
றெண்ணான்கு ஐந்துவீ டெய்தினான்—எண்ணான்கு 23

வட்டமிட்ட கோட்டை மகர வதிகார
வட்டமிட்ட கோட்டைமதில் வாசலான்—வட்டத்திட 24

துருவன் துருவனெனச் சொல்லிலடங் காமௌன
துருவன் துருவனெனத் தோன்றி—துருவச் 25

சமர துரங்க தவள லளித
சமர துரங்க சதுரன்—சமரமுக 26

வேதாள கோரரண பீஜாக்ஷ ரப்பிரம்ம
வேதாள கோரரண வீரன்—வேதாள 27

ஆதி யுரகவண ஆவன் னிதியாகி
ஆதி யுரகவண னாகினான்—ஆதிநாள் 28

சம்ஹார கால ஜடராக் கினிவடிவு
சம்ஹார காலவர சாம்பவன்—சம்ஹார 29

உதிர ரணபகிர உன்மத்தன் உத்த
உதிர ரணபகிர உன்மத்—துதிரமிகு 30

மாசாண ருத்ர மௌன சிவயோக
மாசாண ருத்ர மௌனத்தான்மேல்—மாசடையான் 31

அஷ்டவித மூர்த்த அனங்கநனி தானபர
அஷ்டவிதத் தஷ்டவித மாகினான்—அஷ்ட 32

திசைபுரக்குந் தேவாய்ச் செயலாய் பிரம்மாத்
திசைபுரக்குந் தேவாய்ச் செயலுற்—றிரைபுரக்கும் 33

இந்திரனுக் கிந்திரனாய் இன்பஞ் சிறக்கவருள்
இந்திரனுக் கிந்திரனாய் என்கோமான்—சந்த 34

விதுவைக் கதிரோனை வெண்டா ரகைக்கொள்
விதுவைக் கதிரையணி வேணி —விதுமேவும் 35

குன்றைத் திருத்தணிகைக் கோதிலாச் சோலைமலைக்
குன்றைத் திருத்தணிகைக் கோதிலான்—குன்றிலகு 36

ஏரகத்தி லேரகத்தும் ஏத்தித் தராதலத்தில்
ஏரகத்தில் வாழும் இறையோனாம்—ஏரகமாம் 37

செந்திலெனச் செந்திலெனத் தென்கோ புரநீடு
செந்திலெனச் செந்திலெனச் செந்திலான்—செந்திலான் 38

போரூர் கருவூர் புகுதாப் பழநிமலை
போரூர் கருவூர் பொதிந்துளான்—போரூர் 39

முதிர்காம நோய்க்கினிய மோன மருந்தாய்க்
கதிர்காமம் மேவுகதிர் காமன்—எதிராளும் 40

போராடு சூரைப் பொறுத்தாடி நீராடிப்
போராடு சூரை வென்று பூரணையான்—போரடர்ந்த 41

ஐமா நிலத்தி லமர்ந்தான் பினாகியெனும்
ஐமா நிலத்தில் அமர்ந்தோனே—ஐமாவின் 42

ஒன்று படமூலத் துதிரத் தளத்தூடே
ஒன்றுபட நின்றங் குலாவினான்—ஒன்றுபட 43

நாபிக் குங்கீழாக நாற்கோண மண்டபத்துள்
நாபிக்குங் கீழாக நண்ணினான்—நாபியுள்ளே 44

சுற்றிய நாடிச் சுழியின் வழியாகச்
சுற்றிய நாடிச் சுழிமுனையான்—சுற்றியெழும் 45

நாடி குணமூன்றும் நாற்கரணும் ஐம்புலனும்
நாடிகுண மூன்றும் நாடினான்—நாடிவிசை 46

விந்தைக் கருவில் விளையாட்டயன் மாலோன்
விந்தைக் கருவில்விளை யாடினான்—விந்தையதாம் 47

மேல்நாடும் ஆறும் மிசையார் பதநான்கும்
மேல்நாடு மண்டலமும் மேவினான்—மேனடுவே 48

போது முடித்துப் பொடிய கலைமதிசேர்
போதுமணி மண்டபத்தே போந்துளான்—போதுநிறை 49

தட்டைத் திறந்து தளத்துள் கமலநடுத்
தட்டைத் திறந்த தயாநிதியான்—தட்டற்ற 50

மேலாம் பரவெளியில் மேதினியெல்லாம் நிறைந்து
மேலாம் பரவெளியில் மேவினான்—மேலாம் 51

இருநான்கு சித்தி யிசையஷ்ட யோக
இருநான்கு சித்திக் கிசைந்தான்—இருநான்கு 52

நான்கு கலையாகி நாதவிந்துக் கப்பாலே
நான்கு கலைய்ாகி நடஞ்செய்வோன்—நான்குகலை 53

ஒன்றா யிரண்டாகி ஒன்றிரண்டா யொன்றிலதாய்
ஒன்றா யிரண்டாய் உருவுள்ளோன்—ஒன்றி 54

உருவா யருவாய் உருவருவாய் ஒன்றி
உருவரு வாயொன்று மில்லான்—உருவருவாய்க் 55

கோடி ரவிமதியும் கூடி யொளிருமொளிர்
கோடி ரவிமதியும் கோடியான்—கோடி 56

அழியும் அழியா தனந்தமிகு கோடி
அழியும் அழியா வனந்தன்—அழியுநாட் 57

காலாக் கினிரூப கண்டவுப சம்ஹார
காலாக் கினிவடிவக் காக்ஷியான்—காலாக்னி 58

மேலுந் தலைகீழும் மென்மேலும் அண்டபிண்டம்
மேலுந் தலைகீழும் மேவினான்—மேல்கீழ் 59

தலையிற் சராசரங்கள் தானாகிப் பின்னும்
தலையுட் சராசரமாய்த் தாங்கித்—தலையுச்சம் 60

மேனாளும் தேடும் விதிமுகிலுங் காணரிய
மேனாளும் தேடும் விதிமுகிலான்—மேனாளும் 61

உள்ளத்தின் உள்ளே ஒளிரும் ஒளியாகி
உள்ளத்தின் உள்ளே உறைகுவோன்—உள்ளத்தில் 62

வஞ்சருக்குந் தோன்றாத வஞ்சநவ வஞ்சமிலா
வஞ்சருக்குந் தோன்றும் மதிநாதன்—வஞ்சருக்குக் 63

கண்ணாடி கண்புருவத் தேத்தினித கண்ணாடி
கண்ணாடி கண்டவர்க்குக் காக்ஷியான்—கண்ணாடி 64

தோன்று சமுசாரத் துன்பச் சமுத்திரத்தில்
தோன்று சமுசாரச் சோங்கினான்—தோன்றும் 65

சமய பதங்கநிரு தத்துவங்கள் மேலாம்
சமய பதங்க நிருசாம்பன்—சமயபத 66

சம்புகௌ ரீசனென்றும் கந்தனென்றும் முன்புவரு
சம்புகௌ ரீசத் தாதையான்—சம்புவென 67

வந்து வசிகரத்து மாமோ கனத்துநிதம்
வந்து வசீகரமா மோஹனத்தான்—வந்துவசி 68

ஆகர்ஷ பேதனத்தான் ஐம்பது மொன்றானதுவே
ஆகர்ஷ பேதனத்தான் ஆதாரன்—ஆகர்ஷ 69

தம்பனத்தா னுச்சா டனத்தான் சருப்பகுக
தம்பனத்தான் உச்சாடனத் தானான்—தம்பனத்தான் 70

மாவித்து வேஷணத்தான் மாரணத்தான் நாரணத்தான்
மாவித்து வேஷணத்தான் மாரணத்தான்—மாவித் 71

துகார மகாரத் துதிக்குமோங் காரத்
துகார மகாரத் துறைவோன்—உகாரஞ்சேர் 72

வட்டரீங் கார சௌவு மாவெழில்சேர் எண்ணான்கும்
வட்டரீங் காரசௌவுள் வாழ்பவன்—வட்டிட்ட 73

பத்மா சனத்திலகு பஞ்சாட் சரநடுவே
பத்மா சனத்தில் பதிந்துள்ளான்—பத்மத்தின் 74

எட்டுமீ ரெட்டும் எழில்சேர் மகார விந்து
எட்டுமீ ரெட்டெட் டெழுத்தினான்—எட்டாத 75

நத்துவத்தி னுள்ளாகி நானாகித் தானாகி
நத்துவத்துள் அத்துவித ஞானபரன்—நத்துவத்து 76

ஐயுங் கிலியும் அகார சகாரந்தனையும்
ஐயுங் கிலியும் அமைந்துள்ளான்—ஐயார் 77

சயம்பு வளையேந்திச் சங்கரனுந் தானாய்ச்
சயம்புவளை யேந்து சடாதாரன்—சயம்புவளை 78

ஆனந்த னாதை அலரியார் மாகோரை
ஆனந்த னாதை அபிராமி—ஆனந்த 79

நிர்த்த நடன நிமலை அகோர
நிர்த்த நடன நிராதாரை—நிருத்தமிடும் 80

உன்மனா தீபத் தொளிருமோங் காரபரை
உன்மனா கண்டிநிமிர் உன்மத்தை—உன்மனையில் 81

அண்டமுண்ட குண்டலிமுன் அன்பர்க்கமலையாம்
அண்டமுண்ட வுந்தி அவுதாரை—அண்ட 82

அமிர்த கலாதீதை ஆனகரை வீர
அமிர்த கலாதஸூசு னானான்—அமுதொழுகு 83

தாரா தராகிரண சந்த்ரோ தயமௌலி
தாரா தராகிரண ஷண்முகன்—தாரார் 84

நரசிம்ம வீரரண கோரவுத் தண்ட
நரசிம்ம வீர ரவுத்ரன்—நரசிம்(ஹ) 85

வயிர வருக வாயுட்ப்ர காச
வயிர வருக மயூரன்—வயிரமிடும் 86

சங்குசக்ர சூலதண்டி யிண்டிசூலந் தாங்கும்
சங்குசக்ர சூலதார் காலன்—சங்குசக்ர 87

மாகால பாச வரவீர கெம்பீர
மாகால பாச வரவீரன்—மாகால் 88

உரகவண காள விஷமுண்ட வீரனுக்ர
உரகவண காளமுண்ட வுள்ளன்—உரகபண 89

வண்டலண்ட வுண்டமௌனப் பிர்யங் கதவ
வண்டலண்ட குண்ட வரநாதன்—வண்டலண்ட 90

வல்லலவ வல்ல லவணத் திரியாதி
வல்லலவ வல்லவண நாவணிகன்—வல்லலவ 91

குண்டுண்டு டுண்டு டிமிடா டிமிடாவென
குண்டு டுண்டுரண பேரிகையான்—டுண்டுண்டு 92

திம்மிதிமி தத்தித் –திமிதத்-திமிதத்தி
திம்மிதிமி நர்த்தமிடு சேவலான்—திம்மிதிமி 93

சண்டப்ர சண்டநவ கண்டவுப சம்ஹார
சண்டப்ர சண்ட தகரினான்—சண்டப்ர 94

பூதசிவ பூதியணி பூதிசிவ தூளியணி
பூதிசிவ பூதியணி பூதியான்—பூதியான் 95

வஜ்ராயுதக் கவச வல்ல சபைராஜ
வஜ்ராயுதக் கவச வல்லவனார்—வஜ்ரம் 96

வருபூத வேதாள வஞ்சவினை யஞ்ச
வருபூத வேதாள தூளி—வருபூத 97

வெய்யபில்லி வஞ்சவினை மேற்செய்வார் தன்னுடலை
வெய்யபில்லி வெய்யதழல் வீழ்த்தினான்—வெய்ய 98

கொடுநோய்க் கருமருந்தாய் கோளர்க் கிடியாய்க்
கொடுநோய்க் கருமருந்தாய் கூலன்—கொடியார்பால் 99

செல்லா திருத்தித் திருவருளைத் தான்செலுத்திச்
செல்லாத செல்வமருள் செவ்வேலான்—நல்லார் 100

கொடுமட் பதிக்குமுயர் குன்று தோறாடல்
கொடுமட் பதிக்கோயில் கொண்டான்—கொடுந்தன் 101

உடைநிழல் தன்னிலே உற்றதவ யோகம்
உடையான் எனையா ளுடையான்—உடைசேரும் 102

செங்கமலத் தண்ணல் கெழுமறையோர் தேவர்முதல்
செங்கமலத் தாடொழுமெஞ் சேவலான்—செங்கமலத்து 103

உற்பவித்த அற்புதனை ஓர்தா மரையானை
உற்பவித்த நெஞ்சத் துளர்வோனை—உற்பவித்த 104

ஜென்மவினைக் கன்மம் செழுங்கதிர்முன் போம்பனிபோல்
ஜென்மவினை கன்மத் திரக்ஷிப்பான்—ஜென்மவினை 105

இல்லைபய மில்லையிருள் இல்லையிடர் இருப்புவியில்
நல்லையென வாழ்வார் நயந்து 106

கொடுமளூர் ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமி
ஞான உலா முற்றிற்று

உ

# திரு எழுகூற்றிருக்கை

## அருணகிரிநாதர்

ஒருரு வாகிய தாரகப் பிரமத்
தொருவகைத் தோற்றத் திருமர மெய்தி
ஒன்றா யொன்றி யிருவரிற் றோன்றி
மூவா தாயினை;
இருபிறப் பாளரி னொருவ னாயினை;
ஓராச் செய்கையி னிருமையின் முன்னாள்
நான்முகன் குடுமி ஒருநொடி பெயர்த்து
மூவரும் போந்து இருதாள் வேண்ட
ஒருசிறை யிட்டனை;
ஒருநொடி யதனில் இருசிறை மயிலின்
முந்நீர் உடுத்த நானிலம் அஞ்ச
நீவலம் செய்தனை;
நால்வகை மருப்பின் மும்மதத் திருசெவி
ஒருகைப் பொருப்பன் மகளை வேட்டனை;
ஒருவகை வடிவினில் இருவகைத் தாகி
மும்மதன் தனக்கு மூத்தோன் ஆயினை;
நால்வாய் முகத்தோன் ஐந்துகைக் கடவுள்
அறுகு சூடிக் கிளையோன் ஆயினை;
ஐந்தெழுத் ததனில் நான்மறை உணர்ந்த
முக்கட் சுடரினை இருவினை மருந்துக்
கொருகுரு வாயினை;
ஒருநாள் உமையிரு முலைப்பால் அருந்தி
முத்தமிழ் விரகன் நாற்கவி ராஜன்
ஐம்புலக் கிழவன் அறுமுகன் இவன்என
எழில்தரும் அழகுடன் கழுமலத் துதித்தனை;
அறுமீன் பயந்தனை; ஐந்தரு வேந்தன்
நான்மறைத் தோற்றத்து முத்தலைச் செஞ்சூட்டு
அன்றில் அங்கிரி இருபிளவாக
ஒருவேல் விடுத்தனை;
காவிரி வடகரை மேவிய குருகிரிஇருந்த
ஆறெழுத் தந்தணர் அடியிணை போற்ற
ஏரகத் திறைவன் எனஇருந் தனையே.

திரு எழுகூற்றிருக்கை முற்றிற்று

உ

# கிளிக் கண்ணி

## குரு சுப்பராய சுவாமிகள்

ஐந்துகரனுக் கிளைய வாறுமுக வேலவனைச்
செந்திற் குகந்தவனைக் கிளியே
சேரமனந் தேடுதடி 1

கூடிக் குலாவிமெத்தக் குகனோடு வாழ்ந்ததெல்லாம்
வேடிக்கை யல்லவடி கிளியே
வெகுநாளைத் தொந்தமடி 2

நீலமயில் வாகனனால் நெஞ்சங் கரைந்ததன்றிப்
பாலுங்கசப் பாச்சுதே கிளியே
பசலையும் பூத்ததடி 3

சேமநிதி யாடைபணி சென்றாலுஞ் சிறுதுயர்
காமங்கொடுந் துயரடி கிளியே
கன்னிகைமார்களுக் கெல்லாம் 4

மாலைவடி வேலவர்க்கு வரிசையாய் நானெழுதும்
ஓலையுங் கிறுக்காச்சடி கிளியே
என்னுள்ள முங்கிறுக்காச்சடி 5

ஊரார் வசைசொல்லவும் உற்றார் வசைசொல்லவும்
வாராத வார்த்தையெல்லாம் கிளியே
வந்து வந்து போகுதடி 6

ஐந்து வயதினிலே யறியாப் பருவத்திலே
பிஞ்சிலே கூடினனடி கிளியே
பிரியமனங் கூடுதில்லை 7

வள்ளிக் குகந்தவனை மருவியிருந்த விதம்
கள்ளப் புணர்ச்சியல்லடி கிளியே
கற்பு நிலையப்படியடி 8

அந்தந்த நாளையினான் அறியாதே கூடிவிட்டேன்
இந்த விதிவருமென்று கிளியே
நான் எண்ணியறிந்தேனில்லை 9

எல்லார்க்கு மொருவிதம் எனக்கொருவிதமடி
வல்லார்க்கும் வல்லவனாம் கிளியே
மான் மருகன்றந்தமையல் 10

எட்டாப் பழமடியோ இறக்காதனவடியோவு
வட்டாத வானந்தமே கிளியே
மான் மருகன்றந்தசுகம் 11

சுட்டும் பொருளுமற்றுச் சும்மா விருக்கவைத்தான்
எட்டிரண் டுமறியேனடி கிளியே
ஏமாந் திருந்தேனடி 12

மோகந்தவிர வென்னை முந்தி பிடித்திழுத்து
ஏக வெளிதனிலே கிளியே
என்னைக் கலந்தானடி 13

வள்ளி கணவன்பேரை வழிப்போக்கர் சொன்னாலும்
உள்ளங் குழையுதடி கிளியே்
ஊனு முருகுதடி 14

எட்டி யெட்டிப்பார்ப்பவர்க்கு எட்டஎட்ட நிற்குமது
சுட்டுக் கடங்காதடி கிளியே
சுந்தரத்தின் பேருருவம் 15

கன்னல் மதுரமொழிக் கட்டழகன் என்குரவன்
என்னபொடி போட்டானோடி கிளியே
இடைபிரியக் கூடுதில்லை 16

அறிவு என்றானப்பால் அறியறிவுதானென்றான்
பிறிதொன்றுமில்லை யென்றான் கிளியே
பேசா திருந்தானடி 17

அலைந்து திரிபவர்க்கு ஆசையுண்டு தாபமுண்டு
கலந்து சுகிப்பவர்க்குக் கிளியே
கண்ணீரும் வருமோடி 18

கானமயிலேறு மென்றன் கட்டழகன் றந்துவரும்
ஆனந்த மென்பதெல்லாம் கிளியே
அழுது தவிப்பதோவடி 19

உண்டாற் கிறுக்கவைக்கும் ஊரிலுள்ள கட்சரக்கு
கண்டாற் கிறுக்கவைக்கும் கிளியே
என் கட்டழகன் பேருருவம் 20

தாழ்வாரைக் கைதூக்குந் தம்மனைக் குள்ளேயிருந்து
வாழ்வாரை வாழ்த்துமடி கிளியே
மான் மருகன்றன் கருணை 21

எட்டும் வரைக்குந்துன்பம் எட்டிவிட்டாற் பேரின்பம்
தட்டினாலும் போகாதடி கிளியே
தானா யறிந்ததடி 22

மணத்த குழலிருந்தென் மற்றவழ கிருந்தென்
குணந்தான் குறியடியோ கிளியே
என் கோலமயில் வாகனற்கு 23

சொல்லாத சொல்லும்வரும் துறவாத் துறவும்வரும்
கல்லாத கல்வியும்வருங் கிளியே
என் கணவரைச் சேர்ந்தவர்க்கு 24

என்னோ டுடன்பிறந்தா ரெத்தனையோ பேர்கள்பட்டார்
அத்தனை பேர்கள் பட்டுங் கிளியே
அவனாசை போகுதில்லை 25

மாடுமனை போனாலென்ன மக்கள்சுற்றம்
போனாலென்ன
கோடிசெம்பொன் போனாலென்ன கிளியே
அவன் குறுநகை போதுமடி 26

முத்து நகைக்குமவன் மோனமொழி வார்த்தைகட்கும்
பித்துப் பிடித்தேனடி கிளியே
பேசுதற்குக் கூசுதடி 27

ஆடுமயில் வாகனனா லன்றுமுதற் பட்டதுயர்
ஏடுமடங்காதடி கிளியே
எல்லாமெழுதவென்றால் 28

என்னைக் கெடுத்தான்பின் என்னைத்
தானென்றுசொன்னான்
தன்னையுங்கெடுத்துக் கொண்டான் கிளியே
ஷண்முகத்தான் மாயவித்தை 29

பக்தியுள்ள பேர்களுக்குப் பயன்றரும் பொருளது
முக்திபெற்ற பேர்கட்கெல்லாம் கிளியே
மூடிவைக்குஞ் செம்பொருளது 30

ஊனம் வருமென்றறியேன் உள்ளுக்குள்ளே கலந்தேன்
மானம்பறி போச்சடி கிளியே
மற்றவருக் கேச்சாச்சடி 31

அஞ்சியொடுங்கி நின்றேன் அழுது சலித்துநின்றேன்
பஞ்சுபடு பாடுபட்டேன் கிளியே
என் பாக்கியத்தைக் காணவென்று 32

கொஞ்சி யிருப்பார்கள் குழலைமொழி மாதரெல்லாம்
அஞ்சியிருப்பேனடி கிளியே
என் ஆறுமுகவேலவர்க்கு 33

மோகம் மெத்தவானாலும் முன்னும் பின்னும் பார்த்து
ஏகாந்தவேளையிலே கிளியே
என் குறையைச் சொல்வேனடி 34

மதியா தொருவார்த்தை வாயிருந்து வந்துவிடும்
எதிர்த்தொன்றும் சொல்லாரடி கிளியே
என்றன் மட்டும் சொந்தமடி 35

சீவிச் சிணுக்கெடுப்பார் சிந்துாரப் பொட்டிடுவார்
மேவியிருந்திடுவார் கிளியே
விகற்பமொன்றுமில்லையடி 36

வைவேன் பிணங்கிடுவேன் மறுத்து மருவிடுவார்
பொய்மட்டுங் கூடாதடி கிளியே
என்பொன்னின் வடிவேலவற்கு 37

பேசி யிருக்கின்றார்கள் பித்தமுத னோய்களுக்கு
ஆசைக்கொருமருந்தைக் கிளியே
அங்கெழுதி வைத்தாரில்லை 38

சரியா யெழுதிவந்துந் தங்கவடி வேலரென்னைப்
பிரியாவெழுத்தெழுதக் கிளியே
பிரமன் மறந்தானடி 39

இரண்டு என்றானப்பால் இரண்டு மொன்றாமென்றான்
ஒன்றென்றுமில்லை யென்றான் கிளியே
உணர்வுதெரியுதில்லை 40

தாரணியோர் மெச்சத் தனியரசுசெய்து வந்தேன்
சீரலைவாய்வந்ததனால் கிளியே
என் சீரலைவாயாச்சுதடி 41

ஏகம் பேதமுனக் கின்று மென்றுமானாலும்
தேகமிருக்கும் மட்டுங் கிளியே
சேர்ந்து சுகித்திரென்றான் 42

ஆதரவாய்க் கூடிடினும் அங்குப் பிரிந்திடினும்
பேதமற்று வாழ்வதுவே கிளியே
பெருவாழ்வு என்றுசொன்னான் 43

நான்பேதை யாதலினால் நாதனென்ன சொன்னாலும்
பேதமென்றெண்ணேனடி கிளியே
பேதமிருக்காதடி 44

சேர்க்கையிலென் கணவன் திடமென்ன சொன்னாலும்
ஏக்கமெடுக்குதடி கிளியே
என்புமுருகுதடி 45

விட்டுத்தான் சொல்லுகிறேன் மெள்ளமெள்ளப்
பித்தேற்றிக்
கட்டுக்குலைத்தானடி கிளியே
கண்டவருக் கேச்சாச்சடி 46

கட்டுக் கொடிபடர்ந்த கருவூருக் காட்டுக்குள்ளே
விட்டுப் பிரிந்தாரடி கிளியே
வேலவர்க்குச் சொல்வதெவர் 47

சார்பிலி ருப்பேன் சலிப்புவந்தாலென் கணவர்
மார்பிற் றுயின்றிடுவேன் கிளியே
மயங்கவு மாட்டேனடி 48

எல்லாரைப் போலமனத் தெண்ணமற்று வாழ்ந்திடலாங்
கல்லா திருந்தேனில்லை கிளியே
கற்று மென்னகண்டேனடி 49

வைவேலெடுத்த வென்றன் மன்னனை யல்லாதெவையும்
பொய்யாகத் தோற்றுதடி கிளியே
பொருத்தமு மில்லையடி 50

தன்னை யறிந்தாற் றனியாகா தானாலும்
மன்னர் மறந்திடலாமோ கிளியே
வழக்கிடுங் காரியமோடி 51

எண்ணாத வெண்ணியெண்ணி யீடழிந்து போவதற்குப்
பெண்ணாய்ப் பிறந்தேனடி கிளியே
பிறக்குமுன் செய்தவினை 52

கூடிச் சுகங்கொடுத்த கொற்றமயில் வாகனனார்
பாடும் புலவர்கையில் கிளியே
பட்டோலை யானேனடி 53

வாடி யிருப்பானேன் வலியவே நங்கணவர்
தேடி வருவாரென்று கிளியே
திடமும் பிறக்குதில்லை 54

பர்த்தா மனைவியென்று பாடும் பழக்கமெல்லாங்
கர்த்தாவின் சீரடியோ கிளியே
கருத்தில் வேறெண்ணாதபடி 55

என்னைமருட்டவென்று ஏன்றமட்டும் பார்த்துவந்தாய்
உன்றன் மருட்டுக்குள்ளே கிளியே
உலகமிருக்குதடி 56

ஆறுமுகம் போற்காமம் ஆருமிங்கே வாருமென்று
கூறுந்திருவாய்முத்தங் கிளியே
கொண்டினிவாழ்வதென்று 57

என்னோடு நீயும் இணங்கியவரைக் கலந்தும்
உன்குணம் வேறாச்சடி கிளியே
உனக்குத் தெரியுதில்லை 58

எனக்குச் சலிப்புமுனக் கெக்களிப்பு மாயிருந்தால்
மனத்துயர் போவதென்று கிளியே
மன்னர் மகிழ்வதென்று 59

மனக்கிளி நீயொரு மறுவற்ற பெருங்கிளி
சின்னக்கிளி யானாயடி கிளியே
சேர்க்கையின் தோஷத்தினால் 60

ஒருவரு மறியாமல் உள்ளுக்குட் கூடியதைத்
தெருத்தோறுந் தூற்றுகிறாய் கிளியே
செல்வரென்ன வெண்ணாரடி 61

ஆசைக்கணவர் சொன்ன அந்தரங்கச் சொல்லதனைப்
பேசிவிட்டோமென் றெண்ணுறாய் கிளியே
பேசுதற்கும் வாராதடி 62

வேண்டியென்ன சொன்னாலும் மிஞ்சுகிறாய் நீயும்நானுந்
தோண்டியுங் கயிறுமடி கிளியே
சொல்லியுந் தெரியுதில்லை 63

எண்ண முடிவதெல்லாம் இந்தவுடலிற் போனால்
இந்தவுடலே வருமென்று கிளியே
யாருனக்குச் சொன்னாரடி 64

தன்னிற்றிடம் பிறந்தார் சத்தசத்தென் பதில்லை
சின்மய மென்பதில்லை கிளியே
திரிபுடியு மில்லையடி 65

சுட்டிடுவா ரவ்விடத்திற் றூங்கிக் கிடந்திடுவார்
எட்டியெட்டிப் பார்த்திடுவார் கிளியே
இருக்குந் திரிபுடியடி 66

கீழிருந்தே போகவேணும் கிட்டிவிட்டால் மேற்குதித்துத்
தாழ்வில்லா நிலையில்நிற்குங் கிளியே
சமர்த்தே சமர்த்தடியோ 67

இப்படி யப்படிநா னிருந்திட வேணுமென்ற
தப்பித வெண்ணமெல்லாங் கிளியே
சற்குருமுன் நில்லாதடி 68

மனமொன்று சாக்ஷியொன்று மற்றதெல்லாம் நெடுவழி
மனம்போனாற் சாக்ஷியென்ற கிளியே
வார்த்தையும் போகுமடி 69

இனிமேற் பிறப்பதனை யாரறிபவர் அதனால்
யாரும் பிரமமென்னக் கிளியே
இயம்பிடலா மோவடி 70

மரிப்பா ரொருவரன்றி மனஞ்சஞ்சரித் ததென்றால்
மனம்போன விடமதுவே கிளியே
மாமவுன மாகுமடி 71

பாடுவதும் ஆடுவதும் பரநிலை கூறுவதுந்
தேடுவதுங் கூடுவதுங் கிளியே
சிந்திக் கிலகமேயடி 72

இரவு பகலாகும் ஏந்திழையார் மோகமுற்றால்
பகலிரவாகு தேயடி கிளியே
பாவியென்ன செய்வேனடி 73

அறுநான்கிற் கல்விபெற்றேன் அப்படி யப்படித்தான்
எழுநான் காமாண்டினிலே கிளியே
என்னை யறிந்தேனடி 74

ஒருசொல் சொன்னாலதற்கே யுயிர்விட வேணுமப்பாற்
பலதரஞ்சுட்டிச் சொல்லியுங் கிளியே
பாவியுயிர் போகுதில்லை 75

கண்கொடுத்து வாழவைத்த கண்மணி யோடேகூடி
எண்ணமெல்லாம் முடியாவிட்டால் கிளியே
என்குலத்திற்கே வசையடி 76

பெரும்பாவி மாதேவன் பேருறுப்பெல்லாம் படைத்து
உருகா மனமதொன்றைக் கிளியே
ஊடே படைத்தானடி 77

பத்தஞ்சு வைத்திருக்கும் பாக்கியத்தி னாலல்ல
உத்தமர் தஞ்சேர்க்கையினால் கிளியே
ஒன்றையுமதியேனடி 78

அண்ணலை நினைக்கும் போதாறாக நீர்பெருகும்
கண்ணுக்குத்தான் சுபாவமோ கிளியே
கள்ளக் கண்ணீரோவடி 79

கள்ளங் கபடுவைத்தே கவல்கின்றே னழுகின்றேன்
உள்ளங் கனிந்ததென்றால் கிளியே
உத்தம ரறியாரோடி 80

அன்பு பெருகவவன் அன்று சொன்னதை நினைந்தால்
என்பு குளிருதடி கிளியே
என்னென்னவோ தோணுதடி 81

ஆகமெல்லாம் நோவுகின்ற தவன்றந்த மையல்மிஞ்சி
முகத்திற் கண்ணீர்வருகுதே கிளியே
மூச்சு மொடுங்குதடி 82

சீராளன் என்குடிச் செல்வனவன் றிருவாயை
வாரிமுத்தங் கொள்வதற்குக் கிளியே
வாயிதழ் துடிக்குதடி 83

உருவமுமென் கணவனுருவல்லா வுருவைப்போற்
பரமசுக வடிவமே கிளியே
பாலுந்தேனும் போலடி 84

நிமிஷம் யுகமாமென்பர் நேரிழையா ரெல்லாரும்
அதுவோரளவு பட்டதே கிளியே
அப்படியு மில்லையடி 85

அரைக்கணம் வீண்போக்கேன் அப்படியே வாழ்ந்து வந்தேன்
மருவாவொரு நாளோடே கிளியே
வாணாளும் போகுதடி 86

விட்டுப் பிரிந்தாரென்றும் விடாமலே யெப்போதுந்
தொட்டேயிருக்கின்றா ரென்றுங் கிளியே
துணிந்து சொல்லப்படுவதில்லை 87

கனவு நனவாகும் கைகலந்தாற் போற்களிப்பர்
நனவு கனவாகுதே கிளியே
நானினியேது செய்வேன் 88

நான்போனால் நீபோவாய் நானிருந்தால் நீயிருப்பாய்
நான்தானே போய்விடுவேன் கிளியே
நாணந்தலை குனியுதே 89

நம்முடைய சொல்லவன்சொல் நந்தொழி லவன்றொழில்
நம்மாசை யவனாசையே கிளியே
நாமெனுமகம் போய்விட்டால் 90

ஓயாத்துயர் தனிலும் உயிர்போனாற் றேவையில்லை
பாய்ந்து விடுவோமென்றாலுங் கிளியே
பாக்கியத்தி னுயிரடியோ 91

கருக்கொண்ட தென்றுவன்றே கணவன்நானென்று சொன்னான்
உருக்கொண்டு நின்றாலல்லவோ கிளியே
ஊடலெல்லாந் தீர்த்திடலாம் 92

சாருந்தொழில் கட்கெல்லாஞ் சாடைசெய்கின்றான்
றன்னைக்
கூர்ந்தறியும் புத்தியில்லையே கிளியே
கொடும்பாவி யென்னசெய்வேன் 93

கண்டோர்க்குப் பேரிழிவு கலந்தார்க்கு இன்பநிலை
கொண்டாரைத் தெய்வமென்று கிளியே
கோடிமறை கூப்பிடுதடி 94

இதைச்சத மென்று கண்டோர்க் கேயது
தெரியாதென்றால்
அதைச்சதமென்று கண்டோர்க்குக் கிளியே
அவனி தெரியுமோடி 95

வேதத்தின் சாகைகட்கு மேலானா னாதலினால்
விசாகனெனப்பெயர் கொண்டான் கிளியே
வேலெடுத்த மூலகுரு 96

எங்கும் நிறைந்திருப்போன் எட்டியுமெட்டா திருப்போன்
குங்குமவர்ணனடி கிளியே
என் குமரப்பெருமானடி 97

வள்ளிக் குகந்தவன்றான் மறையின்முடிவில் வந்தான்
புள்ளிமயி லூர்ந்தானடி கிளியே
போக்குவரத் தில்லானடி 98

கண்ணன் கரிமுகவன் கபாலியே முதலாம்
எண்ணரிய தேவரிவனே கிளியே
எமதாயி சத்தியிவனே 99

நீநா னெனும்போது நினக்கர்த்த மானாலது
தானே நிர்வாணமென்று கிளியே
சற்குருமுன்சொன்னாரடி 100

இங்குமங்கு மெங்குமுள்ள தேகரச வானந்தம்
அங்கமு மனந்தமென்றால் கிளியே
அவதூத மாகுமென்றான் 101

மாமயிலோன் வாழ்கநாம் வருந்தாது வகைதந்த
நீமனமே வாழ்ந்திருப்பாய் கிளியே
நீடூழிக் காலம்வரை 102

**கிளிக்கண்ணி முற்றிற்று**

உ

# திருச்செந்திற் கலம்பகம்

## சுவாமிநாததேசிகர்

### காப்பு

கட்டளைக் கலித்துறை

நிலம்பக வீழ்சடை நீறணி வான்மைந்தன் நீடயிலோன்
கலம்பகஞ் செந்தமிழ்ப் பாமாலை யாற்செந்திற் கண்மருவு
சிலம்பக மெல்லடி வல்லபை கேள்வனைத்
திங்கள்வெண்கோட்(டு)
இலம்பக யானை முகத்தானை வாழ்த்தி இயம்புவனே.

### நூல்

மயங்கிசைக் கொச்சகக் கலிப்பா

நாலடித்தரவு-2

சொல்வாய்மை தருங்கடவுட் சுருதிகரு தியபொருளைப்
பல்சான்ற பெருங்கேள்வி பனிமலய முனிவினவ
அம்புயனும் அறியாத அறமுதலாந் தமிழ்மூன்றும்
சம்புவுமன் றுடனுணரத் தருவோய்நீ முருகோனே.

கண்சுருங்க விரித்தபசுங் கலவமயி லெனத்திருமுன்
மண்சுருங்க விரித்தகுண மணியாழி யெழுபரித்தேர்
அந்தினக ரனைத்தடுக்கும் அணிமணிமா ளிகைப்புரிசைச்
செந்தில்நகர்ச் சினகரத்துத் திருத்தகவீற் றிருந்தனையால்.

ஈரடித்தாழிசை-6

ஊனாகி உயிராகி உணர்வாகி உணர்வுதவும்
கோனாகி வினையளவும் குணத்தளவும் தனக்களவாய்

விரவாதி யந்தமிலா வெளியாகித் தெளியாது
பரவாதி யருமுலவாப் பாமறையுந் தாமறைய

வாக்குமன முங்கடந்து மண்ணொடுவிண் ணிடத்தியற்றும்
போக்குவர வொழிந்துவிழிப் புலத்துருவும் அருவமுமாய்

வேதாந்தம் சித்தாந்தம் விளங்குகலாந் தந்தெளிந்த
போதாந்த நாதாந்தப் புறத்தினுமப் புறம்போகி

உணர்ந்தாரும் உணராரும் உணராமல் உயிர்க்குயிராய்ப்
புணர்ந்தாலும் ஆறாது புலனலமுங் கலவாது

நின்றதனிப் பரம்பொருளாம் நினக்கொருபே ரிலையெனினும்
இன்றுகுக னெனப்பெறுவ திளையோய்நின் விளையாட்டே.

ஓரடி அராகம்-4

அருமறை முறையிட அறைகழல் பறையிட
அடியருள் நினைவதுன்னடி

ஒருமையின் இருமையும் உதவிய மதியென
ஒளியொடு குளிர்வதுன்முகம்

வருமுலை வனிதையர் இருவரும் மயிலினம்
மழையென விழைவதுன்னெழில்

பெருகலை கெழுகலி கடலினும் எழுமடி
பெருகுவ துருகுநின்னருள்.

பெயர்த்தும் ஈரடித்தாழிசை-6

தாயென்றும் தந்தையென்றும் சகமீன்று தருமுனக்குச்
சேயென்று பின்னுமொரு திருநாமம் வருமாறென்

முந்திலென்றே அடியருள முளரிதொறும் இருந்தாய்க்குச்
செந்திலென்றே உரைக்குமொரு திருப்பதியும் விருப்புளதே

அயிலேற்று வருங்காலம் அல்லால்நீ கொல்லாயோ
மயிலேற்றம் ஏனுனக்கு மற்றேற்றம் பெற்றிலையோ

ஓராறு பனிமதியி னொடுபவள வரையில்நிரைத்(து)
ஈராறு தினகரரும் இடையிடையே உதித்தாங்குக்

கருணைபொழி திருமுகமும் கணமணிக்குண் டலநிரையும்
திருநெடுந்தோள் களும்கமலச் சேவடியும் தூவடிவும்

பாடாது நினையாது பரவாத எனக்குவினை
கூடாத தொண்டரொடுங் கூட்டியுநீ காட்டினையால்.

நாற்சீர் ஈரடி அம்போதரங்கம்-2

பிறந்ததும் இறந்ததும் பெரும நின்புகழ்
மறந்ததும் அல்லது வணங்கி லேன்நினைக்

காமமும் வெகுளியும் களிம யக்கமும்
தாமிடை கலந்தெனைத் தலைம யக்கலால்.

நாற்சீரடி அம்போதரங்கம்-4

உண்பதும் உடுப்பதும் உவந்து தேடினேன்
கண்படை நனவினில் கலங்கி வாடினேன்
உய்திறம் இதுவென உணர்வு போயினேன்
செய்திறம் இதுவெனும் தெரிவில் பேயினேன்.

முச்சீரடி அம்போதரங்கம்-4

எவ்வா றெனையுய் யக்கொள்வாய்
எழுதா மறையின் திறத்துள்ளாய்
செவ்வான் அனையான் திருப்பிள்ளாய்
தெரியா தினியுன் செயல்வில்ளாய்.

இருசீரடி அம்போதரங்கம்-8

மெய்யுநீஇ, பொய்யுநீஇ, விண்ணுநீஇ, மண்ணுநீஇ,
ஐயைநீஇ, செய்யைநீஇ, ஆதிநீஇ, சோதிநீஇ.

தனிச்சொல்

எனவாங்கு

சுரிதகம்

நீயல தில்லை யாவையும் உலகம்
மற்றவற் றிடையான் அவத்துடற் பொறையொடு
கறங்கெனத் திரியாது பிறங்குசுற வெறியும்
நந்தூர் கடற்றுறைச் செந்தூர் பரவுவன்
காமரு பூந்தொடைக் கடம்பநின்
தாமரை மலரடி தருகமா எனவே. 1

**நேரிசை வெண்பா**

எனதே குகன்செந்தில் ஏத்துதொழில் அன்னோன்
தனதே எனையாளுந் தன்மை - வினவின்

மறத்திமணா ளன்புமுதல் வாழ்வையெலாம் நெஞ்சே
குறத்திமணா ளன்புகழே கொள். 2.

### கட்டளைக் கலித்துறை

கொள்ளார் பவப்பிணி கூற்றுக்கஞ் சாரன்பர் கூட்டமல்லால்
நள்ளார் பிணியின் நலிவு படார்தெய்வம் நாளுமற்றொன்(று)
உள்ளார் முருகன்செந் தூர்பிரி யாதவன் ஒண்கமலக்
கள்ளார் விரைமலர்த் தண்டையந் தாள்தொழக் கற்றவரே. 3

### அறுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்

கற்றாலும் நீடுழி கழித்தாலும்
கழியாத கரையில் வாழ்வு
பெற்றாலும் முருகனடிக் கன்புபெறா
தவருலகிற் பிறவி தீரார்
இற்றாலும் கலிநலிய இரந்தாலும்
பேதையராய் எழுத்தா றுள்ளத்(து)
அற்றாலும் அவனிருக்கும் செந்திலென்றார்
முந்திலென்றும் அடைவர் தாமே.

### நேரிசை ஆசிரியப்பா

தாமரை பயின்ற நான்முகக் கடவுள்
எழுதா மறைப்பொருள் பழுதாங் குரைப்ப
வீங்குமணிக் கடகம் தாங்குதிணி தடக்கை
முன்வருத் தியவா றின்னமும் வருத்த
விரும்பிய தாலெனத் திரும்பிட நஞ்சேய்
பாயிருள் பருகும் பல்கதிர்க் குழவி
ஞாயிறு சுறவெறி நாண்முரி திரைமுகட்(டு)
எழுவது போல மழைதழை கலாபச்
செறிமயிர்ச் சிறையார் பொறிமயிற் புறத்துச்
சேயொளி மேனி திகழவீங் கெழுந்தனை
தெய்வவான் கரிணியும் மொய்வரை யரிணியும்
தூவலங் கயிலும் சேவலங் கொடியும்
ஆறு முகமும் நீறணி புயங்களும்
பண்டைய மறைபுகழ் தண்டையந் தாள்களும்
கந்தநின் நாமமும் செந்திலம் பதியும்
வணங்கவும் நினைக்கவும் வாழ்த்தவும்
இணங்கலிற் பரவினேன் எனைவிதித் ததற்கே. 5

### நேரிசை வெண்பா

அதற்கிதற் கென்றுள் அவம்போக்கி ஆக்கம்
முதற்பொருட்கும் இன்றி முயன்றாம்-நுதற்கணவன்
சந்ததியா னஞ்செய்யான் தானுவந்து செந்தினகர்
வந்ததியா னஞ்செய்யா மல். 6

### புயவகுப்பு

#### ஆசிரிய வண்ண விருத்தம்

மலர்தலை ஞாலத் தலகில வாமுற்
றுயிர்களு முந்திக் கண்பண்டு தந்தன
மறைபகர் வாய்மைத் திசைமுகம் நோவுற்
றிடுமுறை தண்டித் தன்றங்கை கன்றின
மகபதி வானத் தரசுவ ழாமல்
திருமுடி அன்பிற் கொண்டும்பு னைந்தன
வழிபடு கீரற் கழிசிறை தீரப்
பரிவொடு முந்திச் சென்றஞ்ச லென்றன
குலமட மான்மெய்ப் புதல்வியும் யானைக்
குமரியு மொன்றொத் தின்பங்க வர்ந்தன
குழையுமென் வாய்மைத் தமிழுநன் நீபத்
தொடையலு மொண்பொற் சந்துந்த வழ்ந்தன
குரைகழல் நாடித் தொழுநெறி சேர்கொத்
தடியவர் தங்கள் துன்பங்க ளைந்தன
குவிமுகை வேலைக் கவிழிணர் மாவைத்
தடிதலு மன்றிக் குன்றும்பி ளந்தன
உலகுண ராமுத் தமிழுணர் நீதிக்
குறுமுனி வந்தித் தென்றும்பு கழ்ந்தன
உலைமலி வாகைத் திருநெடு வேலிற்
சிரமவி தங்கட் கங்கங்கி யைந்தன
உமைமுலை பீர்விட் டொழுகிய பாலுக்
கழுதுயர் பொன்றக் கொண்டங்க ணுந்தின
உருகெழு கோலத் திருமுது சூரைக்
கிளையொடு மஞ்சக் கொன்றங்கண் வென்றன
கலவம யூரத் துரகதம் ஏறிப்
புவனியு மெண்டிக் கெங்குந்தி ரிந்தன
ககனவ ளாகத் தளவிய கோழிக்
கொடிவளர் கம்பத் தம்பம்பொ ருந்தின

கலைமதி போலத் திருமுக நீள்கட்
 கடையருள் பொங்கிச் சிந்துந்தி பம்பின
கடலலை வாய்முத் தினவளை வீசிக்
 கரைபொரு செந்திற் கந்தன்பு யங்களே. 7

**கட்டளைக் கலித்துறை**

புயமா றிரண்டுக்கும் பொன்னணி யாம்புள்ளி மான்மகட்கும்
கயமான் மகளுக்கும் கண்ணிணை யாங்கடுங் கூற்றுவந்தால்
நயமாய தொண்டர்க்கும் நற்றுணை யாம்செந்தி னன்னகர்மே
வியமான் மருகன் திருக்கரத் தேந்திய வேற்படையே. 8

**கலிவிருத்தம்**

படைக்கணார் மையல்நோய்ப் படுவ தல்லது
கடைக்கணான் பரகதி காணுமா றுண்டோ
உடைக்கணா திபன்றனக் கிளஞ்செந் தூர்த்தமிழ்த்
தொடைக்கணான் றுயர்புயத் தோகை பாகனே. 9

**குறளடி வஞ்சிப்பா**

பாகந்தரு பனிவான்மதி
தாரகையொடு கார்முகிலிடைப்
பொருதெனவளை யுடனிலகிய
நவமணியுமிழ் கலிகெழுபுனல்
திரைபொருமொலி முரசுடனதிர்
பைந்தமிழ்வளர் செந்திலின்வரு-சேயோன்
திருந்தடி துணையெனச் சேர்பவர்
பொருந்துவர் யாரும் புகலரு நெறியே. 10

**கொச்சகக் கலிப்பா**

நெறிக்குஞ்சித் தலைமறலி நெருங்கியெதிர் வருங்காலம்
செறிக்குஞ்சித் திகள்தருநின் செந்திலுமென் புந்தியதே
பொறிக்குஞ்சித் திரத்தினுடுப் பொரியாகப் புகுந்துகொத்திக்
கொறிக்குஞ்சித் திரச்சரணப் படைச்சேவற் கொடியோனே. 11

**வண்டோச்சி மருங்கணைதல்**

**அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்**

கொடியாநின் றிடைதேய்ந்து கொழுங்கலவைத்
 துணைமுலையுங் குழலுந் தாங்கி

ஓடியாநின் றுளதின்னும் உமக்கும்இரங்
காதவுள்ளம் உளவோ வண்டீர்
வடியாநின் றிலங்கிலைவேல் வலனேந்தி
செந்தில்அரு மருந்தன் னாள்தன்
முடியாநின் றளியெனுஞ்சொல் முடியாநின்
றநுராகம் முயல்கின் றீரே. 12

### வண்டுவிடு தூது

#### வெளிவிருத்தம்

ஈர நாண்முகை இளமுலைப் பசப்பொழித் தளியீரே
சூர னாள்விழித் துணையிணை கொள்வதற் களியீரே
நார நாளமென் நளினநீர்ச் செந்தில்புக் களியீரே
ஆர னாள்வரு வேங்கையின் மலர்கொணர்ந் தளியீரே. 13

#### வஞ்சித்துறை

அளியாலுஞ் சோலை
ஒளிசேர்வான் செந்தூர்
தெளிவாயால் நெஞ்சே
அழியாவீ டுண்டே. 14

### மேகவிடு தூது

#### கலிநிலைத்துறை

உண்டு வாரிதி பகஞ்சிறைக் கிளிமயி லுருவாகி
எண்டி சாமுகம் புதைத்தயில் எனமினி இரைத்தீரேல்
கண்டு நான்இரு கண்களும் உள்ளமுங் களிகூரக்
கொண்டல் காளினிச் செந்தில்வாழ் குமரனைக்
கொணர்வீரே. 15

### அம்மானை

#### கலித்தாழிசை

வீரன்நெடு வெள்வேல் வியன்செந்தில் எம்பெருமான்
பாரில்உயி ரெல்லாம் படைத்தனன்காண் அம்மானை
பாரில்உயி ரெல்லாம் படைத்தனனே யாமாகில்
ஆரணங்கள் நான்கும் அறிவனோ அம்மானை
அறிந்து சிறைஅயனுக் காக்கினன்காண் அம்மானை. 16

### இரங்கல்

#### வஞ்சிவிருத்தம்

மான்மகள் காதலர் மஞ்சூரும்
தேன்மலி காவுயர் செந்தூரர்
கான்மணம் நாறு கடம்பேனும்
யான்மகிழ் கூர இரங்காரே. 17

#### ஓரொலி வெண்டுறை

காரேய் நிறத்தறுகட் கறுவுடைக் கடுங்கூற்றங் கலந்த காலை
யாரே விலக்குவார் அந்தோ நமரங்காள் அறிதி ரன்றே
நீரே உயப்போமா நின்று வலித்தீரேல்
கூரேய் வடிவேற் குமரன் குடநாட்டுச்
சீரேய் திருச்செந்தில் சென்று தொழுமினே. 18

#### நேரிசை வெண்பா

தொழுதிரந்து வெம்பசியால் சோர்ந்திடுவார் கைபார்த்(து)
அழுதலமந் தேங்கி அலைவார்-முழுதும்
பெருகுகனை வாரிமணி பெய்திரைக்குஞ் செந்தில்
வருகுகனை வாழ்த்தாத வர். 19

#### கொச்சகக் கலிப்பா

வரங்கொண்ட உமைமுலைப்பால்
மணங்கொண்ட செவ்வாயும்
பரங்கொண்ட களிமயிலும்
பன்னிரண்டு கண்மலரும்
சிரங்கொண்ட மறைஇறைஞ்சுஞ்
சேவடியும் செந்தூரன்
கரங்கொண்ட வேலுமென்றன்
கண்ணைவிட்டு நீங்காவே. 20

### பாண்

#### கட்டளைக் கலித்துறை

நீங்காத நேயத்தின் நீதைத்த தையலும் நின்னையன்றிப்
பாங்காய பாண பிரிந்ததென் றால்உமை பாலன்செந்தில்
யாங்கா ணலம்எனில் எம்மை வினாவுதி ஏதிலரைத்
தாங்காது நின்மதி துன்னூசி யின்திறந் தான்பிழைத்தே. 21

### எழுசீர் ஆசிரிய வண்ணவிருத்தம்

பிழையாத தொண்டர் சிறிதேசெய் அன்பு
பெரிதாக நெஞ்சம் மகிழ்வார்
உழையீனும் எங்கள் குறமாது கொண்கர்
உமைபாலர் தங்கும் இடமாம்
புழைவாய் திறந்து வளைசூலு ழைந்து
பொழிஆரம் இந்து எனவே
மழைபோல் முழங்கி அலையாழி சிந்து
வளமேவு செந்தி னகரே. 22

### தலைவி கூற்று

### நேரிசை வெண்பா

நகைமதிய மேவடவை நாப்போல்இவ் வண்ணம்
தகைமதியா நின்று தழல்வாய்-அகமகிழ்ந்து
கற்பசலை தந்தார் கடற்செந்தில் வாய்எமக்குப்
பொறப்பசலை தந்தார்முன் போய். 23

### கட்டளைக் கலித்துறை

போய்வத னாரம்பம் ஆடார் திருச்செந்தில் புக்குறையார்
சேய்மலர்த் தாளிணை சிந்தைசெய் யார்திரு மால்மருகன்
காய்சின வேலும் மயிலுமென் னார்கடல் சூழுலகில்
பேயறி வாளர்எவ் வாறறுப் பார்தம் பிறப்பினையே. 24

### தலைவி நெஞ்சொடு கிளத்தல்

### ஆசிரியத் தாழிசை

பிறர்வாய் வசைஅடங்கப் பிஞ்ஞகன்சேய் திண்டோள்
நறவார் துணர்க்கடம்பு நாம்பெறுதல் வேண்டிச்
சிறைவான் புனற்செந்தில் சேருதுமால் நெஞ்சே.

குயில்வாய் ஒலியடங்கக் கூத்தன்சேய் திண்டோள்
நயமாந் துணர்க்கடம்பு நாம்பெறுதல் வேண்டிச்
செயிர்தீர் புனற்செந்தில் சேருதுமால் நெஞ்சே.

முந்நீ ரொலியடங்க முக்கணன்சேய் திண்டோள்
நன்னீர்த் துணர்க்கடம்பு நாம்பெறுதல் வேண்டிச்
செந்நீள் புனற்செந்தில் சேருதுமால் நெஞ்சே. 25

### கைக்கிளை

#### மருட்பா

நெஞ்சே நுதல்வியர்க்கும் நீடுகுகன் செந்திலன்னாட்(கு)
அஞ்சேல் விழிக ளவையிமைக்கும்—பஞ்சேர்
அடிநிலம் தோயும் அதனால்
கமழும் குழலிவள் கடலிடத் தணங்கே. 26

### பாங்கி வேண்டல்

#### நேரிசை வெண்பா

அணங்காம் இவளுக் கவிர்மதியம் ஒன்றோ
அணங்கா வரும்தென்றல் ஒன்று—வணங்கூர்
இளமுருகா செந்தில்நகர் எந்தாய்வந் தாளாய்
உளமுருகா வேயிசையும் ஒன்று. 27

### தலைவியை வியத்தல்

#### கட்டளைக் கலித்துறை

ஒன்றுடை யான்புலித் தோலுடை யான்மைந்தன் ஓங்குபரங்
குன்றுடை யான்திருச் செந்திலன் னார்குல வாழையிள
மென்றுடை யானடை யாலிடை யால்விழி வேற்கடையால்
நின்றுடை யானிற்ப ரால்எவ ரேனும் நிலைகுலைந்தே. 28

### மதங்கியார்

#### கலித்தாழிசை

குலைகுலுங்கு வாழையின் கோழிலைப் பசுங்கொடை
குளிர்நிழற்கண் இரவிதேர்க் குரகதங்கள் அருவிபாய்
அலைகுலுங்கும் நறவமுண் டயர்வுயிர்த்த காவுசூழ்
அங்கண்எந்தை செந்தில்பாடி ஆடுமா மதங்கியார்
முலைகுலுங்கு மாகில்மாரன் முடிகுலுங்கும் அமுதவாய்
மொழிகுலுங்கு மாகில்ஆவி பழிகுலுங்கும் அல்குலங்
கலைகுலுங்கு மாகில்நாடு நிலைகுலுங்கும் மாமுகக்
கஞ்சமுங்கு லுங்குமாகில் நெஞ்சமுங்கு லுங்குமே. 29

### இரங்கல்

#### இன்னிசை வெண்பா

குலுங்கும் முலைமேற் குளிர்பசலை கண்ணீர்
அலங்கும் அருநாணும் ஆய்வளையும் நீங்கும்

இலங்கிலைவே லோனை எறிகடற்செந் தூர்வாய்
வலங்கொளமுன் போமடவார் மாட்டு. 30

## சித்து

### அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்

மாட்டே மல்லேம் சித்துவித்தை
மகனே செந்திற் குகன்பால்நாம்
கேட்டே அறிந்த துனக்குரைப்பக்
கேளாய் இதுபொய் யல்லமெய்யே
வேட்டேம் பசியால் உண்ணஇன்று
விளங்குங் கஞ்சந் தனிலேபொன்
காட்டே மாகில் நீபடைத்த
கறியும் சோறும் வேண்டாவே. 31

## இரங்கல்

### கலிநிலைத்துறை

வேண்டின ரானால் ஊன்நகு வேலர் வியன்செந்தில்
ஆண்டகை யானார் மானனை யாரை அகல்வாரோ
கூண்டடல் வில்லிட் டம்பு சொரிந்தே கொலைவேடம்
பூண்டு நெருங்கிக் கொண்டல் முழங்கிப் பொழிநாளே. 32

## பனிக்காலம்

### வஞ்சித்தாழிசை

நாள்வனசம் முகங்கூம்ப, நீள்குளிர்செய் பனிக்காலம்
வேள்மருவு செந்திலினெங், கேள்வர்தமை நினையாவே.

மகன்றிலொடும் பெடைசேவல், புகன்றணையும் பனிக்காலம்
குகன்றனது செந்திலினெம், அகன்றவரை நினையாவே.

தொலைபவர்மெய் குனியமதன், சிலைகுனியும் பனிக்காலம்
மலைமகள்சேய் செந்திலினெந், தலைவர்தமை
நினையாவே. 33

### வெண்டாழிசை

நினைவும் ஒன்றே உரையும் ஒன்றே
பனவன் செந்தில் பணியா தொன்றே
வினையில் வீழ்ந்தவர் பால். 34

### கொச்சகக் கலிப்பா

பால்வெள்ளை நீற்றானும் பல்லுயிரும் படைத்தானும்
தூல்வெள்ளை மணிப்பணிலஞ் சுமந்ததிருக் கரத்தானும்
சால்பெள்ள லில்லாத தனிநெடுவேற் படையானும்
சேல்வெள்ளம் பரந்துலவுந் திருச்செந்தி லிடத்தானே. 35

### கட்டளைக் கலித்துறை

இடத்தானம் ஆறெழுத் தெண்ணக்கண் ணார்நின்
னிணையடிக்கும்
பிடத்தானம் ஆறும் பிரியா திருக்கப் பெருங்கருணைக்
கடற்றான் எனக்கருள் வாய்செந்தில் வாய்த்தென் கலைமுழுதும்
குடத்தான மாதவற் கோதிய ஞானக் குருபரனே. 36

### மடக்கு

### ஆசிரிய விருத்தம்

பரவு வாரி வளையீரே பரவு வாரி வளையீரே
படரு நாக வரும்பீரே படரு நாக வரும்பீரே
அரவப் புணரி மகரமே அரவப் புணரி மகரமே
அவலங்கழிய நந்தனமே அவலங் கழிய நந்தனமே
பிரமாத் தண்ட லைப்புடைத்தான் பிரமாத் தண்டலைப்
புடைத்தான்
பிறவா னுழைசெந் தினகரனே பிறவா னுழைசெந்
தினகரனே
உரவ ராலே நாவாயே உரவ ராலே நாவாயே
ஓதக் கடனீர்க் குருகீரே ஓதக் கடனீர்க் குருகீரே. 37

### தலைவியை வியத்தல்

### கொச்சகக் கலிப்பா

கீரமவை யோரிரண்டும் கிளவிதனக் கிணையாகும்
ஆரமவை யோரிரண்டும் அலர்முலைமேல் அணியாமால்
தாரமவை யோரிரண்டுந் தாமுடையான் செந்திலன்ன
கோரமவை யோரிரண்டும் கொண்டமதர் விழியார்க்கே. 38

### ஊசல்

### எண்சீர்க்கழி நெடிலடி ஆசிரியவிருத்தம்

ஆர்க்குமது கரமாட மாலை யாட
அணிகலையும் மேகலையும் இடையு மாட

வார்க்குவிமென் முலையுமணி வடமு மாட
　　மதிமுகமும் நுதல்வெயர்வும் நகையு மாடத்
தார்க்கமல அடிச்சிலம்பு புலம்பி யாடத்
　　தாழ்குழையும் நீள்விழியும் தழுவி யாடக்
கூர்க்கதிர்வேற் குகன்செந்தில் பாடி யாடிக்
　　கோகனகத் திருவனையீர் ஆடீ ரூசல். 39

**அறுசீர்க்கழி நெடிலடி ஆசிரியவிருத்தம்**

ஊச லாட்டெனப் போய்வரு பிறப்பெனும்
　　உடற்பொறைச் சிறுவீட்டில்
தேசி லாதபுல் லறிவுடை வாழ்க்கையின்
　　திறந்திறந் தொழிவேனோ
காசி லாநெடுங் கடலலை வாய்த்தடங்
　　கரைவரி வளையீன்ற
மாசி லாமணி யேய்செந்தில் மேவிய
　　வானவர் பெருமானே. 40

**களி**

**தாழிசை**

பெருமைமாநிலம் வலமதாய்வரு பீலிமாமயி லூர்தியார்
　　பிள்ளையார்வளர் செந்திலம்பதி யுள்ளமேதகு களியரேம்
பரைமனோன்மணி புவனிநாரணி பாலலோசனி சூலிசாம்
　　பவிசுகாசனி கௌரிபூசனை பண்ணும்உண்மகிழ்
　　　　வெளியதோ
மருவுகேழலும் மீனும்ஆமையும் மாயனுக்கு விருப்பமா
　　மானினைக்கை விடானுருத்திரன் மதியுநாடொறு
　　　　முயலுணும்
அரியவேள்வியி லந்தணாளர்கள் சுரபிகண்டிடின் முந்துவார்
　　ஐயனேசுர ராயினார்சுரை யருந்தவானவ ரியாருமே. 41

**வேற்றொலி வெண்டுறை**

யாருமிணை யடிவணங்கும் எம்பெருமான்
　　தும்பிமுகற் கிளையோன் செந்தில்
சூருடைய சுடர்வடிவேல் துணர்க்கடம்பந்
　　தொடைக்குமரன் தொழுகி லாதார்
விரிநீர் புடைசூழ் வியன்மே தினிமேல்

பரிவால் உறுநோய் பசியால் ஒசியா
வரைசீர் அயரா வருநாள் கழியா
உரியார் இகழா உணர்வோ டுயிர்போய்
எரிவாய் நிரையத் தினும்மூழ் குவரே. 42

கட்டளைக் கலித்துறை

மூழ்கா நிலைப்புது நீர்வேட்டு மீனம்முன் நீந்துபழந்
தாழ்கான யாறு துறந்திறந் தாங்குநின் றன்னையன்றி
வீழ்கா தலிற்றெய்வம் வேறெண்ணி யான்மெலி யாதுசெந்தில்
யாழ்கா முறுமொழி வள்ளிபங் காவுள் இரங்குவையே. 43

இரங்கல்

கலிநிலைத்துறை

இரங்கி மெய்கரிந் திருஞ்சிறை அடைந்திட ரிடைமூழ்கி
வருங்க ணீரொடு நாணொடு மறுகிய வரிவண்டீர்
கருங்கண் வார்முலைக் கௌரிசேய் செந்திலில் கார்காலம்
ஒருங்கு நும்மையும் ஒழிந்தன ரோஎமை ஒழிந்தாரே. 44

சிந்தியல் வெண்பா

ஒழிந்தன துன்பம் உவந்தன உள்ளம்
இழிந்தன நம்வினை யெல்லாம்-செழும்புனல்
சேந்தன் திருச்செந்தில் சேர்ந்து. 45

இரங்கல்

எழுசீர்ச் சந்தவிருத்தம்

சேர்ந்த போது குளிர்ந்தும் அன்பினர்
தீர்ந்த போது கனன்றும்வான்
ஊர்ந்து கந்தன் உகந்த செந்தில்
ஒதுங்கு வெண்பணி லங்கள்போல்
ஈர்ந்து பொங்கிருள் நுங்கி யெங்கணும்
எங்கள் அங்கம் நடுங்குமா(று)
ஆர்ந்த வெம்பனி சிந்தி முந்துற
அந்தி வந்தெழும் இந்துவே. 46

அறுசீர்ச் சந்தவிருத்தம்

இந்துவும் இரவியும் நின்றென உலவிய
இம்பரின் எழுவகையா

வந்துறு பிறவியின் நொந்துழல் உடல்தொறும்
மங்குதல் ஒழிவேனோ
செந்திலும் எனதிரு கண்களும் அடியவர்
சிந்தையும் அருமறைநூல்
அந்தமும் மகிழ்வொடு சந்ததம் உலவிய
அம்பிகை திருமகனே. 47

### கட்டளைக் கலித்துறை

மகவான் அரசும் அழிவற்ற யாக்கையும் மன்பதையும்
செகவாழ்வும் மற்றவை யாவும்பொய் யேதமிழ்ச்
செந்தில்புகுந்(து)
அகவா ரிசமலர்ந் தங்கைகள் கூப்பிநின் றாறுதிரு
முகவா னவனைப் பணிவதொன் றேமெய் முயல்பவர்க்கே. 48

### கலித்தாழிசை

முயல்பவர் முயற்சியின் முன்னம் யாவையும்
நயனுணர் செந்திலான் நல்குமே
நயனுணர் செந்திலான் நல்கா னாயின்
அயலொரு வானவர்கள் ஆக்குதற்கு வல்லவரும் அல்ல
ரன்றே. 49

### குறட்டாழிசை

அன்றல இன்றும் அஞரெய் துவர்வேள்
மன்றலஞ் செந்தூர் வாழ்த்தா தாரே. 50

### இரங்கல்

### அடிமறிமண்டில ஆசிரியப்பா

தாரார் கொல்லோ தம்குளிர் தாரே
வாரா ராயின் மான்அனை யீரே
பாரா ராலோ பனிபடு நாளே
சீரார் செவ்வேள் செந்தூ ரவரே. 51

### பாங்கி கூற்று

### வஞ்சிவிருத்தம்

அவரும் அங்குளர் அன்பினால்
இவரும் நெஞ்சம் இரங்கினார்

சிவன்ம கன்பயில் செந்தில்வாய்
எவரும் என்செய்வர் இன்பமே. 52

### எழுசீர் ஆசிரிய வண்ணவிருத்தம்

இன்பமும் துன்பமும் சங்கடங் கொண்டயர்ந்
தங்குமின் குஞ்சுழன் றிடுமாயத்
துன்பவெங் கும்பிஅங் கந்தவிர்ந் துன்பெருந்
தொண்டனென் றுய்ந்துளங் கழிவேனோ
புன்குருந் துந்திநன் சந்தனஞ் சிந்திமுன்
பொங்கிவெண் சங்கெறிந் தலைவீசித்
தன்பொருந் தம்பசும் பொன்சொரிந் தெங்கணும்
தந்ததென் செந்தில்எம் பெருமானே. 53

### கார்கண்டு பாகனொடு கழறல்

#### எழுசீர்ச் சந்தவிருத்தம்

பெருமான் மதிபொதி சடையா னுடனுறை
பிணைமான் உதவிய செந்தூரன்
கருமா மயிலென உறைவாய் சிதறிய
கணமா மழைமுகில் கண்டாலே
ஒருமான் விழிவழி புனலோ உடல்வழி
உயிரோ விடுகுவள் அந்தோயான்
வருமா றறிகிலன் இனிநீ விரைவுடன்
வலவா கடவுதி வன்தேரே. 54

### சிந்தடி வஞ்சிப்பா

தேராதவன் வழிமறுகிய திரள்சோலை
வாரார்மல ரிடையொழுகிய மதுமாரி
நீரார்வயல் செந்தூரனை நினையாதார்- யாரேனும்,
எழுவகைப் பிறப்பினும் இயங்கி
அழிகுவர் கறங்கென அவலநனி உழந்தே. 55

### வண்டு

#### கட்டளைக் கலித்துறை

உழவாத மம்மரும் உன்னாத நெஞ்சும் உறாப்பசப்பும்
இழவாத நாணும்எங் குண்டுவண் டீர்இயல் சேர்குறிஞ்சிக்

கிழவா னவனை இளையோன் எனுந்தன்மை கேட்கிலராய்த்
தொழஆ தரத்தொடு செந்தில்சென் றேகண்ட
தோகையர்க்கே. 56

### நேரிசை வெண்பா

தோகைபுற மாக்குந் துணைத்தாள் அருவினையேன்
ஓகை யகமாக்க ஒண்ணாதோ-பூகமலி
தேங்கடம்பாய் செந்தில் திருநகரில் வீற்றிருக்கும்
பூங்கடம்பா நீதான் புகல். 57

### இடைச்சியார்

#### கலிமுரி

புகலும் வாய்மொழிப் பால்விலை கூறுவார்
போல்நி லாநகை பூத்தசெவ் வாய்மலர்ந்(து)
அகலும் வாண்மறு கெல்லாம் மறுகச்சென்
றாவின் பால்விலை யாக்கும் இடைச்சியார்
தகலு மாகும் குடமுலைப் பால்விலை
தனைய லால்சிவன் சந்ததி செந்தில்வாய்
இகலும் வாணெடுங் கண்ணொடு நெஞ்சையும்
இவர்விற் றால்இனி யார்விலை கொள்வரே. 58

### தலைவி கூற்று

#### அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்

கொள்வா ரன்றோ செவிப்புலத்தெங்
குலத்தார் வலித்த கொடுங்கடிப்பின்
வள்வார் முரசங் கறங்கோதை
மணம்வேட் டயரும் மனைமுன்றில்
கள்வார் கடப்பந் தொடைச்செந்திற்
கந்தன் வேல்போல் காய்கணைபாய்
புள்வார் பொருவெங் களத்தோதை
கேட்டே அகன்ற போரேறே. 59

#### பதினான்குசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

ஏறிரும் பசலைக் கலவைமான் மதச்சே
றெழுதிய வழிமதக் கலுழி

இரைத்தெறி கரடத் திரள்திணி புழைக்கை
இகற்கரி மருப்புறழ் முலைப்பூண்
நாறிருங் கூந்தல் ஏந்திழை யவர்பால்
நலந்தனக் கலந்துழன் றவமே
நாள்கழித் தவலப் படுகுழி கிடக்கும்
நான்கதி காணுமா றுளதோ
ஆறெழுத் துளங்கொண் டைம்புல னடக்கி
அவாஅறுத் தொருநெறி துருவி
அகங்குழைந் துருகிப் பருகுமன் பினருக்
கானந்த ஞானவா ரிதியே
பாறெழுந் திரைக்குந் திரைப்பசுங் குருதிப்
பருதியஞ் சுடரிலை நெடுவேற்
பண்ணவா விரைப்பூந் தண்நறா வயல்பாய்
பைந்தமிழ்ச் செந்தில்வா னவனே. 60

### அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

வானமும் புவியு மாய மாறிலைம் பூதம் ஓதில்
ஊனுடம் பாதல் நாயேன் ஊழ்வினைப் பகுதி யன்றோ
கூனிளம் பிறைதோய் நெற்றிக் கொடிமணி மதில்சூழ் செந்தில்
தேனினம் தொகுதார் மல்கு செஞ்சுடர் வேலி னானே. 61

### கார்கண்டு பாகனொடு கழறல்

### இணைக்குறள் ஆசிரியப்பா

வேலிற் கிளரொளி மின்னொடுந் துவன்றிச்
சூலிற் கடலென முழங்கி மாலிற் கருகிக்
காலிற் கடுவிசைத் தெறிந்து
மேலிற் பரந்து
பாலிற் பஃறுளி சிதறிக் கோலிற் பொழிந்து
குனிசிலை வளைத்தன வாலோ
ஆலிற் சிறந்தோன் மைந்தன்
சேலிற் றிகழ்வயற் செந்திலிற் கொண்மூ
உயங்கு தேரினும் முந்துறு மாலோ
சால்பிற் கேள்விப் பாக
தகவினி என்னா மாலோ
நூலிற் சிறந்த நுண்ணிடை தனக்கே. 62

### இரங்கல்

#### அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

தனக்கோர் உவமையில்லாத
தந்திக் கிளையான் செந்திலும்என்
மனக்கோ யிலுங்கொண் டவனிணைத்தாள்
வணங்கா தவரின் இணங்காராய்
எனக்கோர் உறுதி இயம்பாமல்
இதண்காள் ஏனல் காள்கிளிகாள்
புனக்கோ கிலங்காள் எங்கொளித்துப்
போனார் இருந்தமா னாரே. 63

### தழை

#### கலிநிலைத்துறை

மானார் விழிமான் மகள்கா தலனார் வாழ்செந்தூர்
ஊனார் வடிவேல் உரவோய் இனிவே றுரையுண்டோ
வானார் விழையுந் தழையோ தந்தாய் அம்மாநங்
கானார் குழலாள் உயிர்தந் தனைநீ கண்டாயே. 64

### மறம்

#### அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

கண்டாலும் மனம்பதைக்குங் கடுங்கூற்று
நடுங்கியெமைக் கடல்சூழ் செந்தில்
வண்டாலும் துணர்க்கடம்பன் மலர்ச்சரணம்
மறவாத மறவ ரேயாம்
பெண்டால்இன் றுளமயங்கி உயிரைவிடத்
தூதுவிடும் பெருமான் றன்பால்
தொண்டால்எங் களுக்குரைக்க வருந்தூத
அவற்கியம தூதன் நீயே. 65

### தலைவனை வேண்டல்

#### நேரிசை வெண்பா

தூதுசொல வேண்டிச் சுரும்பினையும் மானினையும்
மாதுசெல விட்டாலும் மாட்டாவால்-ஓதுசெந்திற்
காங்கையா ஆறிரண்டு கைத்தலத்தாய் நின்றன்னை
வேங்கையாம் என்றே வெறுத்து. 66

## இரங்கல்

### கட்டளைக் கலித்துறை

வெறுப்பார் அவர்என்னை மின்னனை யாரெனில் வெம்பிழையும்
பொறுப்பார் மறந்தும் புறக்கணி யார்புணர்ந் தாவிதந்துள்
நிறுப்பார் புலவியில் நீடல்செய் யார்நினை வார்வினைகள்
அறுப்பார் திருச்செந்தில் வாய்இவ ரார்வந் தலைப்பவரே. 67

## எழுதரிதென்ன ஏந்தலை விலக்கல்

### கலித்தாழிசை

அலைவாய்வளம் நந்தூர்இள நிலவாய்விரி செந்தூர்
அடல்நாட்டிய கதிர்வேலவர் குடநாட்டன மனையாள்
முலைதாமெழு துவையேல்அவை குழையாமுழு மதிபோல்
முகம்நேரெழு துவையேல்நகை புரியாதிரு புருவம்
சிலைபோலெழு துவையேல்அவை குனியாஅடி தளிர்போல்
திடமாய்எழு துவையேல்அவை நடவாகிளி துவர்வாய்
இலவாயெழு துவையேல்அது கலவாநிறை யமுதம்
எங்கேஎழு துவைநீகிழி செங்கேழ்அயி லவனே. 68

## தலைவியை ஆற்றுதல்

### நேரிசை வெண்பா

அயில்வேற்கண் நல்லாய் அஞர்கூர்ந்தலமந்(து)
உயிர்வேட்கை வாட்டம் ஒழிவாய்-பயிலுமதன்
பூங்கைக் கடம்புண்டு போனால் தரச்செந்தில்
வேங்கைக் கடம்புண்டு மேல். 69

## விலக்கல்

### ஆசிரியத்துறை

மேல்வா னவர்தம் சிறையறுத் துயர்ந்த விளங்கிலை
நெடுவேல் துளங்கெழிற் குமரன் வியன்செந்தில்
சூல்வாய்ப் பணிலம் கறங்கும் அலைவாய்த் துறைவா
இனிஎம் பிறைவாள் நுதலின் றுணர்த்தார்
அகலம் புணர்ப்போ டேகின்
பால்வாய்க் குழவி மறிமான் மறுகும் பகுவாய்ப்
புலியின் தொகைவால் புடைப்பப் பணைக்கோட்டு
நால்வாய் இரையா வேட்டைபா யரவ நவிலும்

பாலைத் தெனலாற் கவலை நளிர்நீர்ப் பொருநைத்
தெளிநீள் பழன நன்னாட் டகமன்றே. 70

நேரிசை வெண்பா

அகமன் றலங்கமலத் தாள்வினையேன் அன்பாற்
புகமன் றகுமகிழ்ச்சி பூத்தான்-தகஎன்றூழ்
உந்தினக ரம்போல் ஒளிகொண்ட வேற்படையோன்
செந்தினக ரம்போற் சிறந்து. 71

பிரியேனென்றல்

கட்டளைக் கலித்துறை

சிறந்தார் பரவுந் திருச்செந்தி லார்சிவன் தீநுதற்கட்
பிறந்தார் இணையடி பேணலர் போலப் பணியவிழ்தார்
புறந்தாழ் குழலி புலம்பேல் உனையைம் பொறிகலங்கி
இறந்தாவி யான்படி னும்பிரி யேன்பிறப் பேழினுமே. 72

எழுசீர் இரட்டை ஆசிரிய விருத்தம்

ஏழுயர் கடாயானை மேல்வெண் குடைக்கீழ்
இணைக்கவரி எறிய இருபால்
இன்னிய முழங்கமட வன்னங் குழீஇயனைய
ஏழையர் மருங்கு சூழக்
காழகில் நறுங்குற டுரிஞ்சுபூந் தேய்வைகடி
கமழ்தடவும் வலையம் நிமிர்தோட்
கண்ணிக் கடம்பசைய வேல்கொண்டு நீவரக்
கண்கொண் டுளங்கு ளிர்வனோ
ஆழிமுரி திரைமுகடு கிழியஎழும் எழுபுரவி
அருணமிசை கொடிநெ டுந்தேர்
ஆயிரங் கதிர்இரவி பாயிரும் பகலும்இருள்
அடையமிடை சினைவி டுதடங்
கோழிலை நறும்புன்னை துன்னுநுண் டாதுபடு
குவிமுகை மருட்டு முடவுக்
குடவளை மணித்தொகுதி நிலவுகாய் செந்தில்வரு
குலவமரர் தம்பி ரானே. 73

ஆசிரியத்தாழிசை

தம்பிரான் செந்திலிற் சரவணத் துதித்தோன்

அம்பொனார் கழலிணை அன்புறப் பணிந்தோர்
உம்பராய் மன்னுவர் உயர்நிலை யடைந்தே. 74

### மாலையிரத்தல்

#### கட்டளைக் கலித்துறை

அடைக்கலந் தான்இவள் ஆனாலும்
மார்பத் தணிகடம்பந்
தொடைகலந் தாருயிர் சோர்தல்நன்
றோதொல் அவுணர்வெம்போர்
இடைக்கலந் தாவிப் பலியூன்
உடனுண் டெழுங்கதிர்வேற்
படைக்கலந் தாங்கிய கையாய்தென்
செந்திற் பதிக்கந்தனே. 75

### இரங்கல்

#### நேரிசை வெண்பா

கந்தமல ராலக் கமழ்கூந்தல் ஏந்திழைமார்
தந்தமல ராலத் தளருமோ-வந்தவினை
போக்குமரன் சேயொளிக்கும் பூம்புனற்செந் தூரமர்ந்த
கோக்குமரன் பூந்தார் குறித்து. 76

### இதுவுமது

#### ஆசிரியத்துறை

குறுமுனிவற் கறமுரைத்த குமரன்மா
செந்திலின்எங் கொலைவில் வேடர்
சிறுமியைம ணம்புணர்ந்து தீர்ந்திடினும்
அன்பகத்தில் தீரா ரன்றே
சிறுமியைம ணம்புணர்ந் தன்பிற்றீர்ந் தாராயின்
கறிவளர் வரைநாடற் கென்னாம்என்
னாம்உணர்ந்த கல்வி யாறே. 77

#### நேரிசை வெண்பா

ஆறுமுக மேன்கண்கள் ஆறிரண்டு மேன்அடியேற்(கு)
ஏறு வினையொழிப்ப தெல்லாமோ-நீறணிவான்
கன்றே திருச்செந்திற் கற்பகமே நின்னருட்கண்
ஒன்றே அமையாதோ ஓது. 78

## இரங்கல்

### அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

ஓது வார்கொலோ உயிருடற் பொறைமறித்
துதவுமா றுயர்ந்தோங்கி
மோது வார்இள முகிழ்முலை வனிதையர்
முடிந்திறந் திடுங்காலைக்
காது வார்மணிக் கனங்குழை உழைமகள்
காதலர் திருச்செந்தில்
போது வார்குழ லாய்கல்வி வேட்டெமைப்
புல்லுவிட் டகன்றாரே. 79

## இதுவுமது

### கலிவிருத்தம்

அகலுறார் கனவெலாம் நனவெ லாந்தொடப்
புகலுறார் உளங்குடி புகுந்த காதலர்
இகலுறா வேள்செந்தில் இணங்க லாரின்யான்
உகலுறா தாவிநின் றூச லாடவே. 80

## சுனையாடல் கூறித் தோழி நகுதல்

### கலிவிருத்தம்

ஆடு பூஞ்சுனை சந்தணிந் தாய்மலர்
சூடி வாய்விளர்ப் புந்தரின் தோகையாய்
சேடன் வேற்படைச் சேவகன் செந்திலின்
நாடி யானுஞ்சென் றாடுவன் நானமே. 81

## தலைவன்கூற்று: இரங்கல்

### கலிவிருத்தம்

நானிலமும் எண்டிசையும் நன்கிசையும் நாளார்
தேனகு கடம்பருயர் செந்தில்நகர் போல்வார்
மானகு கருங்கணிணை வஞ்சவிட மானால்
யானுமுயி ரும்புவியும் என்கொலுயு மாறே. 82

### தோழிகூற்று: இரங்கல்

#### அறுசீர்ச் சந்தவிருத்தம்

மாறு படுஞ்சூர் ஓடமுனிந்தார் வானுயர் செந்தூர்வாய்
ஊறு படும்பே ராசையின் நம்பால் ஊரர் இரங்காரேல்
நீறு படும்பூண் ஆரமும் ஒன்றோ நேரிழை கண்சோர்நீர்
ஆறு படுங்கால் யாவர் அறிந்தார் ஆவி படும்பாடே. 83

#### கட்டளைக் கலித்துறை

பாடாத நாவும் பணியாத சென்னியும் பாவித்தன்பாய்
நாடாத உள்ளமும் நான்படைத் தால்நர கேழுஞ்சென்று
கூடா துயர்கதி கூடுவ னோகுன் றெறிந்த வைவேல்
சேடார் மதிற்செந்தி லாயென் கொலோநின்
திருவருளே. 84

### தலைவிகூற்று

#### நேரிசை வெண்பா

அருட்கடல்வாழ் செந்தினகர் ஆய்வளைக்கை நல்லாய்
பொருட்கடல்வேல் மன்னரேன் போனார்-மருட்குவளைக்
கண்பொழிய முத்தம் கனகம் முலைபொழிய
நண்பொழிய நாமெலியும் நாள். 85

### பாங்கி கூற்று

#### கலிப்பா

நாணளினந் தளையவிழ்ந்த நறுமலர்ப்பொற் பொகுட்டகட்டுக்
கோணளினந் துறங்குவயற் குமரன்மா செந்திலின்வாய்ப்
பாணளினந் தலரளக பாரமுகில் சோரமணிப்
பூணளினந் தனித்தாவி புல்லாது நில்லாதே. 86

#### நேரிசை வெண்பா

நில்லாத நீயும் நிலைநின்ற என்றனக்குப்
பொல்லா தனவாம் புலனடக்கிப்-பல்பகலுங்
கார்த்திகையான் செந்திற் கடிநகரைக் கண்ணாரப்
பார்த்திகையால் நெஞ்சே பணி. 87

### கலிநிலைத்துறை

பணிப்பகை மயிலும் சேவற் பதாகையும் பன்னிரண்டு
மணிக்குழை களுமோர் ஆறு வதனமும் வாகைவேலும்
தணிப்பசுங் கடப்பந் தாரும் தண்டையந் தாளுநாளுங்
கணிப்பருஞ் செந்தி லாயென் கருத்தைவிட் டகன்றிடாவே. 88

## இரங்கல்

### கட்டளைக் கலித்துறை

அகன்றால் அகலும் புணர்ந்தாற் புணருமென் ஆவியம்மா
குகன்தா தவிழ்பொழிற் செந்திலின் வாய்க்குளிர் மாமதிபோல்
முகன்தாழ் கனங்குழை முத்தணி மூரல் முகிழ்முலைமான்
மகன்றான் எழுதிய ஓவியம் போலும் மயிலினையே. 89

## தலைவியை வியத்தல்

### எழுசீர்ச் சந்தவிருத்தம்

மயில்கடவி அண்டகோள முகடதிர அம்பொன்மேரு
வரைபிதிர அங்கை நீடுகூர்
அயில்சுழல உம்பர்வாழ உலகைவலம் வந்தசோதி
அருள்குமரர் செந்தில் போலியார்
குயின்மொழிக ளிந்தபாகு மடமயில்வி ளங்குசாயல்
கொடியிடைது வண்டு வாடுநூல்
இயலுநுதல் இந்த்ரசாபம் இணைவிழிகள் இந்த்ரநீலம்
இலவிதழும் இந்த்ர கோபமே. 90

## கார்கண்டிரங்கல்

### அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

கோபம் எழுந்தன மேகம் முழங்கின
கோடல் நிரம்பினநீள்
சாபம் வளைந்தது தோகை பரந்தன
தாரவர் வந்திலரால்
நீப மணங்கமழ் மார்பினர் செந்திலின்
நேரிழை நெஞ்சிடையே
சோப மலிந்தது ஆவி தளர்ந்தது
சோர்வன கண்துளியே. 91

### கட்டளைக் கலித்துறை

துளியாது கண்புனல் சோராது மெய்துதி யாதுசொல்நாக்
களியாது நெஞ்சகம் கைகுவி யாதொருக் காலுமறை
தெளியாத வானவர் சேனா பதியைத்தென் செந்திலின்வாய்
வெளியாய் எதிர்ந்து தொழார்நர கேழினும் வீழ்பவர்க்கே. 92

### பாங்கி ஆற்றுதல்

### குறள் வெண்பா

வீழ்வார் எழார்பொருட்கு விட்டுநமை வெற்பயிலாற்
போழ்வார்செந் தூரடையார் போல். 93

### பிச்சியார்

### அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

போலிதனக் கென்றுமிலாப் புண்ணியன்கண்
ணுதற்கடவுள் புதல்வன் கோலப்
பீலிமயி லியற்செந்தில் உலைவேற்கைக்
கொலைவேற்கட் பிச்சி யாரே
நூலிடையைக் குறைத்துமணிப் பணைமுலையைப்
பெருக்கிஎன்றும் நோயே செய்தீர்
நீலமுகில் ஓதிகுறைத் துயிர்குறைப்ப
தோஉமக்கு நீதி தானே. 94

### தலைவி பாங்கிக்குரைத்தல்

### கலிவெண்பா

தானக் குனிகோட்டுத் தந்தியினை யும்விலக்கிக்
கானக் குடிஞைக் கலுழியினிற் காத்தளித்துத்
தேனக்க செச்சையந்தார்ச் செந்திலார்க் கன்பரினென்
ஊனெக் குருக உயிரிற் கலந்தார்க்கு
நானக் கமழ்கூந்தல் நன்னுதலே வாரலையென்(று)
யானுற் றுரைப்பதெவ்வா றின்று. 95

### கலிவெண்பா

இன்றுலகில் நல்குரவால் ஈடுபடுந் தன்மையினால்
அன்றும் அருவினையேன் ஆன்றஅறஞ் செய்யகிலேன்
என்றும் பிறப்பினுமிப் பெற்றியே முற்றும்எனைக்
கன்றும் மனத்தாற் கவலுழந்து நில்லாது

குன்றெறிந்த செந்திற் குழகாநின் பூங்கழற்கால்
சென்றுதொழு மாறன்பு செய். 96

### தாய் கூற்று

#### கட்டளைக் கலித்துறை

செய்யவ னேயெனும் செந்திலெந்
தாயெனும் செவ்வடிவேற்
கையவ னேயெனும் கங்கைமைந்
தாவெனும் கண்துளிநீர்
பெய்யவ நேகந் தரமெழும்
போய்விழும் பிள்ளைமதி
வெய்யவ னேயெனும் வேறறி
யாளென் விளங்கிழையே. 97

### தலைவி கூற்று

#### அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

இழைக்கும் கூடலும் என்னிரு கண்களின்
இமைகளும் இரவெல்லாம்
உழைக்குங் கூடல மந்துதென் செந்திலாய்
ஒருகணங் கூடாவால்
மழைக்கண் அம்பிகை மலர்க்கரங் கோட்டியே
வார்முலை பீரோட
அழைக்க நின்றுகூத் தாடிய மணிச்சிலம்
பலம்புசே வடியானே. 98

#### கொச்சகக் கலிப்பா

அடியாரின் உளமுருகன் பறியாத என்புன்சொல்
முடியாத நக்கீரர் முருகாற்றுப் படையாமோ
தொடியார்பன் னிரண்டுதடந் தோளார்க்குத் திருச்செந்தில்
வடிவாய்வள் ளுகிர்ச்சேவல் வலனுயர்த்த கொடியார்க்கே. 99

#### நேரிசை வெண்பா

ஆர்க்குங் களிவண் டறையும் பொழிற்றிருச்செந்
தூர்க்கன் புடனீசென் றுள்ளமே-கூர்க்கும்
எழுமையினும் நீபிறப்பில் எய்தாமல் சேயைத்
தொழுமயிலும் வேலுமெனச் சொல். 100

### திருச்செந்திற் கலம்பகம் முற்றிற்று

உ

# மயிலாசலக் கலம்பகம்

## வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள்

### பாயிரம்

#### கொச்சகம்

அன்றுசிவப் பிரகாச னரியதுதி தனக்கெய்தச்
சென்றுபகர்ந் தமைநாடிச் சிவஞான பாலையன்
குன்றுளுயர் மயிலமலைக் குமரனுக்குக் கலம்பகமொன்
றின்றுசொலத் திருப்புகழோ னிடத்திலினி திசைத்தானே. 1

#### நேரிசை வெண்பா

ஆட்டுப்பால் வாய்வை யடக்கி யடுத்துவந்து
சீட்டுக்கு ளாடலொன்று செய்துபல—பாட்டுடைய
பாலையனை யேவியென்னைப் பற்றிவலி தாண்டுகொண்டான்
சோலை மிகுமயிலத் தோன். 2

#### எண்சீர் வண்ணவிருத்தம்

தனதன தத்தன தத்தத் தனந்தனனா

சயிலமு ழுக்கவும் வெட்கச் சிறந்தரனார்
தமதுரு வொத்தரு விப்பொற் பிசைந்துளதா
மயிலம லைக்குக னுக்குக் கலம்பகநூல்
வனைகுவ தற்குயர் சொற்கட் டுவந்தருள்வீர்
வெயிலவ னுற்றவ யிற்றுச் செழுங்களிறே
வெளிறும லர்க்குளி ருக்கைக் கிசைந்தவளே
யயின்மயில் குக்குட முற்செப் பநின்றனவே
யடியர்ப தக்கம லத்துற் றநுண்பொடியே. 3

## நூல்

### மயங்கிசைக் கொச்சகக் கலிப்பா

தரவு

திருமகள்சேர் நெடுமாயன் செங்கமலக் கண்கடரு
மிருமடவார்க் கிடைநீடு மெழிற்பவள மலைபோல்வாய்
பரிதிமதி யிசைந்தாங்கு பகர்முடியு முகமொன்றும்
விரிகருணை விழிமூன்றும் விளங்குகுழைச் செவியிரண்டும்
வண்பனுவற் பைங்கிள்ளை மணநுகரு மணிநாசிச்
சண்பகமுஞ் சிறுமுறுவற் றரளநகைக் கனிவாயும்
பொற்பணியும் பன்மலரும் பொலிந்தகழுத் தொடுமார்பும்
விற்படுமின் னெனக்காணும் வென்றிமேல் வியன்சீரு
மடல்வயிரந் திரிசூல மபயம்வர தந்துலங்குங்
கடகநெடுங் கரந்தாங்குங் கவின்றோள்க ளொருநான்குங்
குஞ்சிமணிச் செஞ்சதங்கைக் கொத்தரையுங் கோசிகமும்
விஞ்சியபே ரானந்தம் விளைத்தருளுந் துணைத்தாளுங்
கொண்டுமயி லாசலத்தின் குவட்டிலுறுங் கோயிலிடை
மண்டுசடைச் சிவஞானி வலத்தமர வாழ்கின்றாய்
மயிலேறித் தகரேறி மழவெள்ளைக் களிறேறிக்
குயில்போலு முமையாள்கண் குளிரவருங் குருந்தேநீ.

அராகம்

அரன்வழிபடமுன மருணலமருளினை
முரகரியமரர்முன் மொழிபுகழ்மருவினை
யயனமுதலமர வறமொடுகறுவினை
புயலிவர்மகபதி புனைமுடியுதவினை

தரவு

அன்பொடுமுன் றுதிகூறி யாறெழுத்தா லருச்சித்துத்
தென்பொதியை மிசைவாழ்வான் சிறப்பனைத்தும்
பெறச்செய்தாய்
நின்னாமத் தொன்றினையே நிதங்கூறச் சலியாத
மின்னாளன் றிழந்தகரம் விரைந்துதவி மீண்டுவந்தாய்
நற்கீரன் சிறைநீக்கி நவிலரிய தமிழணிவான்
கற்கீறி யலகையையுங் கடியவடி வேல்விடுத்தாய்
முற்றுசுவைக் கவிப்பொய்யா மொழிப்புலவன் களிகூரப்

பற்றுமொரு கோலொடுமுன் பாலையின்முட் டையுமானாய்
தென்னருணைக் கோபுரத்திற் றிகழொருவன் றனக்காக
முன்னமொரு தூணிடத்தின் முளைப்பதற்கு மிசைவுற்றாய்
போரிநகர் முனிவன்முதற் புகலுமவர் புகல்கின்ற
சீரியவ ரளவில்லார் சிந்தித்த பேறளித்தாய்

நாற்சீர் ஓரடி அம்போதரங்கம்

ஏன மருப்பற மோதி வதைத்தனை
யேழிசை யிற்கவி கோடி தொடுத்தனை
மானவிர் கட்குரி யாரை மயக்கினை
மாசறு சிட்டிவி னோத மியக்கினை

முச்சீர் ஓரடி அம்போதரங்கம்

மாவடி யோடற வென்றனை
மால்வரை யாவினு நின்றனை
தாமத ரோர்வரி தாயினை
சாரணர் வாழ்வற மேயினை

இருசீர் ஓரடி அம்போதரங்கம்

சேவல்பொ றுத்தனை
பாவம றுத்தனை
சிந்தையு ளூற்றனை
விந்தைகள் பெற்றனை

தனிச்சொல்

ஆதலில்

ஆசிரியச் சுரிதகம்

கடலிற் பொருநையிற் கனலிற் றமியேன்
றிடமுடன் விடுத்த செழுந்தமிழ்ப் பனுவ
லனைத்து மீண்டொ ளிர்தர வளித்துமுன் னின்று
தினைத்துணைத் துயருஞ் சேரா தோரீஇத்
திருமலைக் குவட்டிற் செய்தபே ராட
லுருமலைக் கோயிலி லுரைத்த மாற்ற
மாதிய பிறவு மகிலத் தோரும்
பேதியா வண்ணம் பேசப் புரிந்து
கைச்சிலைக் குறவர் கவின்றரு சாரற்

பச்சிளஞ் சோலைப் பரண்மீ திருந்தாண்
மதலையென் றியாவரும் வழுத்த வைத்துப்
பதநிழற் றருவாய் பரமென வந்தேன்
விதிமுறை தவறி வெள்ளிலை மென்று
கதிர்மணி வடமுலை கருத்துட் டோன்றப்
பழைய பாவொன்று பகர்வான் றனையும்
விழைதரு கருணை மிகையாற் புரந்தாய்
நின்றிரு வுள்ளமெந் நேரத்
தென்றிகைப் பொழிக்கு மெனவிரங் கினனே. 4

### நேரிசை வெண்பா

இரங்குந் திருவுள்ளத் தேற்றமுற்ற செவ்வேள்
வரங்களெல்லா நல்கு மலைகேள்—குரங்கனைய
பாழ்மனமே பல்கோடி பத்தர் பரிசுபெற்று
வாழ்மயிலத் துள்ள மலை. 5

### கட்டளைக் கலித்துறை

மலைத்தெய்வ மேபர மென்றொப்பி டாச்சில மானிடருஞ்
சிலைத்தெய்வம் வைத்துப் பலவாறு நாமங்கள் செப்பலென்னோ
நிலைத்தெய்வம் வாழு மயிலா சலத்தி னிறைபுகழ்நேர்
கலைத்தெய்வ மான பிடியேவெண் டாமரைக் கன்னிகையே. 6

### கலிப்பா

கன்னிக் குறத்தி கணவன் மயிலவெற்பை
யுன்னிக் கருத்தோ டுடலுருகப் போற்றிசைக்கு
மென்னிட்ட மின்னதென யாரறிவா ரென்றனக்கு
மின்னிற் றிகழ்ந்தகதிர் வேலுமயி லுந்துணையே. 7

### கலிநிலைத்துறை

மயிலா சலத்துற்ற குமரேசனுக் கான வழிபாடதாற்
கயிலாய மொடுமேரு வரைமீது வைகுங் கனற்கண்ணுதல்
பயிலாக மத்தைப் பழிக்கின்ற தீயோர்கள் பகைமிஞ்சுநா
னொயிலாரு மடவார்த மக்கிச்சை கொடுவாட லொவ்வாததே. 8

### கட்டளைக் கலிப்பா

வாதநூற்பிணக் காளர்கண்காணரு
மலயமால்வரை மாமுனி தன்னருட்

போதவாரியின் மூழ்கிட நாடுவேன்
புந்திநொந்துபு லம்பிட லாகுமோ
வேதநான்முகக் கள்வனைக்குட்டிய
வீறுகொண்டொளிர் மெஞ்ஞான தேசிகா
மாதமோர்திரு நாள்வருஞ்சீர்திகழ்
மயிலமால்வரை வாழ்முரு கையனே. 9

### கலிவிருத்தம்

ஐயமின்றிமுன் னறைந்தவா சகப்படி யருளி
மெய்யர்தம்புடை யூடுற விடுக்குநா ளுளதோ
வையம்வானொடு துதிசெயு மயிலமா மலையின்
செய்யபொற்கு வடாமெனத் திகழ்தருஞ் சேயே. 10

### அறுசீர் விருத்தம்

சேய நாண்மலர் கொண்டுன்னைத் தினந்தின மருச்சித் தேத்துந்
தூயவர் கமலப் பூந்தாட் டுகளணி தலும்வீண் போமோ
மாயவன் மருகா விண்ணோர் மகள்புணர் கணவா வள்ளி
நாயகா மயில வெற்பி னடஞ்செயு முருக வேளே. 11

### எழுசீர் விருத்தம்

முருக ராமலர்க் கடம்பணி புயத்தனை
மூவி ருமுகத் தானை
யருகர் பாழ்மதத் திமிரமிவ் வுலகைவிட்
டகல வந்தருள் வானைப்
பெருக சீர்த்திரு மயிலமா மலைமிசை
பேணி யபெரி யோர்தங்
கருணை ஞானமுஞ் சித்தியு முணர்பவர்
கால னுக்கஞ் சாரே. 12

### எண்சீர் விருத்தம்

அஞ்சலளித் தாண்டபெருங் கருணைச் சீரு
மருணகிரி தானெனநீ யறைந்த சொல்லும்
வஞ்சகமென் றிகழ்வதற்கு மஞ்சு கின்றேன்
வருத்தமினிச் சகிப்பதற்கும் வல்லே னல்லே
னெஞ்சகத்தன் றாடியதை மறக்க மாட்டே
னெடுமயிலக் குவட்டினின்முன் னின்றேன் கண்பார்

பஞ்சவன்னச் சிகியூரும் பவள மேனிப்
பண்ணவனே யெண்ணரிய பான்மை யானே. 13

## இரட்டை ஆசிரிய விருத்தம்

ஆனமட்டிற் பணிபுரிந் துனதுமெய் யன்ப
ரவையினிற் புகவி ரும்பா
தணிநகை மடந்தையர் முலைத்துணை நினைத்துருகி
யலமருந் தமிய னேனை
யீனருக்கெ மனனைய வீரர்முத லோர்களு
மிறைஞ்சும் பதத்தில் வைத்துன்
னெழில்வதன நிரைகுலவு மறுவகை நெறித்தலைவ
னென்றொளி ரவுஞ்செய் வையோ
கானவக் குடிலிலொரு கருகூல மெனவந்த
கன்னிக் கிசைந்த கணவா
கனகநக ராதிபன் வளர்த்தபிடி கண்டுளங்
களிகூர வருகந் தனே
வானளக் குங்குவடு தொறுமிழியு மருவிபல
மாலிகை யெனக்கு லாவு
மயிலாச லத்தில்வரு புலவோர் துதிக்குமொரு
வடிவேல் பிடித்த குருவே. 14

## புயவகுப்பு

தனன தான தத்ததன - தானத்தனந்தன

குருப ராவெ னத்தினமு முருகி நாடு மெய்ப்புலவர்
கொணர்வ தான முத்தமிழை நேசித்துயர்ந்தன
குரவ நீப முற்பகரு மளவி லாம லர்த்தொகுதி
குலவு மாலி கைத்திரள்க்ள் சூடிப்பொலிந்தன
குறைவு றாவொ ளிப்பரிதி யனைய தோள ணிப்பகுதி
கொடுபல் பூணெ டுத்தொருமு நூலுற்றிலங்கின
குலிச மூவி லைப்படைவில் கணைவை வேன்மு தற்பலர்சொல்
குருதி யூனு டைக்கருவி சேரச்சுமந்தன
குகுகு கூவெ னத்தனது சிறகை மோத டற்பறவை
குளறி டாமொ ழிக்கிளியொ டேறிப்பிறங்கின
குளிரும் வாவி யிற்கவுரி முலையி னோடு கிர்த்திகையர்
குயமு மார்வ முற்றமுத மீயப்பிசைந்தன
கொடிய ராவி னைப்பகலை யுலகின் மாறி வைத்தமரர்

குழுவெ லாமெ திர்த்தமர்செய் தோடக்கவின்றன
குறளை நார தத்தவசி முயலும் வேள்வி யிற்றகரொர்
குதிரை யாகி டக்கசையி னால்விட்டுவந்தன
குடைய தாமெ னக்கலப நிழல்கொண் மாம யிற்கடவல்
குணமெ னாநி னைப்பவர்க ளூடுற்றவிர்ந்தன
குமிழி தோய்ம தத்தயில மொழுகும் வார ணக்களிறு
குதறி னாலெ ழிற்றலையின் மோதிச்சிவந்தன
குவளை நேர்வி ழிச்சசிமின் மருவு வான்வ ளர்த்துதவு
குமரி பூண்மு லைக்களப மாரக்கமழ்ந்தன
கொடியி னூடு வைத்திறுக முடியும் வார்த ழைக்கலைகொள்
குறமி னாள ணிப்பரண்மு னேகிக்குவிந்தன
கொலைசெய் வாள்வி ழிச்சிறிய மகளிர் பார்வை மெய்த்தவர்கள்
குலைவு றாம னக்கவன மீறப்பொருந்தின
கொடுமை யேமி கப்புரியு மவர்கள் வேர றக்கறுவு
குறியு ளார்த மக்கிழிவு றாமற்புரந்தன
கொடையி லாமு ழுக்கயவர் மனைக டோறு முற்றடியர்
குறுகி டாத ருட்கடலின் மூழ்கச்செய்பண்பின
குசையு நாணு றக்கதுமை யுடையமி யாமெ னப்பெரிது
குதிகொள் வேனு ளத்தினும நாள்சற்றொளிர்ந்தன (1/4)
வருவ வாத மிட்டுழலு மவர்கள் போக மற்றவர்க
ளணுகு மாறி ரட்டியந னீதிக்குளொன்றின
வணிகொள் வார்செ விக்குழைக ளுலவு சீர்பொ றுத்தழிவி
லசல மேயெ னக்கவிஞர் பேசக்கிடந்தன
வடலை யாரு டற்பரமர் பிரண வாக ரப்பொருளை
யறியு நாள்பு னற்சடில மேறிக்குளிர்ந்தன
வகில லோக முற்பருகி யுமிழு மால்வ யப்படையை
யடையு மாறி யற்றியநல் வீறுற்றெழுந்தன
வரிய நான்ம றைக்கிழவ னுடலில் வேர்வை விட்டலறி
யவச மாகி டச்சிறிது கோபிக்கைகொண்டன
வமரர் கோன்மி கப்பயமொ டிணையில் காவிரிக்கரையி
லமையெ னாவு ருப்பெறுத ரீரப்புரிந்தன
வடல்கொள் வீர ருட்டலைவ னொருவ னீசு ரக்கணைகொ
டவுணர் கோனி னைப்பழிதல் காணச்சிறந்தன
வலரும் வாரி சக்கடவுள் வரம தாலு வப்படையு
மவர்கண் மேலெ திர்த்தவனை யாளப்புகுந்தன
வளவின் மாயை வெற்புருவ முடைய தான வப்பயலை
யணுவை நேர்பொ டிப்படமு னாளட்டுநின்றன

வழலும் வாய்வி டக்கடிது பொருத தாரு கக்கொடிய
னழிய வேல்வி டுத்துலக மோதத்திகழ்ந்தன
வறிவி னான்மி கப்பெருமை யுடைய கோள ரித்தகுவ
னறையும் வாச கப்படிய னே -னைத்தடிந்தன
வலைம கோத திக்கிடையி னெடிய மாம ரத்துருவொ
டவிரு வானை யப்பொழுதி லேவெட்டுமொய்ம்பின
வமல யோக தத்துவசின் மயசி வோக முற்றவர்த
மரச னாம கத்தியனை நேர்முத்தரன்பின
வயர்வு றாம லெக்கணமு முருக னேயெ னப்பகரு
மவள்கை வேறு பட்டதனை யீதற்கிரங்கின
வலகை யான்மி கத்தளரு மொருவ னோடு பற்பலரு
மவிவு றாது கற்கதவு கீறப்பிளந்தன
வதிக வாழ்வு டைப்பழைய மதுரை யூரி னிற்புலவ
ரலம ராது கைக்குறியி னால்வைத்தநண்பின (1/2)
கருது மாறு முற்குலவி யுதவி டாத பொற்குவடு
கதற மோதி டத்தகுதி யாவுற்றசெண்டின
கடலை யேவி டத்துணியும் வருண னார்தொ ழத்தனது
கதிர்கு லாவு சத்தியினை வீசிக்கனன்றன
கனக நாடு டைத்தலைவன் வலிய தூத ரைக்கொடுசெய்
கபட மான திற்சிறிது நோவற்றிருந்தன
கவிசொ லேனெ னத்தினமு நுவல்பொ யாமொ ழிக்கெதிரோர்
கரிய கோல்பி டித்திசையு மாடற்பயின்றன
கனல தாம லைக்கருகி னிலவு கோபு ரத்துயுமொர்
கவிஞு னாதி யிற்பகர்பல் பாடற்றுதைந்தன
களிறு நாணு றத்தொனிசெய் பனுவ லானொ ருத்தனது
கலியின் வேர றத்திருடி யீயத்துணிந்தன
கலைவ லார்மி கப்புகழு மிசைகொள் போரி யிற்றவசி
கவலை தீர்வ தற்கொருக ளாசத்தியைந்தன
கறையில் பாலை யற்குவகை பெருக வோர்க விக்குரிய
கனவி னார்ம லர்க்கொடுசெல் வாரத்தமிழ்ந்தன
கலுழ னார்கை யிற்றலையை நிரும லாந திக்குரிய
கரையில் வீசு முற்கடிதி லேகிக்கவர்ந்தன
கழறு மேழ்வ கைப்புவியி னுயிரெ லாம ழுத்தனது
களியி னான்மி கக்குதிகொ ளேனத்தைவென்றன
கயிலை யீச னைப்பொருவு முனிவன் வாய்மொ ழிப்படியொர்
கடவுண் மாம ணிச்சுடிகை வீழத்துரந்தன
கனியெண் மோத கக்குவிய லனைய வேமி கப்பருகு

கரியி னீள்வ யிற்றிரவி மேவக்கடிந்தன
ககன மாந திப்புனலை யனைய நீர ழைத்துமைகொள்
கனவி டாய றச்செயும்வி னோதத் தொழும்பின
கமல வாவி விட்டெழுமோர் முதிய தாதை யுட்கருது
களவு தீர்த ரக்கரம தான்மெய்ப்புகன்றன
கவள யானை யொத்தொளிரும் வழுதி கூன்வி டச்சுரமோர்
கணநி லாத றத்திருவெ ணீறிட்டுகந்தன
கடுவை நேரு டற்சமண முனிவ ராமு ழுக்கொடியர்
கழுவி லேறி டத்தமிழை வாரிச்சொரிந்தன (3/4)
மருவ றாம லர்க்கணைக ளளவில் கோடி தைத்துருகி
மகளிர் சேனை யிற்குரிமை மீறிப்புணர்ந்தன
மதுர சாக ரத்தமிழை யுதவு சீரு டைப்பொதியை
வரையின் வாணர் மெய்த்தவசு போலப்படர்ந்தன
வகுள நாண்ம லர்த்தொடையல் புனையும் வேண்மு தற்சிலருண்
மகிழ்வெ லாம றப்பெருகு கோலத்தமைந்தன
வரத மான தைப்பொருவி லபய மான தைக்கொடுதன்
வலிமை நாடு முத்தமர்வி சாரத்தைவிண்டன
மறவ னோடு கைச்சமர்செய் திரவி லோர்கொ டிக்குவகை
மலியு மாறெ ழிற்கயல்கண் மீறக்கொணர்ந்தன
மறதி யாலு ணக்களியின் முடுகு வான்வெ ளிப்படவு
மனையின் மேய திற்சிறிதி லாமற்பகிர்ந்தன
வயதி னாலு மிக்குயரு மவண்மு னாவ லிற்கடியின்
மணலி லோர்ப ழத்தினைய நாள்விட்டெறிந்தன
மறுவி லாவ ரைக்கவிதை யொருவ னோத லிற்புளிய
மரம தூடு கொப்பொடிவ தாகத்தெரிந்தன
மனைய லாது மற்றவரை யனையெ னாநி னைப்பவன்முன்
மணியி னாவ றப்பகர்த லாதிக்கமர்ந்தன
வனச லோச னத்தொருபெண் முடியின் மேல்வி ழத்தகுகல்
வழுகு மோர்ப டிக்கடியி லேநிற்கைகண்டன
வயிண வாத ரத்தொருவ னிசையு நாளின் முற்புனையும்
வளைய மாம டற்றளைக ளோவத்தொடர்ந்தன
வயிர வாதி கட்களவி னிணமு மூனு மிக்குதவும்
வலிய போரி னுக்குரிய வீரத்தழுந்தின
மனது வேறு பட்டிடுத லிலது நாடி நிற்பவர்கண்
மறலி தூத ருக்கயர்வு றாமற்றிரிந்தன
மலையி லேறி முற்புவியி லுருளு மாண வச்சிறுவன்
மடிவு றாதெ டுத்துலகி லேவிட்டவம்பின

வரிய ராவி னத்தரசர் பலர்சொ னாலு முற்றுதலின்
மகிமை யாண்மை யொப்பனவெ லாமுற்றடர்ந்தன
வளமை சேர்தி ருப்புகழை மொழிகு வார்க ளுக்கெளிய
மயில மாம லைக்குமரன் வாகைப்புயங்களே. 15

### நேரிசை வெண்பா

புயலார் மயிலமலைப் புண்ணியமே போல்வான்
கயலார்கண் வள்ளி கணவ—னியலாரப்
பாடுமடி யேன்றனக்குப் பத்தர்மனப் பங்கயந்தோ
றாடுமடி யேன்றரமாட் டான். 16

### கட்டளைக் கலித்துறை

மாட்டாத வென்னை வலியவந் தாட்கொண்டு வண்கமலத்
தாட்டாம ரைத்தொண்டு செய்யென்ன முன்பு தடுத்துநின்றான்
கேட்டார் மகிழ வரங்களெல் லாந்தருங் கீர்த்திகொண்டு
பாட்டா லுயர்மயி லாசலத் தோங்கயிற் பண்ணவனே. 17

### அறுசீர் விருத்தம்

பண்குலவு செந்தமிழா னின்கமலத் திருவடியே
பரவு மென்முன்
கண்குலவு தோகைமயிற் பரிமீதி லொருதரநற்
காட்சி யீந்தாள்
பெண்குலவு மொருபாகப் பிஞ்ஞகனுக் குபதேசம்
பேசும் வாயாய்
திண்குலவு மயிலமலைக் குருபரனே வேலணியுந்
திரடோட் சேயே 18

### எழுசீர் விருத்தம்

சேயமா முகங்க ளாறுடைக் குமர
தேசிகன் றிருக்கைவேற் பெருமான்
றூயவெண் சேவற் கொடியணிந் தாடுஞ்
சுப்பிரம ணியனை யன்றி
மாயவன் பரமன் கணபதி முதலாம்
வானவ ரிலையென வுணர்வார்
தாயக மான மயிலமா மலைச்சீர்
சாற்றிடத் தக்கவ ரெவரே. 19

### எண்சீர் வண்ணவிருத்தம்

தனன தந்ததன தனதன தத்தன

எவர்க ளும்புகழு மயிலம லைக்குக
னெனமொ ழிந்தவன திருசர ணத்திடை
தவமுயன் றுறையு மனமுள வித்தகர்
தமைய டைந்தவர்கள் பெறுவன செப்பிடி
லவனி யெங்குநிறை தருபுகழ் சத்திய
மதிவி தங்குலவு மதுரந யத்தமிழ்
சிவன்மு குந்தனயன் மகபதி யொப்பவர்
திறமை யின்பமலி சமரச முத்தியே. 20

### இரங்கற்றாழிசை

முத்தமனைய நகைமடவீர் மொழியக்கேளீ ரென்கனவின்
முன்னமொரு நாண்மயிலமலை முருகக்கடவுள் வலியவந்து
சித்தங்கவர்ந்தான் வளைகவர்ந்தான் சேலைகவர்ந்தான் றிறல்கவர்ந்தான்
சிறிதுநாண மில்லாமற் றேடித்திரிந்து திகைக்கவிட்டான்
பைத்தவரவக் கடிதடமும் பணைத்தமுலையு மதவேளும்
பரவைத்தொனியும் பிறவுமெனைப் படுத்துந்துயரஞ் சகிக்கறியே
னெய்த்தகுரவங் குவளைவெட்சி நீபமுதலா மாலைகளி
னேருமொன்றை யெனக்காக நீர்போயிரந்து கொணர்வீரே. 21

### நேரிசை வெண்பா

வீர வடிவேற்கை வித்தகனை வெள்ளிமலைக்
காரன்விழித் தீயில்வந்த காரணனை—நீரருவி
கொட்டுமயி லாசலத்திற் கும்பிட்டுக் கொண்டபின்னு
மிட்டுமயி லாரிடஞ்செல் வேன். 22

### கட்டளைக் கலித்துறை

ஏனலங் கானிற் பரண்மீ திருந்த விளங்குறத்தி
பானலங் காமர்க் குருகிப் பணிந்தவன் பண்ணவர்க்கா
வீனலங் காதிபற் செற்றோன் மருக னெனத்துதித்து
நானலங் காண மயிலா சலத்தினை நண்ணினனே. 23

### கலிவிருத்தம்

நண்ணல் கண்டு நமக்கு மயிலம்வா
ழுண்ண லோர்வர மாயினு நல்கிலான்
கிண்ண நேர்முலைக் கிர்த்திகை பானுகர்
வண்ண வாய்ச்செயல் வன்மையில் வன்மையே. 24

### கலிப்பா - கைக்கிளை

வன்ன முலைத்துணையை வாய்மொழியைத் தாழ்குழலை
நன்னயஞ்சேர் கண்ணைமிக நம்புமென்னை நத்துகில்லாய்
கன்னல்விற்கை மாரன் கடும்போர் விளைக்கின்றா
னென்னடிநான் செய்வே னெழின்மயிலத் தேந்திழையே. 25

### நெஞ்சுவிடு தூது - தாழிசை

ஏந்துபூண்முலை மங்கைமார்களை யேவினாலவர் தங்களுக்
கின்பமெய்திட னாடிவாடியி றைஞ்சுவாறெழில் வண்டினம்
பூந்துணர்க்கடம் பாரமீதுபொ லிந்ததேன்மிக வுண்டுதன்
புந்தியின்றிம யங்குமஞ்சுகம் பொற்புயத்துறு நற்கிளி
வேந்துடன்களி கூருநாரைகண் மெல்லெனப்பக ராதுபோ
மேகமாதிய யாவுமென்றன்வி ருப்பமுற்றுரை யாதவே
நீந்துதற்கரி தாகுமென்றுயர் நெஞ்சநீயறி கின்றையா
னீடுசீர்மயி லாசலக்குக னேரினின்றுநி கழ்த்திடே. 26

### நிலைமண்டில ஆசிரியப்பா

நிகழ்த்தரும் பெருமை நிலவுதென் மலயத்
தகத்திய முனிவற் கருளிய வீறும்
பண்டுநற் கீரன் பருவர லொழித்துத்
தொண்டுகொண் டவிர்தரு தூய புகழுங்
கருணையே வடிவ மாகக் காண்டரு
மருணையூர்ப் புலவற் களித்தசெந் தமிழுங்
கடனடு விழிந்து கரைமடத் தவிர்தரு
திடமலி பாலைய னாதிய சித்த
ரெண்ணிலார்க் குதவு மெழிற்பெருஞ் சிறப்பு
நண்ணிநின் றன்பா னானும்வந் தடுத்தே
னென்பெருங் குற்ற மியம்பரி தாயினு
நின்பெருங் கருணை நினைக்கரும் பாற்றாற்
றவிர்க்குமென் றுன்னித் தமிழ்கொடு சிறிது

கவித்தொடை வனையக் கருதின னாதலி
னைஞ்ஞிறக் கலாபத் தணிக்குடை பரிக்கு
மஞ்ஞைவா கனத்தின் மரகத வன்னக்
கிள்ளையோர் பாகங் கிளர்தர வொருபால்
வெள்ளைமால் களிறு மேனாள் வளர்த்த
பொன்னிறத் தன்னம் பொலிதர நடுவி
லுன்னிய பதினா றுருவிலொன் றெடுத்துச்
சேவலுந் தண்டுந் திருக்கை வேலும்
பாவலர் பனுவல் பகர்வன பிறவுந்
திகழ்தர வந்தருட் சேவை நல்கிப்
புகழொடு தவமும் பொருந்தவைத் தருள்வாய்
தென்னையு மாவுஞ் செருந்தியுங் குருந்தையும்
புன்னையும் பிறவும் பொலிதரு சாரற்
குயிலினம் பாடக் குரங்கினங் கொட்ட
மயிலின மாடும் வளந்திகழ் மயில
மாமலைக் கோயில் வயினினி தமருங்
கோமளக் குமர குருபரக் குகனே. 27

### நேரிசை வெண்பா

குகனே மயிலமலைக் கோமானே யீசன்
மகனே யெனத்தினமும் வாழ்த்தி—முகமாறும்
பன்னிரண்டு தோளும் பதமிரண்டு நாடுநர்முன்
னென்னிரண்டு கைகுவியு மே. 28

### தழை - கட்டளைக் கலித்துறை

குவிக்குங்கைத் தொண்டரைக் காப்பான் மயிலக் குவட்டிறைவன்
செவிக்கென் றுயரமெல் லாமுரைத் தாடருஞ் செய்யதழை
கவிக்கின்ற திங்கட் குடைமத வேடன் கணையை வென்று
புவிக்கண் ணிறைந்த புகழ்வானத் தூடும் புகச் செய்ததே. 29

### மடக்குக் கொச்சகக் கலிப்பா

புகழனந்த முறவாக்கும் பொருளுநல்கு முறவாக்கு
மிகலறுக்கு மயிலமலை யிடஞ்சேர்க்கு மயிலமலை
மகனெனினுங் களித்தாளும் வண்கொடிதூங் களித்தாளு
மிகவணிதற் செயவேளே வினைவிலக்குஞ் செயவேளே. 30

### கலிவிருத்தம்

வேளைக்குத விடுமெய்ப்பொருள் வினைவேரற வென்று
தாளைத்தலை மிசைவைத்தரு டருசண்முக முருகோன்
வாளைப்பொரு கண்ணாருடன் மகிழுந்திரு மயில
நாளைக்கெனு மொழியின்பய னணுகச்செயி னலமே. 31

### அறுசீர் விருத்தம்

நலங்குலவு மயிலமலைக் குமரேசன் றிருவடியை
நண்ணி டாம
லிலங்கடொறுஞ் சென்றிரந்து பட்டசள மித்தனையென்
றியம்பப் போமோ
கலங்கரிய நெஞ்சகத்தோ டாறெழுத்தைத் தினந்தோறுங்
கருதி யன்பாற்
றுலங்குபுகழ்க் கடன்மூழ்குங் கவுமாரர் வேடமிகத்
தோய்ந்த நானே 32.

### எழுசீர் விருத்தம்

நானு நீயுமற் றனைத்துமொன் றெனப்பல
ஞான நூல்சொலக் கேட்டு
மூனு மாவியு மொன்றெனுந் துணிவுகொண்
டுழன்றி டவிட லாமோ
தேனு மாவுமுன் றருமொரு குறமகள்
சிறுப தம்பணிந் தோனே
வானு ளார்வரும் பொழின்மிகு மயிலமா
மலையு டைக்குக வேளே. 33

### எண்சீர் வீருத்தம்

வேள்விடும்பூங் கணைகள்வந்து தைக்க மேனி
மெலிவடைந்து வெண்ணகைவாய் மின்னா ருண்கண்
வாள்விடத்தா லிறந்தமுதாற் பிழைக்குஞ் சிந்தை
வசமாமென் றனக்கிரங்கா வன்மை யாதோ
கேள்வியுற்ற நிந்தைமொழி போதா தேயோ
கிளிதானென் றெனைப்பலகால் கிளத்தி லாயோ
கோள்விலங்கு மயிலமலைக் கோயி லானே
குன்றுதொறு நடமாடுங் குலத்தாட் கோவே. 34

### மடக்குக் கட்டளைக்கலிப்பா

கோவில்கொண்ட குறிஞ்சியிராகமே
கூறக்கேட்கை குறிஞ்சியிராகமே
வீவின்மேனி முதிர்ந்தவராகமே
வென்றுமீண்ட தெதிர்ந்தவராகமே
காவிசெங்கடம் பம்புயமாலையே
கானவள்ளிக ணம்புயமாலையே
யாவியென்பவர்க் காட்சிமயிலமே
யன்பர்வேண்டருட் காட்சிமயிலமே. 35

### குறளடி வஞ்சிப்பா

மயிலெனநடித் தயிலெனவிழித்
தொயிலுறநடந் துயிர்கவர்பவ
ரிருபூண்முலைக் கருதாமருண்
டருளாவலற் றிருள்பாழ்மனம்
போலும்பதஞ் சாலுங்கவி
மாலுண்டுளார் பாலுந்தினந்
தேனெனவினித் தூனையுமுருக்
கீனமில்கவி யானவில்கிலே-னிதனாற்
செந்தகைக் கிரியெனச் சிகிமேல்
வந்தருள் செயத்தகு மயிலத் தரசே. 36

### பதினான்குசீர் விருத்தம்

சேயநின் முகங்கள் பூதமோ ரைந்துந்
திகழ்பரப் பிரமமு மாகுந்
திறன்மலி திரடோ ளகம்புற மெனநூல்
செப்பிய பன்னிரு சமையந்
தூயவர் விரும்புந் திருவடித் துணைபல்
சுருதியா கமப்பொருண் முடிவு
துங்கவே லுலகைத் தருமவண் மற்றுஞ்
சொலும்படை யுருத்திரத் தலைவர்
மாயவன் முதலோர் வணங்கிடு மொருவன்
மயிலுடன் சேவலு மீசன்
மலையமா முனிவன் பாலைய னனையார்
வழிபடுஞ் சீடரிவ் வாறே

யாயசீ ரனந்த முடையநீ யெளியேற்
கருள்செயா திருப்பது முறையோ
வருவிசூழ் மயிலா சலப்பெருங் கோயிற்
கழகிய குமரநா யகனே. 37

## நேரிசை வெண்பா

நாயிற் கடையாகி நானிலத்தூ ரத்தனைக்கும்
போயிற் றொறுமிரக்கும் பொல்லேன்றன்-வாயிற்
றமிழ்மணக்கச் செய்தபிரான் றையநல்லார் கொங்கைச்
சிமிழ்மணக்குந் தென்மயிலச் சேய். 38

## கட்டளைக் கலித்துறை

சேயிலங் குந்திரு வுள்ளமுள் ளீரொன்று செப்புகின்றேன்
கோயிலங் குன்றக் குறிஞ்சியெங் கெங்குங் குறுகிநொந்து
வாயிலங் குன்றி வருந்தாம லெங்கண் மயிலவெற்பின்
மேயிலங் குங்குமக் கொங்கைமின் னார்பொன்
வெறுத்துய்மினே. 39

## மடக்கு - தாழிசையிரங்கல்

மின்னிலங்கிய வேலனென்சிறு மின்னிணக்கம் விரும்பிலான்
மேவலார்க்கெம னானவேண்மகன் மேவநாடுத லோர்கிலான்
பன்னிரண்டுசெ விக்குகன்சிலர் பன்னிடுஞ்சொல் வினாவிலான்
பாடுவார்க்கருள் கந்தனீங்கிவள் பாடுகண்டு பரிந்திலான்
மன்னிடும்புகழ்ச் சேந்தனைங்கணை மன்னிடும்பைம றுக்கிலான்
வாரணக்கொடி கொண்டசேய்முலை வாரணத்துயர்
மாற்றிலான்
வன்னிசேர்கரத் தண்ணலார்மகன் வன்னினைப்பைவி டுக்கிலான்
மயிலமாமலை வள்ளலியான்பெறு மயிலின்மட்டினில்
வஞ்சனே. 40

## அம்மானை-வெண்டளை

வஞ்சமெல்லாந் தீர்க்கு மயிலமலை வாழ்முருகோன்
கஞ்சனரி யீசனுக்குக் கண்டனன்கா ணம்மானை
கஞ்சனரி யீசனுக்குக் கண்டனனே யாமாகிற்
கொஞ்சங் கருமங்கைக் கொண்டதே னம்மானை
கொண்ட தமரக் குலத்தினரா லம்மானை. 41

### தாழிசையிரங்கல்

அம்மானை யாடிக் கழங்காடி முத்தாடி யணிமேவுபந்
தாடிச் சிறாரோடு விளையாடி வெயர்வாடி யயர்வின்றியே
செம்மானம் வருமட்டு முச்சில் வைத்தாடிச் சிரித்தாடியென்
சேலைதொட் டாடித் தினந்தோறு மறவாது சீராடுவாள்
பொய்ம்மானுடன் போனவன் றங்கைமைந்தனைப்
பொறிமஞ்ஞையிற்
புகழ்கொண்ட மயிலாச லச்சார லிற்கண்ட போதேயெனைச்
சும்மாவி ராதேய வன்பா லெனக்கான சொற்சொல்லெனச்
சொல்லத் துணிந்தா ளூறங்கா ளெனெஞ்சந் துடிக்கின்றதே. 42

### வஞ்சிவிருத்தம்

துடியடிக் களிற்றின் றோழனை
யடியர்சூழ் மயிலத் தண்ணலை
வடியயிற் கரத்து வள்ளலைக்
கொடியனென் றுரைக்கக் கூடுமே. 43

### கொச்சகக் கலிப்பா

கூடுமவர்க் கருள்வேளைக் கூடாரைக் கொல்சேயை
யாடுமருட் கொடியானை யாடாம லசைப்பானைத்
தேடுமன்பர்க் கெளியானைத் தேடாரைத் திருத்தானைப்
பாடுநருண் மயிலத்தைப் பாடாதார் பதர்தாமே. 44

### ஊசல்-எண்சீர்விருத்தம்

தாமரைக்கண் முகுந்தனென வளர்ந்து காட்டுந்
தனிமயிலா சலக்குவட்டிற் றவத்தோர் போலுந்
தூமணிமண் டபத்திலிரு மகளி ரோடுந்
துவர்மேனி யெழிலோங்கத் தொண்டர் சூழ
வேமவடம் பூண்டவிர்செம் மணிப்பீ டத்தி
லெழுந்தருளி யினியதமி ழிசைகேட் டும்பர்க்
காமகளி ரங்கைவழி யாடீ ரூச
லயில்வேற்கைப் பெருமாளே யாடீ ரூசல். 45

### இன்னிசை வெண்பா

ஊசற் குழைமடவார்க் குள்ளத்தை யொப்புவித்து
நாசப் படாத நலமளிக்க வல்லாயோ

மாசற்ற தென்மயில மாமலையில் வண்டுமொய்க்கும்
வாசக் கடம்பணிதே வா. 46

### கட்டளைக் கலித்துறை

தேவருக் குஞ்சசி கேள்வன் றனக்குஞ் சிவன்முதலா
மூவருக் குந்துணை யாமுரு காவென்று முன்னுமன்ப
ரியாவருக் கும்பொது வாய்மயி லாசலத் தெய்தினர்க்கே
பூவருக் குந்தள ராவுண்மை ஞானப் பொருளெய்துமே. 47

### கலிநிலைத்துறை

பொருசேவ லணிநீடு மயிலாசலத்
தெந்தை பொதுவாய்மையிற்
றருசேவை யொருவாறு பெற்றோர்
மலர்த்தா டலைக்கொள்வதே
குருசேவை முதலாய பலபேறு
மென்னுங் குணத்தோர்களாற்
றிருசேரு மருமத்தன் முதலாக
நூல்சொன்ன சிலருய்வரே. 48

### அறுசீர் விருத்தம்

உய்யநல் வரந்தந் தாட்கொண்
டுலகரோ டுழலா வண்ணஞ்
செய்யநின் புகழே நாடுஞ்
சிந்தையுந் திகைக்க லாமோ
பையர வருந்துந் தோகைப்
பரிநடம் பயிலுஞ் சோலை
மையறா மயிலக் குன்றில்
வதிதரும் வளமை யானே. 49

### பாண் - தாழிசை

வளமலிந்த மயிலவெற்பின் மன்னரென்னை முன்னைநாள்
வலியவந்தி ரந்தணைந்த வண்மையொன்று மறிகிலா
யளவிலாத வுண்மைசொல்லி யவைமறந்து வஞ்சமா
யவரிருக்கை நீதமென்ற றைந்திடத்த காதடா
பளபளத்த வேலணிந்த பன்னிரண்டு தோளிலென்
பாவிநெஞ்சி ருந்தும்வேறு பாவைமாரை நாடினார்

களவினீயு ரைத்ததூது போதுமீடில் பாணபோய்க்
கந்தர்பாலு நெஞ்சறிந்த கன்னியென்று பன்னிடே. 50

**தவம் - வேற்றொலிவெண்டுறை**

பன்னிரண்டு தோளானைப் பவளமலை யனையானைப்
பழுதிலாறு
சென்னியுடைக் குருபரனைத் திருமயிலக் கிரிபுரக்குஞ்
சேயைநாளு
முன்னி யுன்னி யுறங்கி யுறங்கிடா
நன்னி லைத்தத்வ ஞானிகட் கானதே. 51

**எண்சீர்விருத்தம் - கட்டு**

ஆனையுரு வானதிரு ஞானமிசை தோன்று
மழகியசண் முகத்தொருசெங் குழவியினை முன்னாள்
பூனையுய்யச் செய்தானைத் தேனைநிகர் பாடற்
பொழிவாருக் கருள்புரியும் விழிமூவா றுடைய
கோனைநெடும் பனிவரையின் மேனைமக டன்னைக்
கொற்றவைவே லெனக்கரத்திற் பற்றவல்ல குகனை
மானையொக்கும் விழியார்கண் டீனமுறப் பவனி
வரும்பரனை மயிலவெற்பில் விரும்பியதென் மனமே. 52

**இரட்டையாசிரிய விருத்தம்**

மனமுனது திருவடியை யல்லாது மற்றொன்றின்
மருவா திருக்கு மியல்பும்
வாக்குனது புகழன்றி வேறுவித மொன்றையும்
வழுத்தாத வண்மை நெறியுங்
கனபணி யுனக்கன்றி வேறொருவ ருக்குமுயர்
காயமுய லாத நிலையுங்
கமழும்ப னீரிலையில் வைத்தவெண் ணீறுகொடு
கடையனேற் கமைய வருள்வாய்
புனமறம டந்தையொடு பொன்னகர்ப் பிடிதழுவு
புயநிரை பொலிந்த புனிதா
புனலிகுர வங்கடம் பிந்தீவ ரஞ்செச்சை
பொற்பணி யுடன்பு னைந்தா
யனவரத நடநவிலு மரகத மயூரத்தி
லயில்வே லெடுத்து வருவா

யணிமயில மலையினது தலையினிதம் விளையாடு
மானந்த முருகே சனே. 53

### நேரிசை வெண்பா

ஏசகன்ற பல்பாட் டிசைந்தபுகழ்த் தோள்களிலென்
மாசடைந்த சொல்லும் வனைவானே - யீசனுக்குச்
சொன்னதனைக் கிள்ளையொடுஞ் சொல்லிமயி லாசலத்தின்
மின்னவிர்வேல் பற்றிநிற்கும் வேள். 54

### கட்டளைக் கலித்துறை

வேளஞ்சித் தன்னுரு மாறித் திரிய விளங்கெழிற்சேய்
வாளஞ் சிறந்தகண் ணார்நட மாடு மயிலவெற்போன்
காளஞ் சிறிதுமில் லாப்பொருள் கேட்டுய்ந்த கண்ணுதல்பாற்
றாளஞ் சிவிகைபெற் றுத்துதி பாடிய தன்மையென்னே. 55

### கலிநிலைத்துறை

என்னேயமு நின்றிருக் கூத்து மிரண்டுமொன்றா
யின்னேகளி கூர வைக்குந்திற லில்லைகொல்லோ
மின்னேர்சடை யான்முத லாகிய மேலவர்க்கோர்
மன்னேமயி லாசலக் கோயிலில் வாழ்பிரானே. 56

### அறுசீர் விருத்தம்

#### இரங்கல் - சிலேடை

வாழுங் கிளையி னிலைநீங்கி வளர்மென் முகையா முலைபசந்து
சூழு மனையா ரிடைநாணிச் சோர்ந்து வாடித் தளர்வெய்தி
வீழுங் காய மிகக்காய்ந்து வேனிற் சகியா வியன்கோங்கென்
பாழு மகள்போன் மயிலமலைப் பவளக் குகன்மால்
படைத்ததுவே. 57

### கலித்தாழிசை

படையாலொரு முதுசூருடல் பப்பாதிய தாகப்
பண்ணுங்குகன் மயிலாசல நண்ணுங்களி யுடையே
முடைநாறிய வூனுண்பவர் முன்னேகியு நில்லே
முதிர்செந்தமிழ் பொழியுஞ்சில முனிவர்க்குற வாவேம்
விடையேறிய பரமன்றலை மீதேமுய லகனும்
விறன்மாயவ னதுசெங்கையின் மிளிர்கின்றவை வேலு

மடையாளமெ னக்கூறிடு மவருக்கிழி வுரையே
மயன்மாதைவெ றுக்காதவ ரறையும்புகழ் நமதே. 58

### எழுசீர் வண்ணவிருத்தம்

தனதந்தன தனதானன—தனதானா

நமனஞ்சிய பெரியோரவர் தவமிஞ்சிய பயனாமென
நவிலும்பனு வலைநாடொறு—மிகழ்தீயோர்
தமரென்றுழல் வதுபோயநு தினநின்பணி புரிவேனொரு
தரமிங்கித மயின்மேலெதிர்—வருவாயே
குமரன்குரு பரன்வேள்குகன் முருகன்சர வணநீர்தரு
குழகன்றுணை யெனவோதுநர்—செவியூடே
யமலன்பெற மொழிதாரக விபரஞ்சொலி மயிலாசல
மதினின்றருள் பொழிசீர்திகழ்—கிழவோனே. 59

### மருட்பா

கிழமுனிவன் வேடமிட்டுக் கேகயத்தை விட்டுப்
பழகிவசஞ் செய்துகுறப் பாவை—குழல்சரியச்
சேர்ந்தளி கூர்வான் றிகழ்திரு மயிலத்
தார்ந்தமெய் யடியவர்க் கஞ்சிக்
கூர்ந்தபூங் கணையான் கும்பிடல் வியனே. 60

### கழிக்கரைப் புலம்பற் றாழிசை—மடக்கு

வியனார் கமல மலரினமே
விளம்பு முலக மலரினமே
வெள்ளை நிறத்துக் குருகீரே
வேண்முனி றத்துக் குருகீரே
கயலின் குலமே கேதகையே
கருத்தைச் சுடுமே கேதகையே.
கருங்கு வளையே கடனுரையே
காணேன் வளையே கடனுரையே
புயல்வந் தருந்துங் கசப்புனலே
பொருந்து முறவுங் கசப்புனலே
புளினத் திடரே யளப்புனையே
பொல்லா திடரே யளப்புனையே
வயமிக் குளவன் பேரொலியே
மயிலத் தொருவன் பேரொலியே

மயலி னிலையஞ் சகியேனே
வந்தா ளிலையஞ் சகியேனே. 61

### நேரிசை வெண்பா

ஏனமற மங்கைவைவேற் கிட்டானை யீடில்பசுங்
கானமற மங்கைவைவேற் கைக்குகனை—ஞானமற
மங்கையத்த ரேயா மயிலத்திற் கண்டுசென்னிக்
கங்கையத்த ரேயா கலாம். 62

### கட்டளைக் கலித்துறை

கலையான வத்திர வாணி புகழுங் கவின்மயில
மலையான வத்திர வாணிந்தை யேனையும் வாழ்விக்கும்வே
ணலையான வத்திர வாணிபங் குன்றொடு நந்தவென்றோ
னிலையான வத்திர வாணித்தர் போலு மியல்பினர்க்கே. 63

### அறுசீர் விருத்தம்

இயல்வளமு மலைவளமும் பொழில்வளமும் புனல்வளமு
மிமையார் போற்றும்
புயல்வளமு மற்றுமுள்ள பலவளமுந் திகழ்மயிலம்
புரந்த செவ்வேள்
கயல்வளங்காட் டியநெடுங்கட் குஞ்சரிக்குங் குறமகட்குங்
கணவன் செந்நெல்
வயல்வளத்தண் மருதமுத னானிலத்துஞ் சென்றாடி
வருத லுண்டே. 64

### ஊர் - எழுசீர் விருத்தம்

வரும மின்றிய தொண்டருக் கருட்செயு
மயில மாமலைச் சேய்க்குத்
திருநி லாவிய பரங்கிரி யேரகஞ்
செந்தி லம்பதி சோலை
மருவு மாமலை யாவினன் குடிமுதல்
வண்ட மிழ்ப்புல வோர்சொல்
பொருவி லாயிரங் கோடிக ளாகிய
பொருப்பெ லாந்தன தூரே. 65

### அடிமடக்குக் கொச்சகக் கலிப்பா

தனம்பகமா னவர்மீதே தனம்பகமா னவர்மீதே
வினம்பரவு பதியென்னா வினம்பரவு பதியென்னா
வுனம்புயத்தாட் டுதியாதோ வுனம்புயத்தாட் டுதியாதோ
கனம்படரு மயிலமனே கனம்படரு மயிலமனே. 66

### சித்து - தாழிசை

அமலன்புகழ் மயிலாசல மதில்வாழ்சிவ ஞானிக்
கருள்செய்தயி லணிதோளுட னருகிற்றிகழ் சித்தன்
றமரென்றுள பலசித்தர்க டந்தாண்மலர் மகரந்
தலையிற்புனை தருசித்தர்த மைப்பேணிட லுள்ளே
மெமதன்பைவி டாதேபல மீயங்கொடு வந்தா
லெண்ணூறுவ ருடமாயுளி லங்கச்செய வல்லே
முமலத்தடை யறியேமிரு நாகந்தரு வாயேன்
முன்கட்டிவெ ளுக்கச்செயு முறையுந்தெரி வேமே. 67

### இதுவுமது எண்சீர் விருத்தம்

வேமப்பான் முழுக்காட்டி யாடை சாத்தி
வெண்ணீறு மிகப்பூசி வேண மட்டு
மேமப்பாத் திரத்திலன்னம் பருப்பு நெய்பா
லிருமூன்று சுவையுடனீ யீந்தா யானா
லியாமப்பா லியைந்தரச வாதஞ் செய்வோ
மிராப்பகன்மா றிடப்புரிவோ மிவையல் லாமற்
சேமப்பாங் குறுமயில மலைப்பொற் கோயிற்
றிருக்கைவேற் சித்தர்தம்பேர் செப்பு வோமே. 68

### நேரிசை வெண்பா

செப்பரிய பல்சீர்த் திருமயில மாமலையிற்
றுப்பனைய மேனிச் சுராதிபனை—யெப்படியுங்
காணாம லென்றன் கலிதீர மாட்டாது
நாணாம லுந்திரியே னான். 69

### கட்டளைக் கலித்துறை

நானங் கமழு மயிலா சலத்தி னடிக்குமருட்
கோனங் கமழு மயிலா சலத்தினர் கும்பிடுந்தா

ளானங் கமழு மயிலா சலத்தின னன்றடற்சூர்
வேனங் கமழு மயிலா சலத்தினல் வீட்டிடுமே. 70

### கலிவிருத்தம்

வீட்டு நேய மிகுத்துனை நாடிடுமென்
பாட்டு மாலை பரிந்தருள் செய்குவையோ
காட்டு வள்ளியைக் காவுடை யான்மகளிற்
கூட்டு வாய்மயி லாசலக் கொற்றவனே. 71

### சம்பிரதம் - தாழிசை

கொற்ற வர்க்குமுயர் மாதவர்க்குமொரு
கோனெனக்குலவு குமரவேள்
கோழியங்கொடிகொண் மயிலவெற்பிலிரு
கோதையர்க்குநடு மேவுவா
னற்றமீதெனவ றிந்தளிக்குமுரு
கையனெய்யொழுகு மயிலினா
னம்புயக்கழனி னைந்துதெண்டனிடு
மன்புகொண்டுதமிழ் பாடினான்
மற்றவர்க்குநிகர் வாழ்வெய்தாதுடலு
மனமும்வெள்ளைநிற மாகிடு
மாநிலத்திழியெ றும்புமோர்பெரிய
மலையெனத்திகழும் விழியினீர்
வற்றலின்றிவரு நல்வினைப்பயனும்
வம்பதாமணியும் வெண்கலை
மண்ணடைந்துநிற மாறுமெண்ணில்பல
வாயிலிற்புகலு மாகுமே. 72

### எண்சீர் விருத்தம்

ஆகுமதை யழிப்பதற்கு மழிவதனை யாக்குதற்கு
மயில்வேற்கைக் குருபரனை யன்றியிலை யெனத்தேறிப்
பாகுநிகர் தமிழ்ப்பாடல் பலபாடிக் களிகூரும்
பழையோர்கள் பெற்றபயன் படிறேனும் பெறவேண்டி
யோகுடையார் மலிபொதியை யுயத்திருச்செந் தூரருணை
யொளிர்திருமா மலைபொருநை யுருமலையா தியதலந்தோ
றேகுமதிற் சலிப்பெய்தி யெழின்மயிலா சலக்குவட்டி
லின்றுவந்து பரவுகின்றே னினிநடப்ப தறியேனே. 73

### வஞ்சித்துறை

அறிஞர்சூழ் மயிலத்
தெறிகதி ரெழிற்சேய்
வெறிகமழ் மென்றாட்
குறிகொளல் குணமே. 74

### மறம் - நேரிசை வெண்பா

குணப்பிசகுந் தோள்வலியுங் கொண்மறவர் பெண்ணை
மணப்பதற்கு மன்னனிச்சை வைத்தாற்-கணப்பொழுதி
லந்தப் புரத்திருக்கு மாயிழைமா ரெல்லோரு
மிந்தமயி லத்துறுவா ரே. 75

### இதுவுமது - கட்டளைக்கலித்துறை

வார்வேல் புரக்கு மயிலா சலத்து மறவர்கொம்பைச்
சேர்வேனென் றெண்ணு மரசேவுந் தூதநுந் தேயவழக்
கோர்வேம்பைக் கட்டுத லன்றோ முன்கற்பகத் தூறொழித்த
சீர்வேங்கைக் கொவ்வுங்கொன் மாப்பட்ட பாட்டைத்
தெளிந்துசொல்லே. 76

### கலிவிருத்தம்

சொல்லு மாய்ப்பொரு ளான சோதியை
யல்லு மாய்ப்பக லாகி யல்லதைப்
புல்லு மாறெழின் மயிலப் புங்கவ
னொல்லு மாறுமா முகங்க ளோதுமே. 77

### எண்சீர் விருத்தம்

ஓதும் பனுவற் றொகையா வையுநின்
னுபயக் கழல்சூ டிடுமுண் மையுணர்ந்
தேதுந் தனதென் றுரையா வழியா
லெனையுந் தருவே னிடையத் தகுமோ
காதுஞ் சிலைவே டர்புனத் தினளுங்
ககனத் தினர்கன் னிகையும் புரியும்
வாதுங் களியா கிநடிப் பவனே
மயிலத் தொருநல் வரமின் றருளே. 78

### குறம் - தாழிசை

மின்றயங்கும்வடி வேலணிதோளுடை விகிர்தன்
விரைமலிந்தபனி நீபமுளான்வியன் மயிலக்
குன்றடுத்துமயின் மேல்வரல்கண்டத னாலே
கொண்டமையலென நின்குறிகூறுது கோதாய்
நன்றவன்றருசு கம்பெறுவாய்மலை யாதே
நானுரைத்ததுபொ யல்லநினாணைமெய் நம்பா
யென்றனக்குநிறை நாழியினெல்லொடு சோறு
மெண்ணெயுங்கலையு மீந்துவிடிப்பொழு தம்மே. 79

### இதுவுமது - அறுசீர் விருத்தம்

அம்மா வென்குறி கேளுன் னாக்கஞ் சுந்தர மீகை
சும்மாபோ மென்றி ராதே தூய மயில மலைவா
ழெம்மான் றன்புயஞ் சேரு மின்பக் கடலை நல்கு
மைம்மான் கட்புன னீங்கி வருத்தந் தீருள மகிழ்ந்தே. 80

### கட்டளைக் கலித்துறை

மகிழமாமலர் மாலிகைமாரவேண்
மலயங்காவில் வரக்குயில்வாய்விடச்
சகிகணிந்தையு மம்புலியுஞ்சுடத்
தையல்வாடித் தயங்கிடலாகுமோ
வெகினமூர்தியைக் குட்டியகையனே
ஈசன்மால்பணிந் தேத்தியமெய்யனே
முகிலறாமயி லாசலத்தையனே
முத்தமிழ்ச்சுவை முற்றுணர்தெய்வமே. 81

### இரட்டையாசிரிய விருத்தம்

தெய்வங்க ளத்தனையு மொன்றென வுணர்த்திடத்
திருவுருவெடுத்த தெய்வஞ்
சிவசமைய முதலாகு மறுவகைச் சமையமுந்
தெண்டனிட நின்ற தெய்வம்
பொய்வலித் தானவர்கள் வலியொழித் தமரர்வளர்
பொன்னுல களித்த தெய்வம்
பொறியனைய குஞ்சரிமு லைத்துணைக் களபம்
பொலிந்தமார் புடைய தெய்வ

மைவனக் குயிலனைய வள்ளிமின் றந்ததினை
மாவினின் மகிழ்ந்த தெய்வம்
வண்டமிழ்ப் புலமைதிகழ் கவுமார ருக்கினிய
வரமெலா முதவு தெய்வம்
வைவதற் கஞ்சாத கொடியேனை யன்றுதிரு
மலைமீது காத்த தெய்வ
மயில்வா கனத்தெய்வ மயிலார் புயத்தெய்வ
மயிலா சலத்தெய் வமே. 82

## நேரிசை ஆசிரியப்பா

தெய்வப் புலமையுந் திருப்புகழ்ச் சிறப்பு
மைவகைப் பொறிகட் கடங்கா வறிவுந்
தொண்டர்தம் பணியுந் தூய நெறியு
மண்டலத் தரையரும் வணங்கு மாண்பு
மன்னபல் சீரு மடைவது குறித்து
நின்னருட் பேறே நினைத்துநெட் டுயிர்த்துத்
தோகைமா மயிலைச் சுடர்ச்செஞ் சூட்டு
வாகைவெண் சேவலை வடிவேற் படையை
மூவிலைச் சூல முதிரொளி வயிர
மாவிலம் படல்வாள் வயங்கெழிற் கேடகஞ்
சக்கரஞ் சங்கந் தனிக்கயி றங்குச
மிக்கசீர்ப் பணிகண் மிகவணிந் துள்ள
பவளமால் வரைநேர் பதினா றுருவிற்
றவளவெண் ணீற்றுச் சங்கரன் பரவுஞ்
சிற்சில வற்றொடு தினந்தினங் கருது
நற்செயல் பொலிந்த நாயினேன் மனத்தைத்
தளர்வொடு சலியாத் தகையுறப் புரிவா
னளவில்பே ராட லலைபுனற் பொருநைத்
திருவுரு மாமலை யாதியிற் செய்து
பருவம்வந் தடுத்தது பதறே லென்ன
விருதரங் கூறி யிறுமாப் புய்த்தும்
பருவரன் மிடியிற் பட்டார் போலப்
புல்லர்தம் மனைகளிற் போய்வர விடுத்து
நல்லறல் கடுக்கு நறைக்குழன் மகளிர்
கணைபிணை யிணைவிழிக் காமர் கனிவாய்
துணைமுலை யிளநலந் தொய்யின் மென்றோ
ளிறானிகர் வேளர சிருக்கை யாதியினு

முறாவரச் செய்தனை யொருகணத் தொருதர
மாதலின் மருண்டன னருண கிரியென்
றோதலும் பிறவு மொளியா வண்ணங்
குழீஇய முனிவர் குழாத்தொடு மாசு
கழீஇய மதிநிகர் களிற்றிற் றோன்றித்
தகர்கொணர் வீர வாகுத் தலைவ
னிகரென விளங்கவெண் ணீறளித் தருள்வாய்
பைம்புயற் புனலைப் பவள மேய்க்குஞ்
செம்புகர் வேழத் திரணெடுந் தடக்கைப்
புழைவழி யுறிஞ்சும் புதுமலர்ப் பொதும்பர்
தழைவள மயிலா சலப்பெருங் குவட்டிற்
குலவுபொன் மதிற்றிருக் கோயி
னிலவுசீர் பொறுத்த நிமலசற் குருவே 83

### மதங்கம் - நேரிசை வெண்பா

சற்குருவாந் தன்மைத் தவத்தோர் தமைமறந்து
நிற்கு மிசைமதங்கி நீலவிழி—பொற்குவட்டை
யன்னமயி லாசலத்தா னாறிருதோ ணாடியதா
லின்னமசை யாதிருந்த தே. 84

### இதுவுமது - கட்டளைக் கலித்துறை

இருஞ்சூலங் கொண்ட வயிரவர் போற்று மிகன்மதங்கி
வருஞ்சூறைக் காற்றெனச் சீறிச் சினந்தழல் வாய்திறந்து
பெருஞ்சூத ரான புறமதத் தோர்களைப் பிய்த்தருந்திக்
கருஞ்சூதங் கொன்றபி ரான்மயி லாசலங் காண்பவளே. 85

### இதுவுமது - அறுசீர் விருத்தம்

பவச்சாதி யாமதங்கி தருநரம்பு பஞ்சினுக்கும்
பருவ நல்கு
மவச்சாவா வெய்யின்முள்ளிற் றவிப்பாரைக் கழல்புரக்கு
மன்றிப் பின்னுந்
தவச்சார்பி லுயர்வசிட்டன் கைக்கொண்டான் மதனடியார்
தவிர்ப்பார் கொல்லோ
நவச்சாமைப் பயிரெள்ளா மயிலத்தா னன்பர்சொல்லு
நவைச்சொற் கேட்டே. 86

## கலிவிருத்தம்

கேட்டினுக்கு ளஞ்சிநின் கிளித்தமிழ்க் கிளத்துவேன்
மாட்டிரங்கி டாதிருக்கும் வன்மையென்ன நன்மையோ
கோட்டினத்து யர்ந்தவண்மை கொண்டதான மயிலம்வாழ்
தாட்டிகச்ச டானனச்ச ரோசமுற்ற தலைவனே. 87

## நெடிலடி ஆசிரிய விருத்தம்

தலையா லன்புடனே யுனைச்சந் ததமும் பணிவேன்
முலையா னைக்கிடை போமன மூடமொ ழித்தருள்வா
யிலைவேல் கொண்டவ னேதக ரேறிய சேவகனே
யலைசூழ் பார்புகழ் சீர்மயி லாசல வித்தகனே. 88

## எழுசீர் விருத்தம்

வித்தை யாலும் வருந்தி டாதுன்
விரைப்ப தாம்புயம் வேண்டுவேன்
முத்தை வென்றவெ ணீற ணிந்தொரு
முத்த முந்தர வில்லையோ
தத்தை யொன்று குலாவு திண்புயச்
சண்மு காமயி லாசலத்
தத்தை தங்கையொ டாடல் கண்டுவப்
பான சீர்புனை யண்ணலே. 89

## பதினொருசீர் வண்ண விருத்தம்

தன்னத் தனதன தானன—தந்ததானா

அண்ணற் கொருபொருள் பேசுநின்
வண்மைப் புகழ்மிக வோதியு
மன்னச் சிறுநடை யார்மயன் மிஞ்சுதீயேன்
விண்ணப் பமுமுன தாறிரு
நன்மைச் செவியினு ளேகியென்
வெம்மைக் கலிகெடு மாறுபு ரிந்திடாதோ
கிண்ணத் துணைமுலை வேடுவ
மின்னுக் கெதிர்பசி மீறிய
கின்னக் கிழமுனி யாயுமி ரந்துளானே
வண்ணத் தமிழ்மயி லாசல
நண்ணித் தொழுமடி யார்களை
வன்மைச் சமனணு காதருள் கந்தவேளே. 90

### பதினாறுசீர் வண்ணவிருத்தம்

தானதன தத்ததன-தனனதானா

வேளணிம லர்ச்சமரு மீனமலி வுற்றபுலை
மேவியநெ றிக்கயவர் பகையும்வீணே
வீடுதொற லைக்குமிடி நோயுமிக லிற்றமியன்
வேதனைபொ றுத்துழல்வ தறிகிலாயோ
காளவிட மிக்கொழுகும் வாயரவி னைப்பருகு
கானமயி லிற்கலப நிழலினூடே
காதலிரு வர்க்குநடு வேலுடனு தித்தளவில்
காலபய மற்றநிலை யுதவுவாயே
வாளவுண ருக்கரச தாமென முளைத்தநெடு
மாமரம றக்கறுவு புயவிசாகா
வாரணமு கத்தமைய னாரொடுப கைத்துலக
மாதிரமு ழுக்கவலம் வருகுமாரா
தாளநிகர் பொற்புமுலை மாதரனை வர்க்குமொரு
சாமியென மெச்சிடினு மகிழ்குகேசா
தாரணிது திக்குமயி லாசலமு கட்டில்வரு
தாபதர்த மக்கருள்செய் தகையுளானே. 91

### காலம் - நேரிசை வெண்பா

ஆனதா கின்றதினி யாவதெனுங் காலமற்ற
ஞானபரா னந்த நமக்கருள்வான்—வானளவுஞ்
சீரார் மயிலமலைச் செவ்வே ளெனவிளங்கும்
பேரார் குருபரப்பி ரான். 92

### இதுவுமது - கட்டளைக் கலித்துறை

பரம்பிய தென்றற் கனல்காட்டி மாங்குயிற் பாட்டொலித்து
வரம்பெறு மாநதி நீருண்ட வேனின் மயிலமலைச்
சிரம்புனை தாளுடைச் செவ்வேண் மயிலிற் செலுத்துமென்றாற்
றரம்படு கார்பனி யென்செய்யு மோவிளந் தையலையே. 93

### இதுவுமது - எண்சீர் விருத்தம்

தையலுக்கு முலையரும்பு முதிராக் காலஞ்
சரசநய மொழிப்பயனுஞ் சாராக் காலம்
வெய்யமதன் கணையெடுத்து வெகுளாக் காலம்
வியன்கழங்கம் மானைமுச்சில் வெறுக்காக் காலம்

பையனைய கடிதடப்பூ மலராக் காலம்
பழையமத நூல்சிறிதும் படியாக் காலம்
வையமுதன் மூன்றுலகுந் துதிக்குந் தொல்சீர்
மயிலமலைக் குகன்மோக மலிந்த தன்றே. 94

### பன்னிருசீர்த் தாழிசை

மலியுருங் கருணை[illegible]ழியான் வானோர் பரவு பெருமான்
வடிவேன் முருகக் கடவுண் மயில மலைச்சண் முகவே
ளொலிதங் கியதிண் கழல்சே ருபய சரணங் கருதி
யுருகித் தொழுமெய் யடியார்க் குரிய பணிகள் புரிவார்
கலியை மதனை விதியைக் காலன் றனையுண் மதியார்
கவலைக் கடலிற் சுழலார் கமழ்செந் தமிழ்முற் றுணர்வார்
புலியைக் கரியை யுரித்தார் போலுஞ் சிலரைப் பணியும்
புனிதச் சமைய மாறும் புகழத் திகழ்கின் றவரே. 95

### எண்சீர்த் தாழிசை

திகழுஞ் சண்முகப் பண்ணவன் வீரஞ்
செறிந்த பன்னிரு திண்புயன் றேவர்
புகழும் வேலுடைச் சேவக னாண்மை
பொலிந்த சேவலம் பொற்கொடிக் கார
னகழுஞ் சாகரஞ் சூழ்புவி மெச்ச
வவிர்ந்த சீர்மயி லாசலத் தண்ண
லிகழுஞ் சிந்தையு ளேனையு மாட்கொண்
டிடத்து ணிந்ததை யாரறி வாரே. 96

### பள்ளு-பதினான்குசீர்த் தாழிசை

ஆரார் செஞ்சடைப் பரம னார்விழி
யழலி லுதித்த முருகவே
ளகத்தி யன்முத லான தொண்டருக்
கருள்வி ளக்கமுன் னளித்தவன்
வாரார் பூண்முலைக் குறத்தி குஞ்சரி
மருவுந் திண்புய வானவன்
மயில மால்வரை யருவி நீர்மிக
வந்து பாயுநல் வயலிலே
யேரா ருழவர் களித்து மையல்கொண்
டேப்ப மிட்டுவந் தடுப்பதா
லினித்த மொழிகள் பேசிச் சரசத்

திணங்கி நாழிகை போக்குறீர்
காரார் மென்குழல் சரியப் பெரிய
களப முலைகள் குலுங்கிடக்
கவிழ்ந்து நிமிர்ந்து நாற்றை யெடுத்துக்
கையா னடுமின் பள்ளீரே. 97

### சவலை வெண்பா

ஈரம் பொருந்தா விதயத் தெளியேனை
வாரம் பெருத்து வலிதாண்டா
னாரம் பொலிமயிலத் தன்பர்பகை மாற்றுதற்காம்
வீரம் பெறுங்கதிர்வேல் வேள். 98

### ஏகபாதம்-கட்டளைக் கலித்துறை

வேளைக் கருளு மயிலத்தன் றன்னை விரும்பனன்றே
வேளைக் கருளு மயிலத்தன் றன்னை விரும்பனன்றே
வேளைக் கருளு மயிலத்தன் றன்னை விரும்பனன்றே
வேளைக் கருளு மயிலத்தன் றன்னை விரும்பனன்றே. 99

### வருகை - தாழிசை

நன்றேவருக சிவபெருமான் ஞானாகரமே வருகமறை
நாலுமுணராப் பொருள்வருக நறைப்பூங்கடம்பு மலர்பவளக்
குன்றேவருக மயிலூருங் குருந்தேவருகக் கனகநகர்க்
கோமான்மகள்சேர் குகன்வருக குறத்திகணவா வருகவிரைந்
தின்றேவருக களிறேறி யின்னேவருக கழறியவா
றியற்றியாள வருகவுன தின்பங்கொடுக்க வருகவருண்
மன்றேவருக பலகோடி மலையாய்வருக வருகவே
மயிலாசலத்தில் விளையாடும் வாழ்வேவருக வருகவே.100

### எண்சீர் வண்ணவிருத்தம்

தனதன தனதன தனனா தனனா.

வருபல கனவினி லொருவா சகமே
மகிழ்வுட னுரைசெயு முருகோ னிமையார்
தருமக ளழகிய குறமா துடனே
தறுகிய மலைகளி லுயர்வா னதுகே
டிருவருள் வளமுறு சிவஞா னியைநேர்
சிலர்பிர ணவமத னுரைதே றியதா

விருமையு மெளியவர் பெறுமேன் மையினா
லிசையொடு வளமிகு மயிலா சலமே. 101

### குரவை - முடுகுத்தாழிசை

சலனமற்றதிரு மயிலவெற்பிலரு
டழைவுறக்குரவை யிடுமினோ
சண்முகக்கடவுள் வள்ளிகுஞ்சரித
மக்கெனக்குரவை யிடுமினோ
வலமிகுத்ததொரு சேவல்வேல்கலப
மயிலெனக்குரவை யிடுமினோ
வண்டமிழ்ச்சுவைம லிந்திடப்புலவர்
வாழ்வுறக்குரவை யிடுமினோ
நலமனைத்துமுத வத்தகுந்தசிவ
முனிமுன்குரவை யிடுமினோ
நானிலத்துயிர்கண் மிடியிலாவுவகை
நடுவுறக்குரவை யிடுமினோ
குலமறைப்பகுதி யாகமத்தினொடு
கூடிடக்குரவை யிடுமினோ
கோதையீர்சிறிய கொங்கையீரளவில்
குமரியீர்குரவை யிடுமினோ. 102

### நிலைமண்டில ஆசிரியப்பா

மின்னவிர்ந் தாங்கு மிளிர்கதிர் வேலும்
பொன்னவிர் மஞ்ஞையும் பொருதகர்ப் பரியுங்
களிறுஞ் சேவலுங் கழறுவ பிறவும்
வெளிறுநீ றணிந்த மேனியும் விளங்கப்
பரசிவன் றிருமால் பதுமப் புத்தே
ளரசிலை போன்றே யவிர்தரு மல்குற்
சசிமினாள் கணவ னாதியர் சார்தரப்
பசிமுத லொழிந்த பல்லோர் சூழக்
கந்தநா யகனைக் கவின்றிகழ் பொதியை
மந்த மாருதம் வரப்பெறு மயிலத்
தந்தணர் போற்ற வமர்பெருந் தகையைச்
செந்தகைப் பைந்தகைத் தேவிய ரிருவர்
நடுவினி தமரு ஞான பண்டிதனை
மடுவினு மொருக்கால் வந்தசண் முகனை
யேத்துவா ரேத்து மியல்பினுக் கிசைந்த

நாத்துணை வாணி நவைதவிர் முதுநூல்
கற்றுழி வணங்குங் கான்மலர் படைத்த
முற்றுணர் புலவனை முருகக் கடவுளைக்
கனவினு நனவினுங் கண்டுவப் பெய்திச்
சினமறக் களைந்து திரும்பா முத்தி
வீட்டுறக் கருதி வியன்றமிழ் மொழியாற்
பாட்டுரைத் தணியும் பழங்கவு மாரர்க்
கணிமலர்ப் பொதும்ப ரடர்ந்தபல் குறிஞ்சியும்
பிணியறுத் தழியாப் பெருமை நல்கும்
புனிதப் பூசையும் புரைதவிர் நாட்டமுங்
கனியுமெய் யுணர்வுங் கழிக்கருந் திருவே. 103

### நேரிசை வெண்பா

மயிலமலைக் கோயிலுக்குள் வாழ்முருக வேளுக்
கயிலதனைப் போற்றுமவ னன்பாற்—பயிலுங்
கலம்பகத்தைக் கற்குமவர் கல்வியறி வென்னு
நலம்பகம்பெற் றுய்யு நரர். 104

## வாழி

### எண்சீர் விருத்தம்

அழகியசண் முகத்தொருமெய்க் கடவுள் வாழி
யமரர்குலா திபன்வளர்த்த வணங்கு வாழி
குழலுடைப்பூங் குயிலனைய குறத்தி வாழி
கொற்றவைவேன் மயில்சேவற் கொடிச்சீர் வாழி
பழமறையோ லிடுமயிலப் பொருப்பு வாழி
பத்திநெறிக் கவுமாரப் பண்பு வாழி
மழவிடைக்கோ னனையசிவ ஞானி வாழி
வையகமும் வானகமும் வாழி மாதோ. 105

மயிலாசலக் கலம்பகம் முற்றிற்று

உ

# கந்தர் கலித்துறை

## வை. தங்கமணி,

### விநாயகர் வாழ்த்து

தார்மேவும் வேத விநாயக! தங்க நிகரழக!
ஏர்கொண்ட உன்றன் இணையடி போற்றித் திருமுருகன்
பேர்பாடப் பேராற்றல் கொண்ட பெருமை தனையியம்பப்
பார்போற்றும் மூத்தோனே! பார்போற்ற ஈவாய்
தமிழினையே! 1

### சிவன் வாழ்த்து

முக்கண் இறையவா! முத்தேர் முறுவல் உமையவளும்
பக்கல் இருக்க உலகினைக் காக்கும் கருணைமிகு
தக்கன் மருக! இணையடி யேத்தினன் கந்தனது
மிக்கு மிகுநெறி பாடவே காத்திட வந்தருளே! 2

### தமிழ்மொழி வாழ்த்து

கன்னித் தமிழே கனியே அமுதே உயிர்நெறியே!
உன்னை யடைந்து முருகன் பெருமை பரவிடவே
எண்ணி யுனதடி பற்றினன் வந்துநீ இச்செயற்கு
நின்று துணைபுரி சங்கம் வளர்ந்த நறுங்கனியே! 3

### அவையடக்கம்

பிஞ்சுக் குழந்தை பிதற்றும் மொழியை மடுப்பவர்கள்
நஞ்சுக் கிளவி இதுவெனச் சொல்ல எவருமிலர்!
செஞ்சொற் கவிதை வடிக்க முனையும் எனதுசொலும்
கொஞ்சும் மழலைச் சொலதாய் மகிழ்ந்தே அணைத்திடுகே!

தண்மதி யுள்ளில் மறுவது கண்டு வெறுப்பவர்கள்
உண்டெனச் சொல்லப் புவிதனில் யாரும் இலையதனால்
கண்மணி யன்னான் முருகனின் தன்மை இயம்பலினால்
எண்ணியே கொள்வர் இலங்கறி வுள்ளோர் இதனையுமே! 4

## நூல்

முருகா! கயிலை மலையின் கொழுந்தே! பழியழிக்க
வருவாய்! வளரும் தமிழால் துதிக்க உனதுமனம்
உருகா திருப்பது வோமுறை! நாளும் நினதடியை
மருவா திருப்பின் வழியிலை என்றன் மனத்தினுக்கே! 5

மனமெனும் பொல்லாக் குரங்கை அடக்கும் குருபரனே!
தினமுனைப் பாடிப் பரவினன் என்றன் உளமதிலே
உனதடி வைக்கத் தடையது யாது தமிழ்வலவ!
கனிதமிழ்ச் சொல்லால் அழைப்பதால் ஓட வழியிலவே! 6

வழிபா டுனக்குத் தொடர்பே அதனால் மனமிளகி
அழிபா டிலாத மொழியா லுனக்கு நறைதொடையல்
தொழுது படைத்த தமிழுக் கிரங்கிப் படையுடனே
வழுவா தெழுந்த முருகன் எனக்கும் நலந்தருமே! 7

தருகென வேண்டின் தருவாய்! கொடுக்கும் குலமுதல்வா!
பருதிகண் டோடும் இருளென முன்வினை ஓடிடவும்
பருகிடும் நோயும் பசியும் அனைத்தும் விழியொளியால்
உருகிடச் செய்வாய் பழமே பழனித் திருமலையே! 8.

மலையுறை தேவா கொடுமைகள் செய்த அரக்கனுடன்
மலைந்துநீ விண்ணவர் துன்பம் அகற்றி நலமவர்க்கு
நிலைத்திடச் செய்தனை! இப்புவி மக்கள் கலியறிந்தும்
கலையிலா மாந்தர் நிலையினில் நீயும் இருப்பதென்னே! 9

இருப்பதும் உண்டு! மனத்தினில் நித்தம் உனதடியை
ஒருமுறை யாகிலும் எண்ணி அனுதினம் நோற்றிடுவார்க்(கு)
அருகிடும் புந்தியால் யான்என தென்பவர்க் கெப்படியும்
இருப்பதும் இல்லைநீ சண்முகா! என்றன் பிணியகற்றே! 10

பிணியத னால்வாடு கின்றேன் முருகா அலைகடலுக்
கணிமையில் நின்றாய்! நிதமுனைக் கேட்டோர்க்
கிடர்தவிர்த்தாய்

துணிவுடன் ஏத்திப் பணிவுடன் நின்றேன் அரவணைப்பாய்
பணியணி முக்கண் மகனே ஒறுத்தல் முறையிலவே! 11

முறையது கேட்டும் வினவா திருக்கும் வழியதனை
முறையாய் அறிந்தேன்! மருங்கினில் கொண்ட வடிவுடைய
நறைத்தமி ழன்ன வனிதைய ராலே எனைமறந்தாய்
துறைத்தீந் தமிழை முறையாய் உரைத்தோய் அடைக்கலமே! 12

அடைந்திட மாங்கனி ஆசையில் வந்தாய்! கரிமுகனார்
இடையினில் கண்டு கலங்கி நனிமிகு கோபமுடன்
புடைபெயர்ந் தாயே! நலந்தரு வெள்ளி மலையுறைவோய்!
கடையரும் சொல்லும் 'சினந்தவிர்' யாதுநீ சொல்லுவதே! 13

சொல்லுதும் கந்தா! முனியாது கேட்டெனை ஆண்டருள்க!
வல்லவா 'பெற்றோரே காசினி' என்பதை எண்ணிடாது
தொல்லுல கைவலம் வந்தநீ அன்று பிரணவத்தை
ஒல்லையில் தந்தைக் குரைத்தனை என்பதும் எப்படியே! 14

எப்படி யாகிலும் என்றனை யாட்கொள வேண்டுமையா
தப்பது பிள்ளைகள் செய்யினும் தாயவள் தண்டனையை
எப்படி நல்குவள்! என்றனுக் குத்தாயும் தந்தையும்நீ!
கப்பிடும் வல்வினை கொன்றவா என்னை
அணைத்தருளே! 15

அணைத்தெனை யாண்டருள் வெள்ளி மலையுறை வேலவனே
துணையெனக் கேதுமில் நின்னடியன்றி; விரைவுடனே
புணையதாய் வந்தெமைக் காத்திடு! உன்றனைப் பாடிடவும்
இணைமனை யாளொடு நின்படை வீட்டையும் பாடிடவே. 16

பாடிப் பரவின கீரனுக் குப்படை வேலுடனே
நாடி விரைந்தவண் சென்றுநீ இன்னலை நீக்கிவிட்டாய்!
வாடி வதங்கிடும் நானுமே உன்னடி பாடுகின்றேன்
ஓடி வருகவே உன்னடி என்முடி சேர்ந்திடவே! 17

சேர்ந்திட வேண்டும்நான் உன்பதம் வெள்ளி
மலையுறைவோய்
சீர்பெறும் நாட்டினில் ஒக்கும் பிறப்பதெல் லாவுயிர்க்கும்
பேர்பெறும் ஆண்டான் அடிமைகள் என்னும் இருபிரிவாய்
யார்படைத் தார்குகா? தேவையோ இச்செயல்
இப்புவிக்கே! 18

இப்புவி மாந்தர்கள் இன்னலு டன்பசி யாலுமவர்
கப்பிய வஞ்சகர் கைத்தலம் பட்டுக் கதிகலங்கி
எப்படி வாழ்வது கந்தா? கடம்பா எனவவர்கள்
செப்பிய சொல்லும் புகுந்ததோ? ஓடிவா வேலுடனே! 19

வேல்விழி மாதர்கள் வள்ளிதெய் வானையும் மஞ்ஞையொடும்
மால்தவிர் வாரணம் வாம நெடும்புய கைகளுடன்
பால்வடி யும்முகம் பங்கய மாமலர் பாதமுமே
மேல்வழி காட்டிடும்! காண வருகுவீர் மானிடரே! 20

மாந்தர் களேசிவ செல்வனைப் பாசமாய் வேண்டுவதால்
சாந்தந் தவழும் முகமும் மதியும் திருவுடனே
ஈந்து மகிழும் இனிய பெருமையும் இப்புவியில்
மாந்து விரோதுக செந்தமிழ் வித்தகன் நற்பெயரே! 21

நற்பெயர் நாவால் நவிலுவ தின்பம்; நலிவழியப்
பொற்பதி போற்றிப் புகலுவ தின்பம்; பொழுதுமவன்
நற்பணி யேத்தி இயம்புவ தின்பம்; முருகனென்றால்
நற்கதிர் முன்னர்தன் புல்பனி போல்வினை ஓடிடுமே! 22

ஓடியே வந்தேன் உனதெழில் கண்டு மனமகிழப்
பாடியே யுன்னைப் பணிந்திட முத்தமிழ் பெற்றிடவும்
ஓடிவா என்னுள் வினையகல் வெள்ளி மலையுறைவோய்
ஆடிய மஞ்ஞையில் ஏறிய கோலமே கண்டிடவே! 23

கண்ணுள் புகுந்தென் கருத்துள் நடமிடும் வேல்முருகா!
எண்ணும் பொழுதில் விரைந்திவண் வந்து நலந்தருவித்
தெண்ணும், எழுத்தும் இனிதாய் எனதுளம் நின்றிடச்செய்
தண்ணடி பற்றும் அடியவர் உள்ளத் துறைபவனே! 24

உறையிமம் கூடும் உடர்சிவை நின்று நலிவழிக்கும்
கறைமிடற் றண்ணல் உலகவர் துன்பம் இரிந்திடவும்
நறைவடி சோலைப் பதிகளில் தங்கப் பணித்தனனே
மறையது போற்றும் மயிலுடன் நீயெமை ஆண்டருளே! 25

ஆனினம் நீருணப் பொய்கையுள் சென்றிட அங்கிருந்த
மீனினம் அஞ்சி வெருவிக் குதித்துமே அங்குநின்ற
தேனினம் சொட்டும் பலவின் கனிகளை வீழ்த்தவந்த
ஆனினம் ஓடிட மீன்மகிழ் கந்தன் கலைமலையே! 26

கண்பெற் றவரெனின் கந்தனைப் பார்த்து மகிழவேண்டும்!
பொன்பெற் றவரெனின் ஏழைகள் இன்னலைப்
போக்கவேண்டும்!
பண்பெற் றவரெனின் பாடி யுருகிப் பரவவேண்டும்!
திண்பெற் றவரெனின் பொற்பணி போற்றி யிருப்பதுவே! 27

இருப்பதும் சின்னாள் அதற்குள் கடலெனப் பாவமதைப்
பெருக்கிடச் செய்தல் பிறவிகள் கூடும்! உடனதனால்
முருகனின் நன்னடி பற்றி அவனின் திருப்பெயரை
ஒருமுறை ஓதின் ஒழிந்திடும் தொல்வினை நாட்டவரே! 28

நாட்டில் நலந்தரு நல்மனை இல்லாள் புதல்வரொடும்
கோட்டி இலாதிரு வீரமும் பெற்றிடும் மன்னரேனும்
காட்டில் வதிபவர் ஆயினும் வல்வினை நீக்கிநல்ல
வீட்டின் இடந்தரும் வேலன்கை வேலன்றி யாதுவேறே! 29

யாது மறியாது நொந்து மனமிக வாடிடநான்
மாது புணர்ந்து மகிழ்ந்து படையுடன் நிற்பவரே
காது செவிடோ? முறையது கேட்க மனமிலையோ?
போது பதமதைத் தந்தெனை யாட்கொள வேண்டுமையே! 30

வேண்டுவ தொன்றுண்டு வேலவ! கள்வடி சோலைமலி
மாண்புறு குன்றம் பழநியில் நீயே தனிமையிலே
ஆண்டியாய் நின்றாய்! உலகினில் யாதும் நிலையிலவே
காண்மனி தாவெனக் கூறவோ நின்றாய் தமிழ்ப்பழமே! 31

பழமுதிர் சோலைப் பழமே தமிழே பெருநிதியே!
பழனநி லங்களும் முக்கனி நல்கும் முதுநிலமும்
அழகுறச் சூழ்ந்த பதியது வெள்ளி மலையதனில்
தொழுதிட நின்றாய் வடிவேல் குமரா குருபரனே! 32

குருவாய் படைத்தற் றொழிலதைக் கொண்ட பிரமனவன்
மருவா தவனே படைத்திட நையப் பிணித்தவர்க்கும்
குருவாய் இலங்கும் குருவே! உலகினில் உனதுநெறி
பெருக அடியவர் உள்ளில் நிறைந்திடும் நல்லறிவே! 33

அறிவினுக் கேற்ற அறிவாய் இலங்கும் தலைநிலத்தோய்!
வறியவர் செல்வர் அறமறம் யாவும் எவர்படைப்பு!
அறுமுக மக்கள் அறிவால் விழைந்த பிழையெனலோ!
அறிவுடை யோர்கள் அறிந்திட உன்னையே எண்ணுவரே. 34

எண்ணியே பன்முறை கட்டிட எண்ணினம் நின்றிடாது
கொண்டலெ னத்திரி யுன்றனைச் சேர்ந்திடத் திட்டமுடன்
தண்டமிழ்ப் பாவினால் கட்டினன் கந்தா பிழையொதுக்கி
அண்ணலே காத்திடு! பேதையேன் உன்னடி சேர்ந்திடவே! 35

சேர்மதி கொண்ட சிவனுடைச் செல்வன் திருப்பெயரை
ஓர்தலாய் எண்ணி இயம்பிடில் வந்த வினைகளுடன்
ஆர்வமாய் நம்மை அணைந்திடும் கேடும் அகன்றுநிதம்
சீர்பெறும் வீடும் சடுதியில் நம்மை யணைந்திடுமே! 36

அணைப்பதும் உன்செயல் காப்பதும் உன்செயல் காத்திடவே
பணைப்புயச் செல்வ கயிலையின் கண்ணே துயரெனக்கே
இணைத்தது போதும் பொறுத்திடேன் கட்டி அணைத்தெனக்குத்
துணையுடன் வந்தென் பிறவி அறுத்திடு வேல்முருகே! 37

வேல்கொண்ட வேலவா! பாரினில் மானுடன் பெண்ணொருவர்
வேல்வீச்சைத் தாங்கிட மாட்டாது நிற்பதும், நித்தமுன்னில்
மால்கொண்டு வள்ளிதெய் வானையும் தாக்கிடும் வேற்கணையை
நால்வாயன் தம்பியே எப்படித் தாங்குவாய் செப்புவாயே! 38

செப்புவ துன்றன் தொழிலினை என்னால் இயன்றிடுமோ?
அப்பனே கேட்கப் பிரணவம் கூறிய சான்றவனே!
எப்படிச் செப்பினை ஒப்புமோ இப்புவி! தப்பதுவோ!
செப்பமாய் இங்கு நவின்றிட யாருக்குங் கூடிடாதே! 39

கூடிட வேண்டியே வள்ளியை நீயும் கரிமுகனை
நாடிய வேலவா நல்லறம் இன்றி இடர்புரிந்த
கோடிய எண்ணத்தால் கொள்கையில் சூரனைக் கொன்றசெயல்
கோடியே! வீரரெ னின்றுணை வேண்டுமோ? விந்தையிதே! 40

விந்தம் உடைத்துநக் கீரனைக் காத்திட வந்தகுகா!
சந்தம் மிகுதமிழ் இன்னிசைப் பாட்டதைக் கேட்டிடத்தான்
வந்தாய்! அலாத பிறஅழைப் புக்கு வருவையோநீ
கந்த மிகுமலர் சோலை நிறைந்த மலையரசே! 41

மலையெலாம் உன்றன் தலமெனக் கொண்டு நடைபயிலும்
கலைவிழி வள்ளி மனங்கொள் கணவ! மனத்தினிலே
நிலைபெற நின்று கனிதமிழ் தந்து பலவளமும்
நிலைத்திடச் செய்வாய் உனைநான் மறவேன்
மனத்தகத்தே! 42

மனத்தாலே எண்ணிநல் வாயால் இயம்பிப் பொழுதுமவன்
கனிவான தோற்றமும் கண்டு நெகிழ்ந்து துதிப்பவர்க்கே
இனஞ்செய்த பாவம், இடர்யாவும் நீக்கி மலைக்குமரன்
இனிதான வாழ்வைத் தருவான் துதியுங்கள் முத்தியாமே!

முத்தனின் கண்வந்த கந்தா! கயிலை வளர்கொழுந்தே!
பத்தியாய் நாரதன் செய்வேள்வி வந்த தகரதனை
அத்தமே கொள்ள வலியழித்தாய்! பாரில் இத்தகர்போல்
எத்தனை! எத்தனை! மாய்த்திட இங்குநீ ஓடிவாவே! 44

ஓடித் திரிந்த முகிலதைக் கூட்டியே கூடலாக்கிப்
பாடிப் பணிந்திடச் செய்தவன் தேவிக்குப் பாதியீந்தான்!
பாடி மனைகளில் வெண்ணையை வவ்வியோன் மார்பு
மீந்தான்
நாடி மணந்தநீ எவ்விடம் நல்கினை செப்புவாயே! 45

செப்பு நகிலவள் வள்ளியின் உள்ளம் நிறைந்தவனே!
உப்புக் குறைந்திடும் பண்டமாய் ஏழைகள் இப்புவியில்
ஒப்புச் சொலாத்திருக் கொண்டவர் செய்திடும் இன்னலதால்
வெப்பு நாகென வாழ்வதை நீக்கிடு தண்ணியோனே! 46

தண்மதி வேணியில் தாங்கியோன் வெள்ளி மலைவதியும்
கண்மணி வாவெனக் கட்டி அணைத்துமே முத்தமிட
ஒண்ணகை அன்னையும் அச்செயல் செய்திட! ஊடலற
எண்ணியே நீங்க இருவரும் கொள்ள நகைப்பவரே! 47

நகையை நகையாய் அணிந்த குறமகள் வள்ளியவள்
'பகையை அழித்துப் பதந்தரு பாதம் கழுவுதலே
தகைமை' எனவே நினைவது கொண்டிட வள்ளியாறு
வகையாய் நனைக்கும் வளமிகு வெள்ளிச் சரவணனே! 48

சரவணா! சண்முகா! உன்னை மனத்தாலும் எண்ணிடாத
உரம்பெறு சூரனை எண்ணி வியந்திடப் பேரெழிலை
உருவுடன் காட்டினாய்! நாயினேன் எண்ணாத நேரமில்லை
பரிவுடன் என்னிடர் போக்கிட உன்னெழில் காட்டுவாயே! 49

காட்டிலே வந்து கொடியதோர் பாலை நிலத்தையுமே
வீட்டருள் உன்பதம் பட்டதும் கெட்டது பாலைநிலம்
நாட்டினில் எங்கணும் நோக்கினும் நீரின்றி வாடிநிலம்
வாட்டிவ தைக்குதே கந்தனே பண்ணையதாக்குகவே! 50

ஆக்குவ துன்செயல் என்னை அணைப்பதும் நீயதனால்
தூக்கிடும் கைதனில் வேலுடன் வெள்ளி மலையதனில்
நீக்கமில் நிற்போய் உனதடி பற்றினேன் ஐயனேயென்
போக்கிடு துன்பத்தை! போக்கிடம் வேறிலை என்றனுக்கே! 51

என்றனு ரையே இறையவர் யாத்த பனுவலுக்குச்
சந்தமும் சீர்த்தியும் பெற்றெதென் றெண்ணிய கற்றவர்முன்
முந்தியே மூங்கையாய் வந்து முழுப்பொருள் தந்தவனே!
செந்தமிழ் வித்தகா என்றமிழ் கேட்டிட வந்தருளே! 52

வந்தருள் என்னை அணைத்தருள் கந்தா எனவெருவி
நொந்துசற் புத்திரன் கூவ விரைந்து குபகரிக்கு
முந்திய தோற்ற மளித்தாய் சரவண! இப்புவியில்
அந்தமே நல்கும் பசிக்கரி மாய்த்திட மஞ்ஞையேறே! 53

மஞ்ஞைசெ லுத்திடும் வெள்ளி மலையுறை வேலவனே
அஞ்சிய கேடனின் சிந்தையில் தோன்றிச் செருவழிக்க
விஞ்சிடும் மந்திரம் கூறி மறைந்தவா என்றனது
வெஞ்சுர வாழ்வினை நீக்கிடக் கூறிடு மந்திரமே! 54

மந்த மகற்றி மனத்தைக் கவர்வதில் ஒப்புமையில்
சந்தத் தமிழினைக் கேட்டிடக் காட்டினை நல்சிகண்டிக்(கு)
என்றன் நிலையை உணர்ந்து சிவதா னுவையளித்தாய்
சந்த மிகுதமிழ்ப் பாவல உன்னை வழுத்துவனே! 55

வழுவில் நிதியாம் உனதடி பற்றிடா திவ்வுலகில்
புழுவாய்க் கலிதரு மண்பெண் இணைந்த பொருட்களிலே
கொழுக்க நினைந்து கொடுமைகள் செய்வோர் மனமழிய
எழுக! வருக மயில்தனில்! ஞானச் சிவமகனே! 56

சிவனைத் துதித்திடும் வாயால் உனதடி பாடுவதில்
சிவனின் மகனே அறைந்தனன் பொய்யா மொழியவனின்
நவர சமிகு தமிழ்ப்பா மடுக்கவே வேடனானாய்
அவமோ எனது கவியினைக் கேட்க வருவதுவே! 57

வருந்தினான் தாரகன் செய்ததோர் தீமையை எண்ணிநிதம்
திருமகள் கொண்கனும் அன்னவர்க் காறு முகமதுமே
வருமெனச் சொல்ல! உதவிய கந்தா! உனதடியை
விரும்பியே கொண்டேன் வருவாய் விரைந்து நலந்தரவே! 58

நலந்தரு செல்வன் நலிந்திடச் செய்து பிரிந்ததாலே
புலந்துமே வாடினள் அண்ணலே பிள்ளை அருளெனவே
புலம்பியே நின்ற மகேசை மடியில் துயின்றவனே
இலமெனக் கேட்டும் அமைதியோ! ஓடிவா வேல்முருகே! 59

வேலின் வழியே பழிதீரும்; நல்ல தடம்புயத்தால்
காலன் பகையும் வரவஞ்சும்; ஆறு திருமுகமும்
மூலம் அறுக்கும் பிறவிக்கு; மென்மலர்ப் பாதமுமே
நூலின் இறுதி நலமுடன் சேர்க்கும் உணர்வமுதே! 60

உணர்வெள்ளம் தேக்கி உடலெலாம் வாட்டிப்
பகையைவெல்ல
மணம்வீசும் சோலை அணிசூழ்ந்த வெள்ளி மலையதனில்
அணியாக நின்ற குமரா பகீரதன் நோன்பிருக்கத்
துணையாக நின்றவா! தண்டமிழ் வெம்பகை நீக்கவாவே! 61

நீக்குக என்றுயர் என்றுனை வேண்டியும் கற்சிலையாய்
நோக்கிட நின்றனை! வஞ்சமும் பாவமும் செய்வதுதான்
ஆக்கமாய்க் கொண்ட கருணை இலாருக் கருளுவதன்
நோக்கமென் கூறுக! வெள்ளி மலைவாழ் சிவமகனே! 62

'சிவமே முருகு! முருகே சிவமாய்' பிரிவிலதாய்ப்
புவியில் இலங்கப் பழனியில் ஒன்றாய் உலகமெலாம்
உவந்தே புகழத் தனியாக வந்த அறுமுகனே
தவிக்கும் துயரை அகற்ற அருள்வாய் உடனடியே! 63

உடலதை வாட்டியே கூறிட்டா லும்நமன் ஆவிபற்ற
உடனடி வந்தாலும்; நீரில்லாக் காட்டினில் நின்றபோதும்
கடலதில் கற்கட்டிப் பூட்டிட்டா லும்நம் சரவணனின்
வடிபெயர் உள்ளில் நினைத்திடில் யாவும் பறந்திடுமே! 64

பறந்தலை யன்ன மனமே இருந்ததால் 'வென்றிமாலை'
இறந்திட ஆழி நெருங்கிய போது விரைந்தவர்க்குச்
'சிறந்திட எங்கும் கவியாய் விளங்குக' என்றனையே
வறியனெ னக்கும் அருளுதி வெள்ளி மலையரசே! 65

மலையைச் சுழற்றத் துணையாய் இருந்த அரவுதனின்
ஒலியில் புரையை அகற்றிட வந்தாய் தமிழ்ப்புலவ!
மலநோய் பிடித்துத் துடியாய்த் துடிக்கும் அறிவிலியின்
கலிபுண் அகற்ற விரைந்து வருக மயிலுடனே! 66

மயில்மீது நின்று விளையாடும் கந்தா பகைமையற
அயில்வேலை நாளும் மறவா திருக்க மனதினிலே
முயல்வோரைக் காக்கப் படையோடு வந்து துணையிருக்கும்
தயவுள்ள எங்கள் தமிழ்த்தெய்வ மேவாழ்த்திப்
போற்றுதுமே! 67

போற்றும் பணியே பணியெனக் கொண்டு தமிழறிந்த
ஆற்றல் மிகுந்தநல் ஔவைக் கருளக் கனிகொடுத்துப்
பேற்றை யளித்த பழமே பழனி மலைவதிவோய்
சாற்றும் எனது பனுவல் தனக்கும் கனியருளே! 68

கனியிதழ்ப் பெண்ணின் கடைவிழி காட்டிடில் எச்செயலும்
இனிதுடன் செய்வர்! இடுக்கண் வரினும் துயரறியார்!
புனிதநற் செல்வி புரந்தரன் பெண்ணின் மனம்நெகிழ
முனிவுடைச் சூரனைக் கொன்றாய்! பிறிதிதற் கேதுவேறே! 69

யாதொன்றும் இல்லாத என்னையே பாடப் பணித்திடுதல்
தீதொன்றும் வாராது காத்திட நிற்பவா கந்தவேளே
போதன்ன மெல்லடி மாமறை போற்றிடும் பிஞ்ஞகன்தன்
நாதம்நீ! நாடுவோர்க் கெல்லாம் கொடுப்பவா!
விந்தைதானே! 70

விந்தை புரிந்திடும் ஆசையை விட்டவன் இவ்வுலகில்
கந்தன் துணையினால் இம்மையில் எல்லாப் பெருமைகளும்
வந்து நிலைகொளும்! கொல்கரி சென்றுணும் நல்வயல்போல்
சந்த மழிந்துமே யல்லவர் வாழ்வு துயர்படுமே! 71

துயரம் அழியும், பிறவியகலும், பிழைதவிரும்!
கயிற்றால் உயிரைப் பிணித்திடும் கூற்றதும் ஓடிவிடும்!
மயில்குயி லாலும் இளமரக் காவுறை ஆறுமுகன்
இயலை இயம்பிடும் பாட்டினைச் சொல்லிடில்
இங்கிருந்தே! 72

இங்கிதம் பொங்கிடும் இன்றமிழ் நாட்டின் இயல்பொருவன்
தங்கிடும் தன்மையைச் செப்பிடில் நிற்றல் ஒருத்திமனம்

எங்குமே நிற்கும் இறைவா இருவர் மனதினிலும்
தங்குவ தெப்படித் தங்கினாய் வெள்ளி மலையரசே! 73

மலைகளில் தங்கிக் குறையதைப் போக்கும் குருபரனே!
கலைமலி யுன்றன் செயலதை நானே இயம்பிடிலே
மலைநறை யன்ன மனமெலாம் ஊறி உருவெடுத்துக்
கலியெனும் துன்பத் தடையதைப் போக்கி நலந்தருமே! 74

நலந்தரு கந்தன் பெயரை நினைப்பின் அனுதினமும்
உலகினில் சேராப் பெருநிதி சேரும் வியாதியதும்
இலையிலை! எப்போதும் துன்பம் அடையார்! பரகதியும்
நலமுடன் இன்றே இணைந்திடும் எண்ணித்
துதிப்பவர்க்கே! 75

துதிப்பவர் உள்ளம் நிறைந்திடும் ஆறு திருமுகமும்
கதிபெற ஒன்றாய்ப் பலவாய் அருவுரு வாயிலங்கி
முதலதும் ஈறும் இலவாய் இயங்கி இயங்க வைக்கும்
மதிகொடு தேவே அடைந்தேன் அடைந்தேன் உனதடியே. 76

உனதடி யன்ன மலர்ந்திடும் ஆம்பலும் தாமரையும்
மனமகிழ் சோலை தடாகமும் முக்கனிப் பண்ணைகளும்
இனயினச் சாலியும் தென்னையும் கற்பகக் கூட்டமதும்
தனியெழில் சேர்த்திடும் வெள்ளி மலையுறை கந்தவேளே! 77

கந்தனே காலன் கடாவினில் ஏறி உயிர்பறிக்க
வந்திடு முன்னே அணிமயில் ஏறித் திருக்கரத்தில்
சுந்தர வேலுடன் வந்தெனைக் காத்திடு! சங்கமதில்
செந்தமிழ் ஆய்ந்தவா! என்னுரை கேட்டிடு வள்ளிகோனே! 78

வள்ளியின் உள்ளத்தைக் கொள்ளைகொள் கள்வனே!
இன்றுவரை
துள்ளிடும் இந்நலம் பெற்றதில் என்னுடை வாழ்வினிலே
எள்ளலும் தொல்நகை பாவுமே வாட்டுதும் இன்னிலையைத்
தள்ளிட ஓடிவா! விண்ணவர் கேடதைத் தீர்த்தவனே! 79

தீர்ந்திட வல்வினை வேண்டுமேல் செவ்வேள் திருப்புகழை
ஓர்ந்துமே நீயும் இயம்புக! இல்லையேல் மங்கலநாண்
தீர்ந்தவள் வாழ்வென இப்புவி வாழ்வுனக் காகுமப்பா!
ஆர்த்திடும் தண்டையும் வேலதும் மஞ்ஞையும் சேவலுமே! 80

சேவலு டையவன் செங்கோடன் பொன்னடி போற்றிநிதம்
ஆவலாய் ஏழை அழிபசி நீக்கிடில் அச்செயலே
மாவலி கொண்டவன் காலன் உனைச்சேர வந்திடாமல்
தேவனெ னப்படும் பேற்றினைப் பெற்றிடச் செய்திடுமே! 81

செய்யவள் அன்ன திணைப்புன வள்ளியை வேட்டவனின்
நொய்மனம் கொள்ளும் வழியினில் நாடியே முத்தமிழால்
உய்யவ வன்பெயர் கந்தா கடம்பா எனவினைகள்
பிய்ந்திடும்! வேறெதும் நல்குதல் இல்லையாம் இச்செயலே! 82

இச்சை யுடன்வள்ளி கொங்கை விரும்பி மணமுடித்த
விச்சை யுடையநல் மங்கலச் செல்வனைப் போற்றிநிதம்
அச்சங் கொடுபொருள் நின்றிட ஈந்திடில் பேறுகிட்டும்!
நச்சின் திருட்டில் கொடுத்து மயங்கி அழிபவரே! 83

அழிவிலாக் கல்வியைப் பெற்றாலும்; யாவும் அளிக்கவல்ல
வழுவிலாச் செல்வமே சேர்ந்தாலும்; நாட்டில் பேரரசாய்
செழுமையாய் வாழ்ந்தாலும் நன்றாம் பணிதல்
பணிதலின்றேல்
உழன்றிட வேண்டும் உலகினில்! மக்காள் பணிகவின்றே! 84

இன்சொல் மொழிநவில் வள்ளியைப் புல்லும்
வடிவுடையோய்
நன்மொழி பாட்டினால் சொன்ன அருண கிரிதனக்கு
நன்மை யடைந்திட மஞ்ஞையி லேறி யருளியவா!
இன்னும் தடையேன் எனக்கும் நலந்தர மால்மருகே! 85

மால்கொண்ட சூரனும் வெற்பும் அகந்தை அழித்தொழிக்க
வேல்கொண்டு தாக்கி மிசைநிலத் துன்பம் துடைத்தவனே!
நால்வாய்ப் பிடித்த கரும்பென மக்கள் இடரடைய
ஏர்கொண்ட செல்வா! எழுந்திரு நீக்கிடர் எம்பிரானே! 86

எம்மான் எனதுளம் நின்ற உமையாள் திருமகனை;
விம்மும் முலையாள் குறமகள் கொண்கனை; வானவர்க்கும்
இம்மா நிலத்தும் இறையை விழிகள் பலவனந்தம்
அம்மயி லேறும் அழகனைப் பார்த்திட வேண்டுவதே! 87

வேண்டிடும் போது வினையறத் தோன்றும் முழுமுதலே
மாண்டிட நின்றிடும் மக்கட்குச் செய்யும் உதவியதே

தாண்டிடும் வேலின் முருகன் தனக்கது செய்வதென
யாண்டறி வாரிதை! காசின் பெருமையைக் கண்டவரே! 88

கண்ணெனப் பேணிடும் பெற்றோரும் மற்றோரும் மக்களுடன்
தண்ண ளியாலென்றும் தாயாகக் காக்கும் மனைவிவிட்டு
வன்கான் புகுந்து வழிபடல் நன்றில்! மனையறத்தால்
கண்ணன் மருகன் இணைதாள் பணிதல் இனியதுவே! 89

இனிய கனிகள் உதிர அதனை உணவெனவே
நினைத்துக் குதிக்கும் வரால்மீனை நாரை எடுத்ததனை
மனதுக் கினிய மனையாட் கினிதாய்க் கொடுத்தணைக்கும்
கனிவாய் இனிக்கும் முருகனார் வெள்ளி மலையழகே! 90

அழகிய மாதர் கனிந்திடும் செவ்வாய் பணைநகிலில்
ஒழித்திடும் பாம்புப் படமது அல்குல் இடத்தினிலும்
அழியவே சிந்தை விடுத்த அருண கிரிதனக்கும்
பழவினை தீர்த்தாய்! அடியேன் பிழையா தருள்முருகே! 91

முருகா சிவனின் மகனே திருமால் மருகவனே
ஒருகை முகனின் இளையோய்! உடலம் இழைத்துமிக
உரம தகன்று நடைபிண மாக நலிதலுற்றும்
கருணை இலையோ! உடனே வருவாய் உதவிடவே! 92

உதவிட வேண்டும் குறத்தி மகளே உனதுசொலை
உதறிய தில்லை முருகன்! அதனால் எனதுநிலை
இதமுடன் உள்ளம் புகும்படி கூறி அருகிருந்து
கதிதரக் கூறு அருளுடைத் தாயே தமிழ்மகளே! 93

தமிழினால் உன்னைப் பழித்தாலும் பாச முடனருளும்
இமிழ்கடல் ஓரம் இணைந்த கரும்பே சரவணனே
எமதுடைப் பாட்டும் பழித்தலே யாயினும் வந்தெனக்கு
நமன்துயர் நீக்கா திருந்திடல் ஏதும் வழியிலையே! 94

இலையிலை என்றே இரப்பவர்க் கீயா இழிமனிதர்
நலமுடன் நல்ல நிலையுடன் நாட்டில் வாழுவதும்
தலந்தல மாக வணங்கியே வந்தும் இழிநிலைகள்
நிலைத்துமே துன்பந் தருவதேன் வெள்ளி மலையரசே! 95

மலைவாழும் செங்கோட! யாவாக்கும் தெய்வமே!
விண்ணிலுள்ளோர்
தொலையாத துன்பத்தைப் போக்கச் சரவணப்
பொய்கைதன்னில்
குலையாத ஆட்டமே ஆடிய மைந்தனே பாரிலுள்ளோர்
கலையில்லாத் தன்மையைப் போக்கிட ஓடிவா கந்தவேளே! 96

கந்தனே வெள்ளி மலைவாழும் ஒள்ளிய நற்சுடரே!
சந்தமுள் வேலதால் சூரனை வேலையை வெற்புயாவும்
வெந்திடச் செய்தவா தெய்வானை வள்ளியும் சேர்த்தணைத்து
முந்தியே வந்தெனை ஆண்டிடு செந்தமிழ்ப் பாவலனே! 97

பாவலன் சூரனை வேரற மாய்த்தவன் வள்ளிபுணர்
காவலன் சொன்ன நெறிப்படி வாழ்பவர் வாழ்பவரே!
மேவலர் எல்லா வளமும் இருந்தும் படுதுயரம்
மேவிட இங்கு பிறந்தும் இறந்தும் அழிபவரே! 98

அழிவிலா வேலன் குமரன தாணையி னால்தமிழை
வழங்கிய மாசில் சிவதா ணுலிங்கம் கருணையதும்
தொழுபவர்க் கீயும் முருகன் அருளும் இருக்கையிலே
கழுத்ததைப் பூட்டிடும் காலனுக் குங்கூட அஞ்சிடேனே! 99

அஞ்சி யழைக்கவே கீர னியம்பிய சொற்றனக்கு
மஞ்ஞை யிலேறிப் படையுடன் தோன்றி இடர்தவிர்த்தாய்
தஞ்ச மடைந்துமே உன்னருள் பெற்றிடப் போற்றி யென்றன்
நெஞ்சம் நெகிழக் கலித்துறை பாடினன் தோன்றுவாயே! 100

தோன்றி யடியவர் துன்பம் அகற்றும் சிவகுமரா
சான்றோர் தலைவா! பொறிகள் அடங்கி முதுமைகண்டு
தேன்மொழி யாளொடு மக்கள் உறவும் அனைவருமே
'ஆன்மா நலமுடன் கொள்க' எனுமுனே கொள்முருகே! 101

கொண்டல் மருகன் புகழைச் செவிகளே கேட்டிடவும்,
கண்கள் அழகினைப் பார்த்திட வாயோ அவன்புகழைப்
பண்ணால் இசைத்திட, கைகூப்பிச் சென்னி பதம்வருட
எண்ணி நினைத்துப் பணிந்திடில் நன்மைகள் தங்கிடுமே! 102

தங்கிட எண்ணியே குன்றம் அலைவாய் அவைகளுடன்
பொங்கிடும் நன்குடி ஏரகம் நச்சியே குன்றுதோறும்

மங்களம் நல்கிடும் சோலையும் தங்கிய வேலவனே!
பங்கமில் என்றன் மனமதும் வீடெனக் கொண்டிடிலே! 103

கொண்டமு வருடிடும் குன்றம் நினைந்து பணிபவர்க்கு
நண்ணும் வரங்கள் வழங்கிடும் வள்ளலின் வாரணமும்
திண்ணழி வேலதும், மஞ்ஞையும் வாழ்க! கலித்துறையை
எண்ணிப் படிப்போர் அனைவரும் வாழ அருள்முருகே! 104

**கந்தர் கலித்துறை முற்றிற்று**

உ

# ஸ்ரீ ஸ்கந்தகுரு கவசம்

**ராகம்: நாட்டை**

கலியுகத் தெய்வமே கந்தனுக்கு மூத்தோனே
மூஷிக வாகனனே மூலப் பொருளோனே
ஸ்கந்தகுரு கவசத்தை கலிதோஷம் நீங்கிடவே
திருவடியின் திருவருளால் செப்புகிறேன் காத்தருள்வாய்
சித்தி வினாயக ஜெயமருள் போற்றுகிறேன்
சிற்பர கணபதே நற்கதியும் தந்தருள்வாய்
கணபதி தாளிணையைக் கருத்தினில் வைத்திட்டேன்
அச்சம் தீர்த்தென்னை ரெக்ஷித்திடு வீரே 8

**ராகம்: நாட்டை**

ஸ்கந்தா சரணம் ஸ்கந்தா சரணம்
சரவணபவ குஹா சரணம் சரணம்
குருகுகா சரணம் குருபரா சரணம்
சரண மடைந்திட்டேன் கந்தா சரணம்
தனைத்தா னறிந்து நான் தன்மயமாகிடவே
ஸ்கந்தகிரி குருநாதா தந்திடுவீர் ஞானமுமே
தத்தகிரி குருநாதா வந்திடுவீர் வந்திடுவீர்
அவதூத ஸத்குருவாய் ஆண்டவனே வந்திடுவீர்
அன்புருவாய் வந்தென்னை ஆட்கொண்ட குருபரனே
அறம்பொரு ளின்பம் வீடுமே தந்தருள்வாய்
தந்திடுவாய் வரமதனை ஸ்கந்தகுரு நாதா
சண்முகா சரணம் சரணம் ஸ்கந்த குரோ 20
காத்திடுவாய் காத்திடுவாய் ஸ்கந்தகுரு நாதா
போற்றிடுவேன் போற்றிடுவேன் புவனகுரு நாதா
போற்றி போற்றி ஸ்கந்தா போற்றி
போற்றி போற்றி முருகா போற்றி
அறுமுகா போற்றி அருட்பதம் அருள்வாய்

தகப்பன் சாமியேஎன் இதயத்துள் தங்கிடுவாய்
ஸ்வாமிமலை தனில் சொன்னதனைச் சொல்லிடுவாய் 27

**ராகம்: சகானா**

சிவகுரு நாதா செப்பிடுவாய் ப்ரணவமதை
அகக்கண் திறக்க அருள்வாய் உபதேசம்
திக்கெலாம் வென்று திருச்செந்தில் அமர்ந்தோனே
ஆறுமுக ஸ்வாமியுன்னை அருட்ஜோதியாய்க் காண
அகத்துள்ளே குமரா நீ அன்புமயமாய் வருவாய்
அமரத் தன்மையினை அனுக்ரஹித் திடுவாயே
வேலுடைக் குமரா நீ வித்தையும் தந்தருள்வாய்
வேல்கொண்டு வந்திடுவாய் காலனை விரட்டிடவே
தேவரைக் காத்த திருச்செந்தி லாண்டவனே
திருமுருகன் பூண்டியிலே திவ்யஜோதி யானகந்தா
பரஞ்ஜோதி யுங்காட்டி பரிபூர்ண மாக்கிடுவாய்
திருமலை முருகாநீ திடஞான மருள்புரிவாய்
செல்வமுத்துக் குமரா மும்மல மகற்றிடுவாய் 40
அடிமுடி யறியவொணா அண்ணா மலையோனே
அருணாசலக் குமரா அருணகிரிக் கருளியவா
திருப்பரங் கிரிகுஹனே தீர்த்திடுவாய் வினைமுழுதும்
திருத்தணி வேல்முருகா தீரனாய் ஆக்கிடுவாய்
எட்டுக்குடிக் குமரா ஏவல்பில்லி சூனியத்தை
பகைவர் சூதுவாதுகளை வேல்கொண்டுவிரட்டிடுவாய்
எல்லாப் பயன்களும் எனக்குக் கிடைத்திடவே
எங்கும் நிறைந்த கந்தா எண்கண் முருகாநீ
என்னுள் ளறிவாய் நீஉள்ளொளியாய் வந்தருள்வாய்
திருப்போரூர் மாமுருகா திருவடியே சரணமய்யா 51
அறிவொளியாய் வந்துநீ அகக்கண்ணைத் திறந்திடுவாய்

**ராகம்: கல்யாணி**

திருச்செந்தூர் ஷண்முகனே ஜகத்குருவிற் கருளியவா
ஜகத்குரோ சிவகுமரா சித்தமல மகற்றிடுவாய்
செங்கோட்டு வேலவனே சிவானு பூதிதாரும்
சிக்கல் சிங்கார ஜீவனைச்சிவ னாக்கிடுவாய்
குன்றக்குடி குமரா குருகுகனாய் வந்திடப்பா
குமரகிரிப் பெருமானே மனத்தையும் மாய்த்திடுவீர்
பச்சைமலை முருகா இச்சையைக் களைந்திடப்பா
பவழமலை ஆண்டவனே பாபங்களைப் போக்கிடப்பா 59

விராலிமலை ஷண்முகனே விரைவில் நீ வந்திடப்பா
வயலூர் குமாரகுரோ ஞானவரமெனக் கருள்வீரே
வெண்ணெய் மலைமுருகா மெய்வீட்டைத் தந்திடுவீர்
கதிர்காம வேலவனே மனமாயை அகற்றிடுவாய்
காந்த மலைக்குமரா கருத்துள் வந்திடுவீர்
மயிலத்து முருகாநீ மனத்தகத்துள் வந்திடுவீர்
கஞ்சமலை சித்தகுரோ கண்ணொளியாய் வந்திடுவீர்
குமரமலை குருநாதா கவலையெல்லாம் போக்கிடுவீர்
வள்ளிமலை வேல்முருகா வேல்கொண்டு வந்திடுவீர்
வடபழனி யாண்டவனே வல்வினைகள் போக்கிடுவீர்
ஏழுமலை யாண்டவனே எத்திக்கும் காத்திடுவீர் 70
ஏழ்மை யகற்றிகந்தா எமபயம் போக்கிடுவீர்
அசையாத நெஞ்சத்தில் அறிவாகநீ அருள்வாய்
ஆறுபடைக் குமரா மயிலேறி வந்திடுவாய்
பணிவதே பணியென்று பணித்தனை நீ எனக்கு
பணிந்தேன் கந்தா உன்பாதம் பணிந்துவப்பேன்
அருட்பெருஞ் ஜோதியே அன்பெனக் கருள்வாயே 76

**ராகம்: ஆனந்தபைரவி**

படர்ந்த அன்பினைநீ பரப்பிரம்மம் என்றனையே
உலகெங்கு முள்ளது ஒருபொருள் அன்பேதான்
உள் ளுயிராகி இருப்பது மன்பென்றாய்
அன்பே குமரன் அன்பே ஸ்கந்தன்
அன்பே ஓமெனும் அருள்மந்திர மென்றாய்
அன்பை உளத்திலே அசையாது அமர்த்திடுமோர்
சக்தியைத் தந்து தடுத்தாட் கொண்டிடவும்
வருவாய் அன்பனாய் வந்தருள் ஸ்கந்தகுரோ
யாவர்க்கும் இனியன்நீ யாவர்க்கும் எளியன்நீ
யாவர்க்கும் வலியன்நீ யாவர்க்கு மானோய்நீ
உனக்கொரு கோயிலைஎன் அகத்துள்ளே புனைவேனே
சிவசக்திக் குமரா சரணம் சரணமய்யா
அபாயம் தவிர்த்து தடுத்தாட் கொண்டருள்வாய்
நிழல்வெயில் நீர்நெருப்பு மண்காற்று வானதிலும் 90
பகைமையை அகற்றி அபயமளித் திடுவீர்
உணர்விலே ஒன்றி என்னை நிர்மல மாக்கிடுவாய்
யானென தற்றமெய் ஞானம் தருவாய்நீ
முக்திக்கு வித்தான முருகா கந்தா 94

### ராகம்: கேதார கௌளம்

சதுர்மறை போற்றும் ஷண்முக நாதா
ஆகம மேத்தும் அம்பிகை புதல்வா
ஏழையைக் காக்கநீ வேலேந்தி வந்திடுவாய்
தாயாய்த் தந்தையாய் முருகா தக்கணம்நீ வருவாய்
சக்தியும் சிவனுமாய்ச் சடுதியில்நீ வருவாய்
பரம்பொருளான பாலனே ஸ்கந்தகுரோ 100
ஆதிமூலமே அருவாய் உருவாய்நீ
அடியனைக் காத்திட அறிவாய்வந் தருள்வாய்
உள்ளொளியாய் முருகா உடனேநீ வா வா வா
தேவாதி தேவா சிவகுரோ வா வா வா
வேலாயுதத்துடன் குமரா விரைவில்நீ வந்திடப்பா
காண்பன யாவுமாய்க் கண்கண்ட தெய்வமாய்
வேதச் சுடரோய் மெய்கண்ட தெய்வமே
மித்தையா மிவ்வுலகை மித்தையென் றறிந்திடச்செய்
அபயம் அபயம் கந்தா அபயமென் றலறுகிறேன்
அமைதியை வேண்டி அறுமுகவா வாவென்றேன் 110
உன்துணை வேண்டினேன் உமையவள் குமராகேள்
அச்சம் அகற்றிடுவாய் அமைதியைத் தந்திடுவாய்
வேண்டிய துன்னருளே அருள்வதுன் கடனேயாம்
உன் அருளாலே உன்தாள் வணங்கிட்டேன்
அட்டமா சித்திகளை அடியனுக் கருளிடப்பா
அஜபை வழியிலே அசையாம லிருத்திவிடு
சித்தர்கள் போற்றிடும் ஞானசித்தியும் தந்துவிடு
சிவானந்தத் தேனில் திளைத்திடவே செய்துவிடு
அருள்ஒளிக் காட்சியை அகத்துளே காட்டிவிடு 120
அறிவை அறிந்திடும் அவ்வருளையும்நீ தந்துவிடு
அனுக்ரஹித் திடுவாய் ஆதிகுரு நாதாகேள்
ஸ்கந்த குருநாதா ஸ்கந்த குருநாதா
தத்துவம் மறந்து தன்னையும் நான்மறந்து
நல்லதும் கெட்டதும் நானென்பதும் மறந்து
பாவபுண் ணியத்தோடு பரலோகம் மறந்திடச்செய்
அருள்வெளி விட்டிவனை அகலா திருத்திடுவாய்
அடிமையைக் காத்திடுவாய் ஆறுமுகக் கந்தகுரோ
சித்தியிலே பெரிய ஞானசித்து நீ அருள
சீக்கிரமே வருவாய் சிவானந்தம் தருவாய் 129

சிவானந்தம் தந்தருளி சிவசித்த ராக்கிடுவாய்
சிவனைப் போலென்னைச் செய்திடுவ துன்கடனே
சிவசத் குருநாதா சிவசத் குருநாதா 132

### ராகம்: ஷண்முகப்ரியா

ஸ்கந்த குருநாதா கதறுகிறேன் கேட்டிடுவாய்
தாளினைப் பிடித்தேன் தந்திடு வரமெனக்கு
திருவருட் சக்தியைத் தந்தாட் கொண்டிடுவாய்
சத்ரு பகைவர்களை ஷண்முகா ஒழித்திட்டு
கிழக்குத் திசையிருந்து க்ருபாகரா காப்பாற்றும்
தென்கிழக்கு திசையிருந்து தீனபந்தே காப்பாற்றும்
தென்திசையிலு மென்னைத் திருவருளால் காப்பாற்றும்
தென்மேற் கிலுமென்னைத் திறல்வேலால் காப்பாற்றும்
மேற்குத் திக்கிலென்னை மால்மருகா ரக்ஷிப்பாய்
வடமேற் கிலுமென்னை மயிலோனே ரக்ஷிப்பாய்
வடக்கிலென்னைக் காப்பாற்ற வந்திடுவீர் சத்குருவாய்
வடகிழக்கில் எனக்காக மயில்மீது வருவீரே 144

### ராகம்: பீம்ப்ளாஸ்

பத்துதிக்குத் தோறுமெனை பறந்துவந்து ரக்ஷிப்பாய்
என்சிகையையும் சிரசினையும் சிவகுரோ ரக்ஷிப்பாய்
நெற்றியும் புருவமும் நினதருள் காக்கட்டும்
புருவங்களுக் கிடையே புருஷோத்தமன் காக்கட்டும்
கண்க ளிரண்டையும் கந்தவேல் காக்கட்டும்
நாசிக ளிரண்டையும் நல்லவேல் காக்கட்டும்
செவிக ளிரண்டையும் சேவற்கொடி காக்கட்டும்
கன்னங்க ளிரண்டையும் காங்கேயன் காக்கட்டும்
உதட்டி னையும்தான் உமாசுதன் காக்கட்டும்
நாக்கை நம்முருகன் நயமுடன் காக்கட்டும்
பற்களைக் கந்தன் பலம்கொண்டு காக்கட்டும்
கழுத்தை ஸ்கந்தன் கைகளால் காக்கட்டும்
தோள்க ளிரண்டையும் தூயவேல் காக்கட்டும்
கைகள் விரல்களைக் கார்த்திகேயன் காக்கட்டும்
மார்பையும் வயிற்றையும் வள்ளிமணாளன் காக்கட்டும்
மனத்தை முருகன்கை மாத்தடிதான் காக்கட்டும் 160
ஹ்ருதயத்தில் ஸ்கந்தன் இனிதுநிலைத் திருக்கட்டும்
உதரத்தை யெல்லாம் உமைமைந்தன் காக்கட்டும்

நாபிகுஹ்யம் லிங்கம் நவையுடைக் குதத்தோடு
இடுப்பை முழங்காலை இணையான கால்களையும்
புறங்கால் விரல்களையும் பொருந்துமுகர் அனைத்தையுமே
உரோமத் வாரமெல்லாம் உமைபாலா ரக்ஷிப்பாய்
தோல்ரத்தம் மஜ்ஜையையும் மாம்ஸமென்பு மேதஸையும் 167

**ராகம்: மோஹனம்**

அறுமுகவா காத்திடுவீர் அமரர்தலைவா காத்திடுவீர்
என் அஹங்காரமுகமகற்றி அறிவொளியா யிருந்தும்
முருகா வெனைக்காக்க வேல்கொண்டு வந்திடுவீர்
பாபத்தைப் பொசிக்கிப் பாரெல்லாம் சிறப்புறவே
ஓம்ஸெளம் சரவணபவ ஸ்ரீம் ஹ்ரீம்க்லீம் என்றும்
க்லெளம் ஸெளம் நமஹவென்று சேர்த்திடடா நாள்தோறும்
ஓமிருந்து நமஹவரை ஒன்றாகச் சேர்த்திடடா
ஒன்றாகக் கூட்டியுமே உள்ளத்திலே இருத்தி
ஒருமனத் தோடுநீ உருவையும் ஏத்திடடா
முருகனின் மூலமிது முழுமனத்தோ டேத்திட்டால்
மும்மல மகன்றுவிடும் முக்தியுந்தன் கையிலுண்டாம்
முக்தியை வேண்டியுமே எத்திக்கும் செல்லவேண்டாம்
முருகனின் இருப்பிடமே முக்தித்தல மாகுமப்பா 180
ஹ்ருதயத்தில் முருகனை இருத்திவிடு இக்கணமே
இக்கணமே மூலமந்த்ரம் ஏத்திவிடு ஏத்திவிடு
மூலமதை ஏத்துவோர்க்குக் காலபய மில்லையடா
காலனை நீஜயிக்க கந்தனைப் பற்றிடடா
சொன்னபடி செய்தால் சுப்ரமண்ய குருநாதன்
தன்னொளிப் பெருஞ்சுடராய் உன்னுள்ளே தானிருப்பான்
ஜெகமாயை ஜயித்திடவே செப்பினேன் மூலமுமே
மூலத்தை நீஜபித்தே முக்தனு மாகிடடா
அக்ஷர லக்ஷமிதை அன்புடன் ஜபித்துவிடில்
எண்ணிய தெலாம்கிட்டும் எமபய மகன்றோடும் 190
மூவுலகும் பூஜிக்கும் முருகனருள் முன்னிற்கும்
பூவுலகில் இணையற்ற பூஜ்யனு மாவாய்நீ
கோடித்தரம் ஜபித்துக் கோடிகாண வேண்டுமப்பா
கோடிகாணச் சொன்னதைநீ நாடிடுவாய் மனமே
ஜன்மம் கடைத்தேற ஜபித்திடுவாய் கோடியுமே
வேதாந்த ரகசியமும் வெளியாகு முன்னுள்ளே
வேத சூக்குமத்தை விரைவாகப் பற்றிடலாம்

சுப்ரஹ் மண்யகுரு ஜோதியாயுள் தோன்றிடுவான்
அருட்பெருஞ் ஜோதியான ஆறுமுக ஸ்வாமியுமே
அந்தர் முகமிருந்து ஆட்கொள்வான் சத்தியமாய்
சித்தியையும் முக்தியையும் ஸ்கந்தகுரு தந்திடுவான் 201

**ராகம்: அடாணா**

நின்னையே நான் வேண்டி நித்தமும் ஏத்துகிறேன்
மெய்யறிவாகக் கந்தா வந்திடுவாய் இவனுளேநீ
வந்திடுவாய் மருவிடுவாய் பகுத்தறி வாகவேநீ
பகுத்தறி வோடிவனைப் பார்த்திடச் செய்திடப்பா
பகுத்தறி வானகந்தன் பரங்குன்றில். இருக்கின்றாய்
பழனியில் நீயும் பழம்ஜோதி யானாய்நீ
பிரமனுக் கருளியவா பிரணவப் பொருளோனே
பிறவா வரமருளி பிரம்மமய மாக்கிடுவாய்
திருச்செந் தூரில்நீ சக்திவேல் தாங்கிவிட்டாய் 210
பழமுதிர் சோலையில் பரஞ்சோதி மயமானாய்
சுவாமி மலையிலே சிவசுவாமிக் கருளியநீ
குன்றுகள் தோறும் குருவாய் அமர்ந்திட்டோய்
ஸ்கந்த கிரியைநீ சொந்தமாக்கிக் கொண்டனையே
ஸ்கந்த குருநாதா ஸ்கந்தாஸ்ரம ஜோதியே
பிறப்பையும் இறப்பையும் பெயர்த்துக் காத்திடுவாய்
பிறவாமை என்கிற பெருவரம்நீ தந்திடுவாய்
தத்துவக் குப்பையை மறந்திடச் செய்திடுவாய்
எந்த நினைப்பையும் எரித்துநீ காத்திடுவாய் 220
ஸ்கந்தா சரணம் ஸ்கந்தா சரணம்
சரணமடைந்திட்டேன் சடுதியில் வாருமே
சரவண பவனே சரவண பவனே
உன்னரு ளாலேநான் உயிரோ டிருக்கின்றேன்
உயிருக் குயிரானகந்தா உன்னிலென்னைக் கரைத்திடப்பா

**ராகம்: சிம்மேந்திர மத்யமம்**

என்னிலுன்னைக் காண எனக்கு வரமருள்வாய்
சீக்கிரம் வந்து சிவசித்தியம் தந்தருள்வாய்
இடகலை பிங்கலை ஏதும் அறிந்திலேன் நான்
இந்திரிய மடக்கி இருந்து மறிகிலேன் நான்
ஸ்கந்தாஉன் திருவடியைப் பற்றினேன் சிக்கெனவே
சிக்கெனப் பற்றினேன் செப்பிடுவீர் உபதேசம் 230

காமக் கசடுகள் யாவையும் களைந்திடுவாய்
சித்த சுத்தியும் ஜபமும் தந்திடுவாய்
நினைப்பெலாம் நின்னையே நினைந்திடச் செய்திடுவாய்
திருமுருகா வுன்னைத் திடமுற நினைத்திடவே
திருவருள் தந்திடுவாய் திருவருள் தான் பொங்கிடவே
திருவருள் ஒன்றிலே நிலைபெறச் செய்திடுவாய்
நிலைபெறச் செய்திடுவாய் நித்யா னந்தமதில்
நித்யா னந்தமே நின்னுரு வாகையினால்
அத்வை யானந்தத்தில் இமைப்பொழுது ஆழ்த்திடுவாய்
ஞான பண்டிதா நான்மறை வித்தகாகேள் 240
ஸ்கந்த குருநாதா ஸ்கந்தகுரு நாதாகேள்
மெய்ப்பொருள் காட்டி மேன்மை அடைந்திடச்செய்
வினைகள் யாவையுமே வேல்கொண்டு விரட்டிடுவாய்
தாரித் திரியங்களையுன் தடிகொண்டு விரட்டிடுவாய்
துக்கங்க ளனைத்தையும் தொலைதூரம் போக்கிடுவாய்
பாப உடலைப் பரிசுத்த மாக்கிடுவாய்
இன்ப துன்பத்தை இருவிழியால் விரட்டிடுவாய்
ஆசைப் பேய்களை அறவே நசுக்கிடுவாய்
அகந்தைப் பிசாசை அழித்து ஒழித்திடடா
மெய்யருளாம் உன்னருளில் முருகா இருத்திடுவாய் 250

**ராகம்: தன்யாஸி**

கண்கண்ட தெய்வமே கலியுக வரதனே
ஆறுமுக மானகுரோ அறிந்திட்டேன் உன் மஹிமை
இக்கணமே வருவாய் என்ஸ்கந்த குருவேநீ
என்னைக் காத்திடவே எனக்கு நீ அருளிடவே
அரைக் கணத்தில் நீயும் ஆடிவரு வாயப்பா
வந்தெனைத் தடுத்து வலிய ஆட்கொள் வரதகுரோ
அன்புத் தெய்வமே ஆறுமுக மானவனே
சுப்ரஹ் மண்யனே சோகம் அகற்றிடுவாய்
ஞான ஸ்கந்தரே ஞானம் அருள்வாய்நீ
ஞான தண்டபாணியே என்னை ஞானபண்டித னாக்கிடுவாய்
அகந்தையெலா மழித்து அன்பினை ஊட்டிடுவாய் 260
அன்பு மயமாக்கி ஆட்கொள்ளுவையப்பா
அன்பைஎன் உள்ளத்தில் அசைவின்றி நிறுத்திவிடு
அன்பையே கண்ணாக ஆக்கிக் காத்திடுவாய்
உள்ளும் புறமும் உன்னருளாம் அன்பையே

உறுதியாக நானும் பற்றிட உவந்திடுவாய்
எல்லையில்லாத அன்பே இறைவெளி என்றாய்நீ
அங்கிங் கெனாதபடி எங்கும் அன்பென்றாய்
அன்பே சிவமும் அன்பே சக்தியும்
அன்பே ஹரியும் அன்பே பிரம்மனும் 270
அன்பே தேவரும் அன்பே மனிதரும்
அன்பே நீயும் அன்பே நானும்
அன்பே சத்தியம் அன்பே நித்தியம்
அன்பே சாந்தம் அன்பே ஆனந்தம்
அன்பே மௌனம் அன்பே மோக்ஷம்
அன்பே பிரம்மமும் அன்பே அனைத்துமென்றாய்
அன்பிலாத இடம் அங்குமிங்கு மில்லையென்றாய்
எங்கும் நிறைந்த அன்பேஎன் குருநாதனப்பா
அன்பில் உறையும் அருட்குரு நாதரேதான்
ஸ்கந்தாஸ் ரமத்தில் ஸ்கந்தகுரு வானான்காண் 280
மூவரும் தேவரும் முனிவரும் போற்றிடவே
ஸ்கந்தாஸ் ரமந்தன்னில் ஸ்கந்த ஜோதியுமாய்
ஆத்ம ஜோதியுமாய் அமர்ந்திட்ட ஸ்கந்தகுரு
இருளை அகற்றவே எழுந்திட்ட எங்கள்குரு
எல்லை யில்லாதஉன் இறைவெளியைக் காட்டிடுவாய்
முக்தியைத் தந்திடுவாய் மூவரும் போற்றிடவே
நம்பினேன் உன்னையே நம்பினேன் ஸ்கந்தகுரோ
உனையன்றி இவ்வுலகில் ஒன்றுமில்லை என்றுணர்ந்தேன்
288

### ராகம்: காம்போதி

நன்கறிந்து கொண்டேன் நானும் உனதருளால்
விட்டிட மாட்டேன் கந்தா வீடதருள்வீரே
நடுநெற்றித் தானத்து நானுனைத் தியானிப்பேன்
பிரம மந்திரத்தைப் போதித்து வந்திடுவாய்
சுழுமுனை மார்க்கமாய் ஜோதியைக் காட்டிடுவாய்
சிவயோகி யாகஎனைச் செய்திடும் குருநாதா
ஆசை அறுத்து அரனடியைக் காட்டிவிடும்
மெய்யடிய ராக்கி மெய்வீட்டில் இருத்திவிடும்
கொங்கு நாட்டிலே கோயில் கொண்ட ஸ்கந்தகுரோ
கொல்லிமலை மேலே குமரகுரு வானவனே
கஞ்சமலை சித்தர்போற்றும் ஸ்கந்தகிரி குருநாதா 299

கருவூரார் போற்றும் காங்கேயா கந்தகுரோ
மருதமலைச் சித்தன் மகிழ்ந்துபணி பரமகுரோ
சென்னி மலைக்குமரா சித்தர்க் கருள்வோனே
சிவவாக்கிய சித்தருனைச் சிவன்மலையில் போற்றுவரே
பழனியில் போகருமே பாரோர்வாழப் பிரதிஷ்டித்தான்
புலிப்பாணி சித்தர்களால் புடை சூழ்ந்த குமரகுரோ
கொங்கில் மலிந்திட்ட ஸ்கந்த குரு நாதா
கள்ளம் கபடமற்ற வெள்ளையுள்ளம் அருள்வீரே
கற்றவர்க ளோடென்னைக் களிப்புறச் செய்திடுமே
உலெகங்கும் நிறைந்திருந்தும் கந்தகுரு உள்ள இடம்
ஸ்கந்தகிரி என்பதை நான் கண்டு கொண்டேன் கண்டு
கொண்டேன் 310

**ராகம்: ஹம்ஸானந்தி**

நால்வர் அருணகிரி நவமிரண்டு சித்தர்களும்
பக்தர்களும் போற்றும் பழநிமலை முருகாகேள்
கொங்கு தேசத்திலே குன்றுதோறும் குடிகொண்டோய்
சீலம் நிறைந்த சேலம்மா நகரத்தில்
கன்னிமார் ஓடையின் மேல் ஸ்கந்தகிரி அதனில்
ஸ்கந்தாஸ் ரமத்தினிலே ஞானஸ்கந்த சத்குருவாய்
அமர்ந்திருக்கும் ஜோதியே ஆதிமூல மானகுரோ
அயர்ச்சியை நீக்கிடுவாய்என் தளர்ச்சியை அகற்றிடுவாய்
சுகவனேசன் மகனே சுப்ரமண்ய ஜோதியே
பேரின்ப மகிழ்ச்சியையும் பெருகிடச் செய்திடப்பா 320
பரமா னந்தமதில் எனை மறக்கப் பாலிப்பாய்
மால் மருகா வள்ளிமணவாளா ஸ்கந்தகுரோ
சிவகுமரா உன்கோயில் ஸ்கந்தகிரி என்றுணர்ந்தேன்
ஜோதிப் பிழம்பான சுந்தரனே பழனியப்பா
சிவஞானப் பழமான ஸ்கந்தகுரு நாதா
பழம்நீ என்றதினால் பழநிமலை யிருந்தாயோ
திருவா வினன்குடியில் திருமுருக னானாயோ
குமரா முருகா குருகுகா வேலவனே
அகத்தியர்க் குத்தந்து ஆட்கொண்டாய் தமிழகத்தை 330
கலியுக வரதனென்று கலசமுனி உனைப்புகழ்ந்தான்
ஔவைக்கு அருள்செய்த அறுமுகவா ஸ்கந்தகுரோ
ஒழுக்கமொடு கருணையையும் தவத்தையும் தந்தருள்வாய்
போகருக்கருள் செய்த புவன சுந்தரனே

தண்டபாணித் தெய்வமே தடுத்தாட் கொண்டிடப்பா
ஆண்டிக் கோலத்தில் அணைத்திடுவாய் தண்டுடனே
தெய்வங்கள் போற்றிடும் தண்டாயுத ஜோதியே
ஸ்கந்தகிரி மேலே ஸ்கந்த ஜோதி யானவனே
கடைக்கண்ணால் பார்த்திடப்பா கருணையுள்ள ஸ்கந்தகுரோ
338

**ராகம்: பிலஹரி**

ஏழையைக் காத்திடப்பா ஏத்துகிறேன் உன்நாமம்
உன்னையன்றி வேறொன்றை ஒருபோதும் நம்புகிலேன்
கண்கண்ட தெய்வமே கலியுக வரதனே
கந்தனென்ற பேர்சொன்னால் கடிதாக நோய்தீரும்
புவனேஸ்வரி மைந்தா போற்றினேன் திருவடியை
திருவடியை நம்பினேன் திருவடி சாக்ஷியாக
புவனமாதா மைந்தனே புண்ணிய மூர்த்தியேகேள்
நின்நாமம் ஏத்துவதே நான் செய்யும் தவமாகும்
நாத்தழும் பேறவே ஏத்திடுவேன் நின்நாமம்
முருகா முருகாவென்றே மூச்செல்லாம் விட்டிடுவேன்
உள்ளும் புறமும்ஒரு முருகனையே காண்பேன்
அங்கிங் கெனாதபடி எங்குமே முருகனப்பா 350
முருகன் இலாவிட்டால் மூவுலக மேதப்பா
அப்பப்பா முருகனின் அருளே உலகமப்பா
அருளெலாம் முருகன் அன்பெலாம் முருகன்
ஸ்தாவர ஜங்கமமாய் ஸ்கந்தனாய் அருவுருவாய்
முருகனாய் முதல்வனாய் ஆனவன் ஸ்கந்தகுரு
ஸ்கந்தா ஸ்ரமமிருக்கும் ஸ்கந்தகுரு அடிபற்றிச்
சரணம் அடைந்தவர்கள் ஸாயுஜ்யம் பெற்றிடுவர்
சத்தியம் சொல்கின்றேன் சந்தேகமில்லையப்பா
வேதங்கள் போற்றிடும் வடிவேலன் முருகனைநீ
சந்தேக மில்லாமல் சத்தியமாய் நம்பிடுவாய்
சத்திய மானதெய்வம் ஸ்கந்த குருநாதன்
சத்தியம் காணவேநீ சத்தியமாய் நம்பிடப்பா 362

**ராகம்: சுப பந்துவராளி**

சத்தியம் வேறல்ல ஸ்கந்தகுரு வேறல்ல
ஸ்கந்தகுரு வேஸத்தியம் சத்தியமே ஸ்கந்தகுரு
சத்தியமாய்ச் சொன்னதை சத்தியமாய் நம்பியேநீ
சத்தியமாய் ஞானமாய் சதானந்த மாகிவிடு

அழிவற்ற ப்ரம்மமாய் ஆக்கிவிடுவான் முருகன்
திருமறைகள் திருமுறைகள் செப்புவதும் இதுவேதான்
ஸ்கந்தகுரு கவசமதை சொந்தமாக்கிக் கொண்டுநீ
பொருளுணர்ந்து ஏத்திடப்பா பொல்லாப்பு வினையகலும்
பிறவிப் பிணியகலும் பிரம்மா னந்தமுண்டு 370
இம்மையிலும் மறுமையிலும் இமையருன்னைப் போற்றிடுவர்
மூவருமே முன்னிற்பர் யாவருமே பூஜிப்பர்
அனுதினமும் கவசத்தை அன்புடன் ஏத்திடப்பா
சிரத்தா பக்தியுடன் சிந்தையொன்றிச் செப்பிடப்பா
கவலைய கன்றிடுமே கந்தனருள் பொங்கிடுமே
பிறப்பும் இறப்பும் பிணிகளும் தொலைந்திடுமே
கந்தன் கவசமே கவசமென்று உணர்ந்திடுவாய்
கவசம் ஏத்துவீரேல் கலியை ஜெயித்திடலாம் 380
கலியென்ற அரக்கனைக் கவசம் விரட்டிடுமே
சொன்னபடி செய்து சுகமடைவாய் மனமேநீ
ஸ்கந்தகுரு கவசத்தைக் கருத்தொன்றி ஏத்துவோர்க்கு
அஷ்டைஸ் வர்யந்தரும் அந்தமில்லா இன்பந்தரும்
ஆல்போல் தழைத்திடுவன் அறுகுபோல் வேரோடிடுவன்
வாழையடி வாழையைப்போல் வம்சத்தைப் பெற்றிடுவன்
பதினாறும் பெற்றுப் பல்லாண்டு வாழ்ந்திடுவன்
சாந்தியும் சௌக்யமும் ஸர்வமங்களமும் பெருகிடுமே. 387

**ராகம்: கானடா**

ஸ்கந்தகுரு கவசமிதைக் கருத்திருத்தி ஏற்றுவீரேல்
கர்வம் காமக்ரோதம் கலிதோஷ மகற்றுவிக்கும்
முன்செய்த வினையகன்று முருகனருள் கிட்டிவிடும்
அறம்பொருள் இன்பம்வீடு அதிசுலப மாய்க்கிட்டும்
ஆகாரம் சீலமுடன் ஆதிநேம நிஷ்டையுடன்
கள்ளமிலா வுளத்தோடு கந்தகுரு கவசந்தன்னை
சிரத்தா பக்தியுடன் சிவகுமர னைநினைத்துப்
பாராயணம் செய்வீரேல் பார்க்கலாம் கந்தனையும்
கந்தகுரு கவசமிதை மண்டலம் நிஷ்டையுடன்
பகலிரவு பாராமல் ஒருமனதாய்ப் பகருவீரேல்
திருமுருகன் வேல்கொண்டு திக்குகள் தோறும்நின்று
காத்திடுவான் கந்தகுரு கவலையில்லை நிச்சயமாய்
ஞான ஸ்கந்தனின் திருவடியை நம்பியேநீ 400
கந்தகுரு கவசந்தனை ஓதுவதே தவமெனவே

உணர்ந்துகொண்டு ஓதுவையேல் உனக்குப் பெரிதான
இகபர சுகமுண்டாம் எந்நாளும் துன்பமில்லை
துன்பம் அகன்றுவிடும் தொந்திரைகள் நீங்கிவிடும்
இன்பம் பெருகிவிடும் இஷ்டசித்தி கூடிவிடும்
பிறவிப் பிணியகற்றி ப்ரம்மநிஷ்டை யும்தந்து
காத்து ரக்ஷிக்கும் கந்தகுரு கவசமுமே 407

**ராகம்: காபி**

கவலையைவிட்டு நீ கந்தகுரு கவசமிதை
இருந்த படியிருந்து ஏற்றிவிடு ஏற்றினால்
தெய்வங்கள் தேவர்கள் சித்தர்கள் பக்தர்கள்
போற்றிடுவர் ஏவலுமே புரிந்திடுவர் நிச்சயமாய்
ஸ்கந்தகுரு கவசம் சம்சயப் பேயோட்டும்
அஞ்ஞானமு மகற்றி அருள்ஒளியும் காட்டும்
ஞான ஸ்கந்தகுரு நானென்று முன்னிற்பன்
உள்ளொளி ய்ாயிருந்து உன்னிலவ னாகிடுவன் 415

**ராகம்: மத்யமாவதி**

தன்னில் உன்னைக் காட்டி உன்னில் தனைக்காட்டி
எங்கும் தனைக்காட்டி எங்குமுனைக் காட்டிடுவன்
ஸ்கந்தஜோதி யானகந்தன் கந்தகிரி யிருந்து
தண்டாயுதம் தாங்கி தருகிறான் காட்சியுமே
கந்தன் புகழ்பாட கந்தகிரி வாருமினே
கந்தகிரி வந்துநிதம் கண்டுய்மின் ஜகத்தீரே
கலிதோஷ மகற்றுவிக்கும் கந்தகுரு கவசமிதை
பாராயணம் செய்து பாரில் புகழ்பெறுமின் 423

**ராகம்: மத்யமாவதி**

ஸ்கந்தகுரு கவசபலன் பற்றறுத்துப் பரம்கொடுக்கும்
ஒருதரம் கவசமோதின் உள்ளழுக்குப் போகும்
இருதரம் ஏற்றுவீரேல் எண்ணியதெலாம் கிட்டும்
மூன்றுதர மோதின் முன்னிற்பன் ஸ்கந்தகுரு
நான்முறை யோதி தினம் நல்லவரம் பெறுவீர்
ஐந்துமுறை தினமோதி பஞ்சாக்ஷரம் பெற்று
ஆறு முறையோதி ஆறுதலைப் பெற்றிடுவீர்
ஏழுமுறை தினமேத்தின் எல்லாம் வசமாகும்
எட்டுமுறை ஏத்தில் அட்டமா ஸித்திகிட்டும்

ஒன்பது தரமோதின் மரண பயமொழியும்
பத்துதர மேத்திநித்தம் பற்றறுத்து வாழ்வீரே 434

ஃ ஃ ஃ

கன்னிமார் ஓடையிலே நீராடி நீறுபூசிக்
கந்தகுரு கவசமோதி கந்தகிரி ஏறிவிட்டால்
முந்தை வினையெல்லாம் கந்தன் அகற்றிடுவன்
நிந்தைகள் நீங்கிவிடும் நிஷ்டையுமே கைகூடும்
கன்னிமார் ஓடைநீரைக் கைகளிலே நீஎடுத்துக்
கந்தனென்ற மந்திரத்தைக் கண்மூடி யுருவேத்தி
உச்சியிலும் தெளித்து உட்கொண்டு விட்டிட்டால்
சித்த மலமகன்று சித்தசுத்தியும் கொடுக்கும்
கன்னிமார் தேவிகளைக் கன்னிமார் ஓடையிலே
கண்டு வழிபட்டு கந்தகிரி யேறிடுவீர்
கந்தகிரி யேறிஞான ஸ்கந்தகுரு கவசமிதை
பாராயணம் செய்துலகில் பாக்யமெலாம் பெற்றிடுவீர். 446

ஸ்ரீ ஸ்கந்தகுரு கவசம் முற்றிற்று

உ

## கந்த சஷ்டிக்கவசம்

### கவசம் ஒன்று

# திருப்பரங்குன்றுறை திருமகன்

## தேவராய சுவாமிகள்

### காப்பு

அமரர் இடர் தீர அமரம் புரிந்த
குமரன் அடி நெஞ்சே குறி.

துதிப்போர்க்கு வல்வினைபோம், துன்பம்போம், நெஞ்சில்
பதிப்போர்க்குச் செல்வம் பலித்துக்—கதித்துஓங்கும்
நிஷ்டையுங் கைகூடும், நிமலர் அருள்கந்தர்
சஷ்டிக் கவசந் தனை.

### நூல்

திருப்பரங் குன்றுறை தீரனே குகனே
மருப்பிலாப் பொருளே வள்ளி மனோகரா
குருக்குத் துறையுறை குமரனே அரனே
இருக்கும் குருபரா ஏரகப் பொருளே
வையா புரியில் மகிழ்ந்துவாழ் பவனே
ஒய்யார மயில்மேல் உகந்தாய் நமோ நமோ
ஐயா குமரா அருளே நமோ நமோ
மெய்யாய் விளங்கும் வேலா நமோ நமோ
பழநியங் கிரிவாழ் பகவா நமோ நமோ
மழுவுடை முதல்வன் மதலாய் நமோ நமோ
விராலி மலையுறை விமலா நமோ நமோ
மராமரம் துளைத்தோன் மருகா நமோ நமோ
சூரசம் கார துரையே நமோ நமோ
வீரவே லேந்தும் வேளே நமோ நமோ
பன்னிரு கரமுடைய பரமா நமோ நமோ
கண்களீ ராறுடை கந்தா நமோ நமோ

கோழிக் கொடியுடை கோவே நமோ நமோ
ஆழிசூழ் செந்தில் அமர்ந்தாய் நமோ நமோ
சசச சசச ஓம் ரீம்
ரரர ரரர ரீம் ரீம்
வவவ வவவ ஆம் ஹோம்
ணணண ணணண வாம் ஹோம்
பபப பபப சாம் சூம்
வவவ வவவ களம் ஓம்
லல லிலி லுலு நாட்டிய அட்சரம்
கக கக கக கந்தனே வருக
இக இக இக ஈசனே வருக
தக தக தக சற்குரு வருக
பக பக பக பரந்தாமா வருக
வருக வருகவென் வள்ளலே வருக
வருக வருக நிஷ்களங்கனே வருக
தாயென நின்னிரு தாள்பணிந் தேன்எனைச்
சேயெனக் காத்தருள் திவ்யமா முகனே
அல்லும் பகலும் அனுதினம் என்னை
எல்லிலும் இருட்டிலும் எரிபகல் படுக்கை
வல்ல விடங்கள் வராமல் தடுத்து
நல்ல மனத்துடன் ஞான குருஉனை
வணங்கித் துதிக்க மகிழ்ந்து நீ வரங்கள்
இணங்கியே அருள்வாய் இறைவா எப்போதும்
கந்தா கடம்பா கார்த்தி கேயா
நந்தன் மருகா நாரணி சேயே
எண்ணிலாக் கிரியில் இருந்து வளர்ந்தனை
தண்ணளி அளிக்கும் சாமி நாதா
சிவகிரி கையிலை திருப்பதி வேளூர்
தவக்கதிர் காமம் சார்திரு வேரகம்
கண்ணுள் மணிபோல் கருதிடும் வயலூர்
விண்ணவர் ஏத்தும் விராலி மலைமுதல்
தன்னிக ரில்லாத் தலங்களைக் கொண்டு
சன்னதி யாய்வளர் சரவண பவனே
அகத்திய முனிவனுக்(கு) அன்புடன் தமிழைச்
செகத்தோர் அறியச் செப்பிய கோவே
சித்துக்கள் ஆம் சிதம்பர சக்கரம்
நர்த்தனம் புரியும் நாற்பத்தெண் கோணம்

வித்தாய் நின்ற மெய்ப்பொரு ளோனே
உத்தம குணத்தாய் உம்பர்கள் ஏறே
வெற்றிக் கொடியுடை வேளே போற்றி
பக்திசெய் தேவர் பயனே போற்றி
சித்தம் மகிழ்ந்திடச் செய்தவா போற்றி
அத்தன் அரியயன் அம்பிகை லட்சுமி
வாணி யுடனே வரையுமாக் கலைகளும்
தானே நானென்று சண்முக மாகத்
தாரணி யுள்ளோர் சகலரும் போற்றப்
பூரண கிருபை புரிபவா போற்றி
பூதலத் துள்ள புண்ணிய தீர்த்தங்கள்
ஓதமார் கடல்சூழ் ஒளிர்புவி கிரிகளில்
எண்ணிலாத் தலங்கள் இனிதெழுந் தருள்வாய்
பண்ணும் நிட்டைகள் பலபல வெல்லாம்
கள்ளம் அபசாரம் கர்த்தனே எல்லாம்
எள்ளினுள் எண்ணெய்போல் எழிலுடை உன்னை
அல்லும் பகலும் ஆசா ரத்துடன்
சல்லாபமாய் உனைத் தானுறச் செய்தால்
எல்லா வல்லமை இமைப்பினில் அருளி
பல்லாயிர நூல் பகர்ந்தருள் வாயே
செந்தில் நகர்உறை தெய்வானை வள்ளி
சந்ததம் மகிழும் தயாபர குகனே
சரணம் சரணம் சரவண பவஓம்
அரன்மகிழ் புதல்வா அறுமுகா சரணம்
சரணம் சரணம் சரவண பவஓம்
சரணம் சரணம் சண்முகா சரணம்

**கவசம் ஒன்று முற்றிற்று**

உ

(கவசம் இரண்டு)

# செந்தில் மேவும் சரவணன்

சஷ்டியை நோக்கச் சரவண பவனார்
சிஷ்டருக் குதவும் செங்கதிர் வேலோன்
பாதம் இரண்டில் பன்மணிச் சதங்கை
கீதம் பாடக் கிண்கிணி யாட
மையல் நடஞ்செயும் மயில்வா கனனார்
கையில்வே லால்எனைக் காக்கவென் றுவந்து
வரவர வேலா யுதனார் வருக
வருக வருக மயிலோன் வருக
இந்திரன் முதலா எண்டிசை போற்ற
மந்திர வடிவேல் வருக வருக
வாசவன் மருகா வருக வருக
நேசக் குறமகள் நினைவோன் வருக
ஆறுமுகம் படைத்த ஐயா வருக
நீறிடும் வேலவன் நித்தம் வருக
சிரகிரி வேலவன் சீக்கிரம் வருக
சரவண பவனார் சடுதியில் வருக
ரவண பசவ, ரரரர ரரர
ரிவண பவச ரிரிரிரி ரிரிரி
வணபவ சரவண வீரா நமோ நம
நிபவ சரவண நிறநிற நிறென
வசர வணபவ வருக வருக
அசுரர்குடி கெடுத்த ஐயா வருக
என்னை ஆளும் இளையோன் கையில்
பன்னிரண் டாயுதம் பாசஅங் குசமும்
பரந்த விழிகள் பன்னிரண் டிலங்க,
விரைந்தெனைக் காக்க வேலோன் வருக
ஐயும் கிலியும் அடைவுடன் சௌவும்

உய்யொளி சௌவும் உயிரையுங் கிலியும்
கிலியுஞ் சௌவும் கிளரொளி யையும்
நிலைபெற் றென்முன் நித்தமும் ஒளிரும்
சண்முகன் தீயும் தனியொளி யொவ்வும்
குண்டலி யாம்சிவ குகன்தினம் வருக
ஆறு முகமும் அணிமுடி ஆறும்
நீறிடு நெற்றியும் நீண்ட புருவமும்
பன்னிரு கண்ணும் பவளச்செவ் வாயும்
நன்னெறி நெற்றியில் நவமணிச் சுட்டியும்
ஈராறு செவியில் இலகுகுண் டலமும்
ஆறிரு திண்புயத் தழகிய மார்பில்
பல்பூ ஷணமும் பதக்கமும் தரித்து
நவமணி பூண்ட நவரத்ன மாலையும்
முப்புரி நூலும் முத்தணி மார்பும்
செப்பழ குடைய திருவயிறு உந்தியும்
துவண்ட மருங்கில் சுடரொளிப் பட்டும்
நவரத்னம் பதித்த நற்சீ ராவும்
இருதொடை அழகும் இணைமுழந் தாளும்
திருவடி யதனில் சிலம்பொலி முழங்க
செககண செககண செககண செகண
மொகமொக மொகமொக மொகமொக மொகன
நகநக நகநக நகநக நகென
டிகுகுண டிகுடிகு டிகுகுண டிகுண
ரரரர ரரரர ரரரர ரரர
ரிரிரிரி ரிரிரிரி ரிரிரிரி ரிரிரி
டுடுடுடு டுடுடுடு டுடுடுடு டுடுடு
டகுடகு டிகுடிகு டங்கு டிங்குகு
விந்து விந்து மயிலோன் விந்து
முந்து முந்து முருகவேள் முந்து
எந்தனை யாளும் ஏரகச் செல்வ!
மைந்தன் வேண்டும்வர மகிழ்ந் துதவும்
லாலா லாலா லாலா வேசமும்
லீலா லீலா லீலா விநோதனென்று
உன்திரு வடியை உறுதியென் றெண்ணும்
என்தலை வைத்துன் இணையடி காக்க
என்னுயிர்க் குயிராம் இறைவன் காக்க
பன்னிரு விழியால் பாலனைக் காக்க

அடியேன் வதனம் அழகுவேல் காக்க
பொடிபுனை நெற்றியைப் புனிதவேல் காக்க
கதிர்வேல் இரண்டும் கண்ணினைக் காக்க
விதிசெவி யிரண்டும் வேலவர் காக்க
நாசிக ளிரண்டும் நல்வேல் காக்க
பேசிய வாய்தனைப் பெருவேல் காக்க
முப்பத் திருபல் முனைவேல் காக்க
செப்பிய நாவைச் செவ்வேல் காக்க
கன்னமி ரண்டும் கதிர்வேல் காக்க
என்னிளங் கழுத்தை இனியவேல் காக்க
மார்பை இரத்ன வடிவேல் காக்க
சேரிள முலைமார் திருவேல் காக்க
வடிவே லிருதோள் வளம்பெறக் காக்க
பிடரிக ளிரண்டும் பெருவேல் காக்க
அழகுடன் முதுகை அருள்வேல் காக்க
பழுபதி னாறும் பருவேல் காக்க
வெற்றிவேல் வயிற்றை விளங்கவே காக்க
சிற்றிடை அழகுறச் செவ்வேல் காக்க
நாணாங் கயிற்றை நல்வேல் காக்க
ஆண்குறி யிரண்டும் அயில்வேல் காக்க
பிட்ட மிரண்டும் பெருவேல் காக்க
வட்டக் குதத்தை வடிவேல் காக்க
பணைத்தொடை யிரண்டும் பருவேல் காக்க
கணைக்கால் முழந்தாள் கதிர்வேல் காக்க
ஐவிரல் அடியிணை அருள்வேல் காக்க
கைக ளிரண்டும் கருணைவேல் காக்க
முன்கை யிரண்டும் முரண்வேல் காக்க
பின்கை யிரண்டும் பின்னவள் இருக்க
நாபிக் கமலம் நல்வேல் காக்க
முப்பால் நாடியை முனைவேல் காக்க
எப்பொழு தும்எனை எதிர்வேல் காக்க
அடியேன் வசனம் அசைவுள நேரம்
கடுகவே வந்து கனகவேல் காக்க
வரும்பகல் தன்னில் வச்சிரவேல் காக்க
அரையிருள் தன்னில் அனையவேல் காக்க
ஏமத்தில் சாமத்தில் எதிர்வேல் காக்க
தாமதம் நீக்கிச் சதுர்வேல் காக்க

காக்க காக்க கனகவேல் காக்க
நோக்க நோக்க நொடியில் நோக்க
தாக்கத் தாக்க தடையறத் தாக்க
பார்க்கப் பார்க்கப் பாவம் பொடிபட
பில்லி சூனியம் பெரும்பகை அகல
வல்ல பூதம் வலாட்டிகப் பேய்கள்
அல்லற் படுத்தும் அடங்கா முனியும்
பிள்ளைகள் தின்னும் புழக்கடை முனியும்
கொள்ளிவாய்ப் பேய்களும் குறளைப் பேய்களும்
பெண்களைத் தொடரும் பிரமராட் சதரும்
அடியனைக் கண்டால் அலறிக் கலங்கிட
இரிசிகாட் டேரி இத்துன்ப சேனையும்
எல்லிலும் இருட்டிலும் எதிர்ப்படும் அண்ணரும்
கனபூசை கொள்ளும் காளியோ டனைவரும்
விட்டாங் காரரும் மிகுபல பேய்களும்
தண்டியக் காரரும் சண்டா ளர்களும்
என்பெயர் சொல்லவும் இடிவிழுந் தோடிட
ஆனை அடியினில் அரும்பா வைகளும்
பூனை மயிரும் பிள்ளைகள் என்பும்
நகமும் மயிரும் நீண்முடி மண்டையும்
பாவைக ளுடனே பலகல சத்துடன்
மனையிற் புதைத்த வஞ்சனை தனையும்
ஒட்டிய பாவையும் ஒட்டிய செருக்கும்
காசும் பணமும் காவுடன் சோறும்
ஓதுமஞ் சனமும் ஒருவழிப் போக்கும்
அடியனைக் கண்டால் அலைந்து குலைந்திட
மாற்றார் வஞ்சகர் வந்து வணங்கிட
காலதூ தாளெனைக் கண்டாற் கலங்கிட
அஞ்சி நடுங்கிட அரண்டு புரண்டிட
வாய்விட் டலறி மதிகெட் டோடப்
படியினில் முட்டப் பாசக் கயிற்றால்
கட்டுடன் அங்கம் கதறிடக் கட்டு
கட்டி உருட்டு கால்கை முறியக்
கட்டு கட்டு கதறிடக் கட்டு
முட்டு முட்டு விழிகள் பிதுங்கிட
செக்கு செக்கு செதில்செதி லாக
சொக்கு சொக்கு சூர்ப்பகை சொக்கு

குத்து குத்து கூர்வடி வேலால்
பற்று பற்று பகலவன் தணலெரி
தணலெரி தணலெரி தணலது வாக
விடுவிடு வேலை வெருண்டது வோடப்
புலியும் நரியும் புன்னரி நாயும்
எலியும் கரடியும் இனித்தொடர்ந் தோடத்
தேளும் பாம்பும் செய்யான் பூரான்
கடிவிட விஷங்கள் கடித்துய ரங்கம்
ஏறிய விஷங்கள் எளிதினில் இறங்க
ஒளிப்புஞ் சுளுக்கும் ஒருதலை நோயும்
வாதஞ் சயித்தியம் வலிப்புப் பித்தம்
சூலைசயங் குன்மம் சொக்குச் சிரங்கு
குடைச்சல் சிலந்தி குடல்விப் பிரிதி
பக்கப் பிளவை படர்தொடை வாழை
கடுவன் படுவன் கைத்தாள் சிலந்தி
பற்குத்து அரணை பருஅரை யாப்பும்
எல்லாப் பிணியும் என்றனைக் கண்டால்
நில்லா தோட நீஎனக் கருள்வாய்!
ஈரேழ் உலகமும் எனக்குற வாக
ஆணும் பெண்ணும் அனைவரும் எனக்கா
மண்ணா ளரசரும் மகிழ்ந்துற வாகவும்
உன்னைத் துதிக்க உன்திரு நாமம்
சரவண பவனே சையொளி பவனே
திரிபுர பவனே திகழொளி பவனே
பரிபுர பவனே பவமொளி பவனே
அரிதிரு மருகா அமரா பதியைக்
காத்துத் தேவர்கள் கடுஞ்சிறை விடுத்தாய்
கந்தா குகனே கதிர் வேலவனே!
கார்த்திகை மைந்தா கடம்பா கடம்பனை
இடும்பனை யழித்த இனியவேல் முருகா
தணிகா சலனே சங்கரன் புதல்வா
கதிர்கா மத்துறை கதிர்வேல் முருகா
பழநிப் பதிவாழ் பால குமாரா
ஆவினன் குடிவாழ் அழகிய வேலா
செந்தின்மா மலையுறும் செங்கல்வ ராயா
சமரா புரிவாழ் சண்முகத் தரசே
காரார் குழலாள் கலைமகள் நன்றாய்

என்நா இருக்க யானுனைப் பாட
எனைத்தொடர்ந் திருக்கும் எந்தை முருகனைப்
பாடினேன் ஆடினேன் பரவச மாக
ஆடினேன் நாடினேன் ஆவினன் பூதியை
நேச முடன்யான் நெற்றியில் அணியப்
பாச வினைகள் பற்றது நீங்கி
உன்பதம் பெறவே உன்னரு ளாக
அன்புடன் இரக்ஷி அன்னமுஞ் சொன்னமும்
மெத்த மெத்தாக வேலா யுதனார்
சித்திபெற் றடியேன் சிறப்புடன் வாழ்க
வாழ்க வாழ்க மயிலோன் வாழ்க
வாழ்க வாழ்க வடிவேல் வாழ்க
வாழ்க வாழ்க மலைக்குரு வாழ்க
வாழ்க வாழ்க மலைக்குற மகளுடன்
வாழ்க வாழ்க வாரணத் துவசம்
வாழ்க வாழ்க என் வறுமைகள் நீங்க
எத்தனை குறைகள் எத்தனை பிழைகள்
எத்தனை யடியேன் எத்தனை செயினும்
பெற்றவன் நீகுரு பொறுப்ப துன்கடன்
பெற்றவள் குறமகள் பெற்றவ ளாமே
பிள்ளையென் றன்பாய்ப் பிரிய மளித்து
மைந்தனமென் மீதுன் மனமகிழ்ந் தருளித்
தஞ்சமென் றடியார் தழைத்திட அருள்செய்
கந்தர் சஷ்டி கவசம் விரும்பிய
பாலன் தேவ ராயன் பகர்ந்ததைக்
காலையில் மாலையில் கருத்துடன் நாளும்
ஆசா ரத்துடன் அங்கந் துலக்கி
நேச முடனொரு நினைவது வாகிக்
கந்தர் சஷ்டி கவச மிதனைச்
சிந்தை கலங்காது தியானிப் பவர்கள்
ஒருநாள் முப்பத் தாறுருக் கொண்டு
ஓதியே செபித்து உகந்து நீறணிய
அட்டதிக் குள்ளோர் அடங்கலும் வசமாய்த்
திசைமன்ன ரெண்மர் செயலது அருளுவர்
மாற்றல ரெல்லாம் வந்து வணங்குவர்
நவகோள் மகிழ்ந்து நன்மை யளித்திடும்
நவமத னெனவும் நல்லெழில் பெறுவர்

எந்த நாளும் ஈரெட்டாய் வாழ்வர்
கந்தர்கை வேலாம் கவசத் தடியை
வழியாய்க் காண மெய்யாய் விளங்கும்
விழியாற் காண வெருண்டிடும் பேய்கள்
பொல்லா தவரைப் பொடிப்பொடி யாக்கும்
நல்லோர் நினைவில் நடனம் புரியும்
சர்வ சத்துரு சங்கா ரத்துஅடி
அறிந்து எனதுள்ளம் அட்ட லக்ஷ்மிகளில்
வீரலட் சுமிக்கு விருந்துண வாகச்
சூரபத் மாவைத் துணித்தகை யதனால்
இருபத் தேழ்வர்க்கு உவந்தமு தளித்த
குருபரன் பழனிக் குன்றினி லிருக்கும்
சின்னக் குழந்தை சேவடி போற்றி
எனைத்தடுத் தாட்கொள என்றன துள்ளம்
மேவிய வடிவுறும் வேலவ போற்றி
தேவர்கள்சேனா பதியே போற்றி
குறமகள் மனமகிழ் கோவே போற்றி
திறமிகு திவ்விய தேகா போற்றி
இடும்பா யுதனே இடும்பா போற்றி
கடம்பா போற்றி கந்தா போற்றி
வெட்சி புனையும் வேலே போற்றி
உயர்கிரி கனக சபைக்கோ ரரசே
மயில்நட மிடுவோய் மலரடி சரணம்
சரணஞ் சரணஞ் சரவண பவஓம்
சரணஞ் சரணஞ் சண்முகா சரணம்.

**கவசம் இரண்டு முற்றிற்று**

உ

(கவசம் மூன்று)

# பழநிப் பதிவாழ் அப்பன்

திருவா வினன்குடி சிறக்கும் முருகா
குருபரா குமரா குழந்தைவேலா யுதா
சரவணை சண்முகா சதாசிவன் பாலா
இரவலர் தயாபரா ஏழைபங் காளா
பரமேஸ்வரிக்குப் பாலா தயாபரா
வரமெனக்(கு) அருள்வாய் வாமனன் மருகா
இரண்டாயிரம் வெள்ளம் யோகம் படைத்தவா
திரண்டா ருகமனம் தீர்க்கம் படைத்தவா
இலட்சத் திருநான்கு நற்றம்பி மாருடன்
பட்சத் துடனே பராசக்தி வேலதாய்
வீர வாகு மிகுதள கர்த்தனாய்
சூரசம் காரா துஷ்டநிஷ் டூரா
கயிலாய மேவும் கனகசிம் மாசனா
மயிலேறும் சேவகா வள்ளி மனோகரா
அகத்திய மாமுனிக்(கு) அருந்தமிழ் உரைத்தவா
சுகத்திரு முருகாற் றுப்படை சொல்லிய
நக்கீரன் நற்றமிழ் நலமென வினவிக்
கைக்கீழ் வைக்கும் கனமிசைக் குதவா
திருவரு ணகிரி திருப்புகழ் பாட
இரும்புகழ் நாவில் எழுதிப் புகழ்ந்தவா
ஆயிரத் தெட்டாம் அருள்சிவ தலத்தில்
பாயிரம் தோத்திரம் பாடப் புகழ்ந்தவா
எண்ணா யிரம்சமண் எதிர்கழு வேற்றி
விண்ணோர் குமாரன் வியாதியைத் தீர்க்கவா
குருவாம் பிரமனைக் கொடுஞ்சிறை வைத்து
உருப்பொருள் வேதம் உரைத்தாய் சிவனுடன்
கருதிமெய் யோகம் சொல்லிய(து) ஒருமுகம்

அருள்பெரு மயில்மீது அமர்ந்த(து) ஒருமுகம்
வள்ளிதெய் வானையை மருவிய(து) ஒருமுகம்
தெள்ளுநான் முகன்போல் சிருட்டிப்ப(து) ஒருமுகம்
சூரனை வேலால் துணித்த(து) ஒருமுகம்
ஆரணம் ஓதும் அருமறை யடியார்
தானவர் வேண்டுவ தருவ(து) ஒருமுகம்
ஞான முதல்வருக்கு நற்பிள்ளை பழநி
திருப்பரங் கிரிவாழ் தேவா நமோ நம
பொருட்செந்தி லம்பதி புரப்பாய் நமோ நம
ஏரகம் தனில்வாழ் இறைவா நமோ நம
கூரகம் ஆவினன் குடியாய் நமோ நம
சர்வ சங்கரிக்குத் தனயா நமோ நம
உறுசோலை மலைமேல் உகந்தாய் நமோ நம
எல்லா கிரிக்கும் இறைவா நமோ நம
சல்லாப மாக சண்முகத் துடனே
எல்லாத் தவமும் இனிதெழுந் தருளி
உல்லா சத்துறும் ஓங்கார வடிவே
மூல வட்டத்தில் முளைத்தெழும் ஜோதியை
சால முக்கோணத் தந்தமுச் சத்தியை
வேலா யுதமுடன் விளங்கிடும் குகனைச்
சீலமார் வயலூர்ச் சேந்தனைத் தேவனை
கைலாச மேருவா காசத்தில் கண்டு
பைலாம் பூமியும் பங்கய பார்வதி
மேலும் பகலும் விண்ணிரு வேந்தி
நாற்கோ ணத்தில் நளினமாய் அர்ச்சனை
கங்கை யீசன் கருதிய நீர்புரை
செங்கண்மால் திருவும் சேர்ந்துசெய் அர்ச்சனை
அக்கினி நடுவே அமர்ந்த ருத்திரன்
முக்கோண வட்டம் முதல்வாயு ருத்திரி
வாய்அறு கோணம் மகேசுவரன் மகேசுவரி
ஐயும் கருநெல்லி வெண்சாரை தன்மேல்
ஆகாச வட்டத்து அமர்ந்த சதாசிவன்
பாகமாம் வெண்மைப் பராசக்தி கங்கை
தந்திர அர்ச்சனை தலைமேல் கொண்டு
மந்திர மூலத்தில் வாசியைக் கட்டி
அக்கினிக் குதிரை ஆகாசத் தேவி

மிக்கமாய்க் கருநெல்லி வெண்சாரை உண்பவர்
பாகமாய் ரதமும் பகல்வழி யாரைச்
சாகா வகையும் தன்னை அறிந்து
ஐந்து ஜீவனுடன் ஐயஞ்சு கல்பமும்
விந்தை உமைசிவன் மேன்மையும் காட்டி
சந்திர சூரியர் தம்முடன் அக்கினி
அந்திரனைக் கண்டு அறிந்தே யிடமாய்ச்
சிந்தையுள் ஏற்றுச் சிவசம்பு தன்னை
மந்திர அர்ச்சனை வாசிவா என்று
தேறுமுகம் சென்னி சிவகிரி மீதில்
ஆறு முகமாய் அகத்துளே நின்று
வாசல் ஒன்பதையும வளமுடன் வைத்து
யோசனை ஐங்கரன் உடன்விளை யாடி
மேலைக் கருநெல்லி வெண்சாரை உண்டு
வாலைக் குழந்தை வடிவையும் காட்டி
நரைதிரை மாற்றி நாளையும் காட்டி
உரைசிவ யோகம் உபதேசம் செப்பி
மனத்தில் பிரியா வங்கண மாக
நினைத்த படிஎன் நெஞ்சத் திருந்து
அதிசயம் என்றுன் அடியார்க்கு இரங்கி
மதியருள் வேலும் மயிலுடன் வந்து
நானே நீயெனும் லட்சணத் துடனே
தேனே என்னுளம் சிவகிரி எனவே
ஆறா தாரத்து ஆறு முகமும்
மாறா திருக்கும் வடிவையும் காட்டிக்
கனவிலும் நனவிலும் கண்டுனைத் துதிக்க
தனதென வந்து தயவுடன் இரங்கிச்
சங்கொடு சக்கரம் சண்முக தெரிசனம்
எங்கு நினைத்தாலும் என்முன்னே வந்து
அஷ்டாவ தானம் அறிந்தவுடன் சொல்லத்
தட்டாத வாக்கும் சர்வா பரணமும்
இலக்கணம் இலக்கியம இசையறிந் துரைக்கத்
துலக்கிய காவியம் சொற்பிர பந்தம்
எழுத்துச் சொற்பொருள் யாப்பலங் காரம்
வழுத்தும் என்நாவில் வந்தினி திருந்தே
அமுத வாக்குடன் அடியார்க்கும் வாக்கும்

சமுசார சாரமும் தானே நிசமென
வச்சிர சரீரம் மந்திர வசீகரம்
அட்சரம் யாவும் அடியேனுக் குதவி
வல்லமை யோகம் வசீகர சக்தி
நல்ல உன்பாதமும் நாடிய பொருளும்
சகலகலை ஞானமும் தானெனக் கருளி
செகதல வசீகரம் திருவருள் செய்து
வந்த கலிபிணி வல்வினை மாற்றி
இந்திரன் தோகை எழில் மயில் ஏறிக்
கிட்டவே வந்து கிருபை பாலிக்க
அட்ட துட்டமுடன் அநேக மூர்க்கமாய்
துட்ட தேவதையும் துட்டப் பிசாசும்
வெட்டுண்ட பேயும் விரிசடைப் பூதமும்
வேதாளம் கூளி விடும்பில்லி வஞ்சனை
பேதாளம் துன்பப் பிசாசுகள் நடுநடுங்க
பதைபதைத் தஞ்சிடப் பாசத்தால் கட்டி
உதைத்து மிதித்தங்(கு) உருட்டி நொறுக்கிச்
சூலத்தாற் குத்தித் தூளு தூளுருவி
வேலா யுதத்தால் வீசிப் பருகி
மழுவிட் டேவி வடவாக் கினிபோல்
தழுவி அக்கினியாய்த் தானே எரித்துச்
சிதம்பர சக்கரம் தேவி சக்கரம்
மதம்பெறும் காளி வல்ல சக்கரம்
மதியணி சம்பு சதாசிவ சக்கரம்
பதிகர்ம வீர பத்திரன் சக்கரம்
திருவை குண்டம் திருமால் சக்கரம்
அருள்பெருந் திகிரி அக்கினிச் சக்கரம்
சண்முக சக்கரம் தண்டாயு தத்தால்
விம்ம அடிக்கும் எல்லாச் சக்கரமும்
ஏக ரூபமாய் என்முனே நின்று
வாகனத் துடன்என் மனத்துள் இருந்து
தம்பனம் மோகனம் தயவாம் வசீகரம்
இம்பமா கருடணம் மேவுமுச் சாடனம்
வம்பதாம் பேதனம் வலிதரும் ஆரணம்
உம்பர்கள் ஏத்தும் உயர்வித் வேடணம்
தந்திர மந்திரம் தருமணி அட்சரம்

உந்தன் விபூதி உடனே சபித்து
கந்தனின் தோத்திரம் கவசமாய்க் காக்க
எந்தன் மனத்துள் எதுவேண்டினும்
தந்து ரட்சித்தருள் தயாபரா சரணம்
சந்தம் எனக்கருள் சண்முகா சரணம்
சரணம் சரணம் சட்கோண இறைவா
சரணம் சரணம் சத்துரு சம்காரா
சரணம் சரணம் சரவண பவஓம்
சரணம் சரணம் சண்முகா சரணம்.

**கவசம் மூன்று முற்றிற்று**

உ

(கவசம் நான்கு)

# திருவேரகம்வாழ் தேவன்

ஓமெனும் பிரணவம் உரைத்திடச் சிவனார்
காமுற உதித்த கனமறைப் பொருளே
ஓங்கார மாக உதயத் தெழுந்தே
ஆங்கார மான அரக்கர் குலத்தை
வேரறக் களைந்த வேலவா போற்றி
தேராச் சூரரைத் துண்டதுண் டங்களாய்
வேலா யுதத்தால் வீசி அறுத்த
பாலா போற்றி பழநியின் கோவே
நான்கு மறைகள் நாடியே தேடும்
மான்மரு கோனே வள்ளி மணாளனே
நானெனும் ஆணவம் நண்ணிடா(து) என்னைக்
காண நீ வந்து காப்பதுன் கடனே
கூளி கூளி கங்காளி ஓங்காரி
சூலி கபாலி துர்க்கை யேமாளி
போற்றும் முதல்வா புனித குமாரா
சித்தர்கள் போற்றும் தேசிகா போற்றி
'ஏகாட் சரமாய்' எங்கும் தானாகி
வாகாய் நின்ற மறைமுதற் பொருளே
துதியட் சரத்தால் தொல்லுல(கு) எல்லாம்
அதிசய மாக அமைத்தவா போற்றி
திரியரட் சரத்தால் சிவனயன் மாலும்
விரிபா ருலகில் மேன்மையுற் றவனே
'சதுரட்' சரத்தால் சாற்றுதல் யோகம்
'மதுர'மாய் அளிக்கும் மயில்வா கனனே
'பஞ்சாட்' சரத்தால் பரமன் உருவத்தால்
தஞ்சமென் றோரைத் தழைத்திடச் செய்தென்
நெஞ்சகத்(து) இருக்கும் நித்தனே சரணம்

அஞ்சலி செய்த அமரரைக் காக்கும்
ஆறு கோணமாய் ஆறெழுத் தாகி
ஆறு சிரமும் அழகிய முகமும்
ஆறிரு செவியும் அமர்ந்த மார்பும்
ஆறிரு கண்ணும் அற்புத வடிவும்
சரவணை வந்த சடாட்சரப் பொருளே
அரனயன் வாழ்த்தும் அப்பனே கந்தா
கரங்கள் பன்னிரண்டில் கதிரும் ஆயுதத்தால்
தரங்குலைந்(து) ஓடத் தாரகாசுரன் முதல்
வேரறச் சூர்க்குலம் முடித்து மகிழ்ந்தோய்
சீர்திருச் செந்தூர் தேவசே னாதிப
அஷ்ட குலாசலம் யாவையும் ஆகி
இஷ்ட சித்திகள் அருள்ஈசன் புதல்வா
துட்டசங் காரா சப்பிர மணியா
மட்டிலா வடிவே வையாபுரித் துரையே
எண்கோ ணத்துள் இயங்கிய நாரணன்
கண்கொளாக் காட்சி காட்டிய சடாட்சர
சைவம் வைணவம் சமரச மாக
தெய்வமாய் விளங்கும் சரவண பவனே
சரியை கிரியை சார்ந்தநல் யோகம்
இரவலர்க்(கு) அருளும் ஈசா போற்றி
ஏதுசெய் திடினும் என்பால் இரங்கிக்
கோதுகள் இல்லாக் குணமெனக் கருளித்
தரிசனம் கண்ட சாதுவோ(டு) உடன்யான்
அருச்சனை செய்ய அனுக்ரகம் அருள்வாய்
பில்லிவல் வினையும் பீனிச மேகம்
வல்ல பூதங்கள் மாயமாய்ப் பறக்க
அல்லலைப் போக்கிநின் அன்பரோடு என்னைச்
சல்லாப மாகச் சகலரும் போற்ற
கண்டு களிப்புறக் கருணை அருள்வாய்
அண்டர் நாயகனே அருமறைப் பொருளே
குட்டிச் சாத்தான் குணமிலா மாடன்
தட்டிலா இருளன் சண்டிவே தாளம்
சண்டா முனியும் தக்கராக் கதரும்
மண்டை வலியோடு வாதமும் குன்மமும்
சூலைகா மாலை சொக்கலும் சயமும்

மூலரோ கங்கள் முடக்குள் வலிப்பு
திட்டு முறைகள் தெய்வச் சாபம்
குட்டம் சோம்பல் கொடிய வாந்தியும்
கட்டிலாக் கண்ணோய் கண்ணேறு முதலா
வெட்டுக் காயம் வெவ்விடம் அனைத்தும்
உன்னுடைய நாமம் ஓதியே நீறிடக்
கன்னலொன் றதனில் களைந்திடக் கருணை
செய்வதுன் கடனே செந்தில் நாயகனே
தெய்வநா யகனே தீரனே சரணம்
சரணம் சரணம் சரவண பவஓம்
சரணம் சரணம் சண்முகா சரணம்.

**கவசம் நான்கு முற்றிற்று**

உ

(கவசம் ஐந்து)

# குன்றுதோறாடும் குமரன்

கணபதி துணைவா கங்காதரன் புதல்வா
குணவதி உமையாள் குமரா குருபரா
வள்ளி தெய்வானை மருவிய நாயகா
துள்ளிமயி லேறும் சுப்பிர மணியா
அழகொளிப் பிரபை அருள்வடி வேலா
பழநி நகரில் பதியநு கூலா
திருவா வினன்குடி சிறக்கும் முருகா
அருள்சேர் சிவகிரி ஆறு முகவா
சண்முக நதியும் சார்பன்றி மலையும்
பன்முகம் நிறைந்த பழநிக்கு இறைவா
ஆராறு நூற்று அட்டமங் களமும்
வீர வையாபுரி விளங்கும் தயாபரா
ஈராறு பழநி எங்கும் தழைக்கப்
பாராறு சண்முகம் பகரும் முதல்வா
ஆறு சிரமும் ஆறு முகமும்
ஆறிரு புயமும் ஆறிரு காதும்
வடிவம் சிறந்த மகரகுண் டலமும்
தடித்த பிரபைபோல் சார்ந்த சிந்தூரமும்
திருவெண் ணீறணி திருநுதல் அழகும்
கருணை பொழியும் கண்ணான்கு மூன்றும்
குனித்த புருவமும் கூரிய மூக்கும்
கணித்த மதுரித்த கனிவாய் இதழும்
வெண்ணிலாப் பிரபைபோல் விளங்கிய நகையும்
எண்ணிலா அழகாய் இலங்குபல் வரிசையும்
காரிகை உமையாள் களித்தே இனிதெனச்
சீர்தரும் வள்ளி தெய்வ நாயகியாள்
பார்த்தழ கென்னப் பரிந்த கபாலமும்

வார்த்த கனகம்போல் வடிவேல் ஒளியும்
முறுக்குமேல் மீசையும் மூர்க்கம் சிறக்க
மறுக்கும் சூரர்மேல் வாதுகள் ஆட
ஈஸ்வரன் பார்வதி எடுத்துமுத் தாடி
ஈஸ்வரன் வடிவை மிகக்கண் டனுதினம்
கையால் எடுத்துக் கனமார்(பு) அணைத்தே
ஐயா! குமரா! அப்பனே! என்று
மார்பினும் தோளினும் மடியினும் வைத்துக்
கார்த்திகே யாஎனக் கருணையால் கொஞ்சி
முன்னே கொட்டி முருகா! வருகவென்(று)
அந்நேரம் வட்டமிட் டாடி விளையாடித்
தேவியும் சிவனும் திருக்கண் களிகூரக்
கூவிய மயிலேறும் குருபரா வருக
தாவிய தகரேறும் சண்முகா வருக
ஏவிய வேலேந்தும் இறைவா வருக
கூவிய சேவற் கொடியோய் வருக
பாவலர்க் கருள்சிவ பாலனே வருக
அன்பர்க் கருள்புரி ஆறுமுகா வருக
பொன்போல் சரவணப் புண்ணியா வருக
அழகிற் சிவனொளி அய்யனே வருக
களபம் அணியுமென் கந்தனே வருக
மருமலர்க் கடம்பணி மார்பா வருக
மருவுவோர் மலரணி மணியே வருக
திரிபுர பவனெனும் தேவே வருக
பரிபுர பவனெனும் பவனே வருக
சிவகிரி வாழ்தெய்வ சிகாமணி வருக
காலில் தண்டை கலீர் கலீரென
சேலிற் சதங்கை சிலம்பு கலீரென
இடும்பனை மிதித்ததோர் இலங்கிய பாதமும்
அடும்பல வினைகளை அகற்றிய பாதமும்
சிவகிரி மீதினில் திருநிறை கொலுவும்
நவகிரி அரைமேல் இரத்தினப் பிரபையும்
தங்கரை ஞாணும் சாதிரை மாமணி
பொங்குமாந் தளிர்சேர் பொற்பீதாம் பரமும்
சந்திர காந்தச் சரிகைத் தொங்கலும்
மந்திர வாளும் வாங்கிச் சூரிகையும்

அருணோ தயம்போல் அவிர்வன் கச்சையும்
ஒருகோடி சூரியன் உதித்த பிரபைபோல்
கருணையால் அன்பரைக் காத்திடும் அழகும்
இருகோடி சந்திரன் எழிலொட்டி யாணமும்
ஆயிரம் பணாமணி அணியுமா பரணமும்
வாயில்நன் மொழியாய் வழங்கிய சொல்லும்
நாபிக் கமலமும் நவரோம பந்தியும்
மார்பில் சவ்வாது வாடை குபீரென
புனுகு பரிமளம் பொருந்திய புயமும்
ஒழுகிய சந்தனம் உயர் கஸ்தூரியும்
வலம்புரிச் சங்கொலி மணியணி மிடறும்
நலம்சேர் உருத்திர அக்க மாலையும்
மாணிக்கம் முத்து மரகதம் நீலம்
அணிவை டூரியம் அணிவைரம் பச்சை
பவளகோ மேதகம் பதித்தவச் ராங்கியும்
நவமணிப் பிரபைபோல் நாற்கோடி சூரியன்
அருணோ தயமெனச் சிவந்த மேனியும்
கருணை பொழியும் கடாட்சவீட் சணமும்
கவசம் தரித்தருள் காரண வடிவும்
நவவீரர் தம்முடன் நற்காட்சி யான
ஒருகை வேலாயுதம் ஒருகை சூலாயுதம்
ஒருகை நிறைசங்கு ஒருகை சக்ராயுதம்
ஒருகை நிறைவில்லு ஒருகை நிறையம்பு
ஒருகை மந்திரவாள் ஒருகை மாமழு
ஒரு கைமேற்குடை ஒருகை தண்டாயுதம்
ஒருகை சந்திராயுதம் ஒருகை வல்லாயுதம்
அங்கையில் பிடித்த ஆயுதம் அளவிலாப்
பங்கயக் கமலப் பன்னிரு தோளும்
முருக்கம் சிறக்கும் முருகா சரவணை
இருக்கும் குருபரா ஏழை பங்காளா
வானவர் முனிவர் மகிழ்ந்து கொண்டாடத்
தானவர் அடியவர் சகலரும் பணியப்
பத்திர காளி பரிவது செய்யச்
சக்திகள் எல்லாம் தாண்டவமாட
அஷ்ட பைரவர் ஆனந்த மாட
துஷ்டமிகுஞ் சூளிகள் சூழ்திசை காக்க

சத்த ரிஷிகள் சாந்தக மென்னச்
சித்தர்கள் நின்று சிவசிவா என்னத்
தும்புரு நாரதர் சூரிய சந்திரர்
கும்பமா முனியும் குளிர்ந்த தாரகையும்
அயன்மால் உருத்திரன் அஷ்ட கணங்கள்
நயமுடன் நின்று நாவால் துதிக்க
அஷ்ட லசக்ஷுமி அம்பிகை பார்வதி
கட்டழகன் என்று கண்டுனை வாழ்த்த
இடும்பா யுதன்நின் இணையடி பணிய
ஆடும் தேவகன்னி ஆரத்தி யெடுக்க
தேவ கணங்கள் ஜெயஜெய என்ன
ஏவற் கணங்கள் இந்திரர் போற்ற
கந்தருவர் பாடிக் கவரிகள் வீசிச்
சார்ந்தனம் என்னச் சார்வரும் அநேக
பூதம் அடிபணிந் தேத்த வேதாளம்
பாதத்தில் வீழ்ந்து பணிந்து கொண்டாட
அரகர என்றடியார் ஆலவட்டம் பிடிக்க
குருபரன் என்றன்பர் கொண்டாடி நிற்க
குடையும் சேவலின் கொடியும் சூழ
இடைவி டாமல்உன் ஏவலர் போற்றச்
சிவனடி யார்கள் திருப்பாத மேத்த
நவமெனும் நால்வரை ஏற்ற சரமண்டலம்
உருத்திர வீணை நாதசுர மேளம்
தித்திமி என்று தேவர்கள் ஆடச்
சங்கீத மேளம் தாளம் துலங்க
மங்கள மாக வைபவம் இலங்க
தேவ முரசடிக்கத் தினமேள வாத்தியம்
சேவல் கொடியும் சிறப்புடன் இலங்க
நந்திகே சுவரன் மீது ஏறிய நயமும்
வந்தனம் செய்ய வானவர் முனிவர்
எங்கள் பார்வதியும் ஈசனும் முன்வர
ஐங்கரன் முன்வர ஆறுமா முகவன்
வீர மயிலேறு வெற்றிவேல் எடுத்து
சூரன்மேல் ஏவத் துடித்தவன் மடியச்
சிங்கமுகா சுரன் சிரமது உருளத்
துங்கக் கயமுகன் சூரனும் மாள

அடலற்ற குழந்தை அறுத்துச் சயித்து
விட்டவே லாயுதம் வீசிக் கொக்கரித்துத்
தம்ப மெனும்சயத் தம்பம் நாட்டி
அன்பர்கள் தம்மை அனுதினம் காத்துத்
திருப்பரங் குன்றம் சீர்ப்பதி செந்தூர்
திருவாவி னன்குடி திருவே ரகமும்
துய்ய பழநி சுப்பிர மண்யன்
மெய்யாய் விளங்கும் விராலி மலைமுதல்
அண்ணா மலையும் அருள்மேவும் கயிலை
கண்ணிய மாவூற்றுக் கழுகுமா மலையும்
முன்னிமை யோர்கள் முனிவர் மனத்திலும்
நன்னய மாய்ப்பணி நண்பர் மனத்திலும்
கதிர்காமம் செங்கோடு கதிர்வேங் கடமும்
பதினா லுலகத்திலும் பக்தர் மனத்திலும்
எங்கும் தானவ னாயிருந்(து) அடியார்தம்
பங்கி லிருந்து பாங்குடன் வாழ்க
கேட்ட வரமும் கிருபைப் படியே
தேட்ட முடன்அருள் சிவகிரி முருகா
நாட்டு சிவயோகம் நாடிய பொருளும்
தாட்டிக மாய்எனக்(கு) அருள்சண் முகனே
சரணம் சரணம் சரவண பவஓம்
சரணம் சரணம் சண்முகா சரணம்.

**கவசம் ஐந்து முற்றிற்று**

உ

(கவசம் ஆறு)

# பழமுதிர் சோலைப் பண்டிதன்

சங்கரன் மகனே சரவண பவனே
ஐங்கரன் துணைவனே அமரர்தம் கோனே
செங்கண்மால் மருகனே தெய்வானை கேள்வனே
பங்கயம் போன்ற பன்னிரு கண்ணனே
பழநிமா மலையுறும் பன்னிரு கரத்தனே
அழகுவேல் ஏந்தும் ஐயனே சரணம்
சரவண பவனே சட்கோணத் துள்ளுறை
அரனருள் சுதனே அய்யனே சரணம்
சயிலொளி பவனே சடாட்சரத் தோனே
மயில்வா கனனே வள்ளலே சரணம்
திரிபுர பவனே தேவசே னாபதி
குறமகள் மகிழும் குமரனே சரணம்
திகழொளி பவனே சேவற் கொடியாய்
நகமா யுதமுடை நாதனே சரணம்
பரிபுர பவனே பன்னிரு கையனே
தருணமிவ் வேளை தற்காத் தருளே
சவ்வும் ரவ்வுமாய்த் தானே யாகி
வவ்வும் ணவ்வுமாய் விளங்கிய குகனே
பவ்வும் வவ்வுமாய்ப் பழமுதிர் சோலையில்
தவ்வியே ஆடும் சரவண பவனே
குஞ்சரி வள்ளியைக் குலாவி மகிழ்வோய்
தஞ்சமென் றுன்னைச் சரணம் அடைந்தேன்
கொஞ்சிய உமையுடன் குழவியாய்ச் சென்றங்(கு)
அஞ்சலி செய்தவள் அமுதமும் உண்டு
கார்த்திகை மாதர் கனமார்(பு) அமுதமும்
பூர்த்தியாய் உண்ட புனிதனே குகனே
நவமைந்தர் சிவனால் நலமுடன் உதிக்கத்

தவமுடை வீர வாகுவோ(டு) ஒன்பான்
தம்பிமா ராகத் தானையைக் கொண்ட
சம்பிர தாயா சண்முகா வேலா
நவவீரர் தம்முடன் நவகோடி வீரரும்
கவனமாய் உருத்திரன் அளித்தே களித்துப்
பேதம் இல்லாமல் பிரமனைக் குருவாய்
ஓதிடச் செய்ய உடன்அவ் வேதனை
ஓமெனும் பிரணவத் துண்மைநீ கேட்கத்
தாமே யோசித்த சதுர்முகன் தன்னை
அமரர்கள் எல்லாம் அதிசயப் படவே
மமதைசேர் அயனை வன்சிறை யிட்டாய்
விமலனும் கேட்டு வேகம தாக
உமையுடன் வந்தினி துவந்து புரிந்து
அயனைச் சிறைவிடென்(று) அன்பாய் உரைக்க
நயமுடன் விடுத்த ஞானபண் டிதனே
'திருமால் அயன்சிவன்' சேர்ந்து மூவரும்
கௌரி லட்சுமி கலைமக ளுடனே
அறுவரோர் அம்சமாய் அரக்கரை வெல்ல
ஆறு முகத்துடன் அவதரித் தோனே
சிங்க முகாசுரன் சேர்ந்த கயமுகன்
பங்கமே செய்யும் பானு கோபனும்
சூரனோ டொத்த துட்டர்க ளோடு
கோரமே செய்யும் கொடியராக் கதரை
வேருடன் கெல்லி விண்ணவர் துன்பம்
ஆறிடச் செய்தவ் வமரர்கள் தமக்குச்
சேனா பதியாய் தெய்விகப் பட்டமும்
தானாய்ப் பெற்ற தாட்டிகப் பெருமானே
திருப்பரங் குன்றம் செந்தூர் முதலாய்ச்
சிறப்புறு பழநி திருவே ரகமுதல்
எண்ணிலாத் தலங்களில் இருந்தாடும் குகனே
விண்ணவர் ஏத்தும் விநோத பாதனே
அன்பர்கள் துன்பம் அகற்றியாள் பவனே
தஞ்சமென்(று) ஓதினர் சமயம் அறிந்தங்(கு)
இன்பம் கொடுக்கும் ஏழைபங் காளா
கும்பமா முனிக்குக் குருதே சிகனே
தேன்பொழில் பழநித் தேவ குமாரா

கண்பார்த்(து) எனையாள் கார்த்திகே யாஎன்
கஷ்டநிஷ் டூரம் கவலைகள் மாற்றி
அஷ்ட லட்சுமிவாழ் அருளெனக்(கு) உதவி
இட்டமாய் என்முன் னிருந்து விளையாடத்
திட்டமாய் எனக்கருள் செய்வாய் குகனே
அருணகிரி தனக்(கு) அருளிய தமிழ்போல்
கருணையால் எனக்குக் கடாட்சித் தருள்வாய்
தேவ ராயன் செப்பிய கவசம்
பூவல யத்தோர் புகழ்ந்து கொண்டாட
சஷ்டி கவசம் தான்செபிப் போரைச்
சிஷ்டராய்க் காத்தருள் சிவகிரி வேலா
வந்தென் நாவில் மகிழ்வுடன் இருந்து
சந்தத் தமிழ்த்திறம் தந்தருள் வோனே
சரணம் சரணம் சரவண பவஓம்
சரணம் சரணம் தமிழ்தரும் அரனே
சரணம் சரணம் சங்கரன் சுதனே
சரணம் சரணம் சண்முகா சரணம்

**ஆறு கவசங்களும் முற்றிற்று**

உ

# கதிர்காமத் திருமுருகன்

# கீர்த்தனங்கள்

## ஆறுமுகநாவலர்

இராகம் - சாவேரி, தாளம் - ஆதி

### பல்லவி

உன்னிருபாதந் தெரி - சனஞ்செய்த பின்னரே
யுவகைக்கடலு - ளாழ்ந்தேனே

### அநுபல்லவி

தன்னிகரில் கதிரை - தனில்வாழும் போதனே
சற்குண்ய பரிபூரண - சண்முக நாதனே (உன்)

### சரணங்கள்

ஆதி நடுவிறுதி நீங்கினோய் - சித்தோ
டசித்தாம் பிரபஞ்சமுற்றுந் - தாங்கினோய்
சோதிவடிவாய் நின்ற சூலபாணி புதல்வா
சூரனாதி மூவரைத் தொலைத்தருளும்முதல்வா (உன்)

சனன மரணத்துயரத் தாழ்கின்றேன் - இன்னுஞ்
சஞ்சலச் சாகரத்துள் வீழ்கின்றேன்
இன்னமும் பாராமுகஞ் செய்யா தெனக்குருகுவா
யேதிலாத முத்தி யின்பந் தருகுவாய் (உன்)

அருளுங்கருணைக் கடலல்லையோ - முன்ன
ரமரரிட ரகற்ற வில்லையோ
ஒருவிலெனது நோயை யோட்டுத லருமையா
உன்னையே நம்பிவந்தேனுக் குருகாமை பெருமையா
(உன்) 1

இராகம் - துசாவந்தி, தாளம் - சாபு

**பல்லவி**

ஏனிந்தக்கேடு நெஞ்சே - ஐயையோ - உனக்
கேனிந்தக்கேடு நெஞ்சே

**அநுபல்லவி**

மோனந்திகழுஞ் சைவ - முனிவருறை கதிரை
முருகா - முருகா - முருகாவென் றுருகிலை (ஏனிந்த)

**சரணங்கள்**

பொய்யாமுலக வாழ்வை நீங்கி - நித்திய
பூரணானந்த வாழ்விற் றேங்கி

மெய்யா மறிவானந்த - வேதமுடிவாய் நின்ற
விமலா - விமலா - விமலா - வென்றுருகிலை (ஏனிந்த)

சனன மரணத் துயர் தீரு - மது
தானாயமரு நிலை சாரும்

கனகசபை நடனக் கருணாகரன் முன்றந்த
கந்தா - கந்தா - கந்தாவென் றுருகிலை (ஏனிந்த)

அங்கியிடை மெழுக தென்னக் - கசிந்
தளவிலானந்த மிகத்துன்ன

கொங்கு கமழ் கடம்பு குல்லையொடு புனைந்த
குகனே - குகனே - குகனேயென் றுருகிலை(ஏனிந்த) 2

இராகம் - சுருட்டி, தாளம் - ஆதி

**பல்லவி**

நிருமல பரசிவசண்முகா - சுத்த
நித்திய - சத்திய - வித்தகனாங்குக

**அநுபல்லவி**

திருலாவு மிலங்கையின் மேவிய
சீர்திகழுங்கதிர் காமத்துறைதரு
சிற்பரா - அருள் தற்பரா - அன்பர்
சிந்தையுகந் தமருந்தனி வேலனே (நிரு)

**சரணங்கள்**

பரமனருளும் புதல்வா - பரமானந்தசிவ
பத்தர்க்கருளு முதல்வா

கருணைசேர் சச்சி தானந்த வடிவே
கணிப்பிலாச்சது மறையின் முடிவே
கந்தனே - உமை மைந்தனே - என்னைக்
காத்து மலவிருள் தீர்த்தினிதாளுவாய் (நிரு)

அறிவுக்கறிவாய் நின்றவா - கிரௌஞ்சகிரியுடன்
அவுணர்கி ளையைக் கொன்றவா

குறிகுண மிறந்திலகு முருகா
கூர்ந்துளாயணி மருமன் மருகா
கோலனே - புரிநூலனே - ஒற்றைக்
கொம்பினன் பின்வரு தம்பியே யின்பருள் (நிரு)

அயனைச் சிறையில் வைத்தவா - அகத்தியமுனிவனுக்
கருளோடுப தேசித்தவா

வியனு லகமரருக் கருள் தாளா
வின்னுதல் வள்ளிக்கொடி புணருந் தோளா
மெய்யனே - எமதையனே - அர
விந்தமலர்நிக ரும்பாதந்தந்தருள் (நிரு) 3

**இராகம் - ஆகிரி, தாளம் - சாபு**

**பல்லவி**

இத்தனை கொடு வேதனைப்படல் கண்டு மும‌க்
கின்னு மிரக்க மில்லையா

**அநுபல்லவி**

சித்தி முத்திகடருந் தெய்வ மாணிக்க நதி
சேருங் கதிரை நகர் - திகழ் சுப்பிரமணியரே நான்(இத்)

**சரணங்கள்**

அண்டரிடரகற்றும் போதரே - அன்பர்
அனவரதம் பணி பொற் பாதரே
கண்டங்கரிய சோதி காதலரே யெனது
கண்ணேயென் கண்மணியே காருண்ய சாகரமே(இத்)

எள்ளினெய் போலெங்கும் நிறைவீரே - உமக்
கென்றுயர் தெரியாதோ அறைவீரே
தெள்ளுந் தமிழால் வைதார் தமக்கு மருள்வீரென்று
தீதிலருணகிரி தேவர்சொல் நம்பிவந்தேன் (இத்)

உம்மையல்லாது துணை யறியேனே - துய
ரோட்டிலீரேனு மும்மைப் பிரியேனே
இம்மை மறுமை வீடு மூன்று மும்மாலே யாகும்
இதுவே சத்தியஞ் சத்தியமென்று துணிந்து வந்தேன் (இத்) 4

இராகம் - கல்யாணி, தாளம் - ரூபகம்

**பல்லவி**

என்மே லிரக்கமில்லையா சாமி - புதல்வனுக்குத் தந்தை
இரங்காதிருந்தா லென்சொல்லும் பூமி

**அநுபல்லவி**

தன்னிகரில்லாக் கதிரைமலை வாழுந்
தற்பரானந்த சாமி சுகாரம்ப
வுன்னுபய சரணாம்புய மல்லாம
லொன்றும்புக லிடமின்றினியாகுதல் (என்)

**சரணங்கள்**

துய்யசடட்சரத்தோ ரெழுத்தையுஞ்
சொல்லிலே னென்செய்வேன் சிறியேன்
கோடி சூரியப் பிரகாசமான வரோதய சுவாமி
உய்வகையறியேன் செய்யநின் னாமத்தைநினையேன்
பவந்தீரா துலைகின்றேன் வினையேன்
அன்னை தெய்வமுநீயே அடியேனுக்குய் வருள்வாயே

அருள்சேர் சீலா - பாலா கோலா
நல்லனு கூலா - செங்கதிர்வேலா - இன்னும் (என்)

நித்தியபரி பூரணானந்த நிருமலா
தீதமுருகா பாம்பில் நிருத்தம் புரியும்
பரந்தாமனுக்கு நிகரில்லாத நன்மருகா
துத்திய வள்ளி மணாளா பல தொண்டர்
வணங்கிடுதாளா

என்மேற் சூதை யெண்ணாதே
என்னையிந்த வாதை பண்ணாதே
கனமிகு துய்யா - மெய்யா - பொய்யாப்
பன்னிருகையா - ஐயா - செய்யா - இன்னும் (என்)
ஆறுமுகவென் றழைக்குங் கீரனுக்
கருள்புரிந்திடு முதல்வா
அனவரதமுந் துதிசெயுந்திரி யம்பகற்கொரு புதல்வா
சீறுமவுணனை வென்றாய் குறத்தேவி முன்வேங்கையாய் நின்றாய்
நின்மேற் சிந்தனைவையே
னொருக்காலும் வந்தனை செய்யேன்
கன ஈழதேசா - ராசா - விலாசா
நல்லையில் - வாசா - நேசா - ஈசா - இன்னும் (என்) 5

**இராகம் - அசாவேரி, தாளம் - ஆதி**

**பல்லவி**

சிவகுரு நாதருக்குச் செய மங்களம் - நல்ல
செங்கமல பாதருக்குச் செய மங்களம்

**அநுபல்லவி**

பவமறுத் தெனையாளும் பன்னிரு தோளருக்கு
தவமுனிவர்களுளந் தங்கருளாளருக்குச் (சிவ)

**சரணங்கள்**

கன்னி வள்ளிநேசர் பாவ நாசருக்கு மங்களம்
கதிர் காமவேல ரீழ தேசருக்கு மங்களம்
மன்னுமடியார்க் கருளு மாசில் குமரேசருக்கு
துன்னிய வனந்தகோடி சூரியப் பிர காசருக்குச் (சிவ)

மங்கையுமை பாலர் வடி வேலருக்கு மங்களம்
மன்னுமறை நூலரனு கூலருக்கு மங்களம்
புங்கமிகு சிவகாம போதக சுசீலருக்குச்
செங்கையில் விளங்குவளைத் தெய்வயானை லோலருக்குச்(சிவ)

சங்கரன் குமாரர்குல்லைத் தாரருக்கு மங்களம்
தன்னிக ரில்லாதநல் லூர்ரருக்கு மங்களம்
பொங்குசினத் தவுணரைப் போரில் வென்ற வீரருக்குத்
துங்கவகத் தியற்கருள் தோமிலதி தீரருக்குச் (சிவ) 6

**கதிர்காமத் திருமுருகன் கீர்த்தனங்கள் முற்றிற்று**

உ

# திருமலை யாண்டவர் குறவஞ்சி

## பாயிரம்

## காப்பு

### உச்சிக் கணபதி

#### அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

சீர்தங்கு பண்பை யூர்வாழ் திருமலை முருக னீபத்
தார்தங்கு புயவேண் மீது தமிழ்க்குற வஞ்சி பாட
ஏர்தங்கு கமலம் பூத்த விறையவன் முதலோர் போற்றும்
கார்தங்கு மேனி யுச்சிக் கணபதி காப்ப தாமே. 1

### சுந்தரேசுவரர்

சந்திர வதனந் தன்னிற் றருகயற் கண்ணி வேட்ட
சுந்தரே சுரன்பொற் பாதத் துணைக்கம லத்தை நித்தம்
சிந்தையா னினைந்து வாழ்த்தித் திருமலைக் குவட்டின் மீது
வந்தருள் கந்த வேண்மேற் குறவஞ்சி வழுத்த லுற்றாம். 2

### திருமால் முதலியோர்

நிலவுவந் துலவுஞ் சோலை நிறைதிரு மலைமேல் வந்து
குலவிய குமரன் மீது குறவஞ்சித் தமிழைக் கூற
மலர்தரு திருவை வேட்ட மாலுநான் முகனு மேவும்
கலைவளர் மாது மென்பாற் கருணைதந் தருளு வாரே. 3

### நால்வரும் அகத்திய முனிவரும்

நற்றமிழ்க் காழி வேந்த னாவினுக் கரச னாரூர்ப்
புற்றிடங் கொண்டார் தோழன் வாதவூர்ப் புனித னல்ல
சொற்றமிழ் முனிவன் றங்க டுணைப்பதப் போதை வாழ்த்திக்
கொற்றவேற் குமரன் மீது குறவஞ்சி கூற லுற்றாம். 4

## அவையடக்கம்

அரவணி பரம னீன்றோ னருட்டிரு மலைமே னின்ற
குரவணி குமரன் மீது குறவஞ்சித் தமிழ்நான் பாடி
விரவுசொற் புலவோர் தம்முன் விளம்புவே னென்ற செய்கை
இரவியா யிரத்தின் முன்ன ரிலகுமின் மினிபோ லாமே. 5

மணிதனின் மாசு கண்டான் மாசினை மாற்றித் தங்கப்
பணிதனி லணிவர் நல்லோர் பான்மையென் றெண்ணி நெஞ்சத்
துணிவினாற் சிறியேன் பாடுஞ் சொற்குற வஞ்சி தன்னைக்
குணமெனக் கொள்வார் கற்றோர் குகன்புகழ் கூற லாலே. 6

## நூல்

### கட்டியக்காரன் வருகை

நீர்தங்கு கமல மாது நிறைதிரு மலையின் மீது
சீர்தங்கு குமர நாதன் சிகரமே லுலவுங் காட்சி
பார்தங்கு வீதி வந்த பவனியெச் சரிக்கை பாடக்
கார்தங்கு முழக்கங் காட்டுங் கட்டியக் காரன் வந்தான். 7

### எச்சரிக்கை

#### சிந்து

திருமருவு தருமேவு தேவர்முத லோர்கடமைச்
சிறைவிடுத்துக் காத்தருள்செய் செல்வாவெச்ச ரிக்கை—செய செய
மருமலர்ச்செங் காவிமலை வாலசுப்ர மணியா
வடிவேற் கரக்குமரா வரதாவெச்ச ரிக்கை—செய செய
தமிழ்மதுரைப் பாண்டியன்முன் சபையதனில் வாதுசெய்து
சமணர்களைக் கழுவேற்றுஞ் சதுராவெச்ச ரிக்கை—செய செய
அமரர்கிளை வாழவைத்தே யசுரர்கிளை தாழவைத்த
அலர்க்குவளைத் திருமலைவா மண்ணலேயெச்ச ரிக்கை—செய செய. 8

### முருகக்கடவுள் பவனி வருதல்

#### எண்சீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்

பூவனிதை தனக்கழகார் வதன மான
புண்டரிகப் போதனைய பண்பை மீதே
மேவுபொகுட் டனையதிரு மலையின் மேலே
விளங்கியமுத் தெனச்சிறந்த வேற்கை நாதன்

தாவுமயி றனிலேறி யனந்த கோடி
சரற்கால சந்திரன்போற் றழைத்துத் தோன்றித்
தேவர்கண முடுக்கணம்போற் சேனை சூழத்
திருவுலாப் பவனிவந்து சிறக்கின் றானே. 9

**சிந்து**

**பல்லவி**

மயிலில் வந்தனனே-திருமலைக்குமரன்
மயிலில் வந்தனனே. (மயிலில்)

**அநுபல்லவி**

செயமிகுந்திடு மயில்விளங்கிய தினகரர்பலர் நிகரவே
புயமிலங்கிய குரவலங்கல்வெண் பொடியலங்க்ருத மிலகவே
(மயிலில்)

**சரணங்கள்**

வித்தியாதரர் கருடர்கின்னரர்
வீணையின்னிசை முழங்கவே
சித்தர்யோகியர் திக்குபாலர்கள்
செயசெயென்றொலி முழங்கவே
முத்தமிழ்த்திருப் புகழிசைத்திட
மூவர்பாடல்கள் விளங்கவே
மத்தளந்தவில் பேரிசல்லரி
மங்கலத்தொலி தழங்கவே (மயிலில்)

பவளமொய்த்தவெண் முத்துக்குடைகளும்
பாங்கரெங்கணும் பிடிக்கவே
கவளயானையின் வாசியின்னொலிசுலாய்க்
ககனவண்டமும் வெடிக்கவே
தவளவாணகை வானரம்பையர்
தாதத்தாவென நடிக்கவே
கவலைகூர்ந்துவெஞ் சூரர்தங்கிளை
கலங்கியேநெஞ்சு துடிக்கவே (மயிலில்) 10

**தரிசித்த மாதர்நிலை**

**அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்**

அயிலேறு திருக்கரத்தா னல்லேறு குவளைமலை
அண்ணல் தோகை
மயிலேறிப் பவனிவரக் கண்டுமட வார்தங்கள்
மனமா லேறிப்

புயலேறு குழல்சரியப் பூவேறு வண்டிசைக்கப்
பொற்பூண் மின்னக்
கயிலேறு வளைசரியப் பருவமின்னா ரெவரும்வந்து
கருது வாரே. 11

**சிந்து**

தோகை மயின்மிசை மேவுங் குமரனைக் கண்டு —மன
தோகை யுடன்மயிற் சாயலன் னார்மயல் கொண்டு
ஓகை தருபர மேசுர னேயிவ னென்பார் —அவற்
கோங்கு மழுமான்கைத் தாங்குந் துடியெங்கே யென்பார்.
தேகமை மேகத் திருநெடு மாலிவ னென்பார் —என்னிற்
செங்கையி லாழியுஞ் சங்குஞ் சிறக்குமே யென்பார்.
மாகம் புகழும் பிதாமக னாமிவ னென்பார் —அன்ன
வாகன முந்தமிழ் வாணியும் பூணுமே யென்பார்.
மேகந் தவழுந் திருமலை மேவிய வேலன் —எங்கள்
வித்தகன் முத்துக் குமார சுவாமி யென்றார். 12

**காமவல்லி வருதல்**

**அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்**

திருமலை வேண்முன் சென்று சேர்கலை வளையுஞ் சோர்ந்து
பெருமயல் கொண்டு காமப் பேய்தொட விரகத் தீயை
ஒருமலைத் தென்றன் மூட்ட வுருவிலி நாணைப் பூட்ட
மருமலர்க் குழல்சேர் காம வல்லியாஞ் செல்வி வந்தாள். 13

**காமவல்லி வருணனை**

**சிந்து**

இருண்மங்குன் மிகவந்து குடிகொண்டு நிறைகின்ற
குழலினாள்-கதிர்
எழுபொன்சு டிகைசந்த்ர திலகஞ்செய் நுதலென்ற
எழிலினாள்.
கருவண்டு கடுவண்டு குழைகண்டு பொருகெண்டை
விழியினாள்-நல்
கனியின்சொ லமுதுண்டு பயில்கின்ற கிளியென்ற
மொழியினாள்.

அருணக் கதிர்துலங்கு மணிபொற் பணிபுனைந்த
குழையினாள்-குமிழ்
அதனைப் பொருவுதுண்ட மணிமுத் தணிசிறந்த
வொளியினாள்.
தருபொற் பணிபுனைந்து கமுகத் தினையடர்ந்த
மிடற்றினாள்-நல்ல
தருணப் பருவமங்கை வரையைப் பொருவுகொங்கைத்
தடத்தினாள்.
இரவுக் கதிபனென்ற வயிரத் தொடியிலங்கு
கையினாள்-மதன்
இனிதுற் றிடுநிதம்ப மரவத் தினிலிசைந்த
பையினாள்.
பெருமைத் துகில்புனைந்து துடிபொற் கொடியிசைந்த
இடையினாள்-சிறு
பிடியெப் படிநடந்த ததனைப் பொருவுகின்ற
நடையினாள். 14

**வேறு**

தேமருவு மெய்யழகு தோணவே
தேவரம்பை மார்மனது நாணுமே
காமரச வல்லியெழில் காணவே
காதன்மிஞ்சி வேலன்மயல் பூணுமே. 15

**காமவல்லியின் வருகை**

**பல்லவி**

வல்லி வந்தனளே-எழிற்காம
வல்லி வந்தனளே (வல்லி)

**அநுபல்லவி**

வில்லைப் பொருநுதல் முல்லைக் கிணைநகை
வல்லுத் துணைநகில் செல்விக் கிணையென (வல்லி)

**சரணங்கள்**

கொங்கை யிணைமத தும்பி யெதிர்த்திடக்
கூந்தலிற் றும்பிகள் பாட லொலித்திடச்
செங்க ணெனுந்தும்பி மேலே துளைத்திடத்
தேனிசை யாடவர் தம்மை வளைத்திட (வல்லி)

சிந்துர ரேகைத் திலகந் திகழ்ந்திடச்
சேல்விழி வேன்மத வேளை யிகழ்ந்திடச்
சந்தன மஞ்சள் சவாது கமழ்ந்திடச்
சரச விலாசவுல் லாசம் புரிந்திட (வல்லி) 16

### காமவல்லி முருகக்கடவுளைத் தரிசித்தல்

#### அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

சோலையின் றலத்தின் வந்து தோழிமா ருடனே கூட
மாலைவார் குழல்சேர் காம வல்லிபந் தடித்து நின்ற
வேலையில் வேலை யேந்தி மெய்யொளி தழைத்த நீலக்
கோலமா மயின்மீ தேறிக் குமரனை வரக்கண் டாளே. 17

### காமவல்லி வினாவுதலும் தோழியர் விடை யிறுத்தலும்

#### ஆனந்தக் களிப்பு

#### வினா

வித்தார மாமயி லேறிப்-பண்பை
வீதியில் வந்தவ ரார்சொல்லு பெண்ணே (வித்தார)

சித்தாதி சித்தரைப் போலே-உயர்
தேவர் குழாங்களு மேயொருக் காலே
சத்தாதி தாள முழங்கப்-பேரி
சல்லரி கண்டைமத் தாளந் தழங்க
முத்தார மாலைகண் மின்ன-அதில்
முப்புரி நூன்மலர் மாலைகண் மின்ன
மத்தாரந் திங்கள் திகழச்-சென்னி
வைத்தவன் புத்திர னென்று புகழ (வித்தார)

சீர்மது ரைப்பதி போற்றத்-தென்னன்
தீப்பிணி தன்னைவெண் ணீற்றினா லாற்றி
நீர்மிசை யேடெதி ரேற்றி-வந்து
நேர்சம ணர்களை வேரொடு மாற்றிப்
பார்மிசைச் சைவந் தழைக்க-வேறு
பல்சம யத்தவ ரெல்லா மிழக்கத்
தார்மணச் சோலைச்சீ காழி-வந்த
சம்பந்த மூர்த்திதன் சாயலைப் போலே (வித்தார)

**விடை**

நிருதரை வீட்டுசங் காரன்-தன்னை
நினைத்தோ ருளத்தி னிறைந்தசிங் காரன்
குருமதி சூடுகங் காளன்-தந்த
குமரன்றெய் வானை குறத்திபங் காளன்
தருமலர் வானவர் பெய்யும்-கும்ப
சம்பவன் வந்து பதந்துதி செய்யும்
திருமலை முத்துக் குமார-சுவாமி.
செங்கதிர் வேற்கரச் சேவக னம்மா! 18

**காமவல்லி மயல்கொள்ளுதல்**

**அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்**

சீதரன் றிருவன் னார்க டிருமலை முருக னென்ற
போதினின் மயங்கி வீழ்ந்த பூங்கொடி காம வல்லி
மாதைமா னார்கள் கையான் மலரணை மீதே சேர்த்தித்
தாதலர் பனிநீர் பெய்யத் தழலென்று சுழல்கின் றாளே. 19

**காமவல்லி இரங்கல்**

**சிந்து**

மயங்கி னேன்யா னாசை கொண்டேன்
மயிலில் வந்த வரையுங் காணேன்
புயங்கள் பன்னி ரண்டுங் கண்டேன்
பூண்டு கொண்ட வளையுங் காணேன்
தயங்கு மாறு தலையுங் கண்டேன்
தாதி யாறு தலையுங் காணேன்
செயங்கொள் காவித் திரும லைவாழ்
சேந்த னென்னைச் சேர்ந்தி லானே. 20

**காமல்லி தென்றலை நோக்கிக் கூறுதல்**

**அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்**

தோகைமேல் வந்த வால சுப்பிர மணியன் றன்மேல்
மோகம தாகி யாக முழுதுமே பசந்தேன் றன்மேற்
சாகர வடவைத் தீப்போற் சண்டவெங் காளம் போல
வேகமாய்த் தென்ற லேநீ வெம்புலி யெனப்பாய்ந் தாயே. 21

### கண்ணிகள்

சந்தனச் சாரலில் வந்து பிறந்தெழு தென்றலே-தமிழ்
தன்னிற் பழகியும் வன்மத் துடன்வந்தாய் தென்றலே
செந்தழல் போல்வந்து வந்தெனைக் காயாதே தென்றலே-கொடுந்
தீய விரகாக் கினியை யெழுப்பாதே தென்றலே
மந்தரக் கொங்கை மலயமென் றெண்ணாதே தென்றலே-என்றன்
மாலைக் குழன்மலர்ச் சோலையென் றெண்ணாதே தென்றலே
கொந்தலர்ச் சோலைத் திருமலையான்றிரு முன்னமே-சென்று
கூடிக் குலாவி மகிழச்செய் வாயிளந் தென்றலே. 22

### சந்திரனை நோக்கிக் கூறுதல்

சீதளப் பாற்கட லாரமு தாமெனத் திங்களே-வந்தும்
தீக்கதி ராய்க்குண மேன்படைத் தாய்தலைத் திங்களே
நீதமன் றேகுரு தார மணந்தாயே திங்களே-நெறி
நில்லாத தாற்பகற் செல்லா தவனானாய் திங்களே
பூதலத் தோருனை யிராமனென் றார்களே திங்களே-கல்லைப்
பூங்கொடி யாய்ச்செய்த பாங்குனக் கில்லையே திங்களே
மாதுடன் கூடப் பிறந்து மறந்தாயே திங்களே-திரு
மாமலைக் கந்த சுவாமிமுன் செல்லுவாய் திங்களே. 23

### மன்மதோபாலம்பனம்

#### அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

திங்களினான் மதிசோர்ந்தேன் கலைசோர்ந்தேன்
கைவளைகள் சேரச் சோர்ந்தேன்
அங்கமெலாம் பசந்துநொந்தே னண்ணறிரு
மலைவேள்வந் தணையா னென்மேல்
மங்குலெனுந் தும்பியின்மேல் வசந்தன்மே
லுலவிவரும் வசந்தா நீயும்
கொங்கலர்பூங் கணைதெரிந்து பொரநின்றா
லென்னவென்று கூறு வேனே. 24

இரதி மன்மதனே-திருமகள்
ஈன்ற மன்மதனே-வசந்தன்றேர்
ஏறு மன்மதனே-கருப்புவில்
ஏந்து மன்மதனே

சரமலர் மதனே-மதிக்குடை
தனில்வரு மதனே-பேதையர்
தமைப்பொரு மதனே-பொருவது
தான்வசை மதனே
உருவிலி மதனே-எனதுடல்
உருவிலி மதனே-பகைக்கெதிர்
உயர்சிவன் மதனே-எதிர்ந்தவ
னோடெதிர் மதனே
வருதிறல் மதனே-உயர்திரு
மலைக்குகனுடனே-உன்றிறல்
வன்மையைக் காட்டிக்-கணைமலர்
மாரிபெய் மதனே. 25

### தோழிமார் வினவுதலும் காமவல்லி விடை கூறுதலும்

#### அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

கன்னல்வார் சிலைமதவேள் கணையினா லுடைந்தேனைக்
காவா யென்றாய்
என்னமால் கொண்டவகை யெந்தவகை வந்தவிதம்
இவைதாந் தந்த
மன்னவரா ரன்னவர்பே ரென்னவென்று மின்னார்கள்
மறித்துக் கேட்கத்
துன்னுமயிற் காமவல்லி தன்னுடைய மையறனைச்
சொல்லு வாளே. 26

#### சிந்து

திருமயிலி லேறிவந்த முருகனைநான் கண்டுகொண்ட
செய்தியுமால் கொண்டதுவுஞ் செப்புவன்கேள் சகியே
ஒருவேலை வைத்தவனை வருவேலை கண்டவுடன்
ஒலிவேலை யெனைப்பொரவும் பெருவேலை படைத்தாய்
அருளிலகு மாறுமுக மெய்யனைநான் கண்டுமயல்
ஆறுதல்கா ணாதொருபோ தாறுகமாய்க் கொண்டேன்
மருவனச வாசமலர் முகங்கொள்சகி யேதிரு
மலைமுருகன் றருமயல்கொண் டுளமெலிந்தேன் சகியே. 27

### தோழி கூற்று

#### அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

வாசத்தார் மலர்ச்செங் காவி மலைக்கும ரேசன் றாதை
காசற்றா னிறைச்சி யுண்டான் மாதுலன் கணிச வானோ

பாசத்தாற் கட்டு முண்டான் மருகன்மேற் பாவை நீமால்
பேசத்தான் வழக்கு முண்டோ பெண்மதி பிழையென் றாளே. 28

### சிந்து

காமரச வல்லிமின்னே திருமலைவேள் தாதை
கால்கொண்ட பணிதலையிற் கொண்டுசடைப் பட்டே
ஈமமதில் நடமாடு பித்தனவன் செய்தி
ஈன்றதாய் முழுநீலி தமையன்மண மில்லான்
மாமனென்றா லாயனென்றார் மாடுமேய்த் திருந்தான்
மையல்தந்த மாப்பிளையோ சீரலைவாய்ச் செட்டி
தாமவன வேடனுறு பிணிமுகமேற் கொண்டும்
சத்தியெடுத் தேதிரிந்தான் றன்மேல்மால் கொண்டாய். 29

### காமவல்லி கூற்று

#### அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

முருகவேள் குலத்தை யெல்லா முற்றுநீ பழிப்புச் சொன்னாற்
பெருமைசே ருலக முன்போற் பேசுமோ பேச வொண்ணா
தருமறை யாலுஞ் சேட னாலுமே யரிதா மேன்மைத்
திருமலை முருகன் கீர்த்தி தெரிந்தது செப்பக் கேளாய். 30

### முருகவேள் பெருமை

#### சிந்து

அனுராக வல்லி மகமேரு வில்லி
அருள்தரு புதல்வ னருமறை முதல்வன்
முனமெதிர் சூரன் முனையடு வீரன்
மும்மதத் தும்பி முகன்றுணைத் தம்பி
சனகாதி வேதன் றுதிஞான போதன்
அருட்குண சீலன் முனிக்கனு கூலன்
தினைவன வாசம் வளர்வள்ளி நேசன்
திருமலை முருகன் பெருமைய நேகம். 31

### தூது செல்ல வேண்டுதல்

#### அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

என்றிவை பலவுங் கூறி யென்பொருட் டாக மின்னே
சென்றுநீ தூது சொல்லித் திருமலை முருகன் மார்பில்

ஒன்றிய கடப்ப மாலை யுண்மையா வாங்கி யென்பால்
வென்றியாய் வருதல் வேண்டு மென்குலக் கொடிமின் னாளே. 32

**பல்லவி**

தூதுசொல் லடியோ மானே-விரைவினிற்போய்த்
தூது சொல்லடியோ மர்னே (தூது)

**அநுபல்லவி**

பூதலம் பரவு பண்பை மீதுகந்த நாதன்முன்னே (தூது)

**சரணங்கள்**

அத்தநா ரீசர்தரு புத்ரன்வடி வேலனொரு
சித்ரமயில் மீதில்வரு முத்தையன் முனமேசென்று (தூது)

இந்த்ரன்முடி சூடவர விந்தன்முத லோர்பரவ
வந்தருள்செய் வேலனெழிற் கந்தன் முனமேசென்று (தூது)

பாவினஞ் சிறந்திலகு சேவலங் கொடிமருவு
காவியங் கிரியின்மிசை மேவுகந்த நாதன்முன்னே (தூது) 33

**அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்**

மறுசமய மானசமண் வஞ்சமய வாதிகளை
மறுத்தீ ராறு
பெறுசமய மீதினிலே புறச்சமய மாறகற்றிப்
பேச மேலாம்
அறுசமய மானவற்று ளருட்சமயஞ் சைவமென்றே
அருள்செய் வேலன்
உறுசமயம் பார்த்துமிக்கா யொருசமயஞ் சொல்லுவன்கேள்
உற்று மானே. 34

**சிந்து**

தேவர்பணி காவிமலை முருகனுக்குப் பூசை
தினமாறு காலமதி லபிடேகம் நாலு
ஆவலுட னைப்பசியுந் தைமாதந் தனிலும்
அவனிதொழுந் திருவுலாப் பவனிபெருங் கூட்டம்
மேவியவை காசி விசாகநாள் தன்னில்
மிக்காக வபிடேக விழாச்சிறப்பு மயிலே
பாவலரும் பூவையரும் பாடலுட னாடலிரு
பாலிலகுஞ் சாயரட்சை கொலுப்பார்க்கும் பொதுக்காண். 35

ஆகமத்தின் மிக்கான காரணத்தின் படியே
அருச்சனைசெய் சங்கரநா ராயணவே தியனும்
மேகநிகர் காதலன்சொ லாதிசுப்பிர மணியன்
மேன்மைபெறு விக்கிரம பாண்டியவே தியனும்
பாகமதில் நின்றுதீ பாராதனை செய்வார்
பகரவுங் கூடாது காலசந்தி புரிந்தே
ஏகமெனத் தனித்திருக்கும் வேளையிற்றூ துரைத்தே
எழிற்கடப்ப மாலைதனை வாங்கிவா சகியே. 36

### காமவல்லி கூடற்சுழி பார்த்தல்

#### கொச்சகக் கலிப்பா

வேலையணி வேள்குவளை வெற்பின்முரு கேசர்தந்த
மாலைமிகத் தாங்கிமலர் மாலைவரக் காணாமற்
சோலைதனிற் காமவல்லி சோகமுட னேமயங்கிக்
கோலவிழி நீர்சொரியக் கூடல்வளைக் கின்றாளே. 37

#### சிந்து

பூமகள்பதி நாமகள் பதியொடு
புரந்த ரர்தொழ வரந்தரு தயவிறை
பூந்து ணர்க்கடம் பேந்திய மார்பினர்
போர்செயு மயில்வீரர்
கோமளமுறு சாமளை பாலர்
குஞ்சரிகுற வஞ்சி மனோகரர்
குருப ரர்குகர் கூடுவ ராமெனிற்
கூடலே கூடாயோ. 38

### இரங்கல்

#### மடக்கு

ஓங்கி யேவளர சோக மேபசந்
தோங்கி மேலுற்ற சோகமே
பாங்கு சூழ்ந்த கவலை யேமையற்
பாரம் பாரென் கவலையே
பூங்க ளேயஞ் சுகங்க ளேயொரு
போது தானஞ் சுகங்களே
தேங்கொள் காவித் தடத்து ளான்வந்து
சேர்ந்து நீபங் கொடுத்திலான். 39

## குறத்தி வருகை

### கட்டளைக் கலித்துறை

கனத்திற் சிறந்த குழற்காம வல்லிதண் காவின்மிசை
இனத்தைப் பிரிந்திடு மான்போன் மயங்கிய வேல்வைதன்னில்
அனத்திற் சிறந்த நடைகாட்டி மாமயி லாமெனவே
வனத்திற் சிறந்த குறத்திமின் னாளங்கண் வந்தனளே. 40

### நிலைமண்டில வாசிரியப்பா

தண்கதிர் விரித்த வெண்கயி லாய
வெற்பினி லுதித்த பொற்புறு நீலம்
முகிழ்தரு காவி திகழ்திரு மலையான்
மாமணித் திரளும் வன்புலிப் பறழும்
தேமலர்த் தளிருந் தெண்டிரைக் கரத்தால்
வானிரு நிதிபோல் மகிழ்ந்திட வுதவி
நானிலம் புரக்கு நன்னதி யாளன்
பொன்னிறத் திரவும் பூந்துணர்த் தருவும்
மன்னிநின் றோங்கு வடவாரிய நாட்டான்
ஆடல்வண் டொலிக்கு மண்டர்க டுதிக்கும்
பாடல்வண் டிசைக்கும் பண்பைமா நகரான்
சூர்கிளை நெஞ்சந் துணுக்குற வானோர்
சீர்பெறத் தோன்றுஞ் சிகண்டிவெம் பரியான்
வெண்மதி மருப்பு விளங்கிட முகில்போற்
தண்மத மழைநீர்த் தாரைகள் பெய்யும்
வரையென வோங்கி வளர்ந்தவா ரணத்தான்
விரைதரு கடப்ப மென்மலர் மாலையான்
வான்வரை யுயர்த்த வாரணக் கொடியான்
மேன்மைமும் முரசும் விளங்கிய வாசலான்
அண்டம்யா வையினு மாருயிர் தோறும்
கொண்டிடு நிழல்போற் குலவிய வாணையான்
அன்பர்தம் முள்ளத் தின்புறு பெருமான்
அடியனைக் காக்கும் வடியயிற் குமரன்
வண்புகழ் பாடி வெண்பொடி பூசி
வெஞ்சர விழிமீ தஞ்சனந் தீட்டிக்
குன்றென வளர்ந்த கொங்கையின் மீதில்
ஒன்றிய பாசியுங் குன்றியும் புனைந்து
பட்டுடை மருங்கி லொட்டிய கூடையும்

மாத்திரைக் குறிதெரி வேத்திரக் கோலும்
வேல்விழி நயப்பும் பான்மொழி வியப்பும்
மேனகை யுருவசி மான்விழி யரம்பை
துதிசெயத் திடமா யதிசயத் துடனே
மால்கொளு மடவார் மனத்துய ரடங்க
மேலணி யுடுக்கும் விளங்கிடத் தொனித்தே
உலகெலாந் துதிக்குந் திலகமா யிலகி
மாதர்க ணினைத்த மனக்குறி மூன்று
போதினும் வருங்குறி போங்குறி மெய்க்குறி
வேந்தர்கள் கைக்குறி விரும்பினோர் மொழிக்குறி
பாந்தமாய் வகையாய்ப் பகர்ந்திடுங் குறியே
திறத்துடன் சொல்லுங் குறத்திவந் தனளே. 41

**பல்லவி**

குறத்தி வந்தனளே-திருமலைக்
குறத்தி வந்தனளே (குறத்தி)

**அநுபல்லவி**

மறத்தி யின்சொலை யுறுத்தி மஞ்சுறு
நிறத்தி வஞ்சியர் திறத்தை மிஞ்சிய (குறத்தி)

**சரணங்கள்**

அல்லை நேர்குழல் கெண்டை போல்விழி
முல்லை வாணகை தொண்டை வாயிதழ்
வில்லை நேர்நுதல் கண்டு போன்மொழி
செல்வி போலெழில் கொண்டு மேவிய (குறத்தி)

தங்க மலைநிகர் கொங்கை யணிபணி
தங்கி யொளிகள் விளங்கவே
செங்க ணடுகுழை திங்க ளொளிநிகர்
செங்கை யணிவளை முழங்கவே
அங்க மிலகிய சிங்க நிகரிடை
அங்க ணணிதுகில் துலங்கவே
தொங்க லணிகுழன் மங்குல் செறிதரு
துங்க விரதி மயங்கவே. (குறத்தி) 42

**கொச்சகக் கலிப்பா**

சித்தர்பணிந் தேத்தவருஞ் செவ்வேள் குவளைவெற்பிற்
கொத்தலருங் கூந்தற் குறத்திமதி யானனத்தில்

முத்தை நிகர்த்த முகிழ்ப்பவள வாயிசைதான்
புத்தமுதோ தேனோ புகலவரி தென்றாரே. 43

**பல்லவி**

குறிசொல்ல வந்தாளே-குறத்தி
குறிசொல்ல வந்தாளே (குறி)

**சரணங்கள்**

உறுகாம வல்லி பெறுகாம நோயால்
மறுகாமல் மாலை கருகாமல் மேவக் (குறி)

கிஞ்சுக மலர்வா யஞ்சுக மொழியாள்
நெஞ்சுறு மயற்கே சஞ்சீவி போலக் (குறி)

வருவிட விழியா ளிருகுட முலையாள்
பெருகிய மயல்தீர் முருகனை மேவக் (குறி) 44

**காமவல்லி குறத்தியை வினாவுதல்**

**அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்**

செந்திரு நிறைந்த பண்ணைத்
திருமலைக் குவட்டில் வாழும்
கந்தவேள் புகழைப் பாடிக்
கலைமதி போலே தோன்றி
வந்திடுங் குறத்தி தன்னை
வளர்காம வல்லி நோக்கி
விந்தையாய் வந்தா யெந்த
வெற்புநீ விளம்பென் றாளே. 45

**குறத்தி மலைவளம் கூறுதல்**

**சிந்து**

கோங்கமெனுங் கன்னிமுலைக் கொங்குமுகி ழரும்பக்
கொழுநனெனும் வேங்கைமலர்ப் பொன்சொரிந்து விரும்பப்
பாங்குசெம்பொன் வாங்குகைபோற் காந்தண்முகிழ் விரியப்
பாந்தவர்கள் போல்வண்டு தூதுசொல்லித் திரிய
மூங்கிலெனுங் கிளைகண்முத்த மூரல்தனை வழங்க
முறைமுறையே வாத்தியம்போன் மும்மதமா முழங்கத்
தேங்கமழு மலர்ப்பணைகள் தாங்குபொழி லோங்கும்
செங்குவளைத் திருமலைதா னெங்கண்மலை யம்மே.

சந்திதொறுஞ் சிந்தமுத்த மீந்தெனக்கால் வீசும்
சாதிகிளை மீதுகிளி வேதமுறை பேசும்
மந்திகனி கொண்டுமத தந்தியின்மேற் சாடும்
வானுலகின் பூவெடுத்துக் கானவர்கள் சூடும்
அந்திதொறு மைந்துவகைத் துந்துபிகண் முழக்கும்
ஆற்றொலிதென் காற்றொலிவான் மேற்றிசையைப் பிளக்கும்
செந்தமிழ்மா முனிமகிழ்ந்து சந்ததமும் போற்றும்
செங்குவளைத் திருமலைதா னெங்கண்மலை யம்மே.

பூவின்மதுக் குடித்துவண்டு மேவியிசை படிக்கும்
பொங்குமத தும்பியும்பர் மங்குறனைப் பிடிக்கும்
காவின்மிசை யெங்கள்குலப் பாவையர்கள் கூட்டம்
காத்திருந்து வேன்முருகர் பார்த்தருளு நாட்டம்
வாவிதனிற் றினங்குவளைப் பூவின்முகி ழரும்பும்
மண்ணவரும் விண்ணவரு நண்ணிமிகத் துதிக்கும்
தேவர்முதன் மூவர்களு மாவலொடு போற்றும்
செங்குவளைத் திருமலைதா னெங்கண்மலை யம்மே.

மண்ணின்வரு கண்ணெனவே வந்துவெளி பார்க்கும்
வானுலகுக் கேறிவரு மேணியெனச் சேர்க்கும்
தண்ணளியால் மண்மடந்தை தன்கையென வளர்ந்து
தண்ணிலவின் மறுத்துடைக்குந் தகைமையெனக் கிளர்ந்து
விண்ணுலவும் பெண்ணினங்க ளேறிவிளை யாட
மேன்மையென வோங்கியெழில் வாய்ந்தகழை யாடும்
திண்ணமுறும் யானைமதம் வீழருவி யிறைக்கும்
செங்குவளைத் திருமலைதா னெங்கள்மலை யம்மே.

ஆனைமருப் பென்னும்வெள்ளி வேலிபுடை துதைப்பார்
அதனடுவில் வேடர்பொன்போற் செந்தினையை விதைப்பார்
கானமரை பாய்ந்தெழுந்து வானினதி தோயும்
கார்முகிலை வேழமெனக் கோளரிமேற் பாயும்
தானமத மாமுழக்கக் குன்றமெதிர் முழக்கும்
தருகுறவர் வில்லொலியுஞ் சில்லொலியுங் கிளக்கும்
தேனுலவு மஞ்சரியிற் சஞ்சரிகம் பாடும்
செங்குவளைத் திருமலைதா னெங்கண்மலை யம்மே.

குரவமெனும் பாவைதனக் கழகுமணம் பேணிக்
குறவர்சிறு மகளிர்நவ மணிகளதிற் பூண
அரவமது பணம்விரித்து மணிவிளக்குப் பிடிக்க
ஆவலுடன் மயினடிக்கப் பூவைகவி படிக்க

விரவிமுகின் முழவதிர மதுதாரை வார்க்க
வேட்டமண வாளனென மென்றளிர்க்கை யேந்தித்
திரமுறவே தினந்தோறுங் கலியாணஞ் சிறக்கும்
செங்குவளைத் திருமலைதா னெங்கண்மலை யம்மே.

கனகவரை வில்லிதரு குமரனெனச் சொல்லிக்
கயிலைமலை தந்ததன்பேர் பயிலுமலை யம்மே
சனகர்முத லோர்வணங்கும் பெருமைமலை யம்மே
சதுமறைகண் முறையிடுஞ்சொல் நிறையுமலை யம்மே
பனகமணி யிரவியென விரவுமொரு பாலில்
பணைமணிக ணிலவெனவே யுலவுமொரு பாலில்
தினகரன்றேர்க் குதிரைபுன லுண்டுதகை யாறும்
செங்குவளைத் திருமலைதா னெங்கண்மலை யம்மே.

முனிகள்தவ சிருக்கவொரு பான்முனிகள் திரியும்
முத்திருக்கும் பெற்றிருப்பார் முத்திருக்குங் கிளையார்
வனிதையர்கள் கற்புநெறி வனிதனையே நிகர்க்கும்
வண்டொலிக்குந் தண்டலைக்குள் வண்டொலிக்குந் தடத்தில்
கனிவுகொடு மேல்பாலிற் கனிகையெழு பேர்கள்
காத்திருப்பர் நீலமலர் பூத்திருக்கு மம்மே
பனிமதியந் தவழ்சடையான் பனிபாகத் துடையான்
பழங்கயிலைக் கிணையெங்கள் செழுங்குவளை மலையே. 46

## காமவல்லி நாட்டுவளம் வினாவுதல்

### அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

செங்கையின் மலருங் கண்டேன் றேங்குழற் காடுங் கண்டேன்
கொங்கையின் கோடுங் கண்டேன் மலையியற் கோலங் கண்டேன்
பங்கயா சனத்தோ னாதி பணிதிரு மலையின் மேவு
நங்கையே குறப்பெண் ணேயுன் னாட்டிய னவிற்று வாயே. 47

## குறத்தி நாட்டுவளம் கூறுதல்

### சிந்து

முண்ட காசனி வெண்ணிறக் கொண்டல்
முந்நீ ருண்டுமை மாலென மீண்டு
கொண்ட பொன்மகண் மார்பினன் மின்னைக்
குலாவு சங்க முழக்கிடி யென்னப்
பண்டு தான்சிவ பூசனை செய்யும்
பான்மை யென்னப் பருப்பதஞ் சார்ந்து

மண்ட லீசுரர் கொண்டாட வானம்
வழங்கு வாரிவட வாரிய நாடே.

பாரதி நிறச் சொல்லைவி தைத்துநற்
பார்ம டந்தை யிடத்தங் குரித்தெழ
ஏர்த ருஞ்செல்வி போல வெள்ளிமின்ன
இமய மாதென நெல்வளர்ந் தோங்குறச்
சீர்த ழைத்திட முப்பத் திரண்டறம்
செய்து மேன்மை சிறந்திடுஞ் செய்ந்நல
மாரி யோங்க விளைந்திடு சாலியை
வழங்கு மெங்கள் வடவாரிய நாடே.

செய்யிற் பூத்த கமலங்கை யென்னச்
செழுங்கு முதங்கள் வாய்விண்டு சொல்ல
மெய்யெ னாவிழி நீலங்கள் காட்ட
விளைந்த சாலிகள் முத்தஞ் சொரியத்
துய்ய வால்வளை யெங்கு முழங்கவெண்
தூவி யன்னங்க ளாடல் விளங்க
வைய மேழும் புகழ்ந்திடு கீர்த்தி
வழங்கு மெங்கள்வட வாரிய நாடே.

செந்நெல் கன்ன லெனவளர்ந் தேறச்
சிறந்த கன்னல் கமுகொத்து மீறத்
துன்னு பூகங்கள் வானைத் துளைக்கச்
சுவர்க்கத் தோர்பயங் கொண்டு திளைக்கச்
சின்ன மாங்குயில் வாய்விண்டு கூவச்
சிலீமு கம்மலர்த் தேன்கொம்பிற் றாவ
மன்னு சோலைக் குழாஞ்சிறந் தோங்கி
வழங்கு மேன்மைவட வாரிய நாடே.

கருப்பு வில்லி கொடிவெடி யுந்தக்
கமுகிற் பூத்த பழத்தினைச் சிந்த
பருத்த வாழைப் பழத்திற் புடைத்துப்
பலாவிற் றூங்கும் பழத்தை யுடைத்துத்
திருத்து தேறல் புறவினிற் பாய்ந்து
செழிக்க நாரை சுனைக்கயன் மாந்த
மருத்து றைபொழி லெங்கு நெருங்கி
வளரு மேன்மைவட வாரிய நாடே.

காவின் முக்கனி யைக்கரு மந்தி
களிப்ப வானரங் கையிற் கொடுக்கப்
பூவை யேழிசை கொண்டு படிக்கப்
புளின மீது சிகண்டி நடிக்க
மேவு சங்கொலி வான மிடிக்க
மிடைந்த சோலை மலர்கள் வெடிக்க
வாவி மாதர் மலர்ப்பந் தடிக்க
வழங்கு மெங்கள்வட வாரிய நாடே. 48

**அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்**

பெருநாட்டி யஞ்சிறந்த பெம்மான்றன் னிடத்தமர்ந்த
பிராட்டி யீன்றோன்
தருநாட்டி யும்பர்கிளை தனைநாட்டிப் பன்னிரண்டு
சலசம் பூத்த
திருநாட்டம் படைத்தகந்தன் றிருநாட்டின் சிறப்புரைக்கத்
தெவிட்டா தம்மே
மருநாட்டு மலர்க்குவளைச் சுனைத்தீர்த்தந் தலமகிமை
வகுக்கக் கேளே. 49

**தல மகிமை**

**சிந்து**

வானின்வளர் கங்கையெனும் வான்சுனையின் தங்கை
மணக்குவளைப் பூமகிமை வகுக்கவரி தம்மே
நான்சிறிது தெரிந்தவகை நவிற்றுவன்கேள் வான
நாடதனிற் பூத்திலகு பூவதுகா ணம்மே
மேன்மையெழு கன்னியர்கள் வேன்முருக னருளால்
விளங்குசுனை மீதுவந்து வழங்குவர்கா ணரிதாய்த்
தேன்மலியுங் குவளைமலர் தினந்தோறும் பூத்த
திருமலையின் றலமகிமை செப்பவரி தம்மே.

முத்தர்முத லோர்மதிக்கு முக்யதல மம்மே
முத்தலமு நித்தியமுந் துத்தியஞ்செய் தலமே
சுத்தமுறு குகையிரண்டு மேல்பாற்கீழ் பாலில்
துலங்குமதிற் றயிலநதி சுனையுளதொன் றதன்பாற்
சித்தர்முனி வோர்காய சித்திபுனைந் திருப்பார்
தேவர்களு மூவர்களுந் தினந்தினஞ்சஞ் சரிப்பார்
கொத்துலவு பரமொன்று பேரில்லாத் தருவாழ்
குவளைமலைத் தலமகிமை கூறவரி தம்மே. 50

## காமவல்லி முருகவேள் குலத்தை வினாவுதல்

### அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

வாவியின் சிறப்பு நீல மலர்தருஞ் சிறப்பு மேன்மைச்
சேவலங் கொடிசி றந்த திருமலைச் சிறப்புங் கேட்டேன்
தாவிய மயில்போற் சாயற் றகுகுறக் கொடியே வைவேல்
மேவிய கரத்துச் செவ்வேள் குலத்தினை விளம்பு வாயே. 51

## குறத்தி கூறுதல்

### சிந்து

காவிமலை முருகபிரான் மேவுகுலங் கேளாய்
கற்பகக்காத் தேவரினு நற்குலங்கா ணம்மே
தேவியெண்ணான் கறம்வளர்த்த பாவைதனை வேட்ட
செல்வநக ரீசருக்குத் திருக்குமர னம்மே
பூவுலகை யளந்தநெடு மாறனக்கும் வானைப்
புரந்தருளும் புரந்தரற்கும் புகழ்மருக னம்மே
மேவுகும்பத் தும்பிமுக னாவறுணைத் தம்பி
வீரமொய்ம்பன் முதலோர்க்கோர் தமையனிவ னம்மே.

மதனனுக்குஞ் சதுமுகற்கு மைத்துனன்கா ணம்மே
மாறனுக்கு மிமயமலை மன்னனுக்கும் பேரன்
அதிககுல மெங்கள்குலத் துதித்தவள்ளிக் கொடிக்கும்
ஐந்தருவா ரிந்திரனார் தந்ததெய்வப் பிடிக்கும்
இதமுடனே மனதுகந்த புதுமைமண வாளன்
எப்பொழுதும் பொற்பதத்தை யேத்துவார்கண் ணாளன்
கதியுலவு திருமலைவேன் முருகன்கிளை வளத்தைக்
காசினியோ ரிப்படியே பேசுவர்கா ணம்மே. 52

## காமவல்லி வினாவுதல்

### அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

சிற்பர வடிவேற் கந்தன் றிருமலைக் குமரன் சீர்த்தி
அற்புதம் பாடி மேவு மருட்குறக் கொடிமின் னாளே
பொற்புறு புவன மீது போந்துநீ குறிகள் சொன்ன
சொற்படி கேட்டோர் தங்கள் தொகைவகை
சொல்லென்றாளே. 53

**குறத்தி தான் பெற்ற பரிசுவகை கூறல்**

**சிந்து**

நிறைகின்ற கொல்லந் தொளாயிரத்
தைம்பதா மாண்டிற்-பண்பை
நீடூழி வாழ வருள்தர
வோங்கியெண் ணான்காம்
அறம்வளர்த் தம்மன் றிருநக
ரீசுரர்க் கன்பாய்ச்-செம்பொன்
அம்பலம் போலத் திருமுன்பு
மண்டப வாசல்
முறைமதிற் சுற்று திருக்கோயில்
தூவி சிகரம்-வாவி
முதலான கோடி திருப்பணி
செய்யமேன் மேலும்
துறவி சிவகுரு நாத
முனிக்கந்த நாளிற்-குறி
சொல்லிநான் பெற்ற மணித்தாழ்
வடமிது வம்மே.

பார்புகழ் கொல்லந் தொளாயிரத்
தைம்பத்தை யாண்டில்-நெல்லைப்
பதிமிசைச் சென்று குறிசொல்லப்
போனேனா னம்மே
சீர்தழைத் தோங்க மனுமுறை
யோங்கிய செங்கோல்-எங்கும்
செலுத்திய சாலிவா டீசுரச்
சாமியைக் கண்டேன்
ஏர்தரு காந்தி மதிநெல்லை
நாயகர்க் கன்பாய்-ஊர்தி
என்றிடு கிள்ளையும் பொற்கயி
லாசமுஞ் செய்ய
நேர்தரு மென்குறி கேட்டதற்
காயவன் றந்தான்-நல்ல
நித்தில மாலையுங் கொத்துச்
சரப்பளி யம்மே.

பொங்கிய கொல்லந் தொளாயிரத்
தைம்பத்தா றாண்டில்-மிக்க

பூபதி தென்கிளு வைப்பதி
வாழ்பதி நீதன்
துங்கன் பெரிய சுவாமி
யருளுஞ்சிங் கேறு-நல்ல
துரைமக ராசன் பெரியசு
வாமியைக் கண்டே
அங்கவன் சிந்தை நினைத்த
குறிமுற்றுஞ் சொன்னேன்-அதற்
காச்சரி யங்கொடு பூச்சரி
கைச்சேலை யொன்றும்
தங்கக் கடகமுந் தும்பிப்
பதக்கமு முத்து-மாலைத்
தாருங் கொடுத்துநெற் சேருங்
கொடுத்தன னம்மே.

மதுரை சிராப்பள்ளி காழி
சிதம்பர மாரூர்-கச்சி
மாநகர் காளத்தி யூர்கும்ப
கோணமை யாறு
முதுகிரி யண்ணா மலையொற்றி
யூர்திருப் புத்தூர்-சத்தி
முற்றந் திருவாலங் காடுவெண்
காடுசாய்க் காடு
பதிதிரி கூடந்தென் காசி
வடகாசி சேது-தமிழ்ப்
பாண்டி முதலிய வெண்ணெழு
தேசமுஞ் சென்று
புதுமைய தாய்க்குறி சொல்லி
விருதுகள் பேற்றேன்-அங்கம்
பூண்டிடுந் தங்கப் பணியா
பரணங்க ளம்மே. 54

### காமவல்லி கூறுதல்

#### கட்டளைக் கலித்துறை

எல்லார்க்கு நல்ல குறிசொல்வ துங்க ளியல்பதென்றாற்
கல்லாமற் பாதி குலவித்தை யேவருங் காணிசமே

வில்லார் நுதற்குற மின்னே திருமலை வெற்பில்வளர்
நல்லாய் நினைத்த குறியெனக் கொன்று நவிற்றுவையே. 55

## குறத்தி குறி கூறுதல்

### சிந்து

நினைத்தகுறிப் படியுள்ள
குறிசொல்லுவ னம்மே-என்முன்
நீவிட்ட பேரைக்குறி
யால் வெல்லுவன் அம்மே
கனத்தபல்லி சொன்னிமித்த
நன்றுகா ணம்மே-மிக்க
கருடகீர்த்த னஞ்செய்ததும்
வென்றிதா னம்மே
தனித்துநீ நின்ற வாரூடம்
நன்றுதா னம்மே-கன்னி
தானிசைத்த வாய்ச்சொல்நன்மை
இன்றுகா ணம்மே
மனத்தினீ நினைத்தகுறி
இன்றுகே ளம்மே-வைவேல்
வாலசுப் பிரமணி யனுனக்
குண்டுகா ணம்மே. 56

### அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

சென்னியோ ராறு முள்ளான்
திருவிழி யீரா றுள்ளான்
மின்னிய வேற்கை யாளன்
திருமலை வெற்பி னுள்ளான்
முன்னிய தேவர்க் கெல்லாம்
முதன்மையாய் வேந்த னாகக்
கன்னியே யுனக்கு நல்ல
கணவன்றான் வருவா னம்மே. 57

### சிந்து

மணமுடனே தரைமெழுகிக் கணபதிதான் வைப்பாய்
மாங்கனியும் தேங்கனியு மனமகிழப் படைப்பாய்
பணமுடனே யடைக்காயும் வெள்ளிலையும் வைப்பாய்
பாங்குடனே நிறைநாழி பூங்கொடியே வைப்பாய்

குணமாகப் பணிந்தேத்திக் கும்பிடுவா யுங்கள்
குலதெய்வங் களையெல்லாம் வேண்டுகொள்வா யம்மே
துணிவாக நினைத்தசெய்தி தேர்ந்துகொள்வா யம்மே
தோகைமயி லேகுறிநீ யோகையுடன் கேளே. 58

**அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்**

திருந்திய வடிவேற் கந்தன்
திருமலைக் குமர னாட்டில்
வருந்திரு வனைய பெண்ணே
வந்திடுந் திசையு நன்றே
இருந்திடு தலமும் வாய்ப்பும்
இயம்பிய மொழியின் மேன்மை
பொருந்திய குறிநா னன்றாய்ப்
புகலுவேன் புகலு வேனே. 59

**சிந்து**

செங்கமலக் கைகாட்டாய் திங்கண்முகப் பொன்னே
தேனமிர்தம் பாலமிர்தம் பழகுமிந்தக் கையே
தங்கநவ மணிகண்மிகக் கொடுக்குமிந்தக் கையே
தானதன்ம மேன்மைபெறச் செய்யுமிந்தக் கையே
துங்கவடி வேலர்தமக் கேற்குமிந்தக் கையே
சோபனகல் யாணமலர் சூட்டுமிந்தக் கையே.
.... .... ....
.... .... .... 60

**அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்**

மங்கையே யுனது செந்தா
மரைக்கரம் பார்க்கி னிந்தச்
செங்கைதான் பிடித்தோர் மிக்க
தேவர்க்குந் தேவ ராவார்
இங்கிது பொய்யா தென்றே
எழிற்றிரு மலையில் வாழ்ந்த
துங்கவேற் கடவு ளாரை
வணங்கியே துதிசெய் வாளே. 61

**நிலைமண்டில வாசிரியப்பா**

முச்சகம் புகழு முச்சி விநாயகா
கொன்றையி னிழல்வாழ் வென்றி விநாயகா

மருமலர்க் குவளைத் திருமலைக் குமரா
வாவிமேல் கரையின் மேவுகன் னியரே
அருமறை போற்றுந் திருமலைக் காளி
கொடுவினை தீர்க்கும் வடுக நாதா
கருமணி கண்டனார் தருமணி கண்டா
ஆதிநா யகனே பூதநா யகனே
கடும்படை தரித்த விடும்ப சுவாமி
மாடனே கமல வல்லிநா யகியே
வேடனே விரும்பும் வேடிச்சி யம்மே
வன்னிய ராயா முன்னடி முருகா
பொருமலைத் தீர்க்குந் திருமலைக் கறுப்பா
உவப்பான கண்டா சிவப்பாறை முண்டா
மாலைவார் குழல்சேர் கால விசக்கியே
வருதுட்ட ராயா பொருபட்ட ராயா
படைக்கலஞ் சேர்த்த வடைக்கலங் காத்த
ஐயனே கருணை மெய்யனே சரணம்
கனதனம் பூத்த காம வல்லியார்
மனதினி னினைத்தது மன்னுயிர்ச் சீவனோ
நவமணித் திரளோ நானிலப் பொருளோ
கவனர்செய் மயக்கோ காலத்தி னியல்போ
மாடகூ டங்களோ வரத்தொடு செலவோ
ஊடலாய் மன்ன ருடனுறுஞ் செயலோ
வேந்தர்தா மிவண்மேற் விரும்பிமால் சொன்னதோ
போந்தமன் னவர்மேற் பொருந்திய மயலோ
துகிலொடு வளையுஞ் சோர்ந்திடு மயக்கோ
மகிழ்வுடன் மணமும் வரும்பெருங் குறியோ
தொகைசொலுங் குறிக்குள் வகையிது வென்ன
இங்கிவ ணினைத்த வியற்குறி தன்னை
மங்கள மாக வகுத்தருள் வீரே. 62

**அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்**

தேசமெண் ணேழும் போற்றும்
திருமலைக் குமர நாதன்
நேசமா யிருக்கு தம்மே
நினைத்திடுங் கறுப்பன் வந்து
மூசுசூழ சென்றே யென்னுள்
முன்னியே யுன்னி வந்து

பேசுது குறிதா னம்மே
பேசுவேன் குறியைக் கேளே. 63

**குறத்தியும் காமவல்லியும் பேசிக்கொள்ளுதல்**

**சிந்து**

சோலைமலை வீதியினீ நின்றுதா னம்மே-நல்ல
தோழியுடன் பந்தடித்த வேளைதா னம்மே
கோலமயில் வீரன்வரக் கண்டுதா னம்மே-சேனைக்
கூட்டங்கண்ட வெருட்சிபோலக் கண்டதே யம்மே.

கூட்டங்கண்ட வெருட்சியென்றாற் குறத்தி மாதே-மயல்
கொண்டகுளிர் காச்சலுண்டோ நின்று பாராய்
வாட்டமின்றிப் பூங்குழலே சொல்லக் கேளாய்-திரு
மாமயிலி லேறிவந்த வேலனைக் கண்டே.

நாட்டமெல்லா மவன்மேலே வைத்த மோகம்-மிக
நாடுமயல் காச்சலென்று காணுதே யம்மே
கேட்டசெய்திக் காகவொன்றைச் சொல்லலாமோ என்னைக்
கேலிசெய்ய லென்றுசொல்லி வெல்ல லாமோ.

சொன்னகுறி நிசந்தானோ வின்னம் பாரு-நல்ல
தோகையர்க்கெல் லாமரசே யின்னம் பாரு
பொன்னனைய காமரச வல்லி மாதே-குறி
பொய்யலவே நீமயங்கிச் சொல்கிறா யென்றாள்.

அன்னவன்பே ரென்னவென்று பன்னுவா யென்றாள்-பேர்
ஆயிரம்பே ரானதனி லொன்று கேளாய்
வன்னமயிற் காரனவன் பண்பை யூர்வாழ்-திரு
மாமலையில் வாழுங்கந்த சுவாமிதா னென்றாள்.

என்று சொன்ன குறிநிசத்தைக் கண்டுதான் முன்னே-வந்
திருந்தகாம வல்லிநாணங் கொண்டு கவிழ்ந்தாள்
வென்றிவடி வேலருன்னை வந்து சேரும்-நாளை
வெட்கமெல்லா மோடியொரு பக்கம் போமே.

மன்றல்செறி பூங்கடப்ப மாலைதா னம்மே-தோழி
மாதுகொண்டு நொடியில்வரும் வென்றிதா னம்மே
நன்றிதென்று காமவல்லி திருமலைக் கந்த
நாதனரு ளியகடப்ப மாலை வாங்கினாள். 64

## காமவல்லி திருமலையாண்டவன் மாலையைப் பெறுதல்

### அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

தெருள்பெறு தோழி வந்து
திருமலைக் கந்த நாதன்
அருளிய கடப்ப மாலை
அன்பினாற் கொண்டு வந்து
மருமலர்க் குழல்சேர் காம
வல்லிகைக் கொடுப்ப வாங்கிப்
பெருமய நீரப் பூண்டு
பேரின்ப மேபெற் றாளே. 65

## குளுவன் வருதல்

### அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

மருப்பினா லிழைத்த பாசி
மணிப்பணி பூண்ட கொங்கைப்
பொருப்புயர் குறத்தி யெங்கே
போந்தன ளென்று தேடி
விருப்பினாற் கூவிக் கொண்டே
மென்மலர்த் தேனை நாடும்
சுருப்பென நீல வெற்புக்
குளுவனுந் தோன்றி னானே. 66

## சிந்து

கலைத்தலைக் கொம்புங் கரடியின் றோலும்
கையினின் மெய்யினிற் காதலிற் புனைந்தே
கொலைத்தொழில் செய்யு நிலைச்சிலை யேந்திக்
குவளையங் கிரிவாழ் குளுவன்வந் தனனே.

திருமலைக் குமரன் மருமலர்ப் பாதம்
சிந்தையி னினையார் நைந்திடு முடல்போற்
குருகுக டம்மைக் கருவியிற் படுக்கும்
கொலைத்திறஞ் செய்யுங் குளுவனு நானே.

ஆறெழுத் தோதி யைம்பொறி யடக்கி
அருள்வடி வேலன் றிருவடி நினையார்
மீறிய நெஞ்சைக் கீறியென் பெடுத்து
வில்லென வளைக்கும் வல்லவ னானே.

காவியங் கிரிவாழ் கந்தனைக் கொலுவிற்
கண்டறி யாதவர் கண்களைப் பிடுங்கி
மேவிய சிலையில் விருதெனத் தூக்கி
மெய்த்திறஞ் செலுத்துஞ் சித்தனு நானே. 67

**உடன்வந்தோர்**
**அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்**

செங்கனற் கண்ணன் றிண்ணன்
தீப்பொறி வாயன் பேயன்
வங்கணக் கொடிய னாகன்
மதிப்புலி நூவ னென்றோர்
அங்கையிற் கண்ணி கோட்டோ
டடுசிலை வலைதாங் கொண்டே
கொங்கலர் காவி வெற்புக்
குளுவனை வணங்கிச் சொல்வார். 68

**குளுவனுடைய ஏவலர் கூற்று**
**பல்லவி**

வருகினுமையே-குருகினம்
வருகினு மையே.

**சரணங்கள்**

கருவாலி யுள்ளானுஞ் சிட்டுல்லி யானும்
காடையு மடைக்கலங் காத்தான் குருவியும்
குருகோடு கொக்கு மயிலுங் குயிலுடன்
கூழைக் கடாவுடன் சேகர மாகவே (வருகினு)

ஐப்பசி மாதம் வருகந்த சட்டி
யதனிற் பவனி வருதலைக் காணப்
பொற்பணி யாடையு மாலையு மின்னப்
புனைந்த பரிசு வருவது போல (வருகினு)

செய்க்கய நல்லூர் புளியறை பண்புளி
தென்காசி நாலு துறையும் வரும்பொதி
வைக்குந் துலாத்துக் கொண்ணரை மாகாணி
வானிதி வாங்கி மகிழ்ந்து தினந்தினம்
எய்க்குந் திருப்பணிக் கல்லோலங் கொண்டெழ
ஏலோலம் போடுஞ் சனங்களைப் போலவும்

பக்கி வருகுது கொக்குத் திரளெலாம்
பாற்கடற் றெண்டிரை யார்ப்பென வோங்கியே(வருகினு)

வரத்தைக் கொடுத்திடுந் தேவாரப் பாடலும்
வண்ணத் திருப்புகழ்ச் சந்த வகுப்புடன்
உரத்திசை காட்டிய விக்ரம பாண்டிய
ஓதுவார் போலிசை கூவிக்கொண் டேகுயில் (வருகினு) 69

**தரவு கொச்சகக் கலிப்பா**

வார்க்கு ளடங்கா வரைத்தனத்து வள்ளிதனைச்
சேர்க்குந் தடம்புயத்துச் செவ்வேள் குவளைவெற்பில்
ஆர்க்கும் பறவையெல்லா மாழியலை போன்முழங்கிப்
பார்க்குந் திசைதோறும் பட்சிநிரை சாயுதையே. 70

**பல்லவி**

சாயினு மையே-குருகினஞ்
சாயினு மையே.

**சரணங்கள்**

கோயிலுங் கோல முடையவர் தோப்பிலும்
கொண்ட திருமலைப் புறத்தோப்பு மீதிலும்
வாய்மை தருந்திரு மலைப்புற மேவிய
வன்மைப் புதுக்குளப் பற்றினிற் கூடியே (சாயினு)

வாய்மை தருந்தா மரைக்குளப் பற்றிலும்
வட்டஞ் செறிகாடு வெட்டிப் புரவிலும்
மேய புகழ்த்திரு மாமலைச் சுற்றிலும்
மீறிய பண்புளி யூரினுங் கூடியே (சாயினு)

முருகன்றன் மங்கலந் தேமாங் கனிவயல்
முடுக்குப் புரவினிற் பொக்கணந் தூக்கியும்
இரவி குலம்வரு சோழர்கள் பாண்டியர்
இயற்கட் டளைக்கொப்பா வீந்த புரவெலாஞ் (சாயினு) 71

**குளுவன் கூற்று**

**தரவு கொச்சகக் கலிப்பா**

தெண்ணீர் மலர்ப்பொழில்சூழ் செங்குவளை வாவிவெற்பிற்
கண்ணீலம் பூத்த கமலமுக வாய்க்குமுதப்

பெண்ணா ணடந்தவனப் பேடைமயிற் சாயறனை
உண்ணாடி யேநெஞ்ச முருகவுநான் வாடினனே. 72

### ஏவலர் கூற்று

#### பல்லவி

மேயினு மையே-குருகினம்
மேயினு மையே.

#### அநுபல்லவி

மேய்தரு மிந்தப் புளியறை மீதினில்
மீறிய புஞ்சையில் கூறிய நஞ்சையில்
சேய்கரிப் பானுவின் மேலெழு தோப்பினும்
செங்கால் நாரையுஞ் சிங்கார மாகவே (மேயினு)

#### சரணங்கள்

தண்ணம்பி தாமரைக் குளங்கோழி கிண்டியும்
சார்கத்தி யூற்றுட னரசடிப் பற்றும்
வண்மைப் புதுவலுந் தோப்படிப் பள்ளமும்
வாழ்கரி சல்வன மாடன் செட்டிதன்
தெண்ணீர்த் திருத்து வளர்வாசற் பிள்ளைத்
திருத்து நதிக்கரைத் தோப்பு முதலாகப்
புண்ணியஞ் செய்திடு மழகப்ப மாலெனும்
பூபதி தானஞ்செய் கட்டளைப் பற்றெல்லாம்(மேயினு)

எண்ணெழு தேசமும் போற்றிடச் செங்கோல்
இயற்றிய மூவ ரெனச்சொலும் பொன்புரை
வண்ணன் சிறந்த சிதம்பர நாதன்சி
வன்றுணை மைத்துன னென்றிடு வித்தகன்
கண்ணன் பரவிய நெல்லையப் பாரெனக்
கையொப்பங் கொண்டிந்தக் காசினி மீதினில்
புண்ணியந் தேடிய சாலிவா டீசுரப்
பூபதி செய்திடு கட்டளைப் புரவெல்லாம் (மேயி)

வடகரை யாதி பதிதிரி கூடபதி
மனுராச ராச னரபதி மிக்க
திடபதி யெங்கள் பெரிய சுவாமி
சிறுகால சந்தித் திருத்துப் புரவெல்லாம் (மேயி)

மன்னவன் பொன்னாக் குடிதனில் வாழும்
  மனைகாவ லப்பெரு மாள்செய்த கட்டளை
தென்னவன் செவ்வல் வருராம லிங்கவேள்
  செய்திடு முச்சந்திக் கட்டளைப் புரவெல்லாம் (மேயி)

தரணிக் கதிபதி யிருளப்ப பூபதி
  தந்திடு மைந்தன் வடகரை வாசற்
கரணிக்கஞ் செய்திடுஞ் சம்புலிங் கேந்திரன்
  கட்டளைப் பற்றெல்லாம் வித்தார மாகவே (மேயி)

நற்றாலம் போற்றிய குற்றால நாதன்செய்
  நற்றவத் தால்வரு புத்திர னித்தியம்
வற்றாத செல்வன் புகழ்தொண்டை மண்டலம்
  வாழ்தெய்வ நாயகன் கட்டளைப் பற்றெலாம் (மேயி)

அருளிச்சை பூண்டு திருப்பணி செய்திடும்
  அன்பு பெருகிய முத்துக்கு மாரர்
தருபிச்சைக் கட்டளை சுக்கிர வாரத்
  தருமஞ்செய் கட்டளைப் பற்றுத் திருத்தெல்லாம்(மேயினு)

நல்வளஞ் சேருந்தென் காசிப் பதிவளர்
  ஞான சிவன்றரு நற்சுத னச்சுதன்
கல்வி நயந்தெரி நெல்லையப் பேந்திரன்
  கட்டளைப் பற்றினி லிட்டம தாகவே (மேயினு)

தானத் தலமு நிலைமைக் கணக்குந்
  தவத்தை வளர்க்கு மருத்துவ ராசன்
பான்மைக் குமார சுவாமி யுதவிய
  பாலன் சிவகுரு நாதனைப் பெற்றவன்
மேன்மைப் புகழ்த்தொண்டை மண்டல தீரன்
  விளங்கிய தொப்பைச் சிவப்பண பூபன்
கோன்மைக் கணக்கு ளகப்பட்ட பற்றெல்லாம்
  கூட்டக் குருவிக ணாட்டக மாகவே (மேயினு)

தேசிக னெந்தை குருசுப்ர மண்யவேள்
  செய்த சுனைக்கரை மடத்துக்கு நற்பொருள்
பேசு நெடுவயற் பண்டாரத் தேவன்
  பிரதோடக் கட்டளைப் பற்றினிற் கூடியே (மேயினு) 73

## குளுவன் கூற்று

### தரவு கொச்சகக் கலிப்பா

சேலுலவும் பண்ணைவயல் செந்நெனிறை பண்பையில்வாழ்
கோலவடி வேற்கைக் குமரன்வளர் காவிவெற்பில்
வாலமதி போல வளைந்தநெற்றி மாதர்முலை
மேலணியுங் கச்சாய் விதிவிதித்தா னில்லையே. 74

### பல்லவி

கண்ணி கொண்டு வாடா புலியா-குருகுக்குக்
கண்ணி கொண்டு வாடா

### சரணங்கள்

கண்ணன் கருடனைக் கொண்டோடி னான்குகன்
கைக்கோழி கொண்டொரு மெய்த்தோகை யேறியும்
நண்ணிய கொக்கை யவித்துக்கொண் டான்பின்
நமக்கென்ன குற்றஞ் சுருக்கென வோடியே (கண்ணி)

அந்நாளில் நம்முடைக் கண்ணப்பன் காலடி
யான்மிதி பட்டு மருந்திய வூனுக்குப்
பின்னாசை வைத்ததை யருந்தும் பெரிய
பிரான்செய்தி மன்மதன் பேராசை கொண்டே
எந்நாளுங் கையினின் மீனைப் பிடித்தனன்
இரணியன் சொன்ன புலியைப் பிடித்தனன்
உன்னாத பேர்களு முன்னுவர் நாந்தின்னும்
ஊன்கறி வேட்டைக்குத் தான்குறி கொண்டனர்(கண்ணி) 75

## புலியன் கண்ணி கொண்டு வருதல்

### தரவு கொச்சகக் கலிப்பா

சூரர்களை வேரறுத்த் சோதிவடி வேற்குமரன்
சீர்தழைத்த பண்பைச் செழுங்குவளை வாவிவெற்பில்
கார்தழைத்த மேனிக் கடுவன்மந்தி போற்பாய்ந்து
வாரிசைத்த கண்ணிகொண்டு வாய்ப்புலியன் வந்தானே. 76

### புலியன் கூற்று

#### சிந்து

கண்ணியைக் குத்தினால் அங்கே குளுவா
கைக்குரு குந்திர மாகப் படுமே
எண்ணிய படியே கண்ணியை வைத்தால்
எத்திடுங் காலங் கொத்திடும் பறவை
மண்ணினிற் சிலபேர் பண்ணிய தவத்தால்
வாழ்வுறுங் காலந் தானென்ன செய்யும்
தண்ணளி கொடுக்குந் திருமலைக் குமரன்
தன்னடி தொழுதே கண்ணிவை குளுவா. 77

### புலியன் பதுங்குதல்

#### தரவு கொச்சகக் கலிப்பா

தேனுலவுஞ் சோலைபுடை சூழ்ந்த திருமலைவாழ்
கானமுறு வேடன் கலந்தகண்ணி தானிறுக்கி
மானமரைகள் பக்கியெல்லாம் வந்துகண்ணி சிக்குதற்குப்
பூனையது போற்பதுங்கிப் புலியன் கிடந்தானே. 78

### புலியன் கூற்று

#### பல்லவி

கெம்பாரடையே-நொடிவளை
கெம்பாரடையே

#### சரணம்

செம்பருந் தார்த்து வருகினுங் கொக்குத்
திரள்களுஞ் சிட்டுக் குருவியும் வந்து
கொம்புறு கண்ணிக்குள் வந்தகப் பட்டன
கூட்டக் குருவியோ பாட்டம் வருகுது (கெம்பா)

#### தரவு கொச்சகக் கலிப்பா

கண்ணியெல்லாம் வைத்தபின்பு காவிம்மலைச் சாரல்வந்தே
வண்ணமுற்ற தோகைமுலை மாமலையிற் றோய்ந்திருந்தேன்
திண்ணமுறுங் கண்ணி தெறித்துலகி லேதீமை
பண்ணியபேர் செல்வம்போற் பட்சியெல்லாம் போயினவே. 80

### பல்லவி

போயினு மையே-குருகினம்
போயினு மையே

### அநுபல்லவி

செய்ய வடிவேற் றிருமலை நாதனைத்
தெரிசனை செய்பவர் வினையது போலவே (போயினும்)

### சரணம்

பாவலர்க் கீயாத லோபரைப் போலவும்
பாதகஞ் செய்திடு வார்குலம் போலவும்
தேவர்கள் மேல்வரு தானவர் போலவும்
சிவனடி யார்க்கிடர் செய்தவர் போலவும்(போயி) 81

### குறவன் கூற்று

#### அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

வைத்திடுங் கண்ணி தப்பிப்
பறவைகண் மறைந்து போன
இத்திறஞ் சொல்லி னுன்பேர்
புலியெனச் சாற்ற லென்னாம்
மொய்த்திடும் பொழில்சூழ் பண்பை
முருகவேள் கொடுப்பா னென்றன்
மெய்த்துணைக் குறத்தி தன்னை
விரைவினிற் காட்டு வாயே. 82

### குறவன் குறத்தியைத் தேடுதல்

காட்டுவா னொருவன் மேவிக்
காண்பவ னொருவன் பின்னும்
கூட்டுவான் சுகத்தை யென்றாற்
குறத்திதான் வந்தா லென்ன
போட்டியாற் போனா லென்ன
புலியனோ புலிதா னென்றே
தேட்டமாய்க் குறத்தி தன்னைக்
குறவனுந் தேடு வானே. 83

### சிந்து

தென்காசி வாசி வடகாசி தேசம்
சிவகாசி யூர்வஞ்சி தென்சேலத் தோடு
பொன்காசி மிஞ்சிய காஞ்சியுஞ் செஞ்சியும்
பூசுரர் கொச்சியும் வஞ்சியுந் தஞ்சையும்
மின்காவு சிங்களங் கொங்கண மீழம்
விளங்குந் தெலுங்க மராடங்கன் னாடம்
மன்காதல் கொண்டு விரைந்தோடித் தேடி
வளர்திரு மாமலைச் சாரல்வந் தானே. 84

### அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

இன்னமுந் தேடிக் காணேன்
என்னுயிர்க் குறத்தி தன்னைக்
கொன்னைவாய்ப் புலியா நீதான்
கண்டனை கூறு கென்றான்
தென்னுயர் சோலைப் பண்பைத்
திருமலை வழியிற் கண்டேன்
என்னவே குறவன் பின்னும்
மயங்கியே யியம்பு வானே. 85

### குளுவன் கூற்று

### பல்லவி

தேடியுங் காணேனே-குறத்தியைத்
தேடியுங் காணேனே.

### சரணங்கள்

தேடிய செல்வப் பசுங்கொடி வஞ்சியைத்
தேனைத் திருமலை யானைத் தினந்தினம்
பாடிய செங்கனி வாய்க்குயிற் பேடையைப்
பைங்கிளி வண்ணக் குறப்பெண்ணை நாடிநான்(தேடி)

கிஞ்சுக வாயித ழுஞ்சுக வாய்மொழிக்
கீற்றிள மாமதி தோற்றிய வல்லியைக்
கஞ்சுக வார்முலை யின்சுகக் காரியைக்
காம ரசந்தரு காமியைக் காமித்துத் (தேடி)

மெய்ப்பணச் சோலையுள் மைப்பணங் கொண்டு
விரித்திடும் பாம்பு கடித்திடு மென்றிரு
கைப்பணங் கொண்டவள் காலிற் சொரிந்துமெய்
கட்டிக்கொண் டேனெனை முத்திக்கொண் டாளைநான் (தேடி)

மலையானைக் கண்டு மலையாம னெஞ்சு
மயங்காம லென்று பயந்தீர வென்று
முலையானை யென்கை வசப்படத் தந்தொரு
முத்தங் கொடுத்திடு புத்தமு தத்தைநான் (தேடி)

மைக்குழ லோசையும் புட்குர லோசையும்
வால்வளை யோசையும் மேகலை யோசையும்
மெய்க்கழ லோசையு மேலிட லீலை
விதத்தொழில் செய்யு மதக்குயி றன்னைநான் (தேடி)

தாரேறு கூந்தல் சரிந்தாடு மோகம்
தழைத்தாடு வேல்விழி தான்களி கொண்டாடப்
போரேறு போலெதிர் தேறி விளையாடும்
போகத்தைத் தந்திடு மோகக் குறத்தியைத் (தேடி)

### தரவு கொச்சகக் கலிப்பா

சங்கமங்க டாவரங்க டாபரமாய்க் கொண்டிலகும்
துங்கமுரு கேசன் சுனைக்குவளை நீல வெற்பில்
வங்கணனைப் பார்த்து மலைக்குறவ னென்னுடைய
சிங்கிதனைக் காட்டினையேற் செய்வன்வெகு மானமென்றான். 87

### சிந்து

சொக்குப் பொடியுங் குளிசையுங் கூடத் தருவேன்-என்
தோகையி னைக்குற மாதினைக் காட்டிய பேர்க்கே.

சர்க்கரை மந்திர தந்திரஞ் செய்து கொடுப்பேன்-என்
சல்லாபக் காரியைக் காட்டிய பேருக்குத் தானே.

கைக்கனி போலவு மந்திர சாலமுஞ் செய்வேன்-இரு
கண்ணாங் குறத்தியைக் காட்டிய பேருக்கு முன்னே.

அக்ரம மாகவே குக்கிட்டி மந்திரஞ் சொன்னாற்-கூத்
தாடிச் சிலம்பம் படைவெட்டுக் காகுமோ முன்னாய். 88

### குறவன் சிங்கியைக் காணுதல்

#### எண்சீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

சுனைக்குவளை மலர்தரித்த புயவேள் கந்த
 சுவாமிமலர்ப் பதங்கண்டு துதிசெய் வோர்க்கு
மனத்துயரெல் லாந்தவிர்க்கும் வறுமை தீர்க்கும்
 வாய்த்தபாக் கியங்கொடுக்கு மகிமை யாலே
நினைத்தகா ரியங்கொடுப்போன் குமர னென்றே
 நீல வெற்பில் வந்தவுட னேர்மை யாகக்
கனத்தமுலைச் சிங்கிதன்னைச் சிங்கன் கண்டான்
 கண்களிக்க மனதுபெருங் களிகொண் டானே. 89

### சிங்கனும் சிங்கியும் உரையாடுதல்

#### சிந்து

சொல்லாம லெங்கேநீ போனா யடிசொல்லு சிங்கி-காம
வல்லி தனக்குக் குறிசொல்லப் போனேனான் சிங்கா.

போனதின் மேனி யதிசயங் காணுதே சிங்கி-குண
மேன்மை மனிதரைக் கண்டால் வருமடா சிங்கா.

தலைதனிற் கொம்பு முளைத்த விருதேது சிங்கி-வஞ்சி
மலைமன்னர் தந்த மணிக்குப்பித் தொங்கல்காண் சிங்கா.

இந்து நுதலி லிரத்தப்பொட் டேதடி சிங்கி-அது
சிந்துர ரேகைத் திலதமென் பாரடா சிங்கா.

காதி லகத்திப் பழுப்பை நுழைப்பானேன் சிங்கி-தங்கச்
சோதி யிலகிய சொன்னப் பணியடா சிங்கா.

மூக்கினின் மேலொரு மூக்குத் துளியெது சிங்கி-கோத்துத்
தூக்கிய வெண்முத்து மூக்குத் தளியடா சிங்கா.

வாயெல்லாம் ரத்த மயமா யிருப்பானேன் சிங்கி-பாக்குப்
போயிலை வெற்றிலை போட்ட சிவப்படா சிங்கா.

கண்டத்தில் நீர்ப்பாம்பு கட்டிக் கிடப்பானேன் சிங்கி-பூணும்
பண்டத்தில் மிக்கான பைம்பொற் சவடிகாண் சிங்கா.

செங்கை வளையத்துள் சில்லூ றொலிப்பானேன் சிங்கி-நல்ல
தங்கக் கடகச் சரியிட்ட வோசைதான் சிங்கா.

கொங்கைக் குவட்டினிற் குல்லா வணிவானேன் சிங்கி-பொது
மங்கையர் தந்த வனமுலைக் கச்சடா சிங்கா.

சங்கிலி யாலிரு காலிற் றளைத்ததார் சிங்கி-ராசைத்
துங்க மருதப்பன் சூட்டுஞ் சரமடா சிங்கா.

உன்னுடம் பெல்லா முளுப்பொடி யேதடி சிங்கி-மணந்
துன்னுங் களபந் துதைந்தாடு பூச்சடா சிங்கா.

இசங்கப் பழக்கோவை யிங்கே தரிப்பானேன் சிங்கி-அது
உசந்த விலைதரு மொண்முத்த மாலைதான் சிங்கா.

மைக்குழை பூண்ட மருங்கு தெரியாமற் சிங்கி-நீதான்
கொக்கிற காலே குழல்கட்டிக் கொண்டாயே சிங்கி

கல்லார மாமலைக் கன்னிபா தத்தையர் தந்த-இளஞ்
சல்லாவென்று சொல்லு முல்லாசச் சேலைகாண் சிங்கா.

வசந்த னுறையு மலர்ச்சோலைச் சாரலடி சிங்கி-கெட்டி
நிசந்தா னுனக்கென் னெனக்கென்ன சொல்லடா சிங்கா.

பெரிய தனம்பெற்றும் பேசா திருப்பானேன் சிங்கி-நடுத்
தெருவினிற் போட்டுத் தியாகங் கொடுப்பாரோ சிங்கா.

அரைப்பணந் தந்து துரைப்பெண்ணே நீவேலை கொண்டால்-பாரம்
பரைப்பணந் தந்துன்னைப் பாதம் வருடுவன் சிங்கி.

அணைத்துக் கிடக்கவு மாசை துடக்குதே சிங்கி-நல்ல
கிணற்றுத் தண்ணீர் வெள்ளங் கொண்டோடிப் போகுமோ சிங்கா.

கம்பத்தி லேசிறு கும்பங் கவிழ்த்தடி சிங்கி-புதுக்
கும்பத்துக் கள்ளைக் குடித்துக் கவிழ்த்தடா சிங்கா.

தொண்டைக் கனியைச் சுவைக்கவா யூறுதே சிங்கி-கள்ளை
மண்டிய பின்வெறு வாயைச் சுவையடா சிங்கா. 90

திருமலையாண்டவர் குறவஞ்சி முற்றிற்று

உ

# முருகக்கடவுள் மும்மணிக்கோவை

## வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள்

### காப்பு — வெண்பா

செம்மணிக்குன் றன்னகுகன் சேருங் குமாரபுரி
மும்மணிக் கோவை மொழிவதற்குக் — கைம்மணிஒப்(பு)
ஆனமுலைப் பார்ப்பதியாம் அங்கைவடி வேலும்அன்ன
கானமயில் வாகனமும் காப்பு. 1

### நூல்

### நேரிசை ஆசிரியப்பா

கார்முகில் பொதிந்து கரியமா லென்னச்
சீர்மிகத் தருபல சிகரி தோறும்
கொடிநடம் பயின்று குமார புரியில்
அடியவர் வாழ்வான் அவைமுழு தொல்க
வந்தினி தமர்ந்தென் மனங்கவர்ந் தொருமை
தந்தியற் பனுவல் தருகென இரந்தும்
இசைவுரு மாற்றம் இயம்பச் செய்தும்
நசைமிகை படவே நவிலுமா றசைத்தும்
உலகினர்க் குரைக்கில் ஒய்யென நகற்காம்
பலவிளை யாடல் பயின்றும்வாழ் குகனே!
எவ்வகைத் துயர்ஈண் டெய்தச் செயினும்
பௌவநீர்ப் புவியோர் பைம்பொன் வேட்கை
ஒன்றும்வந் தென்னிடத் தொன்றா(து)
இன்றுதொட் டின்னே இயற்றுதி யினிதே. 2

### வெண்பா

இனிய கடலைபய(று) எள்ளுண்டை பற்பல்
கனியனைய கொள்ளுங் களிறு — நனிவிரும்பும்
கோலத் துணைவா! குமாரபுரிக் கோமானே!
காலத்துக் கஞ்சாமற் கா. 3

### கட்டளைக் கலித்துறை

காகாவென் றெத்தனை நாளிரந் தேனெனைக்
காண்கிலைகொல்?
போகாந்த காரத்தை நாடாத வண்ணம் புரந்திலையே
ஆகாத பிள்ளையென் றால்அந்த ஞாயம் அறைகுவையோ
வாகார் குமார புரிக்கோயி லூடென்றும் வாழ்கந்தனே. 4

### நேரிசை ஆசிரியப்பா

கந்தனென் றொருவன் வைவே லேந்திக்
கொந்தலர் சோலைக் குமார புரியில்
தன்னடி யவர்பாற் றறுகண் செய்வார்க்(கு)
இன்னலும் ஏனையர்க்(கு) இன்பமும் நல்கி
வாழ்ந்துளான் என்னும் மாற்றம் வினவித்
தாழ்ந்துபோற் றிசைத்துச் சண்முக மலரும்
பவளவெற் பினம்நிகர் பன்னிரு தோளும்
தவளநீ றணிவார் தலைமணங் கமழும்
பங்கயத் துணைப்பூம் பதங்களும் கருதிச்
சங்கரன் திருமால் சதுமுகன் முதலோர்
தமையெலாம் இகழ்ந்து சாற்றரும் பேதம்
அமைதரு சமயத் தவரொடும் பிணங்கி
இருந்தவென் பால்அவண் எய்தி எய்தித்
திருந்துபே ரறிவாத் திகழ்தரு தன்னை
அன்றிமற் றீன்றென அதட்டி
என்றிறன் றனையும் ஏற்றிலங் கினனே. 5

### வெண்பா

ஏற்றுப் பரியாற்(கு) இசைத்ததனை என்செவியிற்
சாற்றுகெனக் கேட்கை தகாததோ - கூற்றுமட்டும்
வாராக் குமாரபுரி வாழ்குகனே
வண்டமிழ்கொண்(டு)
ஏரார் கிளிக்குரைத்தா யே. 6

## கட்டளைக் கலித்துறை

தாயார் முதற்பகர் நால்வகைச் சார்புந் தமிழ்விரும்போர்
சேயாய்த் திகழ்ந்த(து) அதன்சீர் உரைக்கிற் செழும்கமல
மேயானைக் குட்டித் திருமாலைக் காத்தரன் வேண்டுபொருள்
வாயாரச் சொல்லிக் குமார புரியின் வயினுற்றதே. 7

## நேரிசை ஆசிரியப்பா

உற்றவ ரென்ன உலகினர்க் கருதிப்
பற்றகல் பெரியோர் படிவங் காட்டிப்
பொன்மயல் பெருக்கிப் புலருந் தமியேன்
நன்மனத் தொண்டர் நனந்தலை வைகி
எவ்வகைப் பேறும் இனிதுபெற் றமைந்து
பெளவநீர் புரையும் பகைப்பெருக் கொழித்துன்
தண்டையங் கமலத் தாளிடை புகற்காம்
பண்டை மாதவப் பயனிலேன் எனினும்
காப்பதுன் கடன்;நிற் கான்முளை யென்ன
மோப்பவள் இளமென் முலைநலம் புணர்வான்
கடம்பமால் வனத்தோர் கானவ னாகித்
திடம்பெறப் புரந்த தீயனிற் கடையேன்
அல்லன்யான்அறிதி! அதன்பயன் சிறிதுள
கொல்லலின் முயலார் குமார புரியில்
வன்னமா யிரம்பெறும் மயின்மேல்
மின்னகும் வேலொடு விளங்குதே சிகனே. 8

## வெண்பா

தேசிகனை வேலெடுத்த சேவகனைச் செம்பவளப்
பாசியணி வாட்கினிய பான்மையனை - ஆசில்
குமாரபுரிக் கோயிற் குகவேளை யன்றி
எமாதுளத்தில் மற்றொன் றிலை. 9

## கட்டளைக் கலித்துறை

இலையார்ந்த வெண்பொடி நல்கியன் றென்னொ
டியம்பியசொல்
நிலையாமென் றெண்ணி யிறுமாந் துளேனை நிலத்தினரும்
விலையாரும் புன்பொருள் வேண்டவிட் டாயிதொர்
வேடிக்கையோ
தலையாய செல்வக் குமார புரியிற் சரவணனே. 10

### நேரிசை ஆசிரியப்பா

சரவுயிர்க் கொலைக்கும் சற்றும் அஞ்சா
அரவுறம் பொல்லார் அளவில் பல்லோர்
வாழ்வுறும் இந்நாள் மகிதலத் தென்னைத்
தாழ்வுறப் படுத்தல் தருமந் தானோ
என்னகம் கரியா இனிது தோன்றி
முன்னவின் றுளவா முடித்தருள் புரிவாய்
கோதகல் வளந்தோய் குமார புரியில்
சீதரன் முதலோர் தெண்டனிட் டேத்தச்
செந்துவர்க் கிரியெனத் திகழ்ந்து
முந்துமெய்ஞ் ஞான மொழிபகர் குகனே. 11

### வெண்பா

குகனைக் குமாரபுரிக் கொற்றவனை யீசன்
மகனைத் தினங்கருதி வாழ்வோர் - புகழும்
இருநாலு சித்தியுமுற் றெய்துமுத்தி வேண்டித்
தருநாட்டை யெள்ளுமவர் தாம். 12

### கட்டளைக் கலித்துறை

தாமக் கருங்குழ லார்மையல் நோயிற் றவிக்குமென்னைச்
சேமப் படச்செய்ய வல்லாயன் றோவென்றன் சிந்தையுட்பல்
யாமத்தும் சொன்னசொல் லெல்லாம்பொய் யோசெந்தி லேயனைய
காமர்க் குமார புரியாளும் வேற்படைக் கைத்தெய்வமே. 13

### நேரிசை ஆசிரியப்பா

தெய்வத் திருமொழிச் செழுந்தமிழ்ப் புலவோர்
செய்வகை யாவும் திரைநீர்ப் புவியோர்
பற்பல வாறு பகரக் கேட்டென்
அற்ப நெஞ்சம் அலமர லறிந்தும்
அத்திற லொருசற் றருளிலை யந்தோ
சத்திவேற் படையொடு தமியே னிடைவந்(து)
என்னைநின் கிளியென் றிசைத்த மாற்றம்
தன்னையிவ் வுலகோர் தாமும் அறியச்
செய்யும்நாள் நினைத்துத் தியங்கவும் கண்டாய்!
பெய்யும்வால் வளையார் பிரமையும் ஓர்பால்

வந்துறச் செய்தாய்! மறுதுணை அறியேன்
சிந்துரம் உலவுந் தெருநலம் குலவும்
பொற்புறு குமார புரியிற்
சிற்பர மாகித் திகழ்ந்தசண் முகனே. 14

**வெண்பா**

முகமனன்றென் வார்த்தையென்னை முற்றும்
கவர்ந்தாய்
சகலமுநீ யென்றுணரத் தாராய் - இகதலமும்
வானும் பரவும் வளஞ்சேர் குமாரபுரி
மானும் புகழ்வேல வா. 15

**கட்டளைக் கலித்துறை**

வேலாயு தப்பெரும் பூசையின் ஆசை மிகுக்குமென்னை
மாலாதி யோர்புக ழுத்தகும் நாளும் வருவித்திடாய்
சேலார்கட் குஞ்சரி பாகா புனத்துச் சிறுமிகொண்கா
கோலாக லாநம் குமார புரியிற் குருபரனே. 16

**நேரிசை ஆசிரியப்பா**

குருவென வுலகிற் குலவல் எலாம்நின்
திருவுரு வென்னத் தெளிதரப் பெற்றும்
புலைநெறிக் கொடியோர் புன்மை நாடி
மலைவுறும் கொடுமை மாற்றி யருளாய்
தண்புனற் பணையிற் றயங்கும் வாளை
விண்புகின் உறிஞ்சி விரிபூ வுதிர்தரு
கொன்பொழில் உடுக்கும் குமார புரியில்
நம்புநர் வேண்டுவ நல்கி
அம்புவி புரக்கும் அயிற்கைவா னவனே. 17

**வெண்பா**

வானவர்தம் வாழ்க்கையையும் வம்பென் றருவருக்கும்
ஞானமுறப் பெற்றபின்னும் நானிலத்து - மானனையார்
பார்வைக் குருகப் படுமோ குமாரபுரி
ஊர்வைகும் வேலா உரை. 18

**கட்டளைக் கலித்துறை**

உரையிறந் துற்றமெய்ஞ் ஞானாநு பூதி யுடையவர்தாம்
தரையினிற் கூடும்நன் னாள்வர வேண்டித் தவிக்குமென்னைக்
கரைதவிர் மாயைக் கடலூ டமிழ்ந்து கலங்கவிடேல்
புரையில்வல் லோர்மிகப் போற்றுங் குமார புரிக்குகனே. 19

### நேரிசை ஆசிரியப்பா

புரிமருப்(பு) ஆட்டின் புறத்தில் ஏறி
எரிவளர்த் தோம்பும் இகத்துமா தவரும்
வானகத் திமையா வாழ்க்கை யோரும்
மானமற் றழியா வண்ணம் காத்த
பெரும்புகழ் கருதிப் பிறங்கொளி மதுரம்
விரும்புமெய் புணர்ந்த வியன்றமிழ்க் கவியால்
போற்று மென்னைப் புறம்பெனத் தள்ளா(து)
ஏற்று வாகனத்(து) இறைவனா தியர்க்(கு)
அன்றளித் தருள்பே றமைக்க வேண்டும்
குன்றலில் வளமைக் குமார புரியில்
எவ்வெவர் எவ்வா றெண்ணினும் இகழா(து)
அவ்வவர்க் கவ்வா றவிர்தரும் அருள்கொண்(டு)
இருமயி லன்னார்க்(கு) இடையில்
ஒருமயிற் பரிமீ தொளிர்உர வோனே. 20

### வெண்பா

உரங்கொண்ட வேலானை ஒண்மழுவான் வேண்டும்
சிரங்கொண் டுதவுமொரு சேயைக்-கரங்கொண்டு
கும்பிடுவோர்க் கிந்தக் குமாரபுரி போலமுற்றும்
நம்பிடும்ஊர் இல்லைசொன்னேன் நான். 21

### கட்டளைக் கலித்துறை

நானென்ற ஆணவப் பேய்வந் துறுக்க நலியுமென்னைத்
தானென்ற நன்னிலைக் கென்றமைப் பாய்அருட்
சண்முகத்தோர்
கோனென் றறிகிலர் தம்மையுங் காத்துக் குமாரபுரி
வானென்ற வாழ்வுறச் செய்யுமெந் தாய்மயில் வாகனனே. 22

### நேரிசை ஆசிரியப்பா

கனக மாலறக் கழுவி அப்பால்
அனநின் திருவாய் அறைந்த வாறு
மூவுல குணர முயன்றிடும் கிணற்றில்
ஓவுறா நதியொன் றொளிர்தரக் காட்டி
மீனுறழ் கண்ணார் வேட்கை முதலாய்
யானுளத் தமைக்கும் யாவும் நீத்துன்

திருவடி யதனிற் சேர்தரக் கொண்டு
வருபிறப் பொன்றும் மருவா தருள்வாய்
சத்தி வேற்கைச் சரவணன் றானே
முத்தி முதலெனும் முனிவோர் குறிக்கும்
சமய நெறியின் தலைப்பெயர் வாய்ந்து
கமலை மனையுறழ் கவினொடு பொலிந்து
புகழ்பெறுங் குமார புரியில்
நிகரில்வேல் பிடித்து நின்றசே வகனே. 23

### வெண்பா

சேவேறு வார்க்கினிய தேசிகனைச் செங்கமலப்
பூவேறு வானைப் புடைத்தானைப் - பாவேறும்
செல்வக் குமாரபுரிச் சேந்தனைப்போற் றாப்புலவோர்
சொல்வக் கணைநம் துயர். 24

### கட்டளைக் கலித்துறை

நந்தமர் செங்கைத் திருமால் மருகன் நறைக்கடப்பங்
கொந்தலர் மாலை கொடுத்தாலென் பேதையைக் கோரநமன்
வந்தனம் செய்குவன் நிந்தைவிட் டேத்தி வணங்கும்மரப்
பொந்தமர் கிள்ளை பயிலுங் குமார புரிமுற்றுமே. 25

### நேரிசை ஆசிரியப்பா

முற்றும்நின் செயலென மொழிதரு மென்னை
எற்றும் தொழிலும் என்வாய்ச் சொற்கள்
காமுறு நலமும் கருதிநன் குணரின்
மாமுதல் தடிந்து மகபதி முதலோர்
தம்மைமுன் புரந்த தனிப்புகழ் மறந்து
வெம்மையார் காட்டில் வியனுருப் பொலிபேய்க்
கணத்தொடு நடித்துக் கராமக வுமிழப்
பணத்தகு புலவன் பகர்தரு முதற்பேர்
மெய்ப்படப் பெற்றோன் விதுவார் நாளில்
உய்ப்பது பெற்றான் உஞற்றும் பூசை
கொண்டவள் அருளாற் கொடுத்த மகவென
விண்டயர் கின்றேன் வெறுத்தெனை விலக்கேல்
செந்தில் ஏரகம் திருமலை முதலாம்

முந்தியற் கோயில் முழுமையும் அழுக்கா(று)
எய்தத் தகும்பே ரியற்கையொன் றெய்திய
புண்ணியக் குமார புரியில்
திண்ணிய வேல்கொடு திகழ்கிழ வோனே. 26

### வெண்பா

கிழவனுருக் கொண்டுகுறக் கிள்ளையிடம் சென்றாய்
மழலைமொழிச் சேயுருவில் வந்(து)ஆள் - அழகியபொற்
றோகைமயில் வீரா துகள்தீர் குமாரபுரி
வாகைவடி வேற்கையிறை வா. 27

### கட்டளைக் கலித்துறை

இறையள வேனும்நின் மெய்யன் பிலேன்எனை யேற்றுமனக்
குறைதவிர்த் தாளவும் வல்லாய்கொ லோதென் குமாரபுரி
நிறைதருஞ் சீரெய்த வந்தாய் தினமும் நினைப்பவரைப்
பிறைமுடிக் கும்படி செய்வாய் எவர்க்கும் பெரியவனே. 28

### நேரிசை ஆசிரியப்பா

பெரியவர் நால்வர் பேணி யேத்த
அரியகல் லாற்கீழ் அமருங் குரவன்
பரவும்நிற் பழிச்சும் பான்மை யேனை
விரவும்ஆ ணவநோய் வேரற முறுக்கி
வடவரைப் புடைத்த வழுதி வலியும்
கடல்குடித் தான்றோன் கல்விப் பேறும்
சண்பையூர்ப் புலவன் தனது மாண்பும்
விண்புரைந் துருப்போல் விளங்குங் கவினும்
பெறக்கொடுத் தாண்டுன் பெய்கழற் றுணைத்தாள்
உறக்கொள்வான் ஒருசற் றுளமினி திரங்காய்
வால்வளை முரலும் மலர்ப்பெரு வாவி
சால்வளம் பொலிந்து தமநிய நகரி
புரைதரு குமார புரியில்
தரைமுழு துய்யத் தரித்தகாங் கெயனே. 29

### வெண்பா

காங்கார் நிறத்தொருத்தி காதல்விஞ்சிக் கானவர்தம்
ஆங்காரம் குன்றுறச்செற் றாண்டானைத் - தீங்காளர்

போற்றாக் குமார புரியிற் பணியவல்லார்
ஏற்றாளன் சீர்பெறுவா ரே. 30

**கட்டளைக் கலித்துறை**

பெறுவாருக் குண்மைப் பொருளோதும் ஞானப் பிரான் பிறங்கும்
அறுமா முகத்தெந்தை ஐங்கரத் தான்றுணை ஆன்றபுகழ்க்
குறுமா முனிக்கருள் கோமான் என்பார்கள் கொடியவரைக்
கறுவாண்மை யோங்குங் குமார புரியன்ன காரணரே. 31

**நூற்பயன் - வெண்பா**

கொய்ம்மலர்த்தண் சோலைக் குமாரபுரிக் கோன்புனையும்
மும்மணிக் கோவை மொழிவார்க்கு - மைம்மருவு
வானகத்துத் தேவர் மருவாப் பெருவாழ்வும்
ஈனமற்ற வீடுமெய்து மே. 32

**முருகக்கடவுள் மும்மணிக் கோவை முற்றிற்று**

உ

# குமரகிரி மும்மணிக் கோவை

கோ. இளையபெருமாள்

## காப்பு வெண்பா

திமிரி யெனும்பேர் திகழ்நல்லூர்ச் சேர்ந்த
குமரகிரி மும்மணிக் கோவை—அமைதியுறச்
செந்தமிழால் யான்பாடிச் சேவிக்கச் சிந்தையுளே
வந்தருள்வான் தந்திமுக வன். 1

## நூல்

### ஆசிரியப்பா

உலகுக் கெல்லாம் ஒருமுத லாகி
இலகும் பரம்பொருள் இயற்கையின் வடிவாய்
எங்கும் நிறைந்தே இன்ப மூட்டும்
மலைவனம் வயல்கடல் மன்னும் பகுதி
குறிஞ்சி முல்லை மருதம் நெய்தல்
நானில மென்று நவிலப் படுமே
நானிலந் தன்னுள் மேனில மாதல்
குறிஞ்சி நிலமெனக் கூறுவ ரான்றோர்
மன்னிய குறிஞ்சியில் மகிழ்ந்துறை தெய்வம்
முன்னியது முடிக்கும் முருகென மொழிவர்
முருகின் பொருளை மொழியுங் காலை
இளமை அழகு இறைமண மாதிய
வளமுறு பொருள்பல வயங்கித் தோன்றும்
குன்றமர்ந் துறையும் குமரக் கடவுள்
குமர கிரியில் குலவுங் காட்சியை
இமையா தென்றும் காணின்
இமையவர் பதியினும் இனியதிவ் வுலகே. 2

## வெண்பா

உலகுபுகழ் சான்றோர் உறைதொண்டை நாட்டின்
திலகமெனப் போற்றும் திமிரி—இலகும்
குமரகிரி மேவும் குருபரனைப் போற்றி
அமரரிடர் தீர்ந்துய்ந்தார் அன்று. 3

## கட்டளைக் கலித்துறை

அன்று தவத்தின் வலிமையைப் பெற்ற அசுரருடை
துன்றும் கொடுமைகட் காற்றாது வானோர்
தொழுதழவே
வென்று பகைவரை வேரொடும் சாய்த்து
விழுத்துணையாய்
என்றுங் குமர கிரியிருந் தாளும் இறையவனே. 4

## அகவல்

இறைவன் உண்மை இனிதறி யாத
குறையுடை மாக்கள் குறிக்கோ ளிலரே
எங்கும் நிறைந்த இறைவனை யறிகிலார்
எங்குளன் இறைவன் என்ப ராயின்
தம்மை யறியாத் தகவிலா தவரே
இயற்கையின் வடிவே இறைவன் வடிவம்
இயற்கை யாதோ என்குவீ ராயின்
கைபுனைந் தியற்றாக் கவின்பெரு வனப்பே
ஞாயிறு திங்கள் நளிகடல் மலைநதி
பூம்புனற் பொய்கை பொறிவண் டிசைக்கும்
தேம்பொழில் செழுமுகில் திகழ்வனம் தென்றல்
மாங்குயில் குரலொடு மயிலின் ஆட்டம்
இன்னோ ரன்ன இயற்கையி னூடே
மன்னும் இறைவன் மாண்பினை விரும்பிக்
காணா திகழும் கல்லா மாந்தர்
வாணாள் முற்றும் வறிதே கழிப்பர்
ஆயினும் அன்னார்க் கறிவு கொளுத்தத்
தாயினும் இனிய தயாபரன் தன்னை
அன்போ டுருகி அகங்குழைந் துலகில்
என்போல் பவரும் எளிதில் காணக்

குமர கிரியில் கோயில்கொண் டருளினன்
ஓங்கும் இறைவன் உண்மை உணர்ந்து
கண்ணிற் கண்டு களியார்
மண்ணிற் பிறந்தும் மதிமறந் தவரே. 5

**வெண்பா**

தவமே புரிந்தறியேன் தண்மலர்த்தாள் போற்றேன்
அவமே பிறந்துழல்வேன் ஆனால்—பவமறுக்க
இன்றே குமரகிரி எய்தினேன் ஏற்கவருட்
குன்றே குமர குரு. 6

**கட்டளைக் கலித்துறை**

குருவா யிருந்துமுன் தந்தைக்கு வேண்டுங் குறிப்புணர்ந்து
திருவாய் மலர்ந்து மறைமொழி தந்த திருமுருகா
உருவாய் மயில்மிசை வள்ளிதெய் வானை யுடனுவந்து
வருவாய் குமர கிரியினில் அன்பர் வரம்பெறவே. 7

**அகவல்**

வேலை சூழும் வியனுல கத்தில்
வேலை யிலையென வீணா யலைவோர்
வேலை வணங்கும் வேலை யறிகிலார்
ஞாலம் விளங்க நல்லருள் சுரக்கும்
வானத் துயர்ந்த வள்ளல் கையில்
ஞானத் துருவாய் நண்ணும் வேலை
ஒருமன மாயிருந் துறுதியாய்ப் போற்றின்
முத்தமிழ்ப் புலமை முறையுறத் தோன்றும்
நாற்கவி பாடும் நல்லிசை யுண்டாம்
ஐந்திலக் கணமும் அருளி அறுமுகன்
எழுபிறப் பிணிலும் இடரொழித் திடுவன்
எட்டுணை யேனும் ஐய மின்றி
ஒன்பான் வாயில் உடம்பால்
என்றும் எய்துவர் இன்பத் தினையே. 8

### வெண்பா

பத்தியுடன் அம்மையப்பர் பாதம் பணிந்துகனி
அத்திமுகன் பெற்றானே யானாலும்—முத்திக்
கனிநீ முருகா கனிவேண்டி யந்நாள்
முனிவா யெதற்கோ மொழி. 9

### கட்டளைக் கலித்துறை

மொழியும் பிறதெய்வம் உண்டென்று போற்றேன் முருகனையே
ஒழியும் பிறவித் துயரென நாளும் உருகிநின்றே
பழியும் துடைக்கும் குமர கிரியிறை பன்னிரண்டு
விழியும் பொழியும் அருள்வெள்ள மூழ்க விரும்புவனே. 10

### அகவல்

விரும்புந் தமிழின் பெரும்பொருள் விளக்கும்
காதலும் வீரமும் கண்ணெனத் தோன்றித்
தமிழர் வாழ்வைத் தகவுறக் காட்டும்
காதல் வாழ்வைக் காணுங் காலை
களவுகற் பெனவிரு கைகோ ளாகும்
உளமகிழ் கூர உயர்தமிழ் வேந்தே
தெள்ளிய சுனையமர் வள்ளி மலையில்
ஏனற் காவல் இனிது வீற்றிருந்த
கானக் குறவர் கன்னியை வேட்டுக்
களவு நெறியைக் கவினுறக் காட்டினை
சூரன் கிளையை வேரறச் சாய்த்து
வாகை சூடி வந்தமை கருதித்
திருப்பரங் குன்றில் விருப்புடன் கூடி
இந்திரன் மகளைத் தந்திட வேற்றுக்
கற்பு நெறியைப் பொற்புறக் காட்டினை
தமிழ்விரித் தருளிய தனிப்பெருந் தலைவ!
குமர கிரியிற் குலவுநின் னருளால்
தமிழைப் போற்றுந் தகவுடைத்
தமிழக வாழ்வு தழைத்தோங் குறுமே. 11

### வெண்பா

குறுமுனிவன் வேண்டக் குலவுமருள் செய்த
அறுமுகவ நாயேனும் அன்பால் — பெறுமுறையில்
நற்றமிழை வேண்டி நயந்துன்பால் வந்தடைந்தேன்
குற்றமெலாம் தீர்த்தெனையாட் கொள். 12

### கட்டளைக் கலித்துறை

கொள்ளுங் குணஞ்சிறி தில்லாத போதுங் கொடியவெனை
எள்ளும் படிவிடின் நின்பெருந் தன்மைக் கிழுக்குடைத்தே
புள்ளும் விலங்கும் புகலடைந் துய்யப் புரிந்தினிதாட்
கொள்ளுங் குமர கிரியமர் சேவற் கொடியவனே. 13

### அகவல்

கொடியவர் வாழுங் குவலயத் தின்கண்
அடியவர்ப் போற்றி யன்புசெய் யாமல்
பழித்துப் பேசும் பண்பி லாளரும்
தாயுந் தந்தையுந் தாமறி தெய்வமென்
றாயு மறிவிலா தலைக்கும் மக்களும்
பெற்ற குழவியைப் பேணு மன்பிலாக்
குற்ற முடனே கொலைசெயுந் தாயரும்
கணவனைப் போற்றாக் கற்பிலாப் பெண்டிரும்
கள்ளவா ணிகத்திற் கரவுசெய் பவரும்
அரசியல் நாடகம் ஆடும் மாந்தரும்
நல்லா சிரியரை நயந்துபோற் றாமல்
பொல்லாங் கியற்றும் புல்லறி வாளரும்
நன்றி மறந்த நாணிலா தவரும்
கடவுள் இலையெனக் கழறும் கயவரும்
உடன்பிறந் தவருடன் உடற்றும் மாக்களும்
ஒழுக்கம் போற்றா திழுக்கும் நெறியில்
மனிதப் பண்பிலா மக்கள் மலிந்தே
ஐம்பெரும் பாவத் தழிவுசெய் யுலகில்
எம்பெரு மானே ஏன்பிறந் தேனென
வருந்துவன் அந்தோ வாழேன் வாழேன்
திருந்தும் அன்பிலாத் தீயரைக் காண
அஞ்சுவன் ஆதலின் அடியேன் நின்பால்

நெஞ்சுவந் தொருவரம் நேர்குவன் அன்பால்
உலகம் உய்ய உயரிய குமர
கிரிவளர் முருக கேடில்
பரிவுடன் கருணை **புரிவதுன்** கடனே. 14

### வெண்பா

கடனுனக்கொன் றிந்நாள் கழறுவன்கேள் நெஞ்சே
உடனே குமரகிரி யுற்றே — மடனொழிக்கும்
நாதன்முன் தாழ்ந்தெழுந்து நாளும் முடிபுனைக
போதமிகு தாட்கமலப் பூ. 15

### கட்டளைக் கலித்துறை

பூவிற் கணிகலம் பொன்மகள் வாழுயர் புண்டரிகம்
கோவிற் கணிகலம் கோட்டமில் லாமல் குடிபுரத்தல்
தேவிற் கணிகலம் சேவற் கொடிசேர் திருமுருகன்
நாவிற் கணிகலம் சண்முகன் நாமம் நவிலுவதே. 16

### அகவல்

தேவ தேவன் நீயெனத் தெளிந்து
தந்தை பணிந்து தகுமுறை கேட்க
முந்தை மறைப்பொருள் முழுதும் மொழிந்தனை
அகத்திய முனிவர்க் கருந்தமிழ் அருளினை
நக்கீ ரர்க்கு நல்வாழ் வருளி
ஆற்றுப் படைநூல் ஏற்றுக் கொண்டனை
அருண கிரியை ஆட்கொண் டருளித்
திருப்புகழ் கேட்டு விருப்புற் றனையே
குமர குருபரர் குறைதவிர்த் தருளிக்
கலிவெண் பாமுதல் பலநூல் களித்தனை
ஔவை மொழியை அமுதென விரும்பினை
பகழிக் கூத்தர் பகர்திருச் செந்தூர்
பிள்ளைத் தமிழ்நூல் பெற்று மகிழ்ந்தனை
பொய்யா மொழியைப் புகழச் செய்தனை
அன்னவர் போல அருந்தமிழ் வேண்டி
நின்னடி யடைந்து நின்றேன்
மும்மல மறுத்து மொழிகமுத் தமிழே. 17

### வெண்பா

மும்மலத்தின் கூறாய் முறைகோடி வாழ்ந்துன்றன்
செம்மை யறியார் செருக்கடக்கி — வெம்மை
தணிந்து குமரகிரி தங்கும் முருகா
பணிந்துன் பதமடைந்தேன் பார். 18

### கட்டளைக் கலித்துறை

பார்க்கு மிடந்தொறும் நீக்க மறநிறை பண்புடையாய்
ஊர்க்கு ளுயர்ந்த குமர கிரியுறை உத்தமனே
மூர்க்கனென் றாலும் முருகா எனவே மொழிந்தவரைச்
சேர்க்குங் கருணையி னாலடைந் தேனுன்றன்
சேவடியே. 19

### அகவல்

சேவடி போற்றிச் சிந்தையுள் ளுருகிக்
காவடி யேந்திக் களிப்புற வாடி
அணியணி யாய்வரும் அன்பர் கூட்டம்
குமர கிரியிற் கூடுங் காலை
உருகா மனமும் உருகச் செய்யும்
முருகா வென்றே முழங்கும் ஒலியொடு
குழலொலி யாழொலி குறிக்கும் பல்வகை
விழவொலி சென்று விண்ணைப் பிளக்கும்
கண்ணீ ரருவி கடலிற் கலக்கும்
வெண்ணீற் றொளியின் விளக்கம் பெருகி
இருட்பகை இரிய எங்கும் ஒளிசெயும்
பழகு தமிழிசைப் பாடற் கேட்டே
அழகு மயில்மே லாடும் முருக
நின்னை மருகனாய் நேர்ந்தனன்
இன்றமிழ்ப் பின்னே சென்றமா லவனே. 20

### வெண்பா

மாலவற்கு நன்மருகா மன்னுங் குமரகிரி
மேலவனே போற்றுமுயர் மெய்ஞ்ஞான — வேலவனே
வேற்றுப் படையான்முன் வீயாரை வென்றவனே
ஆற்றுப் படையான் அருள். 21

## கட்டளைக் கலித்துறை

ஆற்றுப் படையின் பொருள்முரு கன்பதி யாறெனவே
சாற்றும் பொருளே பொருளாவ தன்றவன் தந்தவின்பம்
ஏற்று மகிழ்பவர் ஏனோர்க்குங் கூறுதல் என்பதுவே
தோற்றுங் குமரகிரியடைந் தாலின்பம் தோய்குவிரே. 22

## அகவல்

தோயும் புனலிடைச் சுடர்விடத் தோன்றிச்
சரவண பவனெனச் சாற்றும் பெயரோய்
வள்ளிதெய் வானை வடிவேல் உன்பால்
இச்சை கிரியை ஞானம் ஆகிய
மூன்றுமாய் முறையே தோன்று மாயினும்
வானத் துயர்ந்த வள்ளால் நின்கையில்
ஞானத் துருவாய் நண்ணும் வேலைத்
துணையெனக் கொண்டே துயர்துடைத் தருளிக்
குமர கிரியிற் குலவிட நின்றனை
ஆதலின் நின்பால் அடியேன் என்றும்
வீத லின்றி விளங்க
வேண்டுவ துன்றன் விழுத்துணை ஒன்றே. 23

## வெண்பா

ஒன்றே குலமும் ஒருவனே தேவனென
நன்றே உணர்ந்தமையால் நாயினேன் — இன்றே
குமரகிரி சேர்ந்தேன் குலதெய்வம் நீயே
எமபயந்தீர்த் தாள்வாய் இனிது. 24

## கட்டளைக் கலித்துறை

துணையெனக் குன்றன் துணையடி யென்றே
தொழுதுதினம்
புணையெனக் கொண்டேன் பிறவிப் பெருங்கடல்
போக்குதற்கே
இணையுனக் குண்டோ குமரகிரியுறை எம்மிறைவா
அணையெனத் தேங்கும் அருளா ரமுதம்
அளித்தருளே. 25

### அகவல்

அருளுணர் வின்றிப் பொருளுணர் வோடே
ஆசைக் கடலுள் அழுந்திநின் றுலகில்
இன்பங் காணா தேங்குவ தேனோ
ஈங்குனக் கொருசொல் லியம்பக் கேளாய்
உலகம் உய்ய உயர்தமிழ் வழங்கிய
ஊமைப் பிள்ளைக் குணர்வினை யூட்டி
என்றும் அன்பர்க் கெளியவ னாகி
ஏறு ம்யிலுகந் தேறிநின் றாடி
ஐம்புல இன்பம் ஆர வளிக்கும்
ஒருதிரு முருகனை உள்நினைந் துருகி
ஓதின் இன்ப முறுவை
ஔவையின் பாட்டை அறிகவென் நெஞ்சே. 26

### வெண்பா

சேயின் துயர்துடைக்கச் சேரவணைத் துக்காக்கும்
தாயிற் சிறந்த தயவுடையாய் — நோயற்ற
வாழ்வருள்க வென்றுதினம் மன்னுங் குமரகிரி
சூழ்வருவேன் பாடித் துதித்து. 27

### கட்டளைக் கலித்துறை

பாடுவ துன்புகழ் பத்தியினோடு பணிந்துதினம்
சூடுவ துன்னடி சூழ்வினை நீங்கநற் சுற்றமெனக்
கூடுவ துன்னடி யாருடன் என்றுங் குமரகிரி
நாடுவ தேயன்றி நானறி யேன்தெய்வ நாயகனே. 28

### அகவல்

தெய்வ நாயகன் திருப்புகழ் பாடி
உய்வகை யறியா துறுதுயர்க் கடலுள்
ஐம்புலப் போக்கில் அலைந்து திரியும்
தீவினை யாளரும் நாவினித் திடவே
முருகா வென்றே ஒருகால் மொழிந்து
கரிவளர் குமர கிரிவலம் வந்து
முத்தொளிர் அருவியில் மூழ்கின்
புத்தொளி பெற்றுப் புனிதரா குவரே. 29

### வெண்பா

புனிதமிகு பூமியின்கண் போய்ப்பிறப்போ மென்றே
மனிதப் பிறப்பெடுத்து வானோர் — இனிதுறவே
மண்ணிற் குமரகிரி மால்மருகன் கால்பிடித்தே
விண்ணிற் குடிபுகுந்தார் மீண்டு. 30

### கட்டளைக் கலித்துறை

விண்ணிற் கணிகலம் வேலோன்
விழுத்துணை வேண்டுவதே
கண்ணிற் கணிகலம் கண்ணோட்ட
மென்றுரை காரிகையே
பெண்ணிற் கணிகலம் கொண்டானைப்
போற்றும் பெருங்குணமே
மண்ணிற் கணிகல மாகுங்
குமரன் மலையுலகே. 31

### வாழ்த்து

#### அறுசீர் ஆசிரிய விருத்தம்

ஆவியின் இனிய எங்கள்
அறுமுகத் தண்ணல் வாழ்க
தேவியர் இருவர் வாழ்க
திருக்கரச் செவ்வேல் வாழ்க
கூவிடும் சேவல் வாழ்க
கோலமா மஞ்ஞை வாழ்க
மேவிய குமரக் குன்றம்
மேதினி விளங்க வாழ்க. 32

**குமரகிரி மும்மணிக்கோவை முற்றிற்று**

உ

# சங்கப் பாடல்களில் முருகன்

குறுந்தொகை

## பெருந்தேவனார்

### கடவுள் வாழ்த்து

தாமரை புரையுங் காமர் சேவடிப்
பவழத் தன்ன மேனித் திகழொளிக்
குன்றி யேய்க்கு முடுக்கைக் குன்றின்
நெஞ்சுபக வெறிந்த வஞ்சுடர் நெடுவேற்
சேவலங் கொடியோன் காப்ப
ஏம வைக லெய்தின்றா லுலகே.

பரிபாடல் ஐந்து

## கடுவனிளவெயினனார்

பாயிரும் பனிக்கடல் பார்துகள் படப்புக்குச்
சேயுயர் பிணிமுக மூர்ந்தம ருழக்கித்
தீயழ றுவைப்பத் திரியவிட் டெறிந்து
நோயுடை நுடங்குசூர் மாமுத றடிந்து
வென்றியின் மக்களூ ளொருமையொடு பெயரிய 5
கொன்றுண லஞ்சாக் கொடுவினைக் கொஃறகை
மாய வவுணர் மருங்கறத் தபுத்தவேல்
நாவலந் தண்பொழில் வடபொழி லாயிடைக்
குருகொடு பெயர்பெற்ற மால்வரை யுடைத்து
மலையாற்றுப் படுத்த மூவிரு கயந்தலை 10
மூவிரு கயந்தலை முந்நான்கு முழவுத்தோள்
ஞாயிற்றேர் நிறத்தகை நளினத்துப் பிறவியை
காஅய் கடவுள் சேஎய் செவ்வேள்
சால்வ தலைவவென்னப் பேஎ விழவினுள்
வேல னேத்தும் வெறியு முளவே 15
அவை,வாயு மல்ல பொய்யு மல்ல
நீயே வரம்பிற்றிவ் வுலக மாதலிற்

சிறப்போய் சிறப்பின்றிப் பெயர்குவை
சிறப்பினு ளுயர்பாகலும்
பிறப்பினு ளிழிபாகலும் 20
ஏனோர்நின் வலத்தினதே
ஆதி யந்தண னறிந்து பரி கொளுவ
வேத மாபூண் வையத்தே ரூர்ந்து
நாக நாணா மலைவில் லாக
மூவகை, ஆரெயி லோரழ லம்பின் முளிய 25
மாதிர மழலவெய் தமரர் வேள்விப்
பாக முண்ட பைங்கட் பார்ப்பான்
உமையொடு புணர்ந்த காம வதுவையுள்
அமையாப் புணர்ச்சி யமைய நெற்றி
இமையா நாட்டத் தொருவரங் கொண்டு 30
விலங்கென விண்ணோர் வேள்வி முதல்வன்
விரிகதிர் மணிப்பூ ணவதற்குத்தா னீத்த
தரிதென மாற்றான் வாய்மைய னாதலின்
எரிகனன் றானாக் குடாரி கொண் டவனுருவு
திரித்திட் டோனிவ் வுலகேழு மருளக் 35
கருப்பெற்றுக் கொண்டோர் கழிந்தசே யாக்கை
நொசிப்பி னேழுறு முனிவர் நனியுணர்ந்து
வசித்ததைக் கண்ட மாக மாதவர்
மனைவியர் நிறைவயின் வசிதடி சமைப்பிற்
சாலார் தானே தரிக்கென வவரவி 40
உடன்பெய் தோரே யழல்வேட் டவ்வவித்
தடவுநிமிர் முத்தீப் பேணிய மன் னெச்சில்
வடவயின் விளங்கா லுறையெழு மகளிருட்
கடவு ளொருமீன் சாலினி யொழிய
அறுவர் மற்றையோரு மந்நிலை யயின்றனர் 45
மறுவறு கற்பின் மாதவர் மனைவியர்
நிறைவயின் வழாஅது நிற்சூ லினரே
நிவந்தோங் கிமயத்து நீலப்பைஞ் சுனைப்
பயந்தோ ரென்ப பதுமத்துப் பாயற்
பெரும்பெயர் முருகநிற் பயந்த ஞான்றே 50
அரிதமர் சிறப்பி னமரர் செல்வன்
எரியுமிழ் வச்சிரங்கொண் டிகந்துவந் தெறிந்தென
அறுவேறு துணியு மறுவ ராகி

ஒருவனை வாழி யோங்குவிறற் சேஎய்
ஆரா வுடம்பினீ யமர்ந்துவிளை யாடிய 55
போரால் வறுங்கைக்குப் புரந்தர னுடைய
அல்லலி லனலன் றன்மெய்யிற் பிரித்துச்
செல்வ வாரணங் கொடுத்தோன் வானத்து
வளங்கெழு செல்வன்றன் மெய்யிற் பிரித்துத்
திகழ்பொறிப் பீலி யணிமயில் கொடுத்தோன் 60
திருந்துகோன் ஞமன்றன் மெய்யிற் பிரிவித்
திருங்கண் வெள்யாட் டெழின்மறி கொடுத்தோன்
ஆஅங், கவரும் பிறரு மமர்ந்துபடை யளித்த
மறியு மஞ்ஞையும் வாரணச் சேவலும்
பொறிவரிச் சாபமு மானும் வாளும் 65
செறியிலை யீட்டியுங் குடாரியுங் கணிச்சியும்
தெறுகதிர்க் கனலியு மாலையு மணியும்
வேறுவே றுருவினிவ் வாறிரு கைக்கொண்டு
மறுவி றுறக்கத் தமரர்செல் வன்றன்
பொறிவரிக் கொட்டையொடு புகழ்வரம் பிகந்தோய்70
நின்குண மெதிர்கொண்டோ ரறங்கொண்டோ ரல்லதை
மன்குண முடையோர் மாதவர் வணங்கியோ ரல்லதை
செறுதீ நெஞ்சத்துச் சின நீடி னோரும்
சேரா வறத்துச் சீரி லோரும்
அழிதவப் படிவத் தயரி யோரும் 75
மறுபிறப் பில்லெனு மடவோருஞ் சேரார்
நின்னிழ லன்னோ ரல்ல தின்னோர்
சேர்வா ராதலின் யாஅ மிரப்பவை
பொருளும் பொன்னும் போகமுமல்ல நின்பால்
அருளு மன்பு மறனு மூன்றும் 80
உருளிணர்க் கடம்பி னொலிதா ரோயே.

இசையமைத்தவர்: **கண்ணனாகனார்.**

பண்: **பாலையாழ்.**

பரிபாடல் எட்டு

## நல்லவந்துவனார்

மண்மிசை யவிழ்துழாய் மலர்தரு செல்வத்துப்
புண்மிசைக் கொடியோனும் புங்கவ மூர்வோனும்

மலர்மிசை முதல்வனு மற்றவ னிடைத்தோன்றி
உலகிரு ளகற்றிய பதின்மரு மிருவரும்
மருந்துரை யிருவருந் திருந்துநூ லெண்மரும் 5
ஆதிரை முதல்வனிற் கிளந்த
நாதர்பன் னொருவரு நன்றிசை காப்போரும்
யாவரும் பிறரு மமரரு மவுணரும்
மேவரு முதுமொழி விழுத்தவ முதல்வரும்
பற்றா கின்றுநின் காரண மாகப் 10
பரங்குன் றிமயக் குன்ற நிகர்க்கும்
இமயக் குன்றினிற் சிறந்து
நின்னீன்ற நிரையிதழ்த் தாமரை
மின்னீன்ற விளங்கிணரூழா
ஒருநிலைப் பொய்கையோ டொக்குநின் குன்றின் 15
அருவிதாழ் மாலைச் சுனை.
முதல்வநின் யானை முழக்கங் கேட்ட
கதியிற்றே காரின் குரல்.
குரல்கேட்ட கோழி குன்றதிரக் கூவ
மதநனி வாரண மாறுமா றதிர்ப்ப 20
எதிர்குதி ராகின் றதிர்ப்பு மலைமுழை
ஏழ்புழை யைம்புழை யாழிசைகேழ்த் தன்ன வினம்
வீழ்தும்பி வண்டொடு மிஞிறார்ப்பச் சுனைமலரக்
கொன்றைக் கொடியிண ரூழ்ப்பக் கொடிமலர்
மன்றல மலர மலர்காந்தள் வாய்நாற 25
நன்றவிழ் பன்மலர் நாற நறைபனிப்பத்
தென்ற லசைவரூஉஞ் செம்மற்றே யம்மநின்
குன்றத்தாற் கூடல் வரவு.
குன்றமுடைத்த வொளிர்வேலோய் கூடல்.
மன்றல் கலந்த மணிமுரசி னார்ப்பெழக் 30
காலொடு மயங்கிய கலிழ்கடலென
மால்கடல் குடிக்கு மழைக்குரலென
ஏறதிர்க்கு மிந்திர னிருமுருமென
மன்ற லதிரதிர மாறுமா றதிர்க்குநின்
குன்றங் குமுறிய வுரை. 35
தூதேய வண்டின் றொழுதி முரல்வவர்
காதன்மூ தூர்மதில் கம்பலைத் தன்று
வடுவகிர் வென்றகண் மாந்தளிர் மேனி

நெடுமென் பணைத்தோட் குறுந்தொடி மகளிர்
ஆராக் காம மார்பொழிற் பாயல் 40
வரையகத் தியைக்கும் வரையா நுகர்ச்சி
முடியா நுகர்ச்சி முற்றாக் காதல்
அடியோர் மைந்த ரகலத் தகலா
அலர்ஞெமன் மகன்றி னன்னர்ப் புணர்ச்சி
புலரா மகிழ்மறப் பறியாது நல்கும் 45
சிறப்பிற்றே தண்பரங் குன்று.
இனிமன்னு மேதிலர் நாறுதி யாண்டுப்
பனிமலர்க் கண்ணாரோ டாட நகைமலர்
மாலைக்கு மாலை வரூஉம் வரைசூணில்
காலைப்போய் மாலை வரவு. 50
இனிமணல் வையை யிரும்பொழிலுங் குன்றப்
பனிமொழி சாரலும் பார்ப்பாரும்.....
துனியன் மலருண்கண் சொல்வேறு நாற்றம்
கனியின் மலரின் மலிர்கால்சீப் பின்னது
துனிய னனிநீநின் சூள். 55
என்பாணி நின்னி லெலாஅபாணி நீநின்சூள்
சான்றாள ரீன்ற தகாஅத் தகாஅமகாஅன்
ஈன்றாட் கொருபெண் ணிவள்.
இருண்மையீ ருண்க ணிலங்கிழை யீன்றாட்
கரியளோ வாவ தறிந்திலே னீதா
வருபுனல் வையைமண றொட்டேன் றருமணவேள்
தண்பரங் குன்றத் தடிதொட்டெ னென்பாய்
கேளிர் மணலின் கெழுவு மிதுவோ
ஏழுலகு மாளி திருவரைமே லன்பளிதோ
என்னை யருளி யருண்முருகு சூள்சூளின்
நின்னை யருளி லணங்கான்மெய் வேறின்னும்
விறல்வெய்யோ னூர்மயில் வேனிழ னோக்கி
அறவ ரடிதொடினு மாங்கவை சூளேல்
குறவன் மகளாணை கூறேலா கூறேல்
ஐய சூளி னடிதொடு குன்றொடு 70
வையைக்குத் தக்க மணற்சீர்சூள் கூறல்
யார்பிரிய யார்வர யார்வினவ யார்செப்பு
நீருரைசெய் நீர்மையில் சூளென்றி நேரிழாய்
கயவாய நெய்தலலர் கமழ்முகை மணநகை
நயவரு நறவிதழ் மதருண்கண் வாணுதல் 75

முகைமுல்லை வென்றெழின் முத்தேய்க்கும் வெண்பல்
நகைசான்ற கனவன்று நனவன்று நவின்றதை
இடுதுனி கையாறா வெற்றுயர் கூரச்
சுடுமிறை யாற்றிசி னடிசேர்ந்து சாற்றுமின்
மிக, ஏற்றுதுமல ரூட்டுது மவி 80
கேட்டுதும் பாணி யெழுதும் கிணைமுருகன்
தாட்டொழு தண்பரங் குன்று.
தெரியிழாய் செல்கென்றா யெல்லாயாம் பெற்றேம்
ஒருவர்க்கும் பொய்யாநின் வாயில்சூள் வௌவல்
பருவத்துப் பன்மாணீ சேறலிற் காண்டை
எருமை யிருந்தோட்டி யெள்ளீயுங் காளை
செருவஞ் செயற்கென்னை முன்னைத்தன் சென்னி
அருள்வயினாற் றூங்கு மணிகையாற் றாக்கி
நிரைவளை யாற்றிருஞ் சூள்.
வளிபொரு சேட் சிமை வரையகத்தால் 90
தளிபெருகுந் தண்சினைய
பொழில்கொளக் குறையாமலரக்
குளிர்பொய்கை யளறுநிறைய
மருதநளி மணன் ஞெமர்ந்த
நனிமலர்ப் பெருவழிச்
சீறடியவர் சாறுகொள வெழுந்து
வேறுபடு சாந்தமும் வீறுபடு புகையும்
ஆறுசெல் வளியி னவியா விளக்கமும்
நாறுகமழ் வீயுங் கூறுமிசை முழவமும்
மணியுங் கயிறு மயிலுங் குடாரியும் 100
பிணிமுக முளப்படப் பிறவு மேந்தி
அருவரைச் சேராத் தொழுநர்
கனவிற் றொட்டது கைபிழை யாகாது
நனவிற் சேஎப்பநின் னளிபுனல் வையை
வருபுன லணிகென வரங்கொள் வோரும் 105
கருவயி றுறுகெனக் கடம்படு வோரும்
செய்பொருள் வாய்க்கெனச் செவிசார்த்து வோரும்
ஐயம ரடுகென வருச்சிப் போரும்
பாடுவர் பாணிச்சீரு மாடுவா ரரங்கத் தாளமும்
மஞ்சாடு மலைமுழக்கும் 110
துஞ்சாக் கம்பலைப்
பைஞ்சுனைப் பாஅ யெழுபாவையர்

ஆயித மூண்க ணலர்முகத் தாமரை
தாட்டா மரைத்தோட் டமனியக் கயமலர்
எங்கைப் பதுமங் கொங்கைக் கயமுகைச் 115
செவ்வா யாம்பல் சென்னீர்த் தாமரை
புனற்றா மரையொடு புலம்வேறு பாடுறாக்
கூரெயிற்றார் குவிமுலைப் பூணொடு
மார னொப்பார் மார்பணி கலவி
அரிவைய ரமிர்தபானம் 120
உரிமை மாக்க ளுவகையமிர் துய்ப்ப
மைந்தர் மார்வம் வழிவந்த
செந்தளிர் மேனியார் செல்ல ரீர்ப்ப
எனவாங்கு
உடம்புணர் காதலரு மல்லாருங் கூடிக் 125
கடம்பமர் செல்வன் கடிநகர் பேண
மறுமிடற் றண்ணற்கு மாசிலோ டந்த
நெறிநீ ரருவி யசும்புறு செல்வ
மண்பரிய வானம் வறப்பினும் மன்னுகமா
தண்பரங் குன்ற நினக்கு. 130

இசையமைத்தவர்: **மருத்துவன் நல்லச்சுதனார்**
பண்: **பாலையாழ்.**

## பரிபாடல் ஒன்பது

## குன்றம்பூதனார்

இருநிலந் துளங்காமை வடவயி னிவந்தோங்கி
அருநிலை யுயர்தெய்வத் தணங்குசா றலைகாக்கும்
உருமுச்சூழ் சேட்சிமை யுயர்ந்தவ ருடம்பட
எரிமலர்த் தாமரை யிறை வீழ்த்த பெருவாரி
விரிசடைப் பொறையூழ்த்து விழுநிகர் மலரேய்ப்பத்5
தணிவுறத் தாங்கிய தனிநிலைச் சலதாரி
மணிமிடற் றண்ணற்கு மதியாரற் பிறந்தோய்நீ
மையிருநூற் றிமையுண்கண் மான்மறிதோண் மணந்தனான்
றையிருநூற்று மெய்ந்நயனத் தவன்மகண் மலருண்கண்
மணிமழை தலைஇயென மாவேனில் காரேற்றுத்10
தணிமழை தலையின்று தண்பரங் குன்று.
நான்மறை விரித்து நல்லிசை விளக்கும்
வாய்மொழிப் புலவீர் கேண்மின் சிறந்தது

காதற் காமங் காமத்துச் சிறந்தது.
விருப்போ ரொத்து மெய்யுறு புணர்ச்சி 15
புலத்தலிற் சிறந்தது கற்பே யதுதான்
இரத்தலு மீதலு மிவையுள் ளீடாப்
பரத்தையுள் ளதுவே பண்புறு கழறல்
தோள்புதி துண்ட பரத்தையிற் சிவப்புற
நாளணிந் துவக்குஞ் சுணங்கறை யதுவே 20
கேளணங் குறமனைக் கிளந்துள சுணங்கறை
சுணங்கறைப் பயனு மூடலுள் ளதுவே, அதனால்,
அகற லறியா வணியிழை நல்லார்
இகறலைக் கொண்டு துனிக்குந் தவறிலரித்
தள்ளாப் பொருளியல்பிற் றண்டமிழாய் வந்திலார் 25
கொள்ளாரிக் குன்று பயன்
ஊழாரத் தோய் கரை நூக்கிப் புனறந்த
காழாரத் தம்புகை சுற்றிய தார்மார்பிற்
கேழாரம் பொற்ப வருவானைத் தொழாஅ
வாழிய மாயாநின் றவறிலை யெம்போலும் 30
கேழிலார் மாணல முண்கோ திருவுடையர்
மென்றோண்மே லல்கி நல்கலு மின்று
வையெயிற் றெய்யா மகளிர் திறமினிப்
பெய்ய வுழக்கு மழைக்காமற் றைய
கரையாவெந் நோக்கத்தாற் கைசுட்டிப் பெண்டின் 35
இகலி னிகந்தாளை யவ்வே டலைக்கண்ணி
திருந்தடி தோயத் திறைகொடுப் பானை
வருந்த லெனவவற்கு மார்பளிப் பாளைக்
குறுகலென் றொள்ளிழை கோதைகோ லாக
இறுக்கிறுக யாத்துப் புடைப்ப 40
ஒருவர் மயிலொருவ ரொண் மயிலோ டேல
இருவர் வான்கிளி யேற்பின் மழலை
செறிகொண்டை மேல்வண்டு சென்றுபாய்ந் தன்றே
வெறிகொண்டான் குன்றத்து வண்டு.
தார்தார் பிணக்குவார் கண்ணியோச்சித் தடுமாறுவார் 45
மார்பணி கொங்கைவார் மத்திகையாப் புடைப்பார்
கோதை வரிப்பந்து கொண்டெறிவார்
பேதை மடநோக்கம் பிறிதாக வூத
நுடங்கு நொசிநுசுப்பார் நூழி றலைக்கொள்ளக்
கயம்படு கமழ்சென்னிக் களிற்றியல்கைம் மாறுவார்

வயம்படு பரிப்புரவி மார்க்கம் வருவார்
தேரணி யணிகயிறு தெரிபு வருவார்
வரிசிலை வளைய மார்புற வாங்குவார்
வாளி வாளிக ணிலைபெற மறலுவார்
தோள்வளை யாழி சுழற்றுவார் 55
மென்சீர் மயிலிய லவர்.
வாண்மிகு வயமொய்ம்பின்
வரையகலத்தவனை வானவன்மகள்
மாணெழின் மலருண்கண்.
மடமொழியவ ருடன்சுற்றிக் 60
கடிசுனையுட் குளித்தாடுநரும்
அறையணிந்த வருஞ்சுனையான்
நறவுண் வண்டாய் நரம்புளர்நரும்
சிகைமயிலாய்த் தொகைவிரித்தாடுநரும்
கோகுலமாய்க் கூவுநரும் 65
ஆகுல மாகுநரும்
குறிஞ்சிக் குன்றவர் மறங்கெழு வள்ளிதமர்
வித்தகத் தும்பை விளைத்தலான் வென்வேலாற்
கொத்தன்று தண்பரங் குன்று.
கடுஞ்சூர் மாமுத றடிந்தறுத்தவேல் 70
அடும்போ ராளநின் குன்றின்மிசை
ஆட னவின்றோ ரவர்போர் செறுப்பவும்
பாடல் பயின்றோரைப் பாணர் செறுப்பவும்
வல்லாரை வல்லார் செறுப்பவும்
அல்லாரை யல்லார் செறுப்பவு மோர்சொல்லாய்ச் 75
செம்மைப் புதுப்புனற்
றடாக மேற்ற தண்சுனைப் பாங்கர்ப்
படாகை நின்றன்று
மேஎ வெஃகினவை
வென்றுயர்த்தகொடி விறல்சான்றவை 80
கற்பிணை நெறியூ டற்பிணைக் கிழமை
நயத்தகு மரபின் வியத்தகு குமர!
வாழ்த்தினேம் பரவுதுந் தாழ்த்துத்தலை நினையா
நயத்தலிற் சிறந்தவெம் மடியுறை
பயத்தலிற் சிறக்க நாடொறும் பொலிந்தே. 85

இசையமைத்தவர்: **மருத்துவன் நல்லச்சுதனார்.**

பண்: **பாலையாழ்.**

## பரிபாடல் பதினான்கு

## கேசவனார்

கார்மலி கதழ்பெய றலைஇ யேற்ற
நீர்மலி நிறைசுனை பூமலர்ந் தனவே
தண்ணறுங் கடம்பின் கமழ்தா தூதும்
வண்ண வண் டிமிர்குரல் பண்ணைபோன் றனவே
அடியுறை மகளி ராடுந் தோளே 5
நெடுவரை யடுக்கத்து வேய்போன் றனவே
வாகை யொண்பூப் புரையு முச்சிய
தோகை யார்குரன் மணந்து தணந்தோரை
நீடன்மின், வாரு மென்பவர் சொற்போன் றனவே
நாண்மலர்க் கொன்றையும் பொலந்தார் போன்றன 10
மெல்லிணர் வேங்கை வியலறைத் தாயின
அழுகை மகளிர்க் குழுவை செப்ப
நீரயற் கலித்த நெரிமுகைக் காந்தள்
வார்குலை யவிழ்ந்த வள்ளிதழ் நிரைதொறும்
விடு கொடிப் பிறந்த மென்றகைத் தோன்றிப் 15
பவழத் தன்ன செம்பூத் தாஅய்க்
கார்மலிந் தன்றுநின் குன்று போர்மலிந்து
சூர்மருங் கறுத்த சுடர்ப்படை யோயே
கறையில் கார் மழை பொங்கி யன்ன
நறையி னறும்புகை நனியமர்ந் தோயே 20
அறுமுகத் தாறிரு தோளால் வென்றி
நறுமலர் வள்ளிப் பூநயந் தோயே
கெழீஇக் கேளிர் சுற்ற நின்னை
எழீஇப் பாடும் பாட்டமர்ந் தோயே
பிறந்த ஞான்றே நின்னை யுட்கிச் 25
சிறந்தோ ரஞ்சிய சீருடை யோயே
இருபிறப் பிருபெய ரீர நெஞ்சத்
தொருபெய ரந்தண ரறனமர்ந் தோயே
அன்னை யாகலி னமர்ந்தியா நின்னைத்
துன்னித் துன்னி வழிபடு வதன்பயம் 30
இன்னு மின்னுமவை யாகுக
தொன் முதிர் புகழினும் பலவே.

இசையமைத்தவர்: கேசவனார்
பண்: நோதிறம்.

## பரிபாடல் பதினேழு
## நல்லழிசியார்

தேம்படு மலர்குழை பூந்துகில் வடிமணி
ஏந்திலை சுமந்து சாந்தம் விரைஇ
விடையரை யசைத்த வேலன் கடிமரம்
பரவின ருரையொடு பண்ணிய விசையினர்
விரிமலர் மதுவின் மரநனை குன்றத்துக் 5
கோலெரி கொளைநறை புகைகொடி யொருங்கெழ
மாலை மாலை யடியுறை யியைநர்
மேலோ ருறையுளும் வேண்டுநர் யாஅர்
ஒருதிறம், பாணர் யாழின் றீங்குரலெழ
ஒருதிறம், யாணர் வண்டி னிமிரிசையெழ 10
ஒருதிறம், கண்ணார் குழலின் கரைபெழ
ஒருதிறம், பண்ணார் தும்பி பரந்திசை யூத
ஒருதிறம், மண்ணார் முழவி னிசையெழ
ஒருதிறம், அண்ண னெடுவரை யருவிநீர் ததும்ப
ஒருதிறம், பாடனல் விறலிய ரொல்குபு நுடங்க 15
ஒருதிறம், வாடை யுளர்வயிற் பூங்கொடி நுடங்க
ஒருதிறம், பாடினி முரலும் பாலையங் குரலின்
நீடுகிளர் கிழமை நிறைகுறை தோன்ற
ஒருதிறம், ஆடுசீர் மஞ்ஞை யரிகுர றோன்ற
மாறுமா றுற்றனபோன் மாறெதிர் கோடல் 20
மாறட்டான் குன்ற முடைத்து.
பாடல் சான்று பல்புகழ் முற்றிய
கூடலொடு பரங்குன்றினிடைக்
கமழ்நறுஞ் சாந்தி னவரவர் திளைப்ப
நணிநணித் தாயினுஞ் சேஎய்ச் சேய்த்து 25
மகிழ்மிகுதேஎங் கோதையர் கூந்தல் குஞ்சியிற்
சோர்ந்தவி ழிதழி னியங்குமா றின்று
வசைநீங்கிய வாய்மையால் வேள்வியாற்
றிசைநாறிய குன்றமர்ந் தாண்டாண்
டாவி யுண்ணு மகில்கெழு கமழ்புகை 30
வாய்வாய் மீபோ யும்பரிமை பிறப்ப
தேயா மண்டிலங் காணுமா றின்று
வளைமுன்கை வணங்கிறையார்

அணைமென்றோ ளசைபொத்தார்
தார்மார்பிற் றகையியலார் 35
ஈரமாலை யியலணியார்
மனமகிழ் தூங்குநர் பாய்புட னாடச்
சுனைமலர்த் தாதூதும் வண்டூத லெய்தா
அனையபரங் குன்றி னணி.
கீழோர், வயல்பரக்கும் வார்வெள்ளருவி பரந்தா
னாதரோ 40
மேலோர், இயங்குதலால் வீழ்மணி நீலஞ் செறுவுழக்குமரே
தெய்வ விழவுந் திருந்து விருந்தயர்வும்
அவ்வெள் ளருவி யணிபரங் குன்றிற்கும்
தொய்யா விழுச்சீர் வளங்கெழு வையைக்கும்
கொய்யுளை மான்றேர்க் கொடித்தேரான் கூடற்கும் 45
கையூழ் தடுமாற்ற நன்று.
எனவாங்கு
மணிநிற மஞ்ஞை யோங்கிய புட்கொடிப்
பிணிமுக மூர்ந்த வெல்போ ரிறைவ
பணியொரீஇ நின்புக ழேத்தி 50
அணிநெடுங் குன்றம் பாடுதுந் தொழுதும்
அவை, யாமுமெஞ் சுற்றமும் பரவுதும்
ஏம வைகல் பெறுகயா மெனவே.

இசையமைத்தவர்: **நல்லச்சுதனார்.**
பண்: **நோதிறம்.**

### பரிபாடல் பதினெட்டு

## குன்றம்பூதனார்

போரெதிர்ந் தேற்றார் மதுகை மதந்தபக்
காரெதிர்ந் தேற்ற கமஞ்சூ லெழிலிபோல்
நீர்நிரந் தேற்ற நிலந்தாங் கழுவத்துச்
சூர்நிரந்து சுற்றிய மாதபுத்த வேலோய்நின்
சீர்நிரந் தேந்திய குன்றோடு நேர்நிரந் 5
தேறுமா றேற்குமிக் குன்று.
ஒள்ளொளி மணிப்பொறி யான்மஞ்ஞை நோக்கித்தன்
உள்ளத்து நினைப்பானைக் கண்டன டிருநுதலும்
உள்ளிய துணர்ந்தேனஃ துரையினி நீயெம்மை

எள்ளுதன் மறைத்தலோம் பென்பாளைப் பெயர்த்தவன் 10
காதலாய் நின்னியல் களவெண்ணிக் களிமகிழ்
பேதுற்ற விதனைக்கண் டியானோக்க நீயெம்மை
ஏதிலா நோக்குதி யென்றாங் குணர்ப்பித்தல்
ஆய்தேரான் குன்ற வியல்பு.
ஐவளம் பூத்த வணிதிகழ் குன்றின்மேல் 15
மைவளம் பூத்த மலரேர் மழைக்கண்ணார்
கைவளம்பூத்த வடுவொடு காணாய்நீ
மொய் வளம் பூத்த முயக்கம்யாங் கைப்படுத்தேம்
மெய்வளம் பூத்த விழைதகு பொன்னணி
நைவளம் பூத்த நரம்பியைசீர்ப் பொய்வளம் 20
பூத்தன பாணாநின் பாட்டு.
தண்டளிர் தருப்படுத் தெடுத்துரைஇ
மங்குன் மழைமுழங்கிய விறல்வரையாற்
கண்பொருபு சுடர்ந்தடர்ந்திடந்
திருள்போழுங் கொடிமின்னால் 25
வெண்சுடர் வேல்வேள் விரைமயின்மேன் ஞாயிறுநின்
ஒண்சுட ரோடைக் களிறேய்க்கு நின்குன்றத்
தெழுதெழி லம்பலங் காமவே ளம்பின்
தொழில்வீற் றிருந்த நகர்.
ஆர்ததும்பு மயிலம்பு நிறைநாழி 30
சூர்ததும்பு வரைய காவாற்
கார்ததும்பு நீர்ததும்புவன சுனை
ஏர்ததும்புவன பூவணி செறிவு
போர்தோற்றுக் கட்டுண்டார் கைபோல்வ கார்தோற்றும்
காந்தள் செறிந்த கவின். 35
கவின்முகை கட்டவிழ்ப்ப தும்பிகட் டியாழின்
புரிநெகிழ்ப்பார் போன்றன கை.
அச்சிரக் காலார்த் தணிமழை கோலின்றே
வச்சிரத் தான்வான வில்லு.
வில்லுச்சொரி பகழியின் மென்மலர் தாயின 40
வல்லுப்போர் வல்லாய் மலைமேன் மரம்
வட்டுருட்டு வல்லாய் மலைய நெட்டுருட்டுச்
சீர்ததும்பு மரவ முடன்சிறந்து
போர்ததும்பு மரவம் போலக்
கருவி யார்ப்பக் கருவிநின்றன குன்றம் 45

அருவி யார்ப்பமுத் தணிந்தன வரை
குருவி யார்ப்பக் குரல்குவிந்தன தினை
எருவை கோப்ப வெழிலணி திருவில்
வானி லணித்த வரியூதும் பன்மலராற்
கூனி வளைத்த சுனை. 50
புரியுறு நரம்பு மியலும் புணர்ந்து
சுருதியும் பூவுஞ் சுடருங் கூடி
எரியுரு ககிலோ டாரமுங் கமழும்
செருவேற் றானைச் செல்வநின் னடியுறை
உரிதினி னுறைபதிச் சேர்ந்தாங்குப் 55
பிரியா திருக்கவெஞ் சுற்றமோ டுடனே.

இசையமைத்தவர்: நல்லச்சுதனார்

பண்: காந்தாரம்

## பரிபாடல் பத்தொன்பது

## நப்பண்ணனார்

நிலவரை யழுவத்தான் வானுறை புகறந்து
புலவரை யறியாத புகழ்பூத்த கடம்பமர்ந்
தருமுனி மரபி னான்றவர் நுகர்ச்சிமன்
இருநிலத் தோரு மியைகென வீத்தநின்
தண்பரங் குன்றத் தியலணி நின்மருங்கு 5
சாறுகொ டுறக்கத் தவளொடு
மாறுகொள் வதுபோலு மயிற்கொடி வதுவை
புலத்தினும் போரினும் போர்தோலாக கூடற்
கலப்போ டியைந்த விரவுத்தீ ரெல்லை
அறம்பெரி தாற்றி யதன்பயன் கொண்மார் 10
சிறந்தோ ருலகம் படருநர் போல
உரிமாண் புனைகல மொண்டுகி றாங்கிப்
புரிமாண் புரவியர் போக்கமை தேரர்
தெரிமலர்த் தாரர் தெருவிருள் சீப்பநின்
குன்றொடு கூட லிடையெல்லா மொன்றுபு 15
நேர்பூ நிறைபெய் திருநிலம் பூட்டிய
தார்போலு மாலைத் தலைநிறையாற் றண்மணல்
ஆர்வேலை யாத்திரைசெல் யாறு.
சுடரொடு சூழ்வரு தாரகை மேருப்
புடைவரு சூழல் புலமாண் வழுதி 20

மடமயி லோரு மனையவ ரோடும்
கடனறி காரியக் கண்ணவ ரோடுநின்
சூருறை குன்றிற் றடவரை யேறிமேற்
பாடு வலந்திரி பண்பிற் பழமதிச்
சூடி யசையுஞ் சுவன்மிசைத் தானையிற் 25
பாடிய நாவிற் பரந்த வுவகையின்
நாடு நகரு மடைய வடைந்தனைத்தே
படுமணி யானை நெடியாயநீ மேய
கடிநகர் சூழ்நுவலுங் கால்.
தும்பி தொடர்கதுப்ப தும்பி தொடராட்டி 30
வம்பணி பூங்கயிற்று வாங்கி மரனசைப்பார்
வண்டார்ப் புரவி வழிநீங்க வாங்குவார்
திண்டேர் வழியிற் செலநிறுப்பார் கண்டக்
கரும்பு கவழ மடுப்பார் நிரந்து
பரிநிமிர் தானையான் பாசறை நீர்த்தே 35
குருகெறி வேலோய்நின் குன்றக்கீழ் நின்ற
இடைநிலம் யாமேத்து மாறு.
குரங்கருந்து பண்ணியங் கொடுப்போரும்
கரும்பு கருமுகக் கணக்களிப் போரும்
தெய்வப் பிரமஞ் செய்கு வோரும் 40
கைவைத் திமிர்புகுழல் காண்கு வோரு
மியாழி னிளிகுரல் சமங்கொள் வோரும்
வேள்வியி னழகியல் விளம்பு வோரும்
கூர நாண்குரல் கொம்மென வொலிப்ப
ஊழுற முரசி னொலிசெய் வோரும் 45
என்றூ ழுறவரு மிருசுடர் நேமி
ஒன்றிய சுடர்நிலை யுள்படு வோரும்
இரதி காம னிவளிவ னெனாஅ
விரகியர் வினவ வினாவிறுப் போரும்
இந்திரன் பூசை யிவளக லிகையிவன் 50
சென்ற கவுதமன் சினனுறக் கல்லுரு
ஒன்றிய படியிதென் றுரைசெய் வோரும்
இன்ன பலபல வெழுத்துநிலை மண்டபம்
துன்னுநர் சுட்டவுஞ் சுட்டறி வுறுத்தவும்
நேர்வரை விரியறை வியலிடத் திழைக்கச் 55
சோபன நிலையது துணிபரங் குன்றத்து
மாஅன் மருகன் மாட மருங்கு.

பிறந்த தமரிற் பெயர்ந்தொரு பேதை
பிறங்க லிடையிடைப் புக்குப் பிறழ்ந்தியான்
வந்த நெறியு மறந்தேன் சிறந்தவர் 60
ஏஎ யோஒ வெனவிளி யேற்பிக்க
ஏஎ யோஒவென் றேலா வவ்விளி
அவ்விசை முழையேற் றழைப்ப வழைத்துழிச்
செல்குவ ளாங்குத் தமர்க்கா ணாமை
மீட்சியுங் கூஉக்கூஉ மேவு மடமைத்தே 65
வாழ்த்துவப்பான் குன்றின் வகை.
நனிநுனி நயவரு சாய்ப்பி னாறிணர்ச்
சினைபோழ் பல்லவந் தீஞ்சுனை யுதிர்ப்ப
உதிர்த்த சுனையி னெடுத்த தலைய
அலர்முகிழுற வவைகிடப்பத் 70
தெரிமலர் நனையுறுவ
ஐந்தலை யவிர்பொறி யரவ மூத்த
மைந்த னருகொன்று மற்றிளம் பார்ப்பென
வாங்கிள மகளிர் மருளப் பாங்கர்
பசும்பிடி யிளமுகிழ் நெகிழ்ந்தவா யாம்பல் 75
கைபோற் பூத்த கமழ்குலைக் காந்தள்
எருவை நறுந்தோ டெரியிணர் வேங்கை
உருவமிகு தோன்றி யூழிணர் நறவம்
பருவமில் கோங்கம் பகைமல ரிலவம்
நிணந்தவை கோத்தவை நெய்தவை தூக்க 80
மணந்தவை போல வரைமலை யெல்லாம்
நிறைந்து முறழ்ந்து நிமிர்ந்துந் தொடர்ந்தும்
விடியல் வியல்வானம் போலப் பொலியும்
நெடியாய்நின் குன்றின் மிசை.
நினயானைச் சென்னி நிறங்குங்கு மத்தாற் 85
புனையாப்பூ நீரூட்டிப் புனைகவரி சார்த்தாப்
பொற்பவழப் பூங்காம்பிற் பொற்குடை யேற்றி
மலிவுடை யுள்ளத்தான் வந்துசெய் வேள்வியுட்
பன்மண மன்னு பின்னிருங் கூந்தலர்
கன்னிமை கனிந்த காலத் தார்நின் 90
கொடியேற்று வாரணங் கொள்கவழ மிச்சில்
மறுவற்ற மைந்தர்தோ ளெய்தார் மணந்தார்
முறுவற் றலையளி யெய்தார்நின் குன்றம்
குறுகிச் சிறப்புணாக் கால்.

குறப்பிணாக் கொடியைக் கூடியோய் வாழ்த்துச் 95
சிறப்புணாக் கேட்டி செவி.
உடையு மொலியலுஞ் செய்யைமற் றாங்கே
படையும் பவழக் கொடிநிறங் கொள்ளும்
உருவு முருவத்தீ யொத்தி முகனும்
விரிகதிர் முற்றா விரிசுட ரொத்தி 100
எவ்வத் தொவ்வா மாமுத றடிந்து
தெவ்வுக் குன்றத்துத் திருந்துவே லழுத்தி
அவ்வரை யுடைத்தோய்நீ யிவ்வரை மருங்கிற்
கடம்பம ரணிநிலை பகர்ந்தேம்
உடங்கம ராயமொ டேத்தினந் தொழுதே. 105

இசையமைத்தவர்: **மருத்துவன் நல்லச்சுதனார்.**
பண்: **காந்தாரம்.**

### பரிபாடல் இருபத்தொன்று

## நல்லச்சுதனார்

ஊர்ந்ததை, எரிபுரை யோடை யிடையிமைக்குஞ் சென்னிப்
பொருசமங் கடந்த புகழ்சால் வேழம்
தொட்டதை, தைப்பமை சருமத்திற் றாளியை தாமரை
துப்பமை துவர்நீர்த் துறைமறை யழுத்திய
வெரிநத் தோலொடு முழுமயிர் மிடைந்த 5
வரிமலி யரவுரி வள்புகண் டன்ன
புரிமென் பீலிப் போழ்புனை யடையல்
கையதை, கொள்ளாத் தெவ்வர்கொண் மாமுத றடிந்து
புள்ளொடு பெயரிய பொருப்புப்புடை திறந்தவேல்
பூண்டதை, சுருளுடை வள்ளி யிடையிடு பிழைத்த 10
உருளிணர்க் கடம்பி னொன்றுபடு கமழ்தார்
அமர்ந்ததை, புரையோர் நாவிற் புகழ்நல முற்றி
நிரையே ழுடுக்கிய நீளிலைப் பாலை
அரைவரை மேகலை யணிநீர்ச் சூழித்
தரைவிசும் புகந்த தண்பரங் குன்றம் 15
குன்றத் தடியுறை யியைகெனப் பரவுதும்
வென்றிக் கொடியணி செல்வநிற் றொழுது.
சுடுபொன் ஞெகிழத்து முத்தரிசென் றார்ப்பத்
துடியி னடிபெயர்த்துத் தோளசைத்துத் தூக்கி
அடுநறா மகிழ்தட்ப வாடுவா டகைமையின் 20

நுனையிலங் கெஃகெனச் சிவந்த நோக்கமொடு
துணையணை கேள்வனைத் துனிப்பவ ணிலையும்
நிழல்காண் மண்டில நோக்கி
அழல்புனை யவிரிழை திருத்துவாள் குறிப்பும்
பொதிர்த்த முலையிடைப் பூசிச் சந்தனம் 25
உதிர்த்துப் பின்னுற வூட்டுவாள் விருப்பும்
பல்லூ ழிவையிவை நினைப்பின் வல்லோன்
ஓவத் தெழுதெழில் போலு மாதடிந்
திட்டோய்நின் குன்றின் மிசை.
மிசைபடு சாந்தாற்றி போல வெழிலி 30
இசைபடு பக்க மிருபாலுங் கோலி
விடுபொறி மஞ்ஞை பெயர்புட னாட
விரல்செறி தூம்பின் விடுதுளைக் கேற்ப
முரல்குரற் றும்பி யவிழ்மல ரூத
யாணர் வண்டினம் யாழிசை பிறக்கப் 35
பாணி முழவிசை யருவிநீர் ததும்ப
ஒருங்கு பரந்தவை யெல்லா மொலிக்கும்
இரங்கு முரசினான் குன்று.
தாழ்நீ ரிமிழ்சுனை நாப்பட் குளித்தவண்
மீநீர் நிவந்த விறலிழை கேள்வனை 40
வேய்நீ ரழுந்துதன் கையின் விடுகெனப்
பூநீர்பெய் வட்ட மெறியப் புணைபெறா
தருநிலை நீரி னவடுயர் கண்டு
கொழுநன் மகிழ்தூங்கிக் கொய்பூம் புனல்வீழ்ந்து
தழுவுந் தகைவகைத்துத் தண்பரங் குன்று. 45
வண்டார் பிறங்கன் மைந்தர் நீவிய
தண்கமழ் சாந்தந் தைஇய வளியும்
கயல்புரை கண்ணியர் கமழ்துக ளுதிர்த்த
புயல்புரை கதுப்பக முளரிய வளியும்
உருளிணர்க் கடம்பி னெடுவேட் கெடுத்த 50
முருகு கமழ்புகை நுழைந்த வளியும்
அசும்பு மருவி யருவிடர்ப் பரந்த
பசும்பூட் சேஎய்நின் குன்றநன் குடைத்து.
கண்ணொளிர் திகழட ரிடுசுடர் படர்கொடி
மின்னுப்போல்
ஒண்ணகை தகைவகை நெறிபெற விடையிடை
யிழைத்தி யாத்த 55

செண்ணிகைக் கோதை கதுப்போ டியல
மணிமரு டேன்மகிழ் தட்ப வொல்கிப்
பிணிநெகிழப் பைந்துகி னோக்கஞ் சிவப்பூரப்
பூங்கொடி போல நுடங்குவா ளாங்குத்தன்
சீர்தகு கேள்வ னுருட்டுந் துடிச்சீராற் 60
கோடணிந்த முத்தார மொல்க வொசிபவளேர்
ஆடை யசைய வணியசையத் தானசையும்
வாடை யுளர்கொம்பர் போன்ம்.
வாளி புரள்பவை போலுந் துடிச்சீர்க்குத்
தோளூழ் பெயர்பவள் கண். 65
மாறம ரட்டவை மறவேல் பெயர்ப்பவை
ஆறிரு தோளவை யறுமுகம் விரித்தவை
நன்றம ராயமோ டொருங்குநின் னடியுறை
இன்றுபோ லியை கெனப் பரவுதும்
ஒன்றார்த் தேய்த்த செல்வநிற் றொழுதே. 70

இசையமைத்தவர்: **கண்ணகனார்.**
பண்: **காந்தாரம்.**

**புறநானூறு**
**நக்கீரனார்**
பாடல் எண்: 56

மணிமயில் உயரிய மாறா வென்றி
பிணிமுக ஊர்தி ஒண் செய்யோனும் என
ஞாலம் காக்கும் கால முன்பின்
தோலா நல்இசை.... உள்ளும்

**சிலப்பதிகாரம்**
**இளங்கோவடிகள்**
பாடல் 5 - 170

அறுமுகச் செவ்வேள் அணிதிகழ் கோயிலும்
கோழிச் சேவற் கொடி யோன் கோட்டமும்

**இன்னாநாற்பது**
**கபில தேவர்**
கடவுள் வாழ்த்து

ஆங்கின்னா
சத்தியான் தாள்தொழா தார்க்கு

**ஐந்திணை ஐம்பது**
**மாறன் பொறையனார்**
முல்லை - 1

செல்வக் கடம்பு அமர்ந்தான் வேல் மின்னி
**சங்கப் பாடல்களில் முருகன் முற்றிற்று**